அனைத்திந்திய நூல்வரிசை

# ஏமாற்றப்பட்ட தம்பி

தெலுங்கு மூலம்
பலிவாடா காந்தாராவ்

தமிழில்
டாக்டர் பா. பாலசுப்பிரமணியன்




நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முன்னுரை

காவிய வடிவம் பெறாத பண்டைய கட்டுககதைகள சாதாரணமாக வசன நடையில் அமைந்திருக்கும். யாப்பு மட்டுமல்லாமல், அணி நலததையும் விலக்கி விட்டு, வர்ணனைத் திறமைககும கதைப் புனைவிற்கும் பாத்திரப் படைப்புக்கும் முக்கியத்துவம தரும் கதையே நாவல அல்லது புதினமாக உருவெடுத்தது பணடைய மனிதன் பொழுது போக்கிற்காகத் திறமையுடன் புனைந்த கதையின் மாற்று வடிவமே புதினம் ஆகும்

ஸ்ரீ ஸ்ரீ கொககொண்ட வேங்கடரத்னமு பநத்துலுவின 'மஹா ஸ்வேத' (பெருவெள்ளி - 1864), கோபால கிருஷ்ணம்ம செட்டி அவாகளின் 'ரங்க ராஜு சரிதர' (1872) ஆகிய இரு கதை நூல்கள் இருப்பினும், பினனர் வெளிவந்த வீரேசலிங்கம பந்த்துலுவின் 'ராஜ சேகர சரிதரமு' (1878), ஆஙகிலத்தில் வெளியான 'விக்கார் ஆஃப் பீல்ட்' (வேக் ஃபீல்ட பாதிரியார்) என்ற நூலைப் போல், புதின இலக்கணத்துக்குப பொருந்தும் வகையில் விளங்குவதால், தெலுங்கில முதல புதினமாகப் போறறபபடுகிறது இதனை அண்மைக் காலச் சமூகத் தொலை நோககுக கருவி எனறு கூறுவது பொருந்தும்

தெலுங்கு சமூக நாவலின் தந்தை என்று கருதப்படும் கந்துகூரி வீரேசலிங்கம அவாகள அடிப்படையில் மனித நேயப் பண்பு மிக்கவராவார் ஆந்திரர்களின உறஙகிப்போன உணாச்சிகளை எங்கெலலாம் சலம் அவர்கள் தட்டி எழுபப இயலாமற போனாரோ அங்கெல்லாம் விழிப்பூட்டுவதில் வீரேசலிங்கம வெற்றி கண்டார் இவரால் ஆந்திரர்களின் இரத்த நாளங்களில் முறுக்கேற்ற முடிந்தது

'ஆநதிர ஸ்காட்' என்ற சிறப்புப பெயரைப பெற்ற லடசுமி நரசிம்மம் அவாகள, நாவல பின்னணியை உருவாக்குவதில், 'ஸ்காட்', 'மெடோஸ் டெய்லர்', 'டிக்கன்ஸ்' ஆகியோரை விஞ்சிவிட்டார் தெலுங்கு நாவல இவரால உரையாடல வளம் பெறறு நாடகத தனமையுடன் விளஙகலாயிறறு கறபனைத் திறனும், இலைமறை காயாக இழையோடும் மாமப் பாஙகும், கிளர்ச்சியூட்டும் நகைச்சுவையும் இவர் தம் புதினங்களைச் சிறபபிக்கும செல்வஙகளாம்

மொழிபெயர்ப்புப் புதினஙகளுக்கு ஆதரவளித்த 'ஆந்திரப்பிரச்சாரிணி கிரந்தமால' நிறுவனம், துப்பறியும் நாவல்களுடன் சமூக, குடும்ப, வரலாறறுப் புதினஙகளையும் வெளியிட்டுதவியது.

அது போன்றே 'விஞ்ஞான சந்திரா மண்டலி' எனும் நிறுவனம், போகராஜு நாராயண மூர்த்தி அவர்களின் புகழ் பெற்ற 'விமலாதேவி' எனும் புதினத்துடன் வேறுபல புதினங்களையும் வெளியிட்டது. 'அஸ்தமயமு' (அந்திப் பொழுது), 'ஆங்க்லராஜ்ய ஸ்தாபனமு' (ஆங்கில ஆட்சித் துவக்கம்), 'தரணிக்கோட்ட' முதலிய புதினங்களை எழுதிப் பெயர்பெற்ற போகராஜு அவர்கள் 'ஆந்த்ர ராஷ்ட்ரமு' (ஆந்திர நாடு) எனும் அறிவியல் புதினத்தையும் எழுதிப் புகழ் பெற்றார்.

இந்தியச் சுதந்திரப் போராட்டத்தின் விளைவுகள் என்று சொல்லக் கூடிய சமகால வரலாற்றுப் புதினங்களில, அக்கிராஜு அவர்களின 'திப்பு சுல்தானு',

'வேங்கட சாஸ்திரி அவர்களின் 'ராயச்சூரு யுத்தமு', மற்றும் ராகவ சந்திரய்யா அவர்களின் 'விஜய நகர சாம்ராஜ்யமு', வேங்கட பார்வதீஸ்வர கவி அவர்களின் 'ப்ரமதாவனமு' (மகளிர்ப்பூங்கா), வேலால சுப்பாராவு அவர்களின் 'ராணி சம்யுக்த' முதலியவை குறிப்பிடத்தக்கவை. வரலாற்றுப் புதினங்கள், சமூக நாவல்கள் ஆகியவற்றில வேங்கட பார்வதீஸ்வர கவி அவர்களின் நான்கு சுதந்திரப புதினங்களில் 'மாத்ரு மந்திரமு' எனபது அரிஜனங்களின் கோவில் நுழைவு, மதுவிலக்கு முதலிய இன்றியமையாச் சீர் திருத்தங்களை வற்புறுத்திக் கூறும் புதினமாகும்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சமூகப் பிரச்சினைகள் பற்றி விழிப்புணர்ச்சி சற்றுத் தலை தூக்கிய பிறகு சாதாரண மககளிடையே வெறும் வரலாற்றுப் புதினங்கள் ஓரளவு செல்வாககிழக்கத் தொடங்கின

புதிய நாவல யுகம என்று சொல்லத்தக்க இந்த நூற்றாணடின் தொடக்க காலத்தில், 'ஆந்திரப் பிரச்சாரிணி கிரந்தமால', 'விஞ்ஞான சந்திரிகா மண்டலி', 'வேகுசுக்க கிரந்தமால', 'சரஸ்வதி கிரந்த மண்டலி', 'ஆநதிர பாஷா வர்தனி சங்கமு', 'சாதன சமிதி' போனற நிறுவனஙகள் போட்டிகளில தேர்ந்தெடுக்கப்பட்ட புதினங்களையும், வஙகாள கன்னடப் புதினங்களின் மொழிபெயர்ப்புகளையும் வெளியிட்டதுடன், பல்வேறு வார, மாத இதழ்களும் புதினங்களை வெளியிட்டு அதன் முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவின மகாத்மா காந்தி அரசியலில் காலடி வைத்த பின்னர் தலை சிறந்த தெலுங்கு புதினங்களின் வெளியீடு மெல்ல மெல்ல மெலியத் தொடங்கியது

விஸ்வநாத அவர்களின் 'ஏகவீர' என்ற புதினம இந்தக கருத்திற்கு எதிரிடையாக இருக்கக் காணலாம ஆனால், தெலுங்கில் அந்தக் காலப் புதினம் தொடக்க நிலையிலேயே இருந்தமை மேறகுறிபபிட்ட கருத்தை மெய்ப்பிக்கும் பிற்காலப் புதினஙகளில இழையோடும் நிறைகள மட்டுமல்லாமல், வாசகர் உள்ளங்களில் அன்பு கலந்த பரிவை நெகிழச செய்யும் சூழல்களும் காட்சிகளும் அக்கால புதினங்களிலிருந்தே தொடங்கின என்று கூறுவது மிகையாகாது

முதலில, வங்கத்தில் 'வந்தே மாதரம் — நமதே ராஜயம்' என்ற கோஷத்துடன் தொடங்கிய தேசியப் போராட்டம், ஏறத்தாழ நாற்பதாண்டுக்காலம் தெலுங்கு இலக்கியத்தின் உருவத்தையே மாற்றி விட்டது. அந்த மாபெரும் போராட்டத்தை நடத்திய பகீரதாகளின் அறிவாற்றலிலிருந்து ஊற்றெடுதத ஆறுதான் அன்றைய தெலுங்கு படைப்பிலக்கியமாக உருவெடுத்தது. பல்வேறு ஆறுகளின் கூடலே பெருங்கடலாவது போல் ஆந்திரத்துவமே பாரதீயத்திற்கு முன்னோடியென்றும், வழிகாட்டியென்றும், அணிகலனென்றும் கருதப்பட்டது. அந்த எழுச்சியின் விளைவாக, 'குரு ஜாட', 'ராயப் ரோலு', 'விஸ்வநாத' போன்ற பலா நாட்டுப்பற்று நிறைந்து விளங்கும் காவியங்களை இயற்றினார். ஒரு பக்கம் நாட்டுப் பற்றை ஊட்டுவனவும், மற்றொரு பக்கம் இலக்கியத் தரம்மிக்கவையுமான புதினங்கள அக்காலத்தில ஏராளமாக வெளியாயின.

அக்காலத்தில் ஆந்திரப் பண்பாட்டை விளக்கும் நாவல்களில் பெயர் பெறறது 'வேயி படகலு' (ஆயிரம் நாகப்படங்கள்) எனும் புதினமாகும். இதன் இந்தி மொழிபெயர்ப்பிறகு 'ஸஹஸ்ரபணி' என்று பெயர். இநத மாபெரும் புதினத்தின கதைககூறுகள் ஒவ்வொன்றும் தனிச் சிறபபுடன் விளங்கக் காணலாம் 19 ஆம் நூற்றாண்டில் சிதைவுற்றிருநத பாரதப் பண்பாட்டு வரலாற்றுக்கே 'வேயி படகலு' என்ற பெயர் வழங்குகிறது

மறைநத அடவி பாபி ராஜு, 'ஹிமபிநது' (பனித்துளி) முதலான புதினஙகளின் வாயிலாக, இத்துறையில் ஒரு சிறப்புப் பிரிவினைத் தொடங்கி வைத்தார் அதன் தாக்கம் ஒரு பக்கம் இலக்கியத்திலும் மற்றொரு பககம ஓவியக கலையிலும் காணப்படலாயிற்று இவருடைய 'நாராயண ராவு' எனும் புதினம் தறகால ஆந்திரப் பணபாட்டினது தொடக்க நிலையின கற்பனைச் சித்திரமே ஆகும் பாபி ராஜு அவர்கள் தம் புதினங்களை வசன காவியங்களாக உருவாககினாரென்றால் விஸ்வநாத அவர்கள் தம் புதினஙகளை அறம் உணர்த்தும் காவியங்களாகப் படைத்தார் எனலாம்.

அன்றைய மக்கள் நலவாழ்வின மேமபாட்டிற்குத் தடையாக நிலவிய சமூகக் கோட்பாடுகள, உனனவ லட்சுமி நாராயண அவாகளின் 'மால பல்லி' (அரிஜனச் சேரி) எனும் புதினத்தில திறம்படச் சித்தரிக்கப் பட்டுள்ளன. லட்சுமி நாராயண அவாகள் நம் சமூகததின் சாதிப் பிரச்சினையைத் தெளிவு படுததியதுடன் அரிஜனங்களைச் சமூகம் வஞ்சிக்கிறது என்று எடுத்துரைததார் இந்தப் புதினத்திற்குத தற்போது பொருளாதார, மற்றும் அரசியல் அடிப்படையில் சிலா புதிய விளககங்களைத் தருகின்றனர். இருப்பவர்கள இலலாதவர்களை வஞ்சிப்பது எனபதற்கு ஆதிக்கம் செலுத்தும் வசதி இருப்பவர்கள் என்று உட்பொருள கூறப் படுகின்றது. இல்லாதவர்கள இருப்பவர்களை வஞ்சிப்பது என்பதற்குச் 'சமூகவாதம்' என்று விளக்கம் தரபபடுகிறது. எது எவவாறாயினும் , 'ஏகவீர', 'வேயி படகலு', 'நாராயணராவு' முதலிய புதினங்களைப் போலவே புதின வளர்ச்சிக்கு ஊக்க மளிதத 'மாலபலலி'க்கு மற்றொரு சிறபபும் உள்ளது மரபு மற்றும் பேசசு மொழிப் போராட்டத்தில் பின்னது வலுப் பெறுமாறு மாற்றிய பெருமை இதற்குண்டு.

இந்தக் கட்டத்தில் 'செவியலிகட்ட' (கடறகரை) என்ற புதினத்தைக் குறித்து ஒரு சில சொறகள் கூறுவது பொருத்தமாக அமையும். தனி மனிதச்சுதந்திரத்தைப் பற்றிய அளவில் தவறாகப் புரிந்து கொளளப்படும் இந்தப் புதினம், தெலுங்குப் புதினத்துறையில் இரணடு முக்கியமான புதுமைகளை அறிமுகப் படுத்தியது சீதாராமய்யாவைப் போன்ற எதிர்த் தலைவனையும் (anti-hero) ரத்னாவளி போன்ற அறிவாற்றல் மிக்க தலைவியையும படைத்து, விஸ்வநாத அவர்கள் மரபு வழித்த தலைவனையும், எழில் மிக்க தலைவியையும் பின்னுக்குத் தள்ளிவிட்டார 'அசமர்துனி ஜீவியாத்ர' (அசடுவின் வாழ்க்கைப் பயணம்), 'அல்ப ஜீவி' (அற்ப ஜீவி) போன்ற பல்வேறு புதினங்களில் காட்சியளிக்கும் எதிரததலைவன் தொடர்பான கதைகளுக்கு விஸ்வநாத அவர்கள் வித்திட்டார் என்று

சொல்லலாம். மற்றும் பாலுணர்ச்சியைப் பற்றிப் புதினத்தில் சொல்லவேண்டியிருந்தால், வெளிப்படையாகச சொலவதைவிட மறைமுகமாகச சொலவதே மேலானது என்பது அவர்தம் புதினத்திலிருந்து தெளிவாகிறது

வெவ்வேறு இலககியக் கொள்கைகள் மற்றும் இலக்கிய வகைகளுக்கான வித்துகள் ஏறகனவே விதைக்கபபட்டிருந்தன என்றாலும், இந்தியத் தேசிய விடுதலைப் போராட்டத்தை ஒட்டியே நடை, உத்திகள், வர்ணனைகள், வடிவமைப்புகள முதலியவற்றில் புதுமைகள் பல பேரளவில இடம் பெறலாயின இத்தகைய புதுமைப் புரட்சியின் விளைவுகளான புச்சி பாபி அவர்களின் 'சிவ ரேகு மிகிலேதி' (இறுதியில் மிஞ்சுவது), ஸ்ரீதேவி அவர்களின் 'காலாதீத்த வியகதுலு' (மறைந்த மனிதர்கள) முதலிய புதினங்களில் உளவியல் கோட்பாடுகள் சரிகைக் கரைகளைப் போல் மினுமினுக்கக் காணலாம. நேர்மையான சமூகவாதியும், படைப்புச் சுதந்திரவாதியும், தனிமனிதனின் ஆளுமையைத் திறம்படச் சித்தரிக்கும் நாவலாசிரியருமான கோபி சந்த் அவர்களின 'அசமர்துனி ஜீவியாத்ர' எனும புதினம் ஒரு சிறப்பு வகை மனோதத்துவக கொள்கையை நிலை நாட்டுவதற்காக எழுதப் பட்டதலல. எதிர்த்தலைவனைப் பற்றிய கதைக்கருவை உளளடக்கிய இப்புதினத்தில் பகுத்தறியும் தனிச்சிறபபு வாதமும், பொருள்முதல் வாதமும (materialism) இடம் பெறுவதுடன், அன்றாட வாழ்வின் தேவைகள் நிறைவேறாமல போகும் கடடங்களில மனநிறைவு கொள்ள வேண்டிய பகுவநிலை சித்திரிக்கப் படுவதையும் காணலாம தனி மனித மற்றும் சமூக நெறிகளும் இடையே நிகழும் போராட்டங்களின் கற்பனைப் பண்புருவமே இப்புதினத்தில் காட்சியளிக்கும் சீதாராமவின பாத்திரம் தனிக் கூற்றுகளைக் கொண்டு கதையை நடத்திச் செல்வது கோபிசந்த் அவர்களின் புதின வடிவமைப்புத் திறனுக்குச் சான்று பகரும்

'சிவரகு மிகிலேதி' எனும் புதிணம் மனோத்தத்துவச் சிக்கல்களை அலசும் புதினங்களுக்கு ஓர் எல்லைககல் எனறு சொல்லலாம் இதன தலைவனான தயாநிதி ஒரு தத்துவ ஞானியாவான், உலக வாழ்வுத் தொடர்பானவற்றைப் பொறுத்த வரையில் குழம்பிப் போன, ஒரு முடிவெடுக்க முடியாத மனிதனாவான், இவன் தன உடற்குறைகளை வென்று, தன்னைத் தானே ஆராய்ந்து, அன்றாடச் சமூகப் பிரச்சினைகளிலிருந்து விடுதலை பெற்றுத் தலைவனாக விளங்குகிறான் வாழ்க்கைப் போக்கில் ஓர் நடைமுறையை வெற்றிகரமாக மேற்கொண்டு இவன் இவனாக நிலை பெறுவதுடன் கதை நிறைவேறுகிறது, சமூகப் பண்பாட்டிற்கு முன்னர், தனி மனிதப் பண்பாடு தேவை என்ற கருத்து, அந்தப் பத்தாண்டுகளில் சமூக நாவல்களை எழுதுவதை விடுத்து, மனோதத்துவ நாவல்கள் புனைவதற்கு வழிவகுத்தது

இவ்வாறாக தெலுங்குப் புதினப் படைப்பு, வீரசேலிங்கத்திலிருந்து கோபி சந்த், புச்சிபாபு அவர்கள் வரையில் தங்கு தடையின்றி வளமாக நிகழ்ந்து வந்ததென்று கூறலாம்.

கற்பனை வளம் பொதிந்த புதினங்களில், தேசியப் போராட்டத்திற்குப்

பிறகு இடம் பெற்றவற்றுள்ள குறிப்பிடத்தகுந்த பிரச்சினை சமூகப் பொருளாதார முன்னேற்றமே. மார்க்சிஸ்ட் பொருளாதாரக் கோட்பாடு உலகம் முழுவதும் ஓர் ஆறுபோல் பரவி வந்த பொழுது ஆந்திர நாட்டில் உருவான ஒரு நீர் வீழ்ச்சி இது என்று சொல்லலாம் அன்றைய அரசியல் சமூகத் தளங்களில தோன்றிய சிறப்பு மாற்றங்களைப பிரதிபலிக்கும கண்ணாடிகளாகச் சில புதினங்கள விளங்குகின்றன டாக்டர் ஜி. வி. கிருஷ்ணாராவு அவர்களின் அறிவு நிலை சார்ந்த, சமூக அரசியல அங்கத நாவலான 'கீலு பொம்மலு (ஆடும் பொம்மைகள்) எனும புதினமும், ராச்சகொண்ட விஸ்வநாத சாஸ்திரி அவர்களின 'அலபஜீவி' பலிவாட காந்ததாராவு அவர்களின 'கோடமீத பொமம' (சுவரின் மேல் பொமமை), கொடவட்டிகன்டி குடும்ப ராவு அவர்களின் 'பெதரின மனுஷ்யுலு' (பயந்த மனிதர்கள்) ஆகிய புதுமை மணம் வீசும, சுவைமிக்க புதினங்கள் தற்காலத்தை எதார்த்தமாகப் பிரதிபலிக்கும் சின்னங்களாகத துலங்குகின்றன.

தெலங்கானாவில் நிஜாம் ஆட்சிக்கு எதிராகப் பல்வேறு கிளர்ச்சிகள் நடைபெற்றன. அவற்றிற்கு உறுதுணையாக உருவாகிய, 'புலுல சத்யாகரஹமு' (புலிகளின் அறப்போர்), 'ரதசக்ராலு' (தேரசக்கரங்கள்), 'ஒனமாலு (அகரவரிசை), 'தவாநலம்' (காட்டுத்தீ), 'மிருத்யுஞ்ஜயலு' (சாவை வென்றவர்கள்), 'சிம்ஹகர்ஜனம்' (சிங்க கர்ஜனை), 'கததுல வநதெனு' (கத்திப் பாலம்), 'பிரஜலமனிஷி' (மக்கள் மனிதன்), 'யுகசந்தி', 'வெல்லுவலோ பூசிக புல்லலு' (வெள்ளத்தில விளக்குமாற்றுக் குச்சிகள்) முதலிய புதினங்கள அன்றைய அரசியல் சமூக வரலாற்றை எதார்த்தமாக விளக்கும சித்திரங்களாம. இவை அனைத்தும் இரத்தத்தை உறைய செய்யும தன்மை உடையவை

தற்கால இலக்கியப் படைப்புகள அறிவைப் பெருக்கும் நோக்கத்துடன் அறிவியலைப பெரிதும சார்ந்துள்ளன இதனால் படைப்புகளில் ஆன்மிக நிலை குறைந்து பருப்பொருள் கோட்பாடுகள பேரளவில் இடம் பெறலாயின ஆகவே இன்றைய இளைய எழுத்தாளர் தம் புதினங்களில உள்ளத்து உணர்ச்சிகளுக்கு இருந்த இடம் குறைந்து ஆய்வுப போக்கு அதிக இடம் பெறத் தொடங்கியுள்ளது தற்காலப் புதினங்கள் மனோதத்துவ ஆராய்ச்சி, மனப் பிரச்சினைகள, மனோவியாதி முதலியவற்றை ஆய்ந்து அவைசும் அறிவியல் விடி வெள்ளிகளாக உருப் பெற்று வருகின்றன. இத்தகைய புதினங்களுக்குப் பதிப்பகங்கள, அச்சுக் கூடங்கள, வானொலி முதலியவற்றின ஆதரவு பேரளவு கிடைத்து வருகின்றது

முழுமையான 'நனவோடைப் புதினம்' அண்மைக்காலம் வரை நம்மிடையே உருவாகவில்லை. இருப்பினும் புகழ்பெற்றவர்களில புச்சி பாபு, கோபிசந்த், பூரீ தேவி போன்றவர்களும், பிரபலமானவர்களில ராச்சகொண்ட, ஜி வி கிருஷ்ணாராவு முதலியவர்களும் தத்தம் புதினங்களில் சில பகுதிகளில நனவோடை உத்தியைக் கையாண்டு நம்முடைய உள்ளறிவைத் தூண்டுவதில் வெற்றி பெற்றுள்ளனர்.

திரு. பலிவாட காந்தராவு அவர்களின் 'புண்யபூமி' (1969), குறிப்பாகப் பாரத

நாட்டின் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையையூட்டும் நயம் பொருந்திய புதினமாகும் அவருடைய 'கோடம்மீதே பொமம', 'தகாபட்டின தம்முடு' (எமாற்றப்பட்ட தம்பி) ஆகிய புதினங்கள் சமூகப் பண்பாட்டு ஆய்வுக் களங்களாக அமைநது, மனிதனின் அடிப்படைக குணங்களைத திறம் படச் சித்தரித்து மனித வாழ்வின் இரகசியத்தை நமக்கு வெளிப படுத்தும் சாதனங்களாக விளங்குகின்றன

'கோடம்மீதே பொம்ம' எனும் புதினத்தில தீய செயல்களில ஈடுபடும் பதரம, ரங்கய்ய நாயுடுவின் ஒரே மகனாவான். 'இல்லத்தரசியின் மாண்பே' வீட்டின மாண்பு எனற எணணமுடைய பெருமகள் பார்வதி நாயுடுவின் மருமகளாவாள் ஒரு பெண்ணுக்குச் சகோதரன் முக்கியமானவனா? அல்லது கணவன் முககியமானவனா? என்று தன கணவன் அடிக்கடிக கேட்டுத் தொல்லைப் படுததி வநதாலும் மிகவும் சாமர்ததியமாக நடந்து கொள்ளக் கூடியவள் பார்வதி. தான், 'தெருவின் மீது கரியால் வரையப் பட்ட பொம்மையே' என்று தன் உள் மனத்தில புரிந்து கொண்டு பிறகும், பாாவதியின் ஒன்றுவிட்ட தம்பியான, ராமதம் தன் சகோதரிக்காக, தன் பெருநதன்மையாலும், பொறுமையாலும அமைதியான போக்கினாலும் முயன்று, கொடுமையின் சின்னமான தன் அத்தான பத்ரத்தின் போக்கில் மாற்றத்தைக் கொண்டு வருவதைத் திறம்படச் சிததரிப்பதில இந்தப் புதிணம வெற்றி கண்டுளளது ரங்கயய நாயுடுவின் இறுதிக் காரியங்களைப் பத்ரததைக் கொண்டு, பத்திரமாக நிறைவேற்றிவிட்ட ராமம், தன் ஒன்றுவிடட சகோதரியான பார்வதிக்கு மகிழ்சசியையும் துககத்தையும் ஒரு சேரக கொடுத்துவிட்டு வீட்டை விட்டு வெளியேறுவதுடன் இந்தப் புதினம் நிறைவடைகிறது பெரியவர்களில், மரபுப பண்புகளின் மதிப்பை உணர்ந்த ரங்கய்ய நாயுடு போனறவாகளும், இளைஞாகளில ராமம் போன்றவர்களும நம் சமூகத்திறகு எத்தனையோ நன்மைகளை விளைவிப்பவராவா பாத்திரங்கள முதன் முதலில் தோன்றும் கட்டங்களின் தனிச் சிறப்பிற்கும், அவற்றை அறிமுகபபடுத்தும், தனித்தன்மைககும பெயர் பெற்ற புதினம் 'கோடம்மீதே பொம்ம' இதன் சுருக்கப் பதிப்பொன்றும் வெளியாகியுள்ளது (1974)

'இதே சுவர்கம் — இதே நரகம்' எனும் காந்த்தாராவு அவர்களின் அண்மைக் கால நாவல் (1974) டாக்டர் ஐ. பாணடுரங்கராவு அவாக்ளால் 'கிராநயன -- நயனுபினுமாணி' எனும் பெயரில் இநதியில மொழிபெயர்க்கப்பட்டது இது ஜி சத்யாராவு அவர்களால் ஆங்கிலத்திலும மொழிபெயர்ககப் பட்டது பிறவிக் குருடான காந்த்தம் தன வாழ்க்கையில் பலவேறு துன்பங்களுக்கு ஆளாகி, சமூகத்தால் துனபுறுத்தப் பட்டுப் பல அவமானங்களுக்கு இலக்கானதைப்பற்றிய கதை இது. தான் எதற்கும் உபயோகமற்றவன் என்று அவன் அவநம்பிககை கொள்வதில்லை பிறந்ததால் தன தேவையும் உலகத்திற்கு இருக்கின்ற தென்று அவன் நம்புகிறான் வீட்டு வேலைக்காரி புச்சி, மற்றும் அததை மஞ்சுளா முதலியோரின் ஆதரவு மற்றும் அன்பிலும் திளைத்து வளர்ந்த காந்த்தம், கதை இறுதியில் புகழ் பெற்ற பாடகனாகி, கல்யாணி எனும் ஊமைப்

பெண்ணை மணக்கிறான், விதியின் விளையாட்டிற்கு ஆளாகிக் கோமையாகிறான் அவன் உள்ளமே அவனுக்கு ஒரு தனி உலகம் சுவாக்கத்தில் இருக்கும் பொழுது அதை நரகமாகவும, நரகத்தில் இருக்குமபோது அதைச் சுவாக்கமாகவும் பாவித்துககொள்ளும் மனிதனின் சாமர்த்தியத்திற்கு இநதப புதினம ஒரு நல்ல கலங்கரைவிளக்கம் எனலாம்.

'பிரவாஹம்' (வெள்ளம்), 'இதோரி' (இதுவே வழி), 'புண்ய பூமி', 'சமபஙகி', 'நாலு(கு மஞ்சாலு' (நான்கு கட்டில்கள்) முதலிய காந்தாராவு அவர்களின் புதினங்கள் வாசகர்களின பாராட்டைப பெற்றவையாம் 'புண்ய பூமி' ஆந்திரப் பிரதேச சாகிததிய அககாதெமியின் பரிசைப் (1972) பெறறது இவருடைய 'சம்பங்கி' ஹைதராபாத் வானொலி நிலையத்தாரால் நாடக வடிவத்தில் ஒலிபரபபிச் சிறப்பிக்கப்பட்டது.

இவருடைய படைப்புகளில் 'தகாபடின தமமுடு' (ஏமாற்றப்பபட்ட தமபி) தலைசிறந்த புதினமாகும். ஸ்ரீ ஸ்ரீ. அவர்களின் 'மஹாபிரஸ்தானம்' (பெரும் பயணம்) எனும் படைப்பின் தாக்கத்தால் இப்புதினம் இப்பெயர் பெற்றது இவர், ஒளிமயமான எதிாகாலததுககான ஏக்கத்தை இபபுதினத்தில் சித்தரிததுள்ளார்.

வாழ்க்கையைச் சித்தரிக்கும் போக்குகளில எதாாத்த நிலை இருப்பினும், எதார்த்தக் கதைப் படைபபுகளைச சாதாரணமாகப் பாதிக்கும் குறைகள் 'ஏமாற்றப்பட்ட தமபி'யில் காணப்படவிலலை எதிரிகளைச் செயலற்றவர்களாக்கக் கூடிய சாமர்ததியம் கொண்டதும, களாஙகபடமற்ற சூழ்நிலையும், மதிப்பும மரியாதையும் நிறைநதுள்ளதுமான கிராமிய வாழ்விற்கும், போட்டியும் பொறாமையும் பெருகி, அர்த்தமற்ற கள்ளங்கபடம் நிறைந்து வீண தொந்திரவு கொடுககும் படடண வாழ்விற்கும் இடையேயுள்ள வேறுபாட்டினைத திறம்பட எடுத்துக காட்டுகிறது இபபுதினம். தறகால இழிந்த அரசியலின் விளைவாக மரபுவழிககிராம நல்வாழ்வு பாதிக்கப்படுவதால், ஏராளமான கிராமததினா மாதச் சம்பளத்தைக் கொடுக்கும் வேலைகளைத் தேடி நகரங்களுக்குக் குடி பெயர்வதை இபபுதினம நயம்படச் சித்தரிக்கிறது

மரபு வழியான தொழில்களின் சிதைவுடன் சமூகப் பண்பாட்டுக் கூறுகளின் பாதிப்பு பிணைந்துள்ளது என்ற கருத்து, காந்ததா ராவு அவர்களின் இந்தப்புதினத்தில் மட்டுமல்லாது, அவருடைய 'கோடமீதே பொம்ம', 'புண்ய பூமி' முதலிய நாவல்களிலும் பிரதிபலிக்கப் படுவதைக் காணலாம் திரு காந்த்தாராவு அவர்களின் சிறுகதைகளிலும் இக்கருத்து மிளிர்வது கண்கூடு கள் குடிப்பது போன்ற தீய வழக்கங்களைப் பொறுத்தவதையில் பண்பாட்டின் உறுதுணைக்கு மாறாகச் சட்டங்களின் துணை நாடுவது பலனளிக்காது என்பதை விவரிக்கும் அவருடைய 'தொங்கலு' (திருடர்கள்) என்ற சிறுகதை புகழ் பெற்றதாகும்.

விரைந்து நிகழ்ந்த வேளாண்மைததுறை வளர்ச்சியும், அரசியல விழிப் புணர்ச்சியும், 1945 ஆம் ஆண்டை ஒட்டி நிறைவேற்றப்பட்ட ஜமீந்தாரி ஒழிப்புச் சட்டமும் ஆந்திர நாட்டுக கிராமபபுற வாழ்வுக் களததில் விளைவித்த

மாற்றங்களின் அப்பட்டமான சித்திரமே 'தகாபடினை தம்முடு'.

இந்த புதினத்துள், கிராமத்தில் நிம்மதியுடன நலமாக வாழ்ந்து வந்த கதைத் தலைவன் புலலையா, கிராமப்புறச் சிலலறை அரசியல் சூழ்ச்சிகளுக்கு ஆளாக வேண்டிய நிலை உருவாகிறது புல்லையா ஒரு விவசாயி உழைதது நியாயமாக வாழவெணடுமென்பது அவனுடைய எண்ணம் அதறகு நம் நாட்டில் இடமில்லை என்பதை மெய்பபிக்கிறது இந்தப் புதினம புலலய்யா, ஊர் மாற்றத்தால நற்பணபுகளிலிருநது மாறி, நிலை குன்றி, மதிப்பிழநது, வாழ்க்கையில் தோல்வியைச் சந்திக்க வேண்டிய நிலை உருவாகிறது கிராமங்களில் பலவேறு தொழில்களில் ஈடுபட்டிருந்தவர் ஏதேனும் ஒரு வகையில் சமூக அரசியல் நிலவரங்களுக்குப் பலியாகி, வாழ வழியின்றிப பிசசை எடுகக வேண்டி நிலை வரவும், பட்டணங்களை நோக்கிப் படையெடுக்க வேணடிய நிலை உருவாகிறது. அவ்வாறு படையெடுத்தோரின் ஒரு பிரதிநிதியே புலலய்யா ஒருவகையில், இந்தப்புதினம், மட்டமான கிராமப் புறச் சமூக அரசியலின் தீவிரக் கணடனப் படைபபு எனறு கூறலாம்.

நீர், நிலம், காற்று முதலிய ஐம்பூதங்களும் அவற்றிற்கென விதிக்கப்பட்ட தர்மங்களுக்கேற்ப இயங்குவனவாம் உடலெனபது ஐந்து பூதங்களின சேர்க்கையாகும் அத்தகைய உடலாலான மனிதன் தாமதத்திற்கு எதிராகச செயல் படுவானேயானால், அவனைக் காப்பாறறக் கூடிய சகதி இநத உலகத்தில் இல்லை அதர்ம வழியில் நடநது, மனிதன் பயஙகரமான ஆபத்துகளைத் தேடிககொள்வது, அவன தனனைததானே ஏமாறறிக் கொள்வதாகுமே தவிர உலகை ஏமாற்றுவதாகாது. இததகைய அறிவுரையை நாவலின் இறுதிப பகுதியில் புலலயயாவுக்கு அவனுடைய கூட்டுததிருடன ஒருவன் எடுத்துரைக்கிறான் இந்த நிலைபேறான உண்மையில இந்த நாவலாசிரியர்கு அசைக்க முடியாத நம்பிக்கை உள்ளது. இதனால் தான் இந்தக் கோட்பாடு அவருடைய புதினங்கள் அனைத்திலும் மீண்டும் மீணடும் தலை காட்டுகின்றது எத்தகைய இலக்கியப் படைப்பெனினும் நீதிக்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை எனில் அது சிறந்த படைப்பாக விளங்க இயலாது என்பது அனைவரும் அறிந்ததே அதனால்தான் உலகத்தார் அனைவரின் நன்மையை விழையும் முழுமையான மனிதனுக்கு திரு காநததாராவு தம் புதினங்களில் சிறப்பிடம் அளித்தார். வினாடிககு வினாடி மாறும் தன்மையுடைய பொருளாதார அரசியல் கோட்பாடுகளின் அர்த்தமறற நிலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகப் புல்லய்யா காட்சியளிக்கிறான்.

மனிதனுக்கும் இயற்கைக்குமிடையே நிலைபெற்றுள்ள பிணைப்பிணை உணர்ததுவதற்காகவே காந்த்தாராவு அவர்கள் பிற இயற்கை வருணனைகளையும் விரிவாக வழங்கியுள்ளார். இயற்கையை விட்டு விலகிச செல்வது தர்மத்தை விட்டு விலகிச் செல்வது ஆகும் என்ற உண்மை புல்லய்யாவின் வாயிலாக விளக்க முறுவதைக் காணலாம்

புதினத்தின் தொடக்கத்தில் கதாநாயகன் புல்லய்யா ஒரு காட்டாற்றைப்போல் காட்சியளிக்க, கதாநாயகி நீலி அதன்

இரண்டுகரைகளைப் போல் தோற்றமளிக்கிறாள் சிங்கக் குட்டி போன்ற புல்லய்யா, கதை முடிவில் ஆட்டுக்குட்டியாக மாறிப்போக, வேளாண் குடிப் பெண்ணான நீலி கதை இறுதியில் தெய்வப் பெணணாக மாறுகிறாள் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தும் இயல்பில்லாதவன் புலலயயா ; உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தக் கூடிய ஆற்றலுடன், சலசலவென பாயும் ஆறறைப் போலிருந்த நீலி, கடைசியில் நிறைகுடமாகிறாள். நிறைவான மணவாழ்க்கையில் கணவன் மனைவியரின் தனிப்பட்ட குறைகளை அவாகளுடைய தனிப்பட்ட நிறைகள் நிறைவு செய்யும் என்று எதிர்பார்ப்பது இயற்கை படிப்பறிவு குறைந்தும பண்பாடு நிறைந்தும் விளங்கும் நீலி மென்மையாகப் பேசும் தன்மையுடையவள, தன் சக்திக்கு மீறி த்தானம செய்யும் இயல்புடையவள், இந்தப் புதினத்தின் நிறைவான முழுமையான எதார்த்தப் பாத்திரங்களில் தலை சிறந்து விளங்குபவள், கிராமப்புறத்து இலட்சியக்குடும்பப் பெண்மைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் துலங்குபவள்

ஏர் உழுது கொண்டு, பயிர்த் தொழிலில் ஈடுபட்டு, மனைவி நீலி அக்கறையுடன் செய்யும பணிவிடைகளில் குளிர்காய்ந்து கொண்டு வாழ்ந்துவரும் புல்லய்யாவிற்கு, சிலம்பாட்டத்தில் தன்னை விஞ்சக் கூடிய, ராஜாவைப் போன்ற மகன ஒருவன் பிறக்க வேண்டுமென்ற ஆசை இருந்து வருகிறது. அந்த மகன் நீதிமானாக விளங்கி, திருடர்களைப் பிடித்துக் கொடுக்கும் அதிகாரியாக வளரவேண்டுமென்பதில் மிகவும் ஆர்வம் கொண்டிருந்தான் , அத்தகைய மகனே பிறந்தான். அவனுக்கு மலலு என்று பாட்டனாரின் பெயரையே வைத்தனா.

வாழ்க்கை எப்போதுமே இன்பம் நிறைந்ததகாக இருப்பதில்லை துன்பங்களும வரத்தான் செய்யும். புல்லய்யாவின் வாழ்க்கையில் ஓர் இருள் நிறைந்த திருப்பம் வந்தது. பாரத நாட்டு விடுதலையையொட்டி அது நிகழ்ந்தது ஒரு முரண்பட்ட நிலையாகும் தீய அரசியல் நெறிகள், தூய்மையாக இருந்த கிராமப்புற வாழ்வைக் கலக்கிவிட்டன. எங்குப் பார்த்தாலும் வறட்சி, பஞ்சம் தலைவிரித்தாடின. அரச நியாயவிலைக்கடைகள் (ration shops) -- மக்களை ஆள வேண்டிய அரசாங்கமே அரிசி முதலிய தானிய வியாபாரத்தில் ஈடுபடலாயிற்று. அரிசி ஆலைகள் — சாப்பாடு, சிற்றுண்டிச்சாலைகள் -- கள்ள வியாபாரக் கடைகள். சுதந்திரப் பாரத நாட்டின் நாகரிகச் சின்னங்கள் என்று சொல்லக்கூடிய இவை அனைத்தும் புல்லய்யாவின் கிராமத்தில் (நவிரி) விரைந்து இடம் பெறலாயின. உழைத்துச் சம்பாதித்து மட்டுமே அறிந்த புல்லயாவிற்கு இந்த மாற்றங்களால் தலை சுற்றத் தொடங்கியது. "நியாயத்திற்குக் காலமில்லை, பணம் உள்ளவனுக்கே கௌரவமெல்லாம" என்பது புல்லய்யாவிற்குத் தெளிவாகப் புலனாயிற்று.

கடன் தொல்லையிலிருந்து விடுபடுவதற்காக நிலபுலன்களையெல்லாம் விற்று விட்டுப் புல்லய்யா பட்டணம் சேர்ந்தான். பட்டண வாழ்க்கை, சட்டிக்குப் பயந்து அடுப்பில் விழுந்த கதையிற்று. குடும்பத்தை நடத்துவதற்காகத் தானே திருடனாக வேண்டிய நிலை வந்தது. தன்னைக் காட்டிக் கொடுக்கப்போகத் "தன் மகன் திருடர்களைப் பிடிக்கும் அதிகாரியாக

வேண்டும்' என்ற புல்லய்யாவின் விருப்பம் எதிர்வழியில் நிறைவேறலாயிற்று.

முதலில், அவன் நகர வாழ்க்கையைத் தேடிச் சென்றதே தவறாகிவிட்டது. நகரத்தில் குடியேறிய பிறகு அவன் வீழ்ச்சி விரைவில் நிகழ்ந்து விட்டது.

'நீலம்மா' நவிரியின் கிராம தேவதையாவாள். அதே பேரைக் கொண்ட நீலி நேர்மைக்கும் ஒழுக்கத்திற்கும இருப்பிடமாக விளங்குவதில் ஒரு பொருத்தமுள்ளது. சாந்தமும் தாராள குணமும் கொண்ட நீலி, பல சோதனைகளைத் தாங்கி, ஒரு பெருங்காப்பியத்தின் தலைவியாகத் தோற்றமளிக்கிறாள். துன்பங்கள் நிறைந்த ஏழ்மையிலும், அவள் கற்பதுமைபோல் கலங்காமல் எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு, வாழ்க்கை நியதிகளை பின்புற்றுவதில் சற்றும் சளைக்காமல் விளங்குகிறாள் கணவன் சிறைத்தண்டனை அடைந்த போதும் தான் துன்பக் கேணியில் மூழ்கிய நிலையிலும், பிறர்க்கு உதவுவதை நிறுத்தவில்லை. அவள் பார்வையில், நேர்மையும் தர்மமும் சூரிய சந்திரர்களைப் போல நிரந்தரமானவை.

ஒரு பக்கம் கணவன் சிறைச்சாலையில், மற்றொரு பக்கம் இரண்டு குழந்தைகளுக்கு ஒரு வேளைக் கஞ்சிககு வழியில்லை, தன் வயிற்றில் இன்னொரு குழந்தைக்கு, நிற்பதற்கு நிழலில்லை, ஆறுதல கூறுவதற்கும் நாதியில்லை, கொடுப்பதே தவிர வாங்கியறியாத நீலி— இப்போது தெருவில் பிச்சையெடுப்பது தவிர வேறு ஒரு வழியும் அறியாள் அவளுக்கு இநத நிலை வருவதற்குக் காரணம் யார்? நாம், நம் சமூகம்; ஏழ்மையின் எல்லைக்குச் சென்று, வயிற்றை நிரப்புவதற்கு, வெட்கததோடு, ஒரு வாய்ச்சோற்றைத் திருடுபவனைக் கடுமையாகத் தண்டித்துவிட்டு, பெரிய செல்வந்தனாயினும் ஒவ்வொரு வினாடியும், கவலைப்படாமல், கோடிக் கணக்கில் சுருட்டுபவனை மக்கள் தொண்டனென்றும், தலைவனென்றும் போற்றும் நம் மரபுகள், நம் நீதி நூல்கள், இருப்பவர்க்கே சாதகமாக அமைந்துள்ள நம் அரசியல் சட்டங்கள் — வேறு யார்? யாரிடம் கேட்பது– யாரைக் குற்றஞ் சாட்டுவது?

ஆந்திர நாட்டைச் சார்ந்த இந்தப் புதினத்திலுள்ள பெயர்களை மாற்றிவிடடால், இந்தக்கதை பாரத நாட்டில எந்த மூலைக்கும் பொருந்தக் கூடியதுதான் நம் பேச்சுக்கும் செயல்களுக்குமிடையே உள்ள தூரத்தைச் சுட்டிக் காட்டுகிறது இந்தப் புதினம்.

இந்தப் புதினத்தில் இரண்டு தளங்களைக் காணலாம் மனிதன் இயற்கைக்குத் தூரமாவதைக் குறித்து எச்சரிப்பது ஒன்று, சுய நலக்காரரால் நாட்டிற்கு விளையும் கேடுகளைப் பற்றி எச்சரிப்பது மற்றொன்று. ஒரு காலத்தில் புல்லய்யா, தான் அந்த ஊர்க்கராருக்கு அஞ்ச மாட்டேன் என்று கூறினான். அது ஒரு வகையான அறப் போர் — மிருகபலததின் மீது நியாயபலத்திற்கு இருக்கும் செல்வாக்கு என்று சொல்லலாம் இத்தகைய அறப் போர்களை ஆதரிப்பதில் மிகவும் ஈடுபாடுள்ளவர் காந்த்தாராவு அவர்கள்.

(குருட்டு வெங்கன்னா, ராஜிபயய, மாரம்ம, ஆதெம்மக்க, சந்திரய்ய, பீஸ்,

பங்காரய்ய முதலிய எதார்த்தப் பாத்திரங்கள் இந்தப் புதினத்தில் இயலபாக நடமாடுகிறார்கள் இதில் ஸ்ரீகாக்குள மாவட்டத்தின் மணவாசனையை மணக்க வைத்து, அப்பகுதிவாழ் மககளின் வாழக்கையை நயம்படச் சித்தரித்து, ஆந்திரக் கிராமப்புறத்தை வாசகரின் கண்முன் கொணர்ந்து நிறுத்தியுள்ள காந்தாராவு அவர்களுககுத் தெலுங்கர் அனைவரும் கடமைப் பட்டவர் ஆவர்.

தொடக்கத்தில் குறிப்பிட்ட நாவலாசிரியர்கள் அனைவரும முந்திய தலைமுறைச் சார்ந்தவர்கள். அவர்களில் பாதிப்பேர் இப்போது மறைநது விட்டனர், மீணடும் வரமாட்டாாகள். உண்மைதான் தற்போது பல சாதனையாளர்கள் இருக்கிறார்கள். அவர்களிடம் ஓரளவு திறமை இருக்கிறது. அத்தகைய குறிப்பிடத்தக்க நாவலாசிரியர்களில் திரு நாகராஜு ஒருவராவார். இவருடைய 'திராகுபோது' (குடிகாரன்) என்பது நனவோடை உத்தியைக் கையாள்வதில் ஓரளவு வெற்றிகண்ட புதினமாகும

சைனா, பாகிஸ்தான் பாரத நாட்டில் மேற் கொண்ட ஆககிரமிப்புகள், தனித்தெலஙகானா மற்றும் தனி ஆந்திர நாடு ஆகியவற்றிற்கான போராட்டங்கள் (1969, 1972) முதலியவற்றைப் பின்புலமாகக கொண்ட குறிபபிடத்தக்க புதினங்கள் தெலுங்கில் இதுவரையில் வெளிவரவில்லை. எந்தப் போராட்டமும் கவிதைகளைப் படைக்கத்த தூண்டுவது போல புதினங்களை உருவாக்குவதற்குத் துணை செய்வதிலலை சுருக்கமாகச் சொல்வதனால, கடநத இருபதாண்டுகளில், நம் புதின வரலாறு, ஒரு ஜீவநதியில் பெருக்கெடுக்கும் வெள்ளத்தைப் போல் இல்லை, கலைச் செழிபபு மிக்க ஆற்றொழுக்காகவும் இல்லை, நாள் தோறும் ஊற்றுப் பெருகி நிறையும் குட்டை போலத்தான இருக்கிறது எண்ணிக்கைக்குத்தான் சிறப்பு அளிக்கப் படுகின்றதே தவிர திறனுககல்ல. இதற்குக் காரணம், இன்றை தொடர்கதைகள் நாவல் வாசகாகளுக்குத் தொடர்சசியாக, நாவல கதைகள் எனும்பொழுது போக்குகள் தாம் ஏராளமாகத்தேவையே தவிர, விமர்சகர் கூறுவது போல் கலைத்திறன் மிக்க படைப்புகள் தேவையில்லை இதனால் எழுததாளருக்கும் சிறந்த இலக்கியம் படைக்க வேண்டும் எனும் ஆர்வம் குறைந்து விட்டது. இருப்பினும், இத்தகைய புதினங்களில் ஓரளவு தரமுள்ளவையும் காணப்படுகின்றன அவை முன்பே குறிப்பிடப பட்டன. பெண் எழுத்தாளர் சிலரும் இந்த வகையில் முன்னோடிகளாகத் திகழ்கின்றனர்.

பெண்கள் தம் பிரச்சினைகளைக் கடந்து அவர்களுடைய அறிவாற்றைலைப் பயன்படுத்திப் புனைவதில் திறன் மிக்கவர்கள் என்பதற்கு எடுத்துக் காட்டுகளாக விளங்குபவை 'பலிபீடம்', 'சமத' (சமமானவை), 'மட்டிமனிஷி' (மண்மனிதன்) முதலிய புதினஙகளாகும் கூர்ந்து நோக்கும் திறன், உள்ளத்து உணர்ச்சிகளை உணர்த்தும் ஆற்றல், சுவைபட எடுத்துரைக்கும் வன்மை, கற்பனை வளம், குடும்ப வாழ்வை எதார்த்தமாகச் சித்தரிக்கும் திறமை, எதையும் அழகாக நவிலும் பாண்மை முதலிய இயற்கை அளித்துள்ள வரப்பிரசாதங்களின் காரணமாக இன்றைய பெண்

எழுத்தாளர்கள் நிரம்ப எழுதிவருகிறார்கள் என்பது உண்மை : ஆனால் அவை அனைத்தும் தலை சிறந்த படைப்புகள் என்று சொல்ல இயலாது. தைத்துச் சீராக்குதலின் விளைவு என்று சொல்லக்கூடிய தொடர் நாவல்களையும் (Relay novels) இவர்கள் முயற்சித்து வருகிறார்கள். இவர்களுடைய நாவல்கள் திரைப் படங்களுக்கான மூலக் கதைகளாகவும் பயன் படுத்தப்படுகின்றன.

மொத்தத்தில் தெலுங்குப் புதினத்திற்கும் அதன் பல்வேறு வகை தொகைளுக்கும் அழிவற்ற நல்ல எதிர்காலம் உள்ளது. சுருக்கமாகச் சொல்வதென்றால் திரு பலிவாட காந்த்தாராவு அவர்களின் புதினங்களைப் போன்றவை தம் புகழாலும் சிறப்பாலும் தெலுங்கு நாவல் வளர்ச்சிக்கும் எழுச்சிக்கும் வழிகோலும் என்று கூறலாம்.

பி. வி. குடும்பராவு.

# 1

ஜப்பான் நாட்டு ஹீரோசிமா நகரின் அடிவயிற்றில் அணுகுண்டைப் போட்டு அந்நகர மக்களை நடுநடுங்கச் செய்த அதே நாள், அதே இரவு ஆந்திர நாட்டின் வடபகுதியில் வம்சதார நதிக்கரையில் உள்ள நவிரி என்ற கிராமத்திலும் ஒரு சாதாரண மனிதன் அக்கிராம வாசிகளையும் நடுநடுங்கச் செய்தான்.

அந்த மனிதனின் பண்பாடு, அணுகுண்டை எந்த நடுக்கடலிலும் போடவிடாமல், இரண்டு லட்சத்து அறுபதாயிரம் பேரைக் கொன்று, ஒரு லட்சத்து அறுபத்து மூவாயிரம் பேரைக் காயப்படுத்தி, மூன்றாயிரத்து முன்னூறு ஏக்கரா நிலத்தைப் பாழாக்கி, அறுபத்து நாலாயிரம் வீடுகளைத் தரைமட்டமாக்கியது.

பண்பாடற்ற வரையினும் நவிரியில் இவனுடைய நிலை ஆயிரத்து ஐநூறு பேரை நடுநடுங்கச்செய்து, அவ்வூரின் கிராம தேவதை நீலம்மாவுக்கு ஒரு நாள் ஊரெலலாம் சேர்ந்து ஆட்டம் பாட்டங்களோடு உற்சவம் நடத்துமாறு செய்தது.

வம்சதார நதிக்கரையில் கிராமத்தை ஒட்டியிருந்த நீலம்மாவின் கோயிலில் அன்றிரவு ஆவேசம் வந்த தாசன் ராமுடு, வானத்திற்குக் கேட்பது போல் கத்திக் கொண்டிருந்தான்.

சப்பை மூக்கு, நீண்ட தாடி, அவிழ்ந்த குடுமி, கொம்பு போல வெளுப்பும் கறுப்பும் கலந்து வளைந்த கொடுவாள் மீசை, ஒட்டிப்போன முகம், கறுத்து மெலிந்து போன உடம்பு.

சிறிய கோவணத் துண்டைத் தவிர அவன் உடம்பில் வேறு துணியில்லை.

சுற்றிக் கூடியிருந்த கிராம வாசிகளில் சிலர் தாசனின் ஆவேசப் பேச்சுக்குத் தலை சாய்த்தனர். சிலர், அங்கேயே தாசனின் பாதங்களில் விழுந்து வணங்கினர். 'ஐயோ எவ்வளவு தப்பு பண்ணிட்டோம்' என்று நொந்து கொள்பவர் பலபேர் இருந்தனர்.

அவன் காலடியில் கிடந்த முகங்களுக்கும் தாசனுக்கும் நெருங்கிய பழக்கம் உண்டு. இந்தத் தாசன் ராமுடுதான் ஒரு காலத்தில் நாவிதன் ராமுடுவாக இருந்தான் அவன் மகன் வளர்ந்து ஆளாகும் வரையில் மிக நம்பிக்கையோடு, ஒவ்வொரு நாளும் அந்நாவித தோல் பெட்டியை எடுத்துக் கொண்டு ஒவ்வொரு வீட்டுக்கும் போய், சவர வேலையைக் கவனிப்பான். அவனுடைய மகன் அவனைப் போல் குடுமி முன் பக்கம் மழித்தல், சவரம் செய்தல், நாலு முடி விட்டுவைத்தல் போன்றவற்றைக் கற்றுக் கொள்ளவில்லை "பட்டணத்துப் பெரிய மனுஷங்களுக்குட் கிராப்புக் கூட எங்க பையன் வெட்றான்", என்று ராமுடு பெருமையோடு சொல்லிக்கொள்வதுண்டு. தனக்குக் கிடைக்கும் ஓய்வு நேரத்தில் கிராமத்துக் கணக்கர் கூடவே இருந்து குறைந்தது ஒரு சுருட்டுத், துண்டோ, இல்லை கொஞ்சம் கேழ்வரகோ சம்பாதித்துக் கொள்வான்.

ஒரு நாள் கணக்கர் வீட்டுக்கு ஒரு புது ரெவின்யூ இன்ஸ்பெக்டர் வந்தார். இதற்கு முன்னால் பல பேருக்குக் கால் அமுக்கி விடுதல், மாலீஷ் போடுதல், தலைக்கு எண்ணெய் தேய்த்து விடுதல் இதெல்லாம் ராமுடு செய்திருக்கிறான். தான் சாகும் வரையில் அந்த வேலையைச் சந்தோஷமாக செய்யப் போவதாகவே நினைத்துக் கொண்டிருந்தான். ஆனால் அந்த இன்ஸ்பெக்டர் வருகையோடு தன் வாழ்க்கையில் புதிய யோகம் வந்ததாக ராமுடு நம்பினான். அன்று அவனுக்குக் கொஞ்சம் காய்ச்சலாக இருந்தது. "காலு அமுக்குறியா இல்லெயாடா கழுதே" என்று இன்ஸ்பெக்டர் சீறினார். கை கட்டியபடி, தன் உடம்பு சரியில்லையென்று பயபக்தியோடு சொன்னான். அவ்வளவு தான் அதிகாரிக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. எல்லாம் வேஷமென்றும், ஜெயிலில் தள்ளுவதாகவும் பயமுறுத்தினார். ராமுடு ஒன்றும் சொல்லாமல் கால் அமுக்கி விட்டான். ஆனால் வயிறு எரிந்தது.

அந்த நிமிஷமே அவனுக்குள் ஒரு வைராக்கியம் பிறந்தது. நேரே நீலம்மன் கோவிலருகில் வந்து உட்கார்ந்தான். ஒரு முறை தான் அந்த அதிகாரிக்கு மேலதிகாரியாக இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று தோன்றியது. காலை அமுக்கச் சொல்லி இருக்கலாம் என்று நினைத்தான். 'இவ்வளவு கஷ்டப்பட்டேன், ஒரு காலணா கொடுக்கலியே,' என்ற நினைப்பு வந்தது. தனக்கு ஏதோ வேண்டுமென்றே எண்ணத்தோடு பின்னால் திரும்பி, இரண்டு கைகளையும் கூப்பி, "அம்மா நீலம்மா தாயே என் வயிறு எரியுது தாயே என் வேதனையைக் கேட்டுக் கருணை காட்டம்மா. இந்த நாவிதன் ராமுடை ஞாபகம் வெச்சிக்கோ தாயே" இப்படிச் சொன்னானே தவிர, என்ன வேண்டுமோ அதைக் கேட்க மறந்து விட்டான்.

கோவில் கறுப்பாக இருந்தது.. கோவிலுக்குக் கல்லாலான வாயிற்படி இருந்ததே தவிரக் கதவு கிடையாது. உள்ளே ஒரு பலகை மேல் நான்கு மர விக்கிரகங்கள் இருந்தன. நடுவிலிருந்த இரண்டில் ஒன்று நீலம்மா, மற்றொன்று நீலம்மாவின் அண்ணன் எர்ரன்னா, மற்ற இரண்டும் நீலம்மாவின் அக்கா தங்கைகள். அந்த வழியில் போகிறவர்கள் ஒரு கும்பிடு போடுவார்களே தவிர, அவற்றின் மேல் அக்கறை காட்டுவது கிடையாது. அவன் அப்பாவுக்குக் கூட இந்தக் கோவில் எப்போது கட்டப்பட்டதோ தெரியாதாம். ஆனால் இறந்து போன அவன் அப்பாவுக்கு நீலம்மன் என்றால் அவ்வளவு பக்தி. அவனுக்கு மட்டும் இல்லையா என்ன?

சில நிமிஷங்கள் கழிந்ததும் ராமுடுவுக்கு மிகவும் இரக்கம் பிறந்தது. நீலம்மன் கோவில் முழுவதும் தூசும் ஒட்டடையும் நிறைந்திருந்தன. விறுவிறுவென்று வீட்டுக்குப்போனான். துடப்பம் கொண்டு வந்து எல்லாம் சுத்தம் செய்தான். ஒட்டடையெல்லாம் அடித்தான். பிறகு பொம்மைகளுக்கு வர்ணம் பூசினால் எவ்வளவு

நன்றாக இருக்கும் என்ற எண்ணம் வந்தது. கோவிலுக்கு வெள்ளை அடித்தால்? இந்தத்தாயை கவனிப்பார் யாருமில்லையே பல்லக்கு இருந்தால் . . . . தாரை தப்பட்டை டமடமக்க ஊர்வலம் வருமே எல்லாம் அப்போதே தான் செய்தால் எவ்வளவு நன்றாக இருக்கும். அவ்வளவு பணம் இருந்தால் அவன் செய்யத்தான் செய்வான். அவன் வரும்படி கைக்கெட்டியது வாய்கெட்டாமல் போய்க்கொண்டிருந்தது. ஊரிலிருப்பவர்களிடம் சொன்னால் . . . . நினைத்தது போலவே நான்கைந்து பேரிடம் சொன்னான். அவர்கள் யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. கேலி செய்தனர். நம்ம தாத்தா முத்தாத்தா காலத்திலெ இல்லாததெ நாம புதுசா பண்ணா என்ன ஆகுமோ என்று பயத்தோடு சொன்னவர்களும் உண்டு. இந்த அம்மனுக்கு ஒரு கும்பிடு போடறதைத்தவிர பூஜை புனஸ்காரம் செஞ்சா கோபம் வரும் என்று ஒரு கிழவி சென்னாள்.

ராமுடுவுக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை. வர வர நீலம்மன் மேல் பக்தி பெருகிவிட்டது. சில சமயம் இருட்டும் வரையில் இருப்பதுண்டு. ஒவ்வொரு நாள் சின்ன அகல் விளக்கு வைப்பதுண்டு. கோவில் முன் கை கட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பான். இதற்கிடையில் இரண்டுமுறை இன்ஸ்பெக்டர் வந்தார். ஆனால் கால் அழுக்கச் சொல்லவில்லை. நீலம்மன் தன் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்தாள் என்று ராமுடு திடமாக நம்பினான்.

வரவர தாடி வளர்ந்து விட்டது. பார்வை மங்கிவிட்டது. தினந்தோறும் காலையிலேயே ஆற்றில் ஒரு முழுக்கு போட்டுவிட்டு அப்படியே நீலம்மன் கோவிலுக்கு வருவான். தனக்குத் தெரிந்த வார்த்தைகளைக் கொண்டு தெரிந்த முறையில் பிரார்த்திப்பான். "இப்போதெல்லாம் யாராவது சவரம் செய்யக் கூப்பிட்டால், "இன்னக்கி விரதம் இருக்கிறேன். தோல்பையைத் தொட்டால் நீலம்மனுக்குக் கோவம் வரும்," என்று சொல்வது வழக்கமாகி விட்டது. இரண்டு மூன்று முறை பக்தி பரவசத்தில் உரக்கப் பேசவும் பழகிவிட்டான். வெளியூரில் சாமி வந்து ஆடும் ஆசாமியிடம் மூன்று முறை சென்று அந்தக் கலையையும் கற்றுக் கொண்டான். கோவிலில் முயற்சித்துப் பார்த்தான். தொண்டைக்குப் பயிற்சி கொடுத்தான்.

ஒரு நாள் விடியற் காலையிலேயே ஊரெல்லாம் பரவி விட்டது – நீலம்மன் அம்பட்டன் ராமுடு மேல் இறங்கி விட்டாளென்று. 'அதோ வீராவதாரம் . . . . இறங்கிவிட்டாள், இறங்கிவிட்டாள்,' என்றார்கள். பாதி முடி நரைத்த அந்த வயதானவர்கள். 'நிஜம் தாண்டா . . . முதல்ல அவன் ரெண்டு மூணு மாசமா இந்தக் கோவிலே கதின்னு கிடந்தான். அந்த அம்மனை உபாசனம் பண்ணான். இப்பொ அவன் மேலெ இறங்கிட்டா, இறங்கிட்டா என்றார்கள். இன்னும் கொஞ்சம் பேர்.

இப்படி நாளுக்கு நாள் மேலும் மேலும் பக்தி அதிகமாகி விட்டது. சாமி வந்து ஆவேசமாகப் பேசுவதில் ராமுடுவுக்கு மேலும் மேலும்

திறமை வந்து விட்டது  தான் விரும்பியதெல்லாம் நடந்தது - பொம்மைகளுக்கு வர்ணங்கள் - கோவிலுக்கு வெள்ளை, தெய்வங்களுக்கு பல்லக்கு - ஊரெல்லாம் தான் இந்த அம்மனுக்குத் தாசனென்று . . . தன்னைப்பக்தி மரியாதையோடு பார்த்தது - இதுவரைக்கும் போல அம்பட்டன் ராமுடு என்று சொல்லாமல் தாசன் ராமுடு என்று சொன்னது, ரெவின்யூ இன்ஸ்பெக்டர் மறுபடியும் காலை அமுக்குவதற்கு  வரச்சொன்ன போது, இந்த முறை வரமுடியாதென்று தைரியமாகத் திரும்பிச் சொல்லி அனுப்பியது - அதிகாரி கோபம் வந்து சீறி விழுந்த போது, ஊரெல்லாம் ஒன்று சேர்ந்து, அந்த தாசன் கையால் இனிமேல் அந்த வேலையை வாங்கக்கூடாது என்று சொல்லியது - இவ்வளவும் நடந்தது! இப்போது தாசன் அந்த ஊருக்கு வேதாந்தி, மகான்!

அத்தகைய கௌரவத்தை மக்களிடையே சம்பாதித்துக் கொண்ட தாசன், சுற்றுப் பட்டிக் கிராமங்களில் காலரா இருப்பதைக் கேள்விப்பட்டுத் தன் வேலையைத் தொடங்கிவிட்டான். அதனால் தான் இன்று குரலை உயர்த்தி விட்டான்.

கோவிலில் அகல் விளக்கு எறிந்து கொண்டிருந்தது. சின்னக் கரண்டியில் சாம்பிராணி தூபம் போட்டான். கிராமத்தெக் காப்பாத்தனும் தாயே! நீ காப்பாத்தலேன்னா வேறெ யாரு. கோவிலில் பெரிய விவசாயி, அவர் மனைவி, முன்சீஃப், இன்னும் நாலு பெரிய மனிதர்கள் உட்கார்ந்திருந்தார்கள். கோவிலுக்கு வெளியேயும் ஏராளமானவர்கள் அமைதியாக நின்று கொண்டிருந்தார்கள்.

கண்ணை மூடிக்கொண்டு தாசன் ராமுடு 'ஊம்!' என்று பெரு மூச்சுவிட்டான். நிஷ்டையிலிருந்தானோ, என்னவோ, முன்பு போல் பயங்கரமாகக் குதிக்கவில்லை. பிறகு தொண்டையிலிருந்து பெரிய முனகல் வெளி வந்தது  உடனே, "மகனே!" என்று கத்தினான். பிறகு ராகத்தோடு தொடங்கினான்: "டேய் மகனே! சொர்ணம்மன் போய்க்கிட்டிருக்கறாடா . தூதனுங்க திங்கறாங்க - இந்த - டேய்! தூதனுங்க திங்கறாங்கடா! நான் இந்த ஊரெ எவ்வளவுதான் காப்பாத்துவேன் . . . . இன்னும் எவ்வளவுதான் காப்பாத்தறது . . . டேய்! அந்தத் தூதனுங்க இந்த ஊரு மேலெ விழுந்து தின்னுகிட்டிருக்கறாங்கடா! நான் எவ்வளவுதான் காப்பாத்துவேன்! மகனே! ஜாக்கிரதெயா இருந்தாத் தவிர ஊரு . . . . ஊரு முச்சுடும் இருக்காது தூதனுங்க தொலெச்சிடுவாங்க. ஜாக்கிரதெயா இருடா மகனே!"

யானையைப் போல அகலத் தலை பெரிய விவசாயி, ராமுடு காலில் சாஷ்டாங்கமாக விழுந்து, "அம்மா, தாயே! கிராமத்தெக் காப்பாத்தப் போறாங்க?" எனறார்.

தாசன் குரல் மறுபடியும் வானத்துக்குக் கேட்டது. "பைத்தியக்காரா! நான் நினெச்செனா பூமி கபகபன்னு பத்தி எரியும், சமுத்திரம் வத்திப்

போவும். இந்தப்பக்கத்திலே உதிக்கிற சூரியன் அந்தப்பக்கத்திலெ உதிக்கும்."

"நிஜம் தாயே! நிஜம்! உன் பிள்ளெங்க மேலெ கருணெ காட்டு தாயே! – கிழ நாயுடு கேட்டுக் கொண்டார்.

தாசன் ஒரு சிரிப்பு சிரித்துவிட்டு, "டேய் மகனே! என் பசங்கன்னா எனக்கு எவ்வளவோ பாசம்டா! அவங்க மேலெ ஒரு சின்ன ஈ உக்காந்தா என் உடம்பு கன்னிப் போவுது. அவங்களே ஒரு சித்தெறும்பு கடிச்சாவே எனக்கு ஒரே பதட்டமா ஆயிடுது! பக்கத்திலெ அண்ணன் எர்ரன்னா இருக்கறான். இவன் அக்கா தங்கெங்களோட பொறந்த ஒரே ஆம்பளெப் பையன் அகப்பட்டவங்களைத் தின்பது தான் இவன் வேலெ . . . எனக்காக இல்லேடா – இவனுக்காகவாவுது. . . இத்தனெ நாளு சும்மா இருந்தீங்க . . . வேலெ வெட்டி பாத்துகிட்டிருக்கிறீங்கன்னு சொல்லிகிட்டிருந்தேன். . . உற்சவம் நடத்தணும்டா! அப்பதான் நான் சொர்ணம்மனெ, தூதனுங்களெ அடிச்சி விரட்றதுக்கு இவன் உதவி பண்ணுவான்! மகனுங்களே! நடத்துங்கடா . . . உற்சவம் நடத்துங்க! . . ."

ராகத்தோடு தாசனின் கோரிக்கை வெளியானதும், அதுவரையில் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டிருந்த எல்லாரிடத்திலும் உற்சாகம் தலைகாட்டியது. நீலம்மாத் தாய், சொர்ண அம்மன் இந்த ஊரை நாசமாக்காதபடிக் காப்பாற்றுவாள். அந்தத் தாய்க்கு உற்சவம் 'நடத்துணும் நடத்துணும்' என்று எல்லாரும் பேசிக் கொண்டிருக்கவே, பெரிய விவசாயி வாயிற்படி அருகில் நின்று கொண்டு, உரத்த குரலில்சொன்னார்· "வர்ற கௌரி பௌர்ணமி அனனெக்கி, இவங்க அவங்கன்னு இல்லாமெ, ஊரெல்லாம் ஒண்ணாச் சேர்ந்து நீலம்மனுக்கு ஊர்வலம் நடத்தணும்."

"ஆமாம்" என்றார்கள் எல்லாரும்!!

## 2

கௌரி பௌர்ணமி வந்தது! கிராமத்தாரிடையே பரபரப்பு அதிகமாகி விட்டது. பௌர்ணமிக்கு இன்னும் ஐந்து நாட்கள் இருக்கும்போது சிறிய பனை ஓலைக்கூடைகளில் மணலை நிரப்பி ஐந்தாறு வகைப் பருப்பு விதைகளைப் போட்டு நிழலில் வைத்தார்கள். ஜாதிக்காய்ப்பூக்கள் கொத்து கொத்தாகப் பூத்திருந்தன. பெண்கள் விரதம் இருந்தார்கள். ஜாதிக்காய்ப் பூக்களைக் கூந்தலில் செருகிக் கொண்டார்கள்.

சாயங்காலம் தாசன் கோவில் வாயிற்படி அருகே நின்றிருந்தான். பார்வையில் சந்தோஷம். நிற்பதில் ஒரு கம்பீரம்; குடுமி அவிழ்ந்து கிடந்தது. மூக்கில் தங்கக் கம்பியோடு முகம் மலர நின்றிருந்தான். சுற்றுப்புறம் வெது வெதுவென்று சுகமாக இருந்தது.

முகம் நிறைய மஞ்சள் பூசிக குளித்த பெண்கள், மகிழ்ச்சியோடு குடங்களில் மஞ்சள் நீரைக்கொண்டுவந்து தாசனின் பாதங்களில் ஊற்றிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு கும்பிடு போட்டார்கள், தாசன் பெருமையோடு பார்த்துக்கொண்டான், தன் வாழ்க்கை எவ்வளவு மாறிவிட்டது? சில வருஷங்களுக்கு முன் இவர்களையெல்லாம், 'அம்மா தாயே' என்று கெஞ்சிக் கேழ்வரகு கேட்டு வாங்கி வருவான்! அதோ அதோ பெரிய விவசாயி மனைவி! நாயுடு மகள், இன்னும் எத்தனையே பேர் தாசனின் பாதங்களில் மஞ்சள் நீரைக் ஊற்றிக்கொண்டிருந்தார்கள்.

ஆற்றுக்கும் கோவிலுக்கும் இடையே வண்ண வண்ணச் சேலைகளோடு கிராமப் பெண்கள் நடந்து கொண்டு இருந்தார்கள். மலையின் பின்னால் பொழுது மெள்ளச் சாய்ந்தது.

அந்தி இருட்டு. சந்திரன் எழுந்தான். முன்பனிக் கால நிலா உடம்பைப் புல்லரிக்கச் செய்தது. ஒரு மூலையிலிருந்து ஏதோ ஒரு முனகல். இன்னொரு பக்கத்தில் கங்கம்மா சலசலவென்று போய்க்கொண்டிருந்தாள்! பார்ப்பவர்களின் ஆரவாரம்! எல்லாம் ஆனந்த மயம்!

சாப்பாடு முடிந்தது. அருகிலிருந்த பட்டணத்திலிருந்து வாடகைக்கு எடுத்து வந்திருந்த இரண்டு பெட்ரொமாக்ஸ் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. அதற்குள் தப்பட்டைகள் படமடக்கத் தொடங்கின உலகத்துக் கெல்லாம் ஒளியூட்டிக்கொண்டிருந்த சந்திரனுக்கு வெறியூட்டி, ஓட வைக்கிறார்களோ தப்பட்டைக்காரர்கள் என்று நினைக்கும் வகையில் அடித்துக் கொண்டிருந்தார்கள்.

காலையிலிருந்து உபவாசம் இருந்த தாசன், ஒவ்வொரு பொம்மையாக மரப் பல்லக்கில் ஏற்றிவிட்டான். மக்களிடையே உற்சாகம் பொங்கியது. வாழைப்பழம், பூ ஆகியவற்றைப் பல்லக்கின் மேல் வீசினார்கள். பட்டாசு வெடித்தார்கள்! பல்லக்கு வண்ணாரின் தோள்கள் மேல் ஏறியது.

வண்ணங்களால் அழகு படுத்தப்பட்ட விக்ரகங்கள்; சிவப்பான பல்லக்கைச் சுற்றி அல்லித் தோரணங்கள் – தாசனுக்கு ஊரெல்லாம் சேர்ந்து கொடுத்த நாகப் பழ வர்ணப் பட்டு வேட்டி – நிலாவில் ஒளி வீசும் வெள்ளையடிக்கப்பட்ட கோவில் . . . இந்த வண்ண வண்ணக் கலவை வானவில்லைப் பார்த்தாற்போல். . . கண்ணுக்கு விருந்தாக இருந்தது.

எல்லாருடைய முகங்களும் பௌர்ணமி நிலாவைப்போலவே ஒளி வீசிக் கொண்டிருந்தன! தாசன் பீடாதிபதியைப் போல் பல்லக்கின் முன்னால் நின்றிருந்தான்.

நீலம்மன் கோவில் எதிரில் இரண்டாண்டுகளுக்கு முன்னால் தென்னந் தோப்பு இருந்தது, 1943 இல் வீசிய பெரிய புயலுக்கு நான்கு மரங்கள் தாம் தப்பின. மற்றவை எல்லாம் விழுந்து விட்டன. அந்த இடத்தில்தான் தப்பட்டைகள் முழங்கிக்கொண்டிருந்தன! உற்சாகம்

கிழவர்களிடையேயும் தாண்டவ மாடியது. பெரியவர்களின் தோள்மேல் சின்னப் பிள்ளைகள் உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். சுற்றுப் பக்கத்து கிராமங்களிலிருந்து வந்திருந்த விருந்தினர்கள், சொந்தக்காரர்கள் இன்னும் அதிகமாக உற்சாகத்தைக் கொட்டிக் கொண்டிருந்தனர்.

தப்பட்டைகள் 'சினக்சினக் ஸோ. . .' என்று மந்தமாகச் கத்தும் போடத் தொடங்கின. ஓர் ஐந்து வயதுப்பையன் பல்டி அடித்துக் கெண்டிருந்தான். தப்பட்டைக்காரர்கள் துள்ளிக் குதித்து அடித்துக் கொணடிருந்தார்கள்.

இன்னொரு கிழவன் முன்னுக்கு வந்தான். பல் கொட்டிப் போயிருந்தாலும், 'தஞ்சினக்கடி தஞ்சினக்கடி . . . .!' என்று தப்பட்டைக்காரரை ஒரேடியாக்க் குதிக்க வைத்தான்.

"இதோ . . . வந்துட்டான்!" என்ற திருப்தி சுற்றிலும் குழுமியிருந்தவர்களிடையே ஒரு முறை பரவியது. வாட்டசாட்டமான உடம்பு! வேட்டியை லங்கோடு போல வரிந்து கட்டி மீசையை முறுக்கிக் கொண்டே அரங்கத்தின் நடுவில் பூனைப் பாய்ச்சலோடு குதித்தான். கறுப்பானாலும் பளபளக்கும் உடம்பு! நீண்ட மூக்குக்குத் தகுந்த உப்பிய பெரிய முகம்! கண்கள் மின்னிக் கொண்டிருந்தன! கழுத்தில் காசிக் கயிறு. மணிக் கட்டில் இன்னொரு கறுப்புக் கயிறு! அதுவே சொல்லும் கவாத்தில் அவன் வஸ்தாது என்று! தூண்கள் போன்ற கால்கள், அவ்வளவு பெரிய ஆள் ஒரு குதி குதித்து, காற்றில் மிதந்து கொண்டிருந்தான். ஒவ்வொரு முட்டியையும் மிகச் சுலபமாக வளைத்துக் கொண்டிருந்தான். வெட்டி விடப்பட்டிருந்த குடுமி முதுகில் பட்டும் படாமலும் துள்ளிக் கொண்டிருந்தது. அவன் தான், வேறு யாருமல்ல . . . புல்லய்யா!

தப்பட்டைக்காரர்கள் ஓர் இடத்தில் நிற்க முடியாமல் போய்விட்டார்கள். அதோ முன்னுக்கும் பின்னுக்குமாக ஓடிக் கொண்டிருந்தார்கள்.

'ஜனக் ஜனக் லபிம்கடி ஜனக் ஜனக் ' – புல்லய்யாவின் ஆட்டத்துக்குத் தப்பட்டைகள் எல்லாம் ஒன்று சேர்ந்து அருகில் வந்து அடித்துக் கொண்டிருந்தன. அந்தச் சுற்றுப் பக்கத்து பத்துக் கிராமங்களில் பேர் வாங்கியவர்கள். . . . . புல்லய்யாவின் ஆட்டத்துக்கு ஈடு கொடுக்க முடியாமல் அவ்வப் போது தப்பட்டைகள் ஓய்ந்து நின்றன. கிழிந்து கொண்டிருந்தன. "பலே புல்லய்யா!" என்று மக்கள் கத்திக் கொண்டிருந்தார்கள்!

பக்கத்தில் வைக்கோலைப் பற்றவைத்துத் தப்பட்டைகளைச் சூடுபடுத்திக் கொண்டாலும் போட்டிக்கு நிற்க முடியாமல் போய்க் கொணடிருந்தன. அதற்குள் இரண்டு தப்பட்டைகள் கிழிந்து விட்டன. புலி ஆட்டம் ஆடிக் கொண்டு அடி போட்டுக் கொண்டிருந்த புல்லய்யா சட்டென்று நின்றுவிட்டான். எல்லாரும் அதிர்ச்சியடைந்தனர். தப்பட்டைக்காரர் முகங்கள் பிரகாசமாக இருந்தன! புல்லய்யா

அலுத்துப்போய்த் தோற்றுவிட்டான்!!

புல்லய்யா நாக்கைக் கடித்துக் கொண்டான். அந்த அம்மனை வணங்காமல் ஆட்டத்தைத் தொடங்கி விட்டானா! எவ்வளவு பெரிய தவறு நடந்து விட்டது! விறுவிறென்று நீலமமன் அருகில் சென்று ஒரு கும்பிடு போட்டான் : தாசனை வணங்கினான். தாசன் புன் முறுவல் பூத்து, "பலே! புல்லய்யா!" என்றான். புல்லய்யா ஒரு துள்ளு துள்ளினான். அந்தத் துள்ளலோடு அரங்கத்தில் வந்து குதித்தான். தப்பட்டைக்காரர்கள் வாயைப் பிளந்து கொண்டு நின்றார்கள். அவர்கள் கைகளில் சக்தி இல்லாத மாதிரி தப்பட்டைகள் ஒலித்துக் கொண்டிருந்தன. எல்லாரும் கசமுசாவென்று பேசலானார்கள். "புல்லய்யா ! புல்லய்யா என்ன லேசுப்பட்டவனா? இந்த ஆட்டத்துலெ அவனெ மிஞ்சின ஆம்பளெ இந்த சுத்துப்பக்கத்துல இருக்கறானா? இல்லே. . . இல்லே . . . நிச்சயமா இல்லே," என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

பெருமையோடு ஒரு கிழவன் மீசையைத் தடவிக் கொண்டான். தன் குரு புல்லய்யாவைப் பார்த்து ஒரு சிறுவன் சிரித்துக்கொண்டே, தோளைத் தட்டிக் கொண்டான்.

பல்லக்கு நகர்ந்தது. மக்களும் நகர்ந்தார்கள். முன்னால் பட்டாசு வெடித்தது. ஊரில் ஒவ்வொரு வீட்டுக்கு முன்னாலும் பல்லக்கு நின்று கொண்டிருந்தது. பெண்கள் வெல்லம், பருப்பு, வாழைப்பழம் என்று நீலம்மனுக்குப் படைத்துக் கொண்டிருந்தார்கள். வீட்டிற்குத் தகுந்தாற்போல் தாசன் நீலம்மனின் பங்கை வாங்கிக் கொண்டிருந்தான். சிலர் அம்மனுக்குப் புது சேலைகளைப் படைத்து கும்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

பெரிய விவசாயி வீட்டின் முன்னால் நீண்ட நேரம் நின்றார்கள். புல்லய்யா கையில் பாணாத் தடியைப் பிடித்துக் கொண்டு சிலம்பாட்டம் ஆடலானான். 'தஞ்சினக்கடி தஞ்சினக்கடி' எனும் சத்தத்தில் காது அடைத்துக்கொண்டது. ராக்கெட்டைப் போல் காற்றில் தடி சுற்றிக் கொண்டிருந்தது. கண்ணுக்குத் தென்படவில்லை. தப்பட்டைகள் ஓய்ந்து விட்டன. அதோ நின்றுவிட்டன! இதோ நின்றுவிட்டன! வியர்வை சிந்திக் கொண்டிருந்த புல்லய்யா வெடிச் சிரிப்பு சிரித்தான். ஜனங்களெல்லாம் ஒரே குரலில் கத்தினார்கள், "சபாஷ்! சபாஷ்!" என்று.

ஆமாம் . . . புல்லய்யா பெரிய விவவசாயி வீட்டுத் திண்ணை மேல் திரண்டு நின்ற . . . இளமையில் கொழுத்துத் தளதளக்கும் கட்டுக் கழுத்திகளின் (சுமங்கலிகள்) இதயங்களில் . . . ஏதோ ஒருவகையான உணர்ச்சியைத் தூண்டிக் கொண்டிருந்தான்.

பல்லக்கு நகர்ந்து கொண்டிருந்தது. ஜனங்கள் நகர்ந்து கொண்டிருந்தார்கள். பெரிய தெருவில் இன்னும் இரண்டு இடங்களில் ஆட்டம் நடத்தினார்கள், புல்லய்யாவின் சீடர்கள் குருவின் பெயரை

நிலைகக வைத்தார்கள். பெரிய தெருக்கோடியில் பல்லக்கு நின்றது. எதிரில் கல்கத்தாவிலிருந்து சென்னைக்குப் போகும் டிரங்க ரோடு காட்சியளித்தது. ரோட்டுக்கு இரண்டு பக்கமும் இரண்டு தெருக்கள் உண்டு. பல்லக்கு ரோடைத் தாண்டுவதற்குள் தப்பட்டைக்காரர்கள் மூச்சு வாங்கிக் கொண்டார்கள்.

புல்லய்யா பூனைப்பாய்ச்சல் பாய்ந்தபடி ரோட்டுப் பககத்திலேயே நடந்தான். மறுபடியும் எழுந்து நின்று ஒரு சுற்றுச் சுற்றினான். அன்று சந்தையிலிருந்து வந்து கொண்டிருந்த வண்டிகள் எல்லாம் இந்த ஊர்வலத்தைப் பார்த்து நின்று விட்டன. வண்டிகளின் மேல் நின்றுகொண்டு வண்டிக்காரர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள். இடையில் வந்தான் ஒரு சிறுவன். மூன்று பற்கள் விழுந்து போன பையன். தொடையில் அடித்துக்கொண்டு துள்ளினான். தப்பட்டைக்காரர்கள் காற்றில் பறந்து கொண்டிருந்தார்கள். முகத்தை இறுக்கிக் கொண்டு சிறுவன் அவர்களை விட உஷாராகவே குதித்துக் கொண்டிருந்தான். கன்னங்கள் சிவந்தன. கோமணம் அவிழ்ந்து கொண்டிருந்தது. ஆறேழு வருஷம் ஆகவில்லையென்றாலும் தசை அமைப்பு நன்றாகவே இருந்தது. பார்ப்பதற்கு அழகாக, கண்ணைக்கவரும் படியாக இருந்தான். எல்லாரும் அந்தச் சிறுவனைப் பார்த்து மெய் மறந்து இருந்தார்கள்.

புல்லய்யா சீடனைப் பார்த்து, "சபாஷ்" எனறு சொன்னான். ஒரு தடவை நடுவில் குதித்து, பூனை பல்டி போட்டபடி ஓரிடத்தில் நின்று கொண்டான். தலையை அந்த மெத்தென்ற தரையின் மேல் ஊன்ற வைத்தான். தப்பட்டைகள் நின்று விட்டன. பையன் விறுவிறென்று காற்றிலிருந்த புல்லய்யாவின் பாதங்கள் வரையில் பனைமரம் ஏறுவது போல் ஏறிவிட்டான். 'புல்லய்யாவால் தாங்கிக் கொண்டிருக்க முடியாது, பையன் சறுக்கி விடுவான். கட்டாயம் சறுக்கி விழுவான்!' எல்லாரும். . . வண்டிக்காரர்களும் சேர்ந்து முணுமுணுத்தார்கள் . . . பையன் புல்லய்யாவின் இரண்டு பாதங்கள் மேல் தன் சின்னப் பாதங்களால் குதித்துக் கொண்டிருந்தான்.

நிசப்தம்! நிச்பதம்! வாய்களெல்லாம் திறந்தபடி இருந்தான். முகங்களெல்லாம் மேலே அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தன.

ஒரு விசில் . . . பாதங்கள் மேல் நின்றிருந்த பையன் தோள்களைத் தட்டிச் சிரித்துக் கொண்டிருந்தான்.

'ஆஹா! பலே. . . . பலே! . . . .' மக்களின் கண்ணிமைகள் ஆடவில்லை. நெஞ்சு மேல் கை வைத்துக் கொண்டார்கள். புல்லய்யா மூச்சை இழுத்துப் பிடித்துக் கொண்டான்!

யாரது? வண்டிக்காரன் தானா? . . . "வேறெ யாருக்கு அவ்வளவு சாமர்த்தியம் இருக்கும்? அதோ கீழெ இருக்கறானே அவன் மகன் தான் மேலே இருக்கறவன்" அமைதியான தண்ணீரில் ஓர் ஓட்டுச் சில்லைப் போட்டாற் போல் வார்த்தைகள் அலை அமைதியாக வந்து

புல்லய்யாவின் காதில் நுழைந்தன.

புல்லய்யாவின் கண்கள் நிலைத்து நின்றன. 'அதைச் சொன்ன ஆசாமியெப் பாக்கணும்! கட்டாயம் பாாக்கணும். பையன் இறங்கி விட்டான். எதிரிலிருந்த வண்டிக்காரக் கிழவன் தான்! கிழவன் என்றாலும் இளமையோடிருந்தான் . . . உற்சாகத்தில் இளைஞன். இன்னும் மெய்மறந்து பொக்கை வாயைத் திறந்து சிரித்துக் கொண்டிருந்தான்.

வண்டிகள் நகரத் தொடங்கின. கிழவன் சாட்டையால் எருமைக் கடாவை விரட்டிக் கொண்டே, "அதிர்ஷ்டம்னா அப்படி இருக்கணும்! அப்பன் பேரெக் காப்பாத்தற மகனெப் பெத்தான்!

வண்டிகள் நகர்ந்து விட்டன. பல்லக்கு நகரத் தொடங்கியது. மக்கள் நகர்ந்து கொண்டிருந்தனர். புல்லய்யா நகர முடியாமல் இருந்தான்!

'ஆமாம், மகன்! எனக்கு மகன்!! எனக்கா மகன்! எனக்கேன் மகன் இருக்கக் கூடாது? எனக்கு மகன் வேணும்! வேணும்!'

'அழகா, கண்மணி போல இருக்கற பையன். அவனும் என்னெ மாதிரியே முடி வளப்பான். நாலு பேரிடையிலெ பெருமெ சம்பாதிச்சிக் கொடுப்பான். எதுக்கும் பயப்பட மாட்டான். அவனை இந்தக் கசரத் ஆட்டத்திலே கெட்டிக்காரனாக்கறேன். ஒரு வார்த்தெ குடுத்தான்னா உயிர் போனாலும் நிலையா நிப்பான் திருடங்களெப் பிடிக்கற துரையாவான். கையாலெ வாரிக் கொடுப்பான். மண்ணெ நம்பி வேர்வெ சிந்தி எங்க மரியாதையெக் காப்பாத்துவான் . . .

'என் மகன்! என் மகன்!!'

## 3

மனைவியை விட மகனைப் பற்றி நினைப்பது புல்லய்யாவுக்கு இன்பமாக இருந்தது. கிழவனின் வார்த்தைகளை மறுபடியும் மறுபடியும் அசை போட்டுக் கொண்டிருந்தான். சட்டென்று மாடுகளுக்கு வைக்கோல் போடவில்லை என்பது நினைவு வந்தது. குறுக்கு வழியில் வீட்டுக்குப் போக வேண்டுமென்று ரோட்டில் ஏறினான். நாலடி எடுத்து வைத்தால் ரோட்டுப் பக்கத்திலேயே களத்து மேடுகள், களத்து மேடுகளை ஒட்டி மேற்குப் பக்கத்தில் சேற்று வயல்கள். வயல் வரப்பில் நடந்து கொண்டிருந்தான். மறுபடியும் மகன் நினைப்பு மாடுகளை மறக்கும் படிச் செய்துவிட்டதே!

நின்றுவிட்டான். ஆற்றங்கரை தென் பட்டது. அதோ நீலம்மன் கோவில். சந்திரன் உச்சியில் இருந்தான். மேகங்கள் அருகில் அருகில் சென்று வெளுத்துக் கொண்டிருந்தன. பட்டப்பகல் போல நிலா ஒளி வீசியது.

நிலா வெளிச்சத்தில் மூன்று பர்லாங் தூரத்தில் ஆற்றின் கரையிலிருந்த வாராவதி வெள்ளை வெளேரென்று பிரகாசித்தது.

சில்லென்ற காற்றில் மெதுவாக அசைந்தாடிக் கொண்டு, இளங்கதிர்களோடு பச்சைப் பசேலென்றிருந்த வயல் பேச்சுக் கொடுத்தது. 'ஹா! ஹா! . . . எங்கம்மா லச்சுமி தேவி என்று மனதில் கையெடுத்துக் கும்பிட்டுக் கொண்டான். அங்கங்கே முற்றிய நெற்கதிர்கள் ஊஞ்சலாடிக் கொண்டிருநதன. அந்த அமைதியில் கலகலவென்று ஓசை எழுப்பிக் கொண்டிருந்தன -- 'எங்க லச்சுமிதேவி வளையல்களின் கலகல சத்தம்!'

சிரித்துக் கொண்டான். சந்தோஷத்தில் உடம்பு ஒரு சுற்று பெருத்து விட்டது. காலை எட்டிப் போட்டுக் கொண்டிருந்தான். வானம் குறையில்லாமல் ஒளியை வாரி இறைத்தது.

வளமான பயிர் விளையும் தங்கமான பூமி. பாலும் தயிரும் வழியும் கிராமம். மத்து அசையாத வீடோ, இராட்டை சுத்தாத வீடோ அங்கு கிடையாது.

'எங்க ஊரு! இது எங்க ஊரு!' புல்லய்யா தன் ஊரை நினைத்துக் கொண்டு ஒரு குதி குதித்தான்.

சித்திரை சித்தம் வைத்து, வாதி சில்லிடச் செய்து, வைகாசியில் வீசாமலிருந்தால், அனுராதா அன்றைக்குக் கேட்ட அளவு விளைச்சல் தருகிறேனென்கிறாள் பூமா தேவி. ரோஹிணியில் மழை பெய்தால் உரல் நிறைந்த அறுவடை!

இந்த ஊரில் கங்கம்மாவுக்குக் குறையில்லை. மழை மலையில் பெய்தால் ஆற்றில் தண்ணீர் பாயும். கால்வாய்கள் நிறைந்து விடும். பயிர் விளைவது விசித்திரமாக இருக்கும் இவர்களுக்கு. இரண்டு வருஷங்களுக்கு முன்னால் அறுவடை செய்யும போது காற்றும் மழையும் அடித்துத் தீர்ந்து விட்டன. தீர்த்தாலும் இந்த ஊர்க்காரர்கள் கை நீட்டவில்லை. பஞ்சம் வந்த மேட்டுப் பகுதிக்காரர்க்கு உதவி செய்தார்கள்.

இவ்வளவு சிறப்புடையது தன் கிராமம்! புல்லய்யா திரும்பிப் பார்த்தான். சிறிய வெள்ளை மேகம் ஒன்று சந்திரனை மறைத்து விட்டது. சிறிய காற்று வயல் மேல் சவாரி செய்தது. ஆமாம்! தக்க நேரத்தில் விழுந்தது விதைகள். களஞ்சியம் நிறையாதா? சட்டென்று தன் விஷயத்தை நினைத்துக் கொண்டான். தன் மகன்! . . . மகன் தன்னைப் போல் முடி வளர்த்து, திருடர்களைப் பிடிக்கும் துரை. . . தக்க நேரத்தில் விழுந்த விதை. காலத்தை அறிந்த மகன் ஒருவன்! கார்த்திகையில் பெய்த மழை. தக்க காலத்தில் பிறந்த மகன் சமயத்து உதவ மாட்டானா!

மனைவி இல்லாமல் மகன் எப்படி வருவான்? மனைவியை விட உடம்பு முக்கியம் என்ற பிடிவாதத்தால் இன்னும் மனைவியைக் குறித்து நினைப்பதற்குத் தயக்கமாக இருந்தது.

காலை நகர்த்தினான்.

எங்கிருந்தோ -- அந்த இனிய ராகம்!

"அம்புலி மாமா!"

புல்லய்யாவின் உடம்பெல்லாம் ஒரு முறை சிலிர்த்தது.

'ஹாஹ்ஹா. . . பேஷ் பேஷ்! . . .' உதட்டைக் கடித்துக் கொண்டான்.

எத்தனையோ கந்தர்வக் கன்னிகள் ஒரு குரலாக இணைந்து "அம்புலி மாமா!"

புல்லய்யாவின் உடம்டெல்லாம் புல்லரித்துவிட்டது.

மறுபடியும் அதே ராகம்.

புல்லய்யாவை அந்தக் குரல் கூப்பிட்டாற் போலிருந்தது! ஓடிப்போய் அந்தக் குரலில் கலந்துவிட வேண்டுமென்று தோன்றியது.

தான் எந்த மூலை! அழைப்பைக் கேட்டுச் சந்திரனே நேராகப் போக முடியாமல் இந்தப்பக்கம் ஓடிவந்து கொண்டிருந்தான்.

ஒளிமயமான சந்திரன் ஒரேடியாக மெய்ம்மறந்து நிலைத்து விட்டான்.

"அம்புலி மாமா!" எத்தனையோ குரல்கள்! கைத்தட்டல் கூடக் கேட்டுக் கொண்டிருந்தது.

மறுபடியும் தன்னைக் கவர்ந்த அந்தக் குரல் மிக மிக இனிமையாக, "அவன் கைகள் பெரிதென்று முறம் வாங்க விடமாட்டான். . ."

"அம்புலி மாமா!" "அம்புலி மாமா!"

புல்லய்யா சட்சட்டென்று குதி போட்டு வந்தான். கோவிலைத் தாண்டினான். ஆற்றங்கரையைச் சேர்ந்தான். அந்த ராகம் தன்னை இழுத்துக் கொண்டிருந்தது. ஏதோ ஒரு கவர்ச்சி புல்லரிக்கச் செய்தது!

நிலாவை ஆறு விழுங்கிக் கொண்டே பாய்ந்து கொண்டிருந்தது.

அதோ ஆற்றங்கரையில் வளைந்த புளிய மரம். அந்த மரத்தின் பக்கத்தில் தானியக் கூடைகளேற்றிவரும் வண்டி. அந்த வண்டியின் பக்கத்தில் சிறிய வெடடவெளி. அந்த வெட்ட வெளியில் . . . . அந்த வெளிச்சத்தில் வெள்ளை ஆடையில் அழகான கிராமத்துப் பெண்கள்!

ஆடல் பாடல்களோடு ஒய்யாரமாக மின்னிக் கொண்டிருந்தனர். புல்லய்யா மெல்லத் திருடன் போல அந்த மரத்தின் பக்கத்தில் சேர்ந்தான். கண்களால் அவர்களை விழுங்கிவிடுவது போல் பார்த்தான். மனத்தில் காதல் நினைப்பில் லயித்துப் போனான்!

கும்மியடித்தபடிப் பன்னிரண்டு பேர் பாட்டைப் பாடிக் கொண்டு துள்ளிக் கொண்டிருந்தார்கள். அவர்களைச் சுற்றியபடி இன்னொரு பெண் பல்லவி பாடிக் கொண்டிருந்தாள்.

அதோ பாடிக் கொண்டிருக்கிறாளே அவள் தான் நீலம்மா, ஊரெல்லாம் நீலி என்று சொல்லும்.

நீலி வளைந்தும் நெளிந்தும் ஒய்யாரமாகச் சுற்றிச் சுற்றியும் மரத்தின் நிழலுக்குள் வந்து கொண்டிருந்தாள். புல்லய்யாவின் நரம்புகள் புடைத்துக் கொண்டிருந்தன. கையைப் பிடித்து இழுத்து, அவளை இறுக அணைக்க வேண்டுமென்று துடித்தான்.

வெள்ளையான ஆடைகள் -- நிறை நிலா -- கொழுத்த உடம்புகள்

– திரண்ட இளமை. குளிர்ந்த காற்று. மென்மையான இனிய பாட்டு. ஹாய் ஹாய்!

ஜாக்கெட்டில்லாத இளம்பெண்கள்.

முகத்தில் மஞ்சள். கால் நகங்களில் சிவப்புச் சாயம். மறுபடியும் பாட்டின் தொடக்கத்துக்கு வந்தார்கள்.

"அம்புலி மாமா!"

"அவன் கைகள் பெரிதென்று முறம் வாங்க விடமாட்டான். "அம்புலி மாமா!"

புலலய்யா தன் கைகளைப் பார்த்துக் கொண்டான். பெரிய கைகள் தாம், குஷியாக ராகத்தோடு சுற்றிக்கொண்டே மரத்தின் அருகில் வந்தாள்.

ஆஹா! அந்த திரண்டெழுந்த இளமை அழகெல்லாம் அவளிடமே குடியிருந்தாற் போலிருந்தது. பார்த்த புல்லயாவுக்குப பைத்தியமே பிடித்துவிட்டது. மறுபடியும் சுற்றிக் கொண்டே--

"அவன் வயிறு பெரிதென்று பானை வாங்க விடமாட்டேனே "அம்புலி மாமா!" அம்புலி மாமா!"

கைத்தட்டல், லயம் லயத்திற்குத் தகுந்தபடி கால அடி போட்டுக கொண்டிருநதனர். மறுபடியும் நீலி மரததின் பக்கத்தில் வந்தாள். நீலி அப்படியொன்றும் கறுப்பு என்று சொல்ல முடியாத கறுப்பு. கள்ளங்கபடமில்லாத முகம்.

உடம்பை நெளித்துக்கொண்டே மறுபடியும் குரலெடுத்தாள்.

"அவன் காலு பெரிதென்று ஏணி வாங்க விடமாட்டானே-- "அம்புலி மாமா!" அம்புலி மாமா!"

அந்த உடல் நெளிப்பு - அந்தக் கண்ணில் மினுமினுப்பு --புல்லயயா மரத்தோடு மரமாகி விட்டான்

"அவன் பல்லு பெரிதென்று பருப்பு சமைக்க விடமாட்டானே-- "அம்புலி மாமா!" அம்புலி மாமா!"

பெண்கள் சுற்றி சுற்றி வந்தனர். புல்லய்யா தாங்க முடியாத ஆசையோடு, நீலி கையைப் பிடிக்கத் துடித்தபடி நின்றான்.

"அவன் பொக்கை வாய்க்கு உசந்த பல்லுக்குச்சியா,

அவன் வெறுந்தலைக்குப் பட்டுத் தலைப்பாவா"

"அப்பாடா! அந்த மாதிரி ஆம்பளை யாருக்கு வேணும்!" எட்டுப் பேரும் சர்ரென்று பறந்து விட்டார்கள் கிழக்குப் பக்கமாக. நீலி வீடு தெற்குப்பக்கத்தில் இருந்தது.

'நீலி நின்னுக்கிட்டிருக்கறா! நிஜமா நீலி நின்னுக்கிட்டிருக்கறா! தனியா! அஹ்ஹா! அஹ்ஹஹ்ஹா! நீலி நின்னுக்கிட்டிருக்கறா!'

நீலி நகரத்தொடங்கினாள்.

புல்லய்யா தொங்கிய முந்தானையைப் பிடித்து இழுத்தான். நீலி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். அந்த மரம் பக்கமாக இழுக்கவே, ஹா! . . . திரு. . . டா"

புல்லய்யா வாயை மூடிவிட்டு மார்போடு அணைத்துக் கொண்டான். முகத்தின் அருகில் முகத்தை வைத்து, 'திருடனா பெரியமனுஷனா பார்! சரியாப் பார்!!

"ஹா . . . உனக்கு நியாமில்லே . நியாயமில்லே . . கடவுள் உன்னெச் சும்மா விட மாட்டார். விட்டுடு. . . விட்டுடு"

நீலி திமிறிக் கொண்டிருந்தாள். புல்லய்யா விடவில்லை. உரக்கக் கத்தப் போனாள். கத்தவில்லை. துடிக்கவானாள். தப்பிக்க முடியாமல் திணறிக் கொண்டிருந்தாள்.

கொண்டை அவிழ்ந்து விட்டது. அவள் நசுங்கி போய்விட்டாள், எல்லாம் ஒரே குழப்பம்!

'உஷ்' என்றான் புல்லய்யா ஒரு முறை. கடித்துத் தன்னை விடுவித்துக்கொண்ட நீலி ஓட்டம் பிடித்தாள், கையைத் தேய்த்துக் கொண்டே 'உன்னெப் பிடிக்கலேன்னா பாரு" என்று தலையை ஆட்டினான். ஓடிக் கொண்டிருந்த நீலி "வெக்கமில்லே?" என்று சொன்னது போல் கேட்டது.

## 4

தலையை ஆட்டிக்கொண்டே நான்கு அடி எடுத்து வைத்தவன் திரும்பிப் பார்த்தான். நீலி தென்படவில்லை. ஆனால் நீலி தன் அருகிலேயே நிற்பது போல் தோன்றியது. உதட்டை ஒரு முறை சப்பிக் கொண்டான். 'தாலி அறுப்பா அறுக்க, எங்கெ போயிடுவா, பாக்கிறேன் என்று சொல்லிக் கொண்டே வீட்டைப பார்த்து நடந்தான்.

கால் சத்தத்தைக் கேட்டு, நின்றிருந்த மாடுகள் ஆவலோடு பார்த்தன. தும்பை அறுத்துக்கொண்டு அருகில் வர வேண்டுமென்று தவித்தன. மடமடவென்று புழக்கடைக்குச் சென்றான். வைக்கோல் போரிலிருந்து வைக்கோலைப் பிடுங்கி மாடுகள் முன்னால் போட்டான். பசியோடிருந்த மாடுகள் அப்படி அப்படியே விழுங்கலாயின. பக்கத்தில் நின்றான். மாடுகளின் முதுகைத் தட்டித் தடவிக் கொடுத்தான்.

மேலே நிலா. மாடுகள் வைக்கோலை தின்றபடிச் சின்ன சத்தம் எழுப்பின. மென்மையான காற்று வீசியது. நார்க் கட்டிலை இழுத்து முற்றத்தில் நிலா வெளிச்சத்தில் போட்டான். உட்கார்ந்தான். புழக்கடையிலிருந்த அரச மரத்தில் குருவிகள் குலாவியபடி மெதுவாகச் சத்தம் எழுப்பிக் கொண்டிருந்தான்.

"அம்புலி மாமா, " பாட்டு காதில் எதிரொலித்துக் கொண்டிருந்தது, அம்புலி மாமாவைப் பார்த்தான். பொங்கும் கடல் போல் உடல் பொங்கிக் கொண்டிருந்தது, நீலி சரசரவென்று தப்பித்து ஓடிவிட்டாள், சிட்டுக் குருவி,

மீசையை உருவிக் கொண்டான். அவளை கொஞ்சி அனுபவிக்கலேன்னா நான் புல்லய்யா இல்லை! மல்லு நாயுடு

மகனே இல்லே!

மாடுகள் படுத்துக் கொண்டன. முற்றத்திலிருந்து கட்டிலை எடுத்து வாயிற்படி அருகில் போட்டான். வைக்கோல் போர் வாயிற்படி அருகில் இருந்தது. அந்தப்பக்கம் இருந்த சந்திரன் இந்தப் பக்கம் வந்திருந்தான்.

தூக்கம் வரவில்லை. இன்னமும் தப்படடை முழக்கம் கேட்டுக் கொண்டிருந்தது. ஒரு முறை தானெவ்வளவு மாறிவிட்டோமென்று நினைத்தான். 'இன்னக்கி மாடுகளுக்கு வைக்கோல் போட மறந்து விட்டேன், நீலம்மனை கும்பிட மறந்துவிட்டேன். எல்லாம் மறதி தான்!'

'என்னைக்கும் புல்லய்யாவுக்கு மறதி கிடையாதே! என்னைக்கும் பெண்களுக்குத் தூரமாகவே இருந்தானே. இன்னக்கிப் பொம்பளக்கி அடிமெயாயிட்டானே!'

"சே! சே! என்ன பொழப்பு? பொம்பளெகிட்ட வெக்கமில்லெயான்னு பேச்சுக் கேக்க வேண்டியதாப் போச்சே"

விடிந்ததும் விடியாததுமாக மண்வெட்டியைத் தோளில் போட்டுக் கொண்டு புல்லய்யா வயல் வரப்பைச் சுற்றி நடந்து கொண்டிருந்தான். அடிவானத்தில் காட்சியளித்த இளஞ்சூரியன் கதிர்கள், பச்சைப் பசேலென்றிருந்த அந்த வயல் வெளியில் விழுந்து புல்லரிக்கச் செய்தது. அங்கங்கே மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கிப் பாயும் தண்ணீர் மெல்ல சளசளவென்று சத்தமிட்டது. இலேசான காற்றில் வயல் எழுப்பும் கலகலவென்ற சத்தம். அந்த இளம் வெய்யிலில் நெற்கதிர்கள் வளைந்து விளையாடிக் கொண்டிருந்தன.

இரண்டு முழம் வயல், சாண் நீளத்தில் கதிர்! இந்த வருஷம் களஞ்சியம் நிறைவது தப்பாது. பக்கத்து வயலிலிருந்து பீஸ நரசிம்முலு "டேய்! இந்த வருஷம் வெட்டுக்கிளி மருந்துக்குக் கூட இல்லேடா," என்று கத்தினான். நரசிம்முலுவை ஊரில் எல்லாரும் வீட்டுப் பெயர் சொல்லியே கூப்பிடுவது வழக்கம்.

"வெட்டுக்கிளியா? வயல் பக்கம் வந்ததுன்னா கொண்ணு நசுக்கிப் போட மாட்டேன்," என்றான். புல்லய்யா போட்ட கூச்சலுக்கு வயல் அதிர்ந்து விட்டது. சின்ன புடபுடவென்ற சத்தம். துளை ஒன்று தண்ணீரைக் குடித்துக் கொண்டிருந்தது. மண்வெட்டியால் துளையை அடைத்தான்.

துளை அடைக்கப்பட்டதால் தண்ணீரைக் குடிக்க வில்லை. இதற்கிடையில் பீஸ தன் வரப்புமேல் வந்து கொண்டே," இன்னும் என்னடா, வரப்பிலே இருக்குற புல்லெ அறுக்கலே? என்று கேட்டான்.

"அறுத்தேன், மறுபடியும் வளர்ந்துட்டுது. வளரட்டும் வளரட்டும். இந்த ஊரு மாடுங்க வாய்க்குக் குறைச்சலிருந்தாத் தானே? நம்ம ஊருன்னா என்ன? தங்கம்! தங்கம்!"

புல்லய்யா சொன்னதைக் கேட்டுப் பீஸ சிரித்தான், தனக்கு அடுத்த தலைமுறை ஊரைப் பார்த்து கர்வப்பட்டுக் கொள்கிறதென்று.

"கிழக்கெ வயலுக்குப் போனியா?"

"ஓ! அதுலெ இந்த வருஷம் பயிரு ஜம்முன்னு வந்திருக்குது!"

'ஒனக்கென்னப்பா? ஒண்ணே ஒண்ணுதான் குறெச்சல '!"

"எனக்கா? எனக்கென்ன குறைச்சல்? எனக்கு குறெச்சல்னு சொல்ற ஆம்பளெ யாரு?"

"பட்ணம் அவுங்களோட ரெண்டேக்கர் வயலெ குத்தகைக்குப் பண்றெ இல்லே! உங்கப்பா விட்டுட்டுப் போன அம்பது செண்ட் இருக்குதில்லியா!, இன்னும் உன் வயலே பொண்டாட்டின்னு கட்டிக்கிட்டு அழுதுக்கிட்டிருந்தா . . . எப்படி? ஒடம்பு என்ன இரும்புத்தூணா, இப்படியே இருக்கறதுக்கு? -- இரும்புத் தூணே துருப்புடிச்சிப் போவுது -- கை காலு முடங்கிப் போறப்போ ஒதவறதுக்கு யாராவது இருக்கணுமா வேண்டாமா?"

பீஸ் எப்போதும் போலவே இப்போதும் கல்யாணம் செய்துகொள்ளச் சொன்னான். இது ஒன்றும் புதிதல்ல. புல்லய்யா எரித்து விடுவது போல பார்க்கவில்லை. புன் சிரிப்பு சிரித்தான். எதிரிலிருந்த ஆசாமியின் பெரிய மீசை ஆடிக் கொண்டிருந்தது! பரக்கப்பரக்கப் பார்த்துக் கொண்டிருந்தான். இலேசாகச் சிரித்தான். 'எனக்கு அஞ்சி பொண்ணுங்க, ஆறு பையனுங்க தெரியுமா! ' என்ற பெருமை அவனிடமிருந்து வெளிப்பட்டது.

பீஸ் வேட்டியைத் தூக்கிக் கட்டியிருந்தான். உடம்பில் மேல் துணி இல்லை. பாதி நரைத்திருந்த தலையைச் சொரிந்து கொண்டிருந்தான். "உனக்குத் தெரியாது! பாத்தியா? ஜப்பான் காரன் வருவான்னு, குழந்தைகளெக் கணக்கு வச்சி வயலெப் பிரிச்சி கொடுப்பான்னு இருந்தேன்! அவன் தோத்துப் போயிட்டான்னு பட்ணத்திலெ நேத்து சொல்லிக்கிட்டிருந்தாங்க. என்னாலெ நம்ப முடியலே. குட்டையனுக்கு எப்பவும் அறிவு ஜாஸ்தியில்லியா? எந்த மந்திரமோ தந்திரமோ பண்ணி, வெள்ளெக்காரனெ மோசம் செய்து இந்தத் தேசத்தெ ஆளுவான்னு நினெச்சேன்!

போவட்டும், இப்பொ என்னா ஆச்சி? காங்கிரஸ்காரன் வரமாட்டானா? அவன் ஜப்பான்காரன் மாதிரியே நிறைய பசங்க இருக்கறவங்களுக்கு நிறைய பூமி இருக்கணும்னு சொல்றானாம்."

புல்லய்யா சிரித்தான். பீஸ் பட்டணம் பிளீடர்' அவர்களின் நான்கேக்கரா நிலத்தை உழுது கொண்டிருந்தான். இதுவரைப் பத்தாண்டுகள் முடிந்தன, இரண்டுமுறை குத்தகை நெல் கொடுக்க முடியாமல் போய்விட்டது. கொடுப்பதற்காக மிகவும் முயற்சி செய்தான். பிளீடர் சும்மா இருக்கவில்லை. கோர்ட்டுக்கு இழுத்து விட்டார். இருந்த பரம்பரை நிலத்தை விற்று குத்தகைப் பணத்தைக் கட்டினான். கோர்ட் ஏறிய பிறகு அறிவு பிறந்தது. உலகப் போக்கு தெரிந்த தென்று பீஸ் சொல்லிக் கொள்கிறான்! ஊரில் அவன் வயசுக்காரர்கள் பீஸ் மிகவும் புத்திசாலி என்று சொல்வார்கள்.

புல்லய்யா, "போலாம் வா," என்றான்.

பீஸ் மேற்கு வயலுக்குப் போய வருவதாகச் சொன்னான். ஓரடி எடுத்து வைத்து, "டேய்! காநதி மகாத்மா இருக்கறாரே! மகாராஜா கடவுளுக்குச்சமானம்!" என்றான்.

"ஆமாம்! கடவுள்தான்," என்றான் புல்லய்யா.

"அந்த மாதிரிக் கடவுள் ரொம்ப பிடிவாதம் புடிச்சாராம்! பாரு காங்கிரஸ்காரன் நாட்டை ஆளாமே போகப் போறதில்லே! அவன் வந்தான்னா -- உழறவனுகக்குத்தான் நிலம் சொந்தமாகப் போவுதாம்! டேய் புல்லய்யா, பெரிய விவசாயிக்கு முப்பது ஏக்கரா நிலம், ஒரு பையன் தானே இருக்கறான். அதுக்கு மேலெ வழியில்லே! அவனவிட நானு பெரிய விவசாயி ஆவணும். காலம் எப்படி மாறுதோ? சீக்கிரம ஒரு வீட்டுக்காரனாயிடு! தனிக்கட்டயா எத்தனெ நாளெக்கி_,"

புல்லய்யா குஷியாகச் சிரிததான். மகன ஞாபகத்துக்கு வரவே சரசரவென்று நடந்தான். வரப்பு மேல் நடந்து கொண்டிருந்தவன் சடடென்று நின்றுவிட்டான். மகன் முன்னால் தோளில் மணவெட்டியைப போட்டுக் கொணடு மிலிட்டரி ஆசாமி போல் நடபபதாகத் தோன்றியது. உடம்பெலலாம் கணணாகி மகனின் நடையழகைப் பார்தது மெயம்மறந்து நிறபது போன்ற பிரமையில் ஆழந்துவிடடான்.

'மகன்! என் மகன்!' அவனைத் தூக்கிக் கொஞ்ச வேண்டுமென்று . . . 'தன்னெதிரில பூனைப் பல்டி போடடு, பாதத்தினருகில் வந்து மேலெ ஏறி நின்று தோளைத் தட்டும் வீரன் தன் மகன் . . . மகன்!'

வரபபைக கடந்து, புற்றைக்கடந்து, சேற்று வயலைக்கடநது , கோவிலைக் கடந்து மெலல ஆதம்மக்கா வீட்டுப் பக்கம் போனான்

ஆதம்மாக்கா ஊருக்கெலலாம் அக்காதான். காதுக்குக் கமமல், கைக்கு வளையல் எலலாம் போட்டுக் கொண்டு, முப்பது வயதிருக்கும போதும் முற்றிவிடாமல் இளமையழகுடன் ஜொலித்தாள். அப்போது ஒரே மகள் தான். ஆள் பார்ப்பதற்கு இருபது வயது போலிருந்தாள். இன்னும் இளைத்தால் இரத்தம் வந்து விடும் -- அது போனற உடம்பு வாகு. அந்த சமயத்தில் புருஷன் போய்விட்டான். மறுமணம செய்து கொள்ளும்படிப் பல பேர் சொன்னார்கள். பெரிய நாயுடுக்கள் விரும்பி வந்தார்கள்! ஒரேடியாக மறுத்து விட்டாள். 'பார்க்கலாம் இவளுடைய பிடிவாதத்தை' என்றார்கள். 'இன்னொருவனைப் பார்க்காமல் எப்படிக் கட்டுப்பாட்டோடு வீட்டில் இருபபாள் . . . என்று . . . அந்த ஒரு மகளை மருமகனுக்குக் கொடுத்து வீட்டோடு வைத்துக் கொண்டாள். இருந்த சொத்தோடு, காப்பாற்றிக் கொண்ட ஒழுக்கத்தோடு ஊருக்கெல்லாம் அக்கா ஆனாள்! ஐம்பதுக்கு மேலான இந்த வயதில் ஊரில் யாருக்கு ஆலோசனை வேண்டுமேன்றாலும் இந்த அக்காவிடம் வரவேண்டியதுதான்.

புல்லய்யா வந்தான். திண்ணை மேல் அக்கா குழம்புக்காக வெண்டைக்காய் அரிந்து கொண்டிருந்தாள். பார்த்த உடனே ஒரு

மென் சிரிப்புச் சிரித்தாள்.

"இதோ வந்துட்டான்! கல்யாணம் பண்ணாத பச்செக்குழந்தெ!" புல்லய்யா திண்ணை மேல அக்காவின் அருகில் உட்கார்ந்தான், முற்றிய வெண்டைக்காய்களைப் பார்த்தபடி.

"அக்கா! பந்தயம் போட்டுட்டேனே" என்று சொன்னான்.

"வெண்டக்கா மாதிரி முத்திப் போயிட்டே! இந்த வயசுவரெக்கும் நம்ம ஜாதியிலெ யாரும் இல்லேடா! கல்யாணம் கில்யாணம் ஆச்சின்னா பந்தயம் ஏன் வருது! யார்கிட்டெ என்ன தகராறு வெச்சிகிட்டே?"

புல்லய்யா சொல்வதற்கு வெட்கப் பட்டான், அக்காவிடம் சொல்லவில்லை என்றால் காரியம் நடக்காதே! வேறெ பெரிய துணை யாருமில்லையே! துணிந்து சொல்லிவிட்டான்.

"இத்தனெ நாளு உடம்பு பாழயிடும்னு கல்யாணம் வேணாம்னேன் -- ஆனா . . . "

"என்னா, என்னா! கல்யாணமா, கலயாணமா! ஏ! ராசா! எவ்வளவு நல்ல வார்த்தெ சொன்னேப்பா! ஒரு குடும்பஸ்தனானீன்னா. . . உன் குழந்தெ . . . குட்டி!"

புல்லய்யாவுக்கு வெட்கம் தாளவில்லை. தலை குனிந்துகொண்டு மண்வெட்டியால் வாயிற்படியில் மெதுவாகக் குத்திக் கொண்டிருந்தான்.

"அதிருக்கட்டும்பா! பொன்னு எவ்வளவு வெச்சிருக்கே! --நம்ம ஜாதி வழக்கப்படி கல்யாணம் உன் வீட்லெ நடக்கணுமில்லியா? நீயின்னா எவ வரமாட்டேன்னு சொல்லுவா?"

அந்தம்மா முகத்தில் ஒரு காலத்திய அழகின் சுவடுகள் தென்படத்தான் செய்தன. அரிவாள் மனையை ஒரு பக்கமாக நகர்த்திவிட்டுத் திரும்பி உட்கார்ந்தாள். புல்லய்யாவை உற்றுப் பார்த்தாள்! மற்றொரு திண்ணையில் மகள் உட்கார்ந்து இராட்டினம் சுற்றிக் கொண்டிருந்தாள். எதிரில் மாட்டுக் கொட்டகையிலிருந்து பசுக்களை ஓட்டிக்கொண்டு மந்தையை நோககிப் போய்க் கொண்டிருந்தான் மாட்டுக்காரச் சிறுவன்.

"சரி, எவ்வளவு பொன்னு வச்சிருக்கே சொல்லு?"

"என்ன இருக்குதுக்கா-- ஒனக்குத் தெரியுதா- இருக்கற அந்த நிலத்து மேலெதான ஏதாவது வாங்கியாகணும்!"

"அதெ அப்புறம் பாக்கலாம். . . "

புல்லய்யாவுக்குத் தாமதிப்பது இஷ்டமில்லாதது போல அவசரமாக மண்வெட்டியைக் கீழே போட்டுவிட்டான்.

"அக்கா! பந்தயம் போட்டேனு சொன்னேன்'லே! நீ போயி அந்த நீலி. . . "

அக்கா கன்னத்தின் மேல் கையை வைத்து ஆச்சர்யத்தோடு பார்த்தாள். . . சட்டெனறு ஒன்றும் பேச முடியாமல் தடுமாறினாள்.

"அக்கா! குறுக்கெ தடெ பண்ணாமெ கேளு! நான் பந்தயம் போட்டேன்னு சொன்னேன்'லே-"

"அவசரப் படாதேப்பா! பெரிய நாயுடு வீட்டுப் பொண்ணு நாராயணம்மா ஆசெப்பட்டு வர்ரேண்ணா வேணாம்னு சொன்னே! இந்த ஊர்லே எந்தப் பெரிய வீட்டு வெலமநாயுடு ஒனக்கு பொண்ணு கொடுக்க மாட்டேஙகரான்! பாரு, என் பேச்செக் கேளு! அந்த நீலியா? கொஞ்சம் கூட லட்சணமே இல்லே! போவட்டும், பொறந்த வீட்லெருநது ஒண்ணா ரூபாப் பொடெவெக் கூடக் கொண்டுவர்றதுக்கு வக்கில்லே!"

"அக்கா, அக்கா! . . " மேலே பேச முடியவில்லை.

" அவ விலெ போகமெ வீட்லெ கெடக்கறா! மாமியார் வீடுக்கு வர்றப்பொ, நீ வெறும் கையும் காலோடதான் கூட்டிக்கிட்டு வரணும்! அவசரப்படாதேப்பா! தங்கம இருக்கற இடத்ததுக்குச் சுவா காவல் வேணும்னு சொல்லுவாங்க! யாராவது ஒரு பெரிய வீட்டுப் பொண்ணெப் பண்ணிகிட்டீன்னா — எனக்கு யாருயிருக்காங்க வேறே? — கஷ்டத்திலயும் நஷ்டத்திலயும் உதவியா இருப்பாங்க."

புல்லய்யா தலை குனிந்து கொண்டான்.

கண்ணுக் கெதிரில் நீலி — அந்தக் கண்ணைப் பறிக்கும் பருவக் கொழிப்பு அந்த அணைப்பு. உடம்பெல்லாம புல்லரித்தது! உதட்டைச் சப்பிக் கொண்டான்! 'உன்னெயே பிடிக்காமெ போனா . . 'என் பந்தயம்'. . . 'வெக்கமிலலியான்னு கேட்டாளே! சேச்சே, பந்தயம் பந்தயம் தான்.'

தலையைத் தூக்கி, "அக்கா" என்றான். அக்கா ஆர்வத்தோடு, அவன் மனத்தை மாற்றிக்கொண்டானோ என்று பார்த்தாள்.

"அக்கா! ஒண்ணுமில்லேனனாலும் அவ ரெண்டுக்கையைக கொண்டு வரமாட்டாளா? விவசாயி கையும் காலும் நல்லா இருந்தாக்கா. . ."

அக்கா எரிச்சலோடு சொன்னாள், "நான் ஏன் இவ்வளவ சொல்றேன்னு புரிஞ்சிக்க மாட்டேங்கற! அவளுகக்கு அந்தக் கிழவியெத் தவிர வேறெ யாருமில்லே அவ பேத்தியோட கூடவே வருவா. நாளக்கி அவ மண்டையெப் போட்டுட்டா நீதான் எல்லாம் பண்ணனும்! உன்கிட்டே இருக்கறது எவ்வளவு? நாலு குழந்தை குட்டிங்க பொறந்ததுன்னா எங்கெ போயி நிபபே? இத்தனெ பெரிய வீட்டுக்காரஙக ஆசெப்பட்டு உன் கால்லெ வந்து விழுந்தாக்கா, வர்ற சீதேவியெக் காலாலெ எட்டி ஒதைக்கிறேயேடா!

புல்லய்யா வேதாந்தத்தில் இறங்கினான். "அக்கா! மனுஷனா இருக்கறப்போ ரெண்டு, போறெப்போ ரெண்டு, கூடவே இருக்குமாம். அந்தப்புகழ், இகழ் — அதையே நம்பி இருக்கறேன். இந்தக் கல்யாணத்த முடிச்சி வைக்கது ஒம்பொறுப்பு"

அக்கா எழுந்தாள். "தம்பி! இந்த உலகத்துலெ எப்படியாவது பொழக்காமெயா போறெ! தண்ணியோ கிண்ணியோ, கஞ்சியோ கூழோ அந்த உண்டாக்கனவன் குடுக்காமயாப் போவான்? பெரிய வீட்டு

மருமகனானீன்னா அந்தஸ்தோட கவலெயில்லாம இருப்பியேன்னு சொன்னேன். அந்த நீலி அதிர்ஷ்டம் அப்படி இருந்ததுன்னா நான் இவ்வளவு சொல்றது தப்புதான். நான் வயசிலே பெரியவ, என் மேலெ இந்தப் பாரத்தெப் போட்டுட்டே, அதனாலெ, உங்கம்மா இருந்தா எப்படியோ அப்படியேதான் நானுன்னு வெச்சிக்கோ. அதனாலேதான் இவ்வளவு பேசுனேன். உன்கிட்டே ஒரு மாதிரி பேசறது உன் பின்னாடி வேறெமாதிரி பேசறதுக்கு தெரியாது. மனசுலெ இருந்ததே தாட்சண்யம் பாக்காமெ சொல்லிட்டேன். தப்பாமெ அவளேயே பண்ணிக்கோ! அவ வீட்டுக்கு வந்த முகூர்த்தம் உன் வீட்லெ லட்சுமி தாண்டவ மாடக்கூடாதா? எங்களெ மாதிரி இருக்கறவங்க நீங்க நல்லா இருக்கணும்னுதான் நினெப்போமெ தவிர நீங்க கெட்டுப் போகணும்னா நெனெப்போம் - எங்கப் பொண்ணே பொண்ணு கேக்கறதுக்கு அனுப்பறேன். . . பொன்னு-"

புல்லய்யா இல்லெ என்பது போல் முகம் சுளித்தான். அக்கா மென்சிரிப்பு சிரித்து "அந்தக்கிழவிக்குச் சோத்துக்குக் குறெச்சலாயிருந்தாலும், குலத்துலெ ஒண்ணும் குறெச்சலில்லேடா! கொஞ்சமாவது வெக்கலேன்னா பேத்தியெக் குடுபபாளா- சரி நீ போய்ட்டு வா - மாட்டெக்கழுவறதுக்கா? நான் ஏதாவது பாக்கறேன்!"

புல்லய்யாவின் முகம் மலர்ந்தது. திண்ணையிலிருந்து ஒரு குதி, குதித்து மண்வெட்டியை எடுத்துக் கொண்டு, உல்லாசமாக விசிலடித்துக் கொண்டு போனான்.

## 5

போலி நாட்டு வெலம நாயுடு இளைஞன் புல்லய்யாவின் திருமணம் உறுதியாயிற்று. இந்தத் திருமணத்தைக் குறித்து ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக நினைத்துக் கொண்டார்கள். அந்த ஊரின் வரலாற்றில் இது ஒரு சலசலப்பை உண்டாக்கிய நிகழ்ச்சியாகும்.

அழகோ அதிர்ஷ்டமோ இல்லாத - கதியில்லாத பெண்ணுக்கும், அழகும் அதிர்ஷ்டமும் கொண்டு நாலு பேரிடம் சபாஷ் என்று பெயர் வாங்கிய இளைஞனுக்கும் கலியாணம்! அக்கம் பக்கம் ஊர்களிலிருந்து எவ்வளவு பேர் வலிய பெண் கொடுக்க வந்தார்கள்? அவன் அவர்களில் யாரைப் பண்ணிக் கொண்டிருந்தாலும் சொத்து சுகம் கண்டிருப்பான். இப்போது இரண்டு பக்கத்துச் செலவையும் அவனே தாங்கியாக வேண்டும்.

சிலர் தலையெழுத்து என்று சொல்லிக் கொண்டார்கள். இராட்டினங்களைச் சுற்றிக்கொண்டே பெண்கள் இந்தக் கலியாணத்தைக் குறித்துக் குசுகுசுத்தனர்.

முடிவில் "அந்த அம்மாவோட சாபம் சும்மா விடுமா? நிச்சயம் பலிக்கும்" என்று ஒரு வயதான பெண்மணி சொன்னாள். எல்லாரும்

நிஜம் தான் என்று தலையாட்டினார்கள்.

அந்த கதை ஒரு தலைமுறையிலிருநது இன்னொரு தலைமுறைக்குப் பரவி வந்தது. ஒரு முறை தம்பதிகள் இருவர் அந்த வழியாக போய்க்கொண்டிருந்தபோது, ஊரில் சிலா விழுந்து விழுந்து சிரித்தார்களாம்! கணவன் அசிங்கமாக, குட்டையாக இருந்தானாம். மனைவி அழகாக, நெட்டையாக இருந்தாளாம்! பொருத்தமில்லாத இந்த ஜோடியைப் பார்த்துச் சிரிக்கவே, பத்தினியான அந்தப் பெண் சாபமிட்டாளாம், "இந்த ஊர்ப் பெண்களுக்கு இந்த ஊரே கதி," என்று அன்றையிலிருந்து அந்த ஊர் வாசிகள் இந்த வீட்டுப் பெண்ணை அந்த வீட்டில் கொடுப்பதும், அந்த வீட்டுப் பெண்ணை இந்த வீட்டில் எடுப்பதுமாகவே இருந்து வந்தார்கள்.

அந்தச் சாபம் நீலி விஷயத்திலும் பலிக்கவே அவளுக்கும் உள்ளூரிலேயே மாப்பிள்ளை கிடைத்தான் என்றார்கள்.

திருமணத்திற்கு நீலி ஒத்துக்கொண்டாள். புல்லய்யா, 'அஹ்ஹா!' என்று சொல்லிக்கொண்டான். வெக்கமில்லேன்னு சொன்னா நக்கல் பண்ணினா . . . கல்யாணத்துக்கு ஒத்துகிட்டாளா . . . சரிதான்! அவளெப் பிடிக்கறேன்னு சொன்னேன் . . . என் பந்தயம் ஜெயிக்கப் போவுது. அவளெ எப்படி எப்படி கேக்கப் போறேன் இரு! மீசையை முறுக்கமாட்டேன்! வெக்கம் எனக்கா அவளுக்கா? அந்த நாளு வரட்டும் . . . வரட்டும்!' என்று புல்லய்யா உதட்டைக்கடித்துக்கொண்டான்.

நாள் முழுவதும அதே நினைப்பு வந்து கொண்டிருந்தது. 'சே, சே! எனக்கும் எப்பவும இப்படி இருந்ததில்லியே! மனசெல்லாம் அடிச்சிக்குது. நீலி என் மனசிலே நிறைஞ்சிருக்கறா. . . அவளுக்கு நான் தாழ்ந்து போவேனா? அவ சொன்னாத அவளுக்குத் திருபபிச் சொல்லிக காட்ட மாட்டேன்!' தலையை ஆட்டிக் கொண்டான். 'பலே பலே! எனக்கு ஒரு மகன் வருவான்! இந்த ஊரு தங்கம்! என் மகனும் தங்கம்! . . . '

ஒரு குதி குதித்தான்.

கலியாண நாள் வநதது. மாப்பிள்ளை வீட்டு முன்னால் பந்தல் போட்டார்கள். ஆதெம்மா அப்போதிலிருந்தே மேற்பார்வை தொடங்கிவிட்டாள். இந்தக் கலியாண செலவுகளுக்காக வட்டியில்லாமல் இருநூறு ரூபாய், தன் மருமகனிடம் சொல்லி வாங்கிக் கொண்டாள். அந்தச் சின்ன வீட்டிலே கலியாணததைக் கசசிதமாக முடிக்கலாமென்றால், புல்லய்யாவின் கலியாணமென்றதும் அயலூர்க்காரரும் வந்துவிட்டார்கள்.

நீலியின் அம்மாவின் அம்மா பல்விழுந்த பாட்டி. நாட்களை எண்ணிக்கொண்டு உட்காாந்திருந்தாள். பிசிரடைந்த அவள் தலை முடிக்கு ஆதெம்மாக்கா நல்லெண்ணெய் பூசினாள். புதுப்புடவை கட்டிவிட்டாள். அந்தப் பாட்டியின் கண்கள் இந்தக் கடைசிக் காலத்தில் ஆசையோடு பார்த்தன. கலியாண மேளச் சத்தம் அவள் காதுகளில்

இனிமையாக விழுந்து கொண்டிருந்தது.

இந்தப்பாட்டி ஒரு காலத்தில் பேத்தியைப் போலவே இருந்தாள். பாட்டி சாயலே நீலிக்கு. கட்டிய கணவன் குடிகாரன். உடம்பெல்லாம் காயமாக்கி விடுவான். எலும்பு எலும்பாக முறிப்பான். யாரிடமும் சொல்லிக் கொள்வதில்லை. சம்பிரதாயத்துக்குக் கட்டுப்பட்டவள். இளமையை அனுபவிப்பதற்கென்று ஒருவனிடமே ஒப்படைத்தாள். குழந்தைகள் பிறந்தன. வளர்ந்தன. சாப்பாட்டிற்கில்லாமல் செத்தவர்கள் செத்தனர். அதெல்லாம் நினைவுவந்தால் தலை சுற்றும். நடுக்கம் எடுக்கும். இதயம் படபடக்கும்.

எல்லாரும் செத்துப் போனார்கள். மிஞ்சியது ஒரு மகளின் மகள் மட்டுமே. அவளை மட்டும் இந்த ஒரு பெணணாக வாழவைத்திருந்தான் கடவுள்.

கலியாண மேளம் முழங்கிக்கொண்டிருந்தது. பாட்டி திண்ணை மேல் உட்கார்ந்த படி மண மேடைப் பக்கம் பார்த்தாள். காலை நடக்க வேண்டிய சடங்குகள் நடந்து முடிந்தன.

மதியானச் சாப்பாடும் முடிந்தது.

மாப்பிள்ளை கோபித்துக்கொண்டு புறப்பட்டான். வெளியே சென்று அருகிலேயே இருந்த வளைந்த புளிய மரத்தின் மீது உட்கார்ந்து கொண்டான், புல்லய்யா சுற்றிலும பார்த்தான், இந்த இடத்தில்தான் இந்த மரத்தின் பக்கத்தில் தான் . நீலியின் அழகு, பார்வை. . . ஒய்யாரம் எல்லாம் பார்த்து அவன் மயங்கிப் போனது. அவள் உடலைத் தொட்டு வெறிகொண்டு முத்தமிடத் தொடங்கியது. கையிலிருந்த வடுவைப் பார்த்துககொண்டான்.

'இன்னும் எவ்வளவு நேரம் . .!'

அந்திப் பொழுது நெருங்கிக்கொண்டிருந்தது. மாடுகள் மேய்ச்சல் நிலத்திலிருந்து திரும்பி வந்து தொழுவத்தில் சேர்ந்து கொண்டிருந்தன. பெண்கள் குடஙகளில் தண்ணீரை எடுத்துக்கொண்டு அவன் எதிரில் நடந்தபடி புல்லய்யாவின் பக்கம் பார்வைகளை வீசிச் சென்றனர். நாலடி எடுத்துவைத்து அவர்களுக்குள் கிசுகிசுத்தனர். புன்முறுவல் பூத்தனர். புல்லய்யாவை வெட்கம் பிடுங்கித்தின்றது! பெண்களைப்பற்றி எவ்வளவு பேசியிருக்கிறான்! அவர்களை விஷத்தைப் பார்ப்பதுபோல் பார்த்திருக்கிறான்! இப்போது ஒரு பெண்ணுக்குக் கீழ்ப்படியப்போகிறான்!

அவர்களெல்லாம் தன்னைப்பற்றியே கிசுகிசுத்தனர். உண்மையில் . . .' போவட்டும் . . . என் பந்தயம் ஜெயிக்கணும். மீசை முளைத்த ஆம்பிளே நான்!' என்று சொல்லிக் கொண்டான்.

சலசலவென்று ஆறுபாய்ந்து கொண்டிருந்தது. மரத்தில் உட்கார்ந்த படி ஆற்றின் புக்கம் பார்த்தான். பாலத்தின் மேல் வண்டிகள், பஸ்கள், ஆட்டு மந்தைகள், மனிதர்கள் போய்க் கொண்டிருந்தனர். பார்த்துக் கொண்டிருந்தான்.

மேளச் சத்தம் காதில் விழுந்தது. . . . வருகின்றார்கள் . . . மாப்பிள்ளைத் தோழன் மரத்திலிருந்து ஒரு சத்தம் போட்டான்.

புல்லய்யா புதிய சட்டை, வேட்டி, சரிகைத்துண்டு போட்டிருந்தான் தலைபபாகையைச் சரிசெய்து கொண்டான்!

கூட்டம் கூட்டமாப் பெண்கள ஆரவாரத்தோடு சூழ்ந்து கொண்டனர். எல்லாரும் முறைக்கு அண்ணிமார்கள். . . மைத்துணிகள். . . புல்லய்யாவின் முகம் வெட்கத்தில் கவிழ்ந்து விட்டது! மாப்பிளளைத் தோழன், நிமிருடா . . . வெக்கப் பட்றியே என்னத்துக்கு – கேளுடா வரதட்சிணெ," என்றான். பெண்கள் "குடுக்கறோம்!" என்றார்கள்.

மேளச்சத்தம் ஓயவிலலை. புல்லய்யாவின கலியாணத்திற்கு ஊர்ப்பெரியவர்கள் எல்லாம் வந்திருந்தனர். இதையெல்லாம் பார்த்து மாப்பிள்ளை வெட்கத்தில் மூழ்கிப் போனான். வரச்சொல்லி யாரோ தன் ஜாதிக்காரன் அழைத்தான்! மாமா முறை . . . புல்லய்யா எழுந்தான். "உக்கார மாட்டார்! உக்கார மாட்டார்!" என்று கத்தினார்கள் சிறுவர்கள். "ஓ . . . ஏன் உக்கார மாட்டார்!" என்று மெல்லிய குரல்கள் இணைந்து கேட்டன.

புல்லய்யா வலுக்கட்டாயமாக உட்கார வைத்தார்கள். முகத்தைப் பக்கத்தில் திருப்பினார்கள். கோபம . . . இது கோபம்தான் எனறு சொல்லும்படியான முகபாவத்தை, எல்லாச் சிறுவர்களும் சத்தம் போட்டு மாற்றி விட்டார்கள். 'நாங்கள் ஜெயிச்சிட்டோம்' என்று பெருமையோடு சிரிததபடி குதித்துக்கொண்டே இளம்பெண்கள் பக்கம் பார்த்தனர்.

"தோத்துடடாங்க!" என்று சிறுவர்கள் கத்தவே, பெண்கள் சிரித்தபடி ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனா.

புல்லய்யாவிற்கு மைத்துனி முறை வேண்டும். . . . சுறுசுறுப்பாகச் சுற்றிவந்த கலியாணமாகாத ஒரு பெண், கவர்ச்சியோடு சிமிட்டும் கண்களுடன் ஒய்யாரமாக வந்தாள்.

எல்லாரையும் தள்ளிக் கொண்டு மாப்பிள்ளை அருகில் வந்தாள். முறுக்கு மீசையுடன் கூடிய இளைஞர்களின் இதயங்கள் படபடக்க ஆசை வழியும் முகங்களோடுஅந்தப் பெண்ணையே வெறித்துப் பார்த்தனர். சபாஷ். . . சபாஷ். . .

குரலெடுத்தாள். மூச்சு வருவதைக்கூட நிறுத்திவிட்டனர் எல்லாரும். பாடத் தொடங்கியதும் கண்களை அவளிடம் ஒப்படைத்து விட்டனர்.

"என்னய்யா நீங்க கோவிச்சிகிட்டு தோட்டத்திலெ உக்காந்துட்டீங்களா!
குதிரையில்லேன்னு நீங்க கோவிச்சிகிட்டீங்களா?
குருட்டு நாயிருக்குது ஏறிவாங்கய்யா!
சந்தனமில்லேன்னு நீங்க கோவிச்சிகிட்டீங்களா?
சாணித் தண்ணியிருக்குது பூசிக்கோங்கய்யா!
வெத்திலே இல்லேன்னு நீங்க கோவிச்சிகிட்டீங்களா?
அவரெ எலெ இருக்குது போட்டுக்கோங்கய்யா!

பாக்கில்லேன்னு நீங்க கோவிச்சிகிட்டீங்களா? '

புளியங்கொட்டை யிருக்குது போட்டுக்கோங்கய்யா !

"என்னய்யா நீங்க கோவிச்சிகிட்டு தோட்டத்திலெ உக்காந்துட்டீங்களா!

பாட்டு முடிந்தது. எல்லாரும் கொல்லென்று சிரித்தார்கள். கிசுகிசுத்தனர். இரண்டு கட்சிக்காரரும் வாதித்துக்கொண்டிருந்தார்கள். இதற்கிடையில் ஒரு சத்தம் வந்தது. "முகூர்த்தம் நெருங்கிட்டுது. சீக்கிரம் வரச்சொன்னாா ஐயர்." கும்பலாக எல்லாரும் நகர்ந்தார்கள். மருமகன் கோபம் தீர்வதற்கு, இந்தக் கலியாணம் முடியும் வரையில் மாமனாராக நடித்து வந்தவர் ஒன்றும் கொடுக்கவில்லை மருமகன புன் முறுவலுடன் மாமாவின் பின்னால் நடந்தான்

கலியாணப் பந்தல்। மணமேடைக்கருகில் ஒரு பக்கம். மாடுகட்டும் தாம்புக் கயிறு வைத்திருந்தனர். இன்னொருபக்கம் அம்மி, மேளம், முழங்கிக்கொண்டிருந்தது. பாட்டி திண்ணை மேல் உட்கார்ந்து எல்லாரையும் பார்த்துக்கொண்டிருந்தாள்.

மாலையில் முகூர்த்தம்। அட்சதைகளுடன் முறையுள்ளவர்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். கட்டுக்கழுத்திகளின் கோலாகலம் சொல்லிமுடியாது. அவர்களது குரல்களின் முன்னால் ஆண்களின் குரல்கள் தலைதூக்க முடியவில்லை. புல்லய்யாவின் கலியாணம் . . . அந்தக் குடுமி. . . அந்த முறுக்கேறிய தசைகள். . . . எலலாருக்குமே இன்னதென்று சொல்லமுடியாத ஒரு பற்றுதல்.

முகூர்த்தம் முடியும் நேரம். புல்லய்யா தாலிப்பொட்டைக் கட்டினான். 'அட்சதை போடுங்க' எனறு யாரோ கததினார்கள் அட்சதைகள் வந்து விழுந்தன. மாப்பிள்ளை, மணப்பெண்ணை ஓரக்கண்ணால் பார்த்தான்

முகத்தில் மஞ்சள். மஞ்சள் கலந்த பச்சைப் புடவை. கையில் வளையல்கள். காதில் கம்மல் பொன் மூக்குத்தி. கழுத்தில் பவளமாலை. காலில் மெட்டிகள். கண்ணில் மை. நெற்றியில் குங்குமப்பொட்டு. கறுப்புக்கால்விரல்கள். புல்லய்யா மகிழ்ச்சியுடன் நெருங்கி உட்கார்ந்தான்.

ஐயர் வாழைப்பழத்தை உரித்து, மாப்பிள்ளை கையில் கொடுத்தார். மேளம் நின்றுவிட்டது. ஆட்கள் அனைவரும் பேசாமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பெட்ரோமாக்ஸ் விளக்குகளின் ஒளி பந்தலைப் பிரகாசிக்கச் செய்தது.

புல்லய்யா புரோகிதர் சொன்னபடி, வாழைப்பழத்தை பாதியைக் கடித்துக்கொண்டு, மீதிப் பாதியை மனைவி வாயில் வைத்தான். அவள் சாப்பிட்ட பிறகு, ஐயர் சொல்லச்சொல்ல, புல்லய்யா "இந்த நேரத்திலிருந்து உன்னை நான் மணந்து கொண்டதால், எந்த வேலை செய்து கொண்டு வந்த பணத்திலும் பாதி உனக்குக் கொடுக்கிறேன்," என்றான்.

இந்த முறை அவள் பாதியைக் கடித்துக்கொண்டு, மீதிப்பாதியைக் கணவன் வாயில் வைத்து, வெட்கத்துடன் மெதுவாக, "இந்த

நேரத்திலிருந்து உங்களை நான் மணந்து கொண்டதால் என்னை பெற்றவர்களிடமிருந்தோ வேறு பந்துக்களிடமிருநதோ வந்த பணம் முழுவதையும் உங்களிடம் சேர்பபிக்கிறேன்," என்றாள். இந்த வார்த்தைகளைச் சொல்ல வைத்த புரோகிதா இருவரையும் எழுந்திருக்கச் சொன்னாா. எழுந்தாலும் புல்லய்யாவின மணமெல்லாம் அந்த வார்தைகளாலேயே நிறைந்திருந்தது. அந்த வார்த்தைகளில் அடங்கியிருந்த கருத்து இதயததைத் தொட்டுக் கொண்டிருந்ததால் மனைவி பக்கம் அடிக்கடி பார்த்துக்கொண்டான். தனக்கேதோ ஒரு புனிதமான பந்தத்தை நெருக்கமாக்கிக் கொண்டிருந்தாள். சில நிமிடங்களுக்கு முன்பு இருந்ததைவிட இப்போது அவள் வேறொரு விதமாகக் காட்சியளித்தாள். தன் பந்தயத்தை, ஆவேசத்தை இநத மூன்று முடிசசுகள் தணித்துவிட்டாற்போலிருந்தது. மனைவியின பக்கம் பெருமையுடன் பார்த்தான்.

தம்பதிகள் பல்லக்கேறி ஊர்வலம் வந்தனா.

## 6

ஆற்றங்கரையில் நாணல் பூக்கள் காற்றில் மெதுவாக அசைந்து கொண்டிருந்தன. கரையில் புதுமாப்பிள்ளை வாயில் பற்குச்சியை வைத்துக்கொணடு எதிரில் தெனபட்ட வாராவதியைப பார்த்துக் கொண்டிருந்தான் காலை வெய்யிலில் பாலம் மனோகரமாகக் காட்சியளித்தது. தண்ணீரத் துறையில கிராமத்துப் பெண்கள் கிசுகிசுததுக் கொண்டே புலலய்யாவின் பக்கம் பார்ததனா அவர்களின் மந்தைகள் ஆற்றின அககரையில் வயல்வெளியில மேய்ந்து கொண்டிருந்தன.

புல்லய்யா கண்ணால் இவறறைப் பார்த்துக் கொண்டிருந்தானே தவிர, மனத்திலென்னவோ நீலியே நிறைந்திருந்தாள். இரவு பல்லக்கில் முகத்தை நிமிர்த்தவே இல்லை அவளா. அவள் மைக்கண்ணின் அழகைப்பார்க்க வேண்டுமென்று துடிப்பாக துடித்துப்போனான் அவன். ஆனால் வெட்கம்!

பற்குச்சியை அங்கே எறிநதுவிட்டு புல்லய்யா எழுந்தான். ஆற்றில் இறங்கி முகம் கைகால்களைக் கழுவிக் கொண்டான். கலியாணத் துணிகள் மஞ்சளோடு உடம்பிலேயே இருந்தன விறுவிறென்று வீட்டுக்குப் போனான். அறைககுள் சென்று நீலியின் கையைப் பிடித்துக்கொள்ள வேண்டும் என்று நினைததுக் கொண்டு போனால், ஆதெம்மக்கா திண்ணையில் உட்கார்ந்திருந்தாள்! உடல் வேகம் சற்றுத்தணிந்தது.

அன்று முழுவதும் போராடடம் தான. வீட்டை விட்டு நகரவில்லை. யார் வந்தாலும் உள்ளுக்குள் எரிந்து விழுந்து கொண்டிருந்தான். சில வினாடிகள் எப்படியோ வாய்ப்பைத் தேடிக் கொண்டான்.

புழக்கடையில் பிடித்துக்கொள்ளலாம் என்று நினைப்பதற்குள் சிட்டுக்குருவி விர்ரென்று பறந்துவிட்டது. பின்னால் துரத்தியிருந்தால் பிடித்துக்கொண்டிருப்பான் ஆனால் திண்ணையில் ஆதெம்மாக்கா உட்கார்ந்திருந்தாள்.

அன்று மத்தியானம் எல்லாரும் சிறுதூக்கம் போடும் நேரத்தில், நீலி எதற்கோ புழக்கடைக்கு வந்தாள். அகப்பட்டாள் என்று நினைத்தான். . . அந்தப்பக்கமாகப் போகும்போது இந்தப்பக்கம் வந்து வாயிற்படியில் பாட்டி அருகில் உட்கார்ந்து விட்டாள். 'சரி, கிளி விளையாடுகிறது' என்று எண்ணிக்கொண்டாள். .

நீர் ஊறிக்கொண்டிருந்த வாயை ஓ அழுத்து அழுத்தினான் புல்லய்யா. 'தாலி அறுக்க, பந்தயம் பந்தயம்தான்! மீசை வளர்த்த ஆம்பளெ நான் - எனக்கா அவளுக்கா வெக்கம்? அவளெ இப்படி அப்படி எப்படி யெல்லாம் கேக்கறேன் பாரு!' என்று எண்ணினான்.

அப்படி எண்ணிக் கொண்டிருக்கும் போதே பொழுது போயிற்று. மனத்தில் அந்த வார்த்தைகள் உருண்டு கொண்டிருக்கும்போதே சாப்பாடெல்லாம் முடிந்தது. இன்னமும் கலியாணத்திற்கு வந்திருந்த அண்ணிமார்கள், மைத்துனிகள் வீடு முழுக்க நிறைந்திருநதனர்.

சாந்தி முகூர்த்தம். செய்த பலகாரங்களை கட்டுக் கழுத்திகள் அறையில் கொண்டு வைத்தனர். எல்லாம் ஒரே பொம்பளை மயம்! இன்னும் சத்தத்திற்குக் குறைவில்லை. புல்லய்யா முகத்தைப் பார்த்து முறைப்பெண்கள் மேலும் வார்த்தைகளைக் கொட்டினர். உஊம்! புல்லய்யா ஆண்பிள்ளை போல் பார்த்தான்

முறைக்கு அண்ணியாக வேண்டும். கறுப்பாக ஒல்லியாக இருந்தாள். முப்பது வயசிருக்கும். மூன்று குழந்தைகளின் தாய். புல்லய்யாவின் கையில் வெள்ளி ரூபாயை வைத்துக் கணவன் மனைவி கைகளைச் சேர்த்து வைத்தாள். . . . இருவரையும் அறைக்குள்ளே அழைத்துச் சென்றாள். பெண்களெல்லாரும் பின்னால் குழுமி வந்தனர். மரக்கட்டிலின் மேல் ஜோடியாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்து இளம் பெண்கள் யாவரும் சிரித்தபடி மெய்ம்மறந்து போனார்கள். நீலியின் காதில் வாய்வைத்து ஏதோதோ சொன்னார்கள்.

புல்லய்யா தலைகுனிந்தபடி உட்கார்ந்திருந்தான். அண்ணி எல்லாரையும் போகச் சொன்னாள். அறைக்கு வெளியே எல்லாரையும் அனுப்பிய பிறகு புல்லய்யா தலை எடுத்து அண்ணியைப் பார்த்துக் கொண்டே, கையிலிருந்த ரூபாயைக் கொடுத்துவிட்டான். அண்ணி சிரித்தபடி வாங்கிக்கொண்டே, "பத்திரம் . . . பெண்டாட்டின்னா ஏதோ பல்டி அடிக்கறதில்லே. ஆயிரம் கண்ணோட பாக்கணும். அதிலியும் அவ தாயில்லாத பொண்ணு. தாயில்லாத பொண்ணுன்னா கஷ்டம் வந்தா யார்கிட்டே சொல்லிக்குவா? அம்மா, அப்பா, புருஷன் எல்லாம் நீதான் அவளுக்கு! பார்வெ மங்காமெ இருந்தா அவ நல்லது கெட்டதெ நீயே தெரிஞ்சிக்குவே! அவ நல்லாயிருந்தாதான் நீ

நல்லாயிருப்பே! . . . வர்ரேன். . . பத்திரம்!

அண்ணி வெளியே போகத் தொடங்கினாள். புல்லய்யா தன் பெரிய கண்களால் பார்த்துக் கொணடிருந்தான. பார்வை மங்கிக் கொண்டிருந்தது. கண்களை மெல்லிய திரைகள மூடிக்கொண்டன. கதவைத் தாள் போட்டபிறகும் இன்னமும அந்தக்கதவையே பார்த்துக்கொண்டிருந்தான்.

'பெண்டாட்டின்னா ஏதோ பல்டி அடிக்கறதில்லே' இந்த வார்த்தைகளை மனதில் சொல்லிக்கொண்டே நீலியின் பக்கம் பார்த்தான். உடலெல்லாம் என்னவோ போலிருந்தது. சட்டென்று அருகில் இழுத்துக்கொள்ளவேண்டு மென்று நினைத்தான். ஆனால் ஏனோ எழுந்து நின்று விட்டான்.

மரப்பெட்டியின் மேல் அகல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அறைக்கு வெளியயே இலேசாகச் சந்தடி கேட்டது. விளக்கை அணைத்து விடலாமென்று நினைத்தான். ஆனால் மறுபடியும் மனம் வரவில்லை.

இது ஏதோ புதிதாக இருந்தது. பெண்களோடு சல்லாபிப்பது மிகச் சிக்கலானதுதான் என்று நினைத்தான்.

விறுவிறென்று சென்று கையைப் பிடித்து இழுத்தான். கையை இழுத்துக்கொண்டாள். கை நழுவிவிட்டது. முகத்தை நிமிர்த்தச் சொன்னான். அடம் பிடித்தாள்.

புல்லய்யாவுக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை! தன்னைப் போன்ற முறுக்கு மீசை ஆண்பிள்ளை கண் பார்வை வீசினால வரவேண்டியவள். இவ்வளவு அடம பிடிப்பதாவது! 'காலையிலிருந்தே இப்படித்தானிருக்கறா! இவ என்னதான் நினைச்சிருக்கறா, பாக்கறேன். பந்தயம் பந்தயம் தான்!' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான்.

நீண்ட நேரம் அப்படியே பெட்டிமேல் உட்கார்ந்திருந்தான். ஊமையைப் போல் மனைவி முகம் தாழ்த்தி உடகார்ந்திருந்தாள். 'சே! சே! என்று சொல்லிக்கொணடான்.

வெளியே சந்தடி கேட்கவில்லை. முந்திய இரவெல்லாம் தூக்கமில்லையோ என்னவோ, எல்லாரும் அவரவர் வீட்டுக்கு போய்விட்டார்கள்.

நீலி இலேசாகத் தலையைத் தூக்கி, கதவுப்பக்கம் பார்த்த பிறகு, கீழ்க்கண்ணால் கணவன் பக்கம் பார்த்தாள்.

புல்லய்யா மனைவி பக்கம் பார்க்கவில்லை. பருவத்திமிரில் உள்ள மனைவி, 'தோத்துட்டேன்' என்று சொல்ல வேண்டும் என்ற அகம்பாவத்தோடு புல்லய்யா எரியும் விளக்கின் கொழுந்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். திரியைத் தூண்டிவிட்டான். . . . அதென்னவோ, நிலா வெளிச்சத்தில் இருப்பது போல் தோன்றியது. வளைந்த புளிய மரம். . . இளம் பெண்கள். . . நீலியின் ஒய்யாரம் சிங்காரம் . . . 'சந்த மாமா! சந்த மாமா!' விர்ரென்று பறந்துவிட்டார்கள்! நீலி, நீலி. . . உனக்கு நியாமில்லே. . . திருடா. . . திருடனா பெரிய

மனுஷனா பாரு. . . கடித்துவிட்டாள் . . . கையைத்தடவிக்கொண்டான். 'பந்தயம் பந்தயம் தான்! வெட்கப்பட வேண்டியது . . . நானா அவளா?

சட்டென்று எழுந்தான். பக்கத்தில் உட்கார்ந்தான். "பாரு நீலி! என்றான். நீலி பார்க்கவில்லை. மீசையை முறுக்கிவிட்டான். நீலி பார்த்தாள். கர்வத்தோடு புன்முறுவல் பூத்தான்.

"யாருன்னு நினெச்சே . . . என்னெ!"

இந்த முறை நீலி இன்னும கொஞ்சம் தலையைத் தூக்கிப்பார்த்தாள். புல்லய்யா சட்டென்று கையால் நீலியின் தலையை மேலே தூக்கினான்.

"நல்லாப் பார் . . . அடிபட்ட மான்குட்டிபோல் பார்ப்பதாக எண்ணிக்கொண்டான்.

புல்லய்யா பயங்கரமாகச் சிரித்தான். மீசையை முறுக்கிக்கொண்டே, "என்ன ஆனாலும் . . . பிடிக்கறேன்னு சொன்னேன் . . . ஆ. பிடிச்சேனா இல்லியா?" என்று கேட்டான்.

நீலி மகிழ்ச்சியோடு கணவன் பக்கம் சிரிக்காமல் பார்த்துவிட்டு, தலையை இறக்கி மெல்லச் சிரித்துக்கொண்டாள்.

புல்லய்யா இன்னும் அகம்பாவத்தோடு எழுந்து நின்றபடி, நீலியின் தலையைததூக்கி, அவள் முகத்தோடு முகம் வைத்து, "வெக்கப்பட வேண்டியது நீயா, நானா! ஹஹ்ஹா! . . . " என்றான்.

கணவன் சிரிப்பு முடியும் வரையில் அப்படியே பார்த்துக்கொண்டிருந்தாள். ஆனந்தத்தில் மெய்ம்மறந்து மிதந்து கொண்டிருந்தான். 'பதிலே வரல்லியே? தோத்துட்டா, தோத்துட்டா!' என்று சொல்லிக் கொண்டான்.

நீலி புன்முறுவல் பூத்தாள். புல்லய்யா பார்த்தான். நிறுத்திக் கொண்டான். கண்களைத் திருப்பி நிதானமாகப் பார்த்தாள். சிரித்தாள். சிரித்ததும் . . . புல்லய்யா பைத்தியம் பிடித்தவன்போல் முகத்தையே வெறித்துப் பார்க்கவே, நீலி தலை குனிந்து, இன்னும் சிரித்துக்கொண்டே இருந்தாள்.

அதோ, பேசத் தொடங்கிவிட்டாள். . . ஆம் பேசி விட்டாள்!

"தோத்துட்டேன் . . !"

புல்லய்யா திருப்தியாகச் சிரித்துக்கொண்டே கிண்டல் . . கிண்டல் என்று நினைத்துக்கொண்டே, "ஆ" என்றான்.

நீலி தலைமீது மூடியிருந்த புடவை முந்தானையை எடுத்துவிட்டு எழுந்து நின்றாள். அகல் விளக்கின் திரியைக் கொஞ்சம் இறக்கிவிட்டு மீண்டும் வந்து உட்கார்ந்து. . .

"சொல்லணும்னு நினைச்சதெல்லாம சொல்லிட்டியா? என்று கேட்டாள்.

"ஆ" – புல்லய்யா கட்டிலில் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டே, "ஆ எனக்கென்ன? . . . மீசெ முளைச்ச ஆம்பிளெ! . . ஆமாம், நானுன்னா எனக்குப் பெருமதான்! எங்க வம்சம் அப்படிப்பட்டது. வெக்கமில்லியான்னு கேட்டே. வெக்கம் நீ படணுமா, நான்

படணுமா?"என்று கேட்டான். முகத்தை ஏதோ ஒருவிதமாக வைத்துககொண்டு, இந்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருந்த கணவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் நீலி. இன்னும் இந்தப் பக்கம் முகம திருப்பென்று கணவன் தோள்மேல் கையை வைத்தாள. புல்லய்யா அசையவில்லை நகரவிலலை.

அநதத் தோளின் மீது அப்படியே தலையைச் சாய்ந்து மெல்லிய இனிய குரலில், மெது மெதுவாகக் கேட்டாள, "பாரு! நீ செஞ்ச வேலெ நல்லா இருக்குதா?"

"நான் செஞ்சதா தப்பு?"

"தபபுன்னு சொல்லலலே, பாரு, உன தங்கசசியை யாராவது நீ பண்ணின மாதிரி பண்ணா உனக்கு எப்படி இருக்கும? போவட்டும் என்னையே இன்னொரு ஆம்பிளெ நீ பண்ணினா மாதிரி பண்ணி நான் அவனுக்கு விட்டுக்குடுத்துடடா உனக்கு எவ்வளவு அநியாயம் செஞ்ச மாதிரி! உனக்குத் தெரிஞ்சா நீ என்ன ஆவே?" என்று கேட்டாள்.

புலலய்யா ஓரப் பார்வை பார்த்தான். நீலி இன்னும் அருகாமையில் நகர்ந்து கொண்டே, கையை அந்தக் குடுமியில் நுழைத்தபடி, கணவனைஅணைத்துக்கொண்டே, "பாரு, உன் கண்ணை மறைக்கலாம், உலகததின் கண்ணை மறைக்கலாம், ஆனா, கடவுள் கண்ணெ மறைக்க முடியுமா? நமம நல்லது கெட்டதெ பாககறவர் மேலெ இருக்கறார்னு நீ நியாயமா நம்பிக்கையோட ஒததுக்கலேன்னா -- நாம உயிரோட இருந்து என்ன பிரயோஜனம்? "

குளிர்ச்சியான சூழ்நிலை, அமைதியான வார்த்தைகள்...! இந்தபபெண் பிறந்த வீட்டில் சோற்றுக்குக கஷ்டப்பட்டாள். இளமையோடு வளைந்து நெளிந்து, ஒய்யாரமாகத் திரிந்து பாட்டில் மூழ்கிப் போயிருந்தாள். கலியாண நேரததில் ஒன்றும தெரியாத அப்பாவி போல வெட்கத்தில் நடுங்கிப் போனாள். இபபோது மனைவியாக, கைப்பிடித்த வரை கண்களைத்திறந்து விடுகிறாள்!

புல்லய்யாவிற்கு இலேசாக நடுக்கம் கண்டது. நீலி தன் மனைவி என்பதை மறந்து விட்டான். அவள் ஏதோ புனிதமானவளாகக் காடசியளித்தாள். அவள் வார்த்தை ஒவவொன்றிலும் உண்மை எதிரொலித்தது. 'ஆமாம். . . நான் செஞ்சது தப்புதான் . . . .' தன் உள்ளுக்குள்ளே பலமாகத்திட்டிக் கொண்டிருந்தான்.

நீலி இன்னும நெருக்கமாக நகர்ந்து அணைத்தபடிக் கணவனைப் பிடித்துக்கொண்டாள். எத்தனை இளம்பெண்கள் இநத ஆணைப்பற்றிச சபலம் கொண்டு மனத்தில் ஆசையால் நிரம்பிப் போனார்கள் என்பது அவளுக்குத் தெரியும். அவள் கூட இந்தக் கிருதாக் குடுமி, இந்த முறுக்கேறிய தசைகளைப் பற்றி எத்தனை முறை நினைத்திருப்பாள . . . ! அவற்றைப் பற்றி நினைப்பது பைத்தியக்காரத்தனம் என்று இந்தப் பைத்தியக்காரப் பெண் அந்த நினைப்பைத்தள்ளி விடுவாள். ஆனால் அந்தக் கிருதாக் குடுமியில் இப்பொழுது கையை

நுழைத்திருந்தாள். இந்த முறுக்கேறிய தசைகளை அவள் உடல் தொட்டுக் கொண்டிருக்கிறது! எவ்வளவு சுகம் . . . இன்னும் அவளுக்கு என்ன வேண்டும்!

நீலியின் கண்களில் நீர் . . உதட்டின் மீது அர்த்தமில்லாத சிரிப்பு. புல்லய்யா பார்த்தான்! மனைவியை இறுக்கி இதயத்துடன் அணைத்துக்கொண்டான. . .! நீலி. . . என் நீலி. . . எனக்கே எனக்கே . . . உடலெல்லாம் கண்ணாக்கிக் கொண்டான் -- எவ்வளவு சுகம. . . எவ்வளவு ஆனந்தம், ஆனந்த வாழ்க்கை இதுவே. இதில் எவ்வளவு இன்பம . . . இதுவரையில் கடந்து போன வாழ்க்கையெல்லாம் வெறும் குப்பை. . . இப்போது. . . பயிர் செழித்த தன் வயலைப் பார்ப்பதைப் போன்று இரண்டு பங்கு பெருமை!

அவள் கண்களிலிருந்து வழிநத நீரைத் துடைத்து விட்டான். அவள் சிரிக்கும் உதடுகளைத் தன் உதடுகளுக்கு அருகில் சேர்த்துக்கொண்டான்.

## 7

நீலியின் வெட்கம் அடைமழை பெய்யப் பெய்ய வெளுத்துப போகும் மேகங்களைப் போல் சிதறிவிட்டது. அந்த மனத்தில், அந்தப பார்வையில ஒரு புதுமை, ஆசை, பிடிப்பு தென்பட்டன.

கணவன் மகிழ்ச்சியால் பொங்கிப் போவான். தேடிவந்த கணவனின் வீட்டை ஆட்கள் வசிப்பதற்கு ஏற்றதாகச் செய்யவேண்டும் வீட்டில் ஒரு சட்டி, பானை, கிண்ணம் எதுவும சரியாக இல்லை இப்போதே இப்படி இருந்தால் கலியாணத்திற்கு முன்னால் எபபடி இருந்திருக்குமோ!

மனைவிக்கு வீட்டு வேலைகளில் ஏதாவது உதவி செய்யலாமென்று போனால், இந்தப பலசாலியின் கையாலாகாமைக்கு நீலி இலேசாகச் சிரித்துவிட்டு விந்தையாகப் பார்ப்பாள்.

புல்லய்யா தன் கையாலாகமை மறந்துவிட்டு, துளிர்விடட ஆசைகளுடன் சிரிப்பில் மெய்மறந்து போகும் மனைவியை மேலும் உற்சாகப் படுத்துவான்.

புல்லய்யாவின் உடம்பு விஷயத்தில் நீலி அக்கறை செலுத்தி வந்தாள். பாயும் நீரில் மூழ்கி, புல்லய்யா உடம்பை நன்றாகத் தேய்த்துக் குளித்துவிட்டு வீட்டுககு வந்தால் மனைவி, கிருதாக் குடுமிக்கு எண்ணெய் பூசி நன்றாக வாரி விடுவாள். நேரத்துக்குச்சாப்பாடு, கண்ணுக்குத்தூக்கம், மனதுக்குச் சுகம் - எதற்கும் குறைவில்லை.

வரவர வீட்டுப் பூனை ஆகிக் கொண்டிருந்தான். நாளுக்கு ஒரு முறை வயலுக்குப் போவது, மீதி நேரமெல்லாம் மனைவியின் பக்கத்தில் உட்கார்ந்து கொள்வது. ஊரில எல்லாரும் ஒரு மாதிரியாகப் பேசிக்கொண்டார்கள், சிரித்துக்கொண்டார்கள, பரிகாசம் செய்தார்கள. உடற்பயிற்சிக்கூடத்திற்கு வரவில்லையென்று பலபேர்

அலுத்துக்கொண்டார்கள். அப்படியே போனாலும் நீண்ட நேரம் இருப்பதில்லை

"புது மாப்பள்ளை அதுவும் முத்தினப் பிறகு பெண்டாட்டி வந்து சேந்தா. முந்தானையிலே அடங்கிப் போயிட்டான்," என்று சொன்னார்கள்.

புல்லய்யா உடற்பயிற்சிக்கூடம் வரும்போது இந்த வார்த்தைகளைக் கேட்டான். எல்லாரும பலமாகச் சிரித்தார்கள். கோபம் வந்துவிடடது. விறுவிறுவென்று வந்து வாயிற்படியில் உடகார்ந்து விட்டான். மனைவியின் பேச்சைக் காதில வாங்காமலே சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

ஒருவழியாக மனைவி அவனைப் பேச வைத்தாள். அங்கே உட்கார்ந்தபடி கைகளை ஆட்டிக்கொண்டே சொன்னான் "எனக்குக் கல்யாணம் வேணாமனா, பண்ணிக்கோ பண்ணிக்கோன்னு கலாட்டா பண்ணாங்க. நான் பண்ணிக்கிட்டேனா? இப்பவும் கலாட்டாதான் – வாயிருக்குதுன்னா இப்படியா–"

நீலி ஒரு சின்னச் சிரிப்பை உதிர்த்து, அப்பாவிததனமான முகத்தை நிமிர்த்திச் கொன்னாள் . "அதுக்கா அப்படியிருக்கறே? அவங்க ஏன் சொன்னாங்க? நீ கஷ்டப் பட்றதைப் பாத்துப் பரிதாபத்திலெ சொல்லயிருப்பாங்க பரிகாசமாச் சொல்றதைப் பரிகாசமாவே எடுத்துக்கணுமே தவிர, அதுக்காகக் கோவப் பட்டுகிட்டு. . . பந்தயங்களும் கோவங்களும் தப்பு இல்லே?"

புல்லயயா முகத்தை உயர்த்தி அந்த மின்னும் கண்களைப் பார்த்தான் இன்னும அந்தப் பார்வை தன் தவறுகளை இடித்துக் காட்டுவதாக அவனுக்குப்பட்டது. தன் பந்தயங்கள் எத்தகையானவை என்பது முதலிரவு அன்று வெட்ட வெளிசசமாகிவிட்டது அவளைவிடத்தான் பெரியவன் என்ற நினைபபு நழுவிக் கொண்டே இருந்தது. ஏதோ பயம், பக்தி, பற்றுதல், பிடிப்பு . . கடைசியில் பெருமை, அவன் மனத்தில் தடுமாறிக் கொண்டிருந்தன।

தீபாவளி கழிநதது; நாக சதுர்த்தி வந்தது. ஊரெல்லாம ஆரவாரமாக இருந்தது. சாலையோரத்துப் புற்றில ஊற்றிய பாலெல்லாம் நன்றாக வற்றிப் போய்விட்டது. நாகத்தின் வாயில் முட்டைகள் நிறைந்தன. இடைஇடையே பட்டாசு சத்தம். . . கோலமும் மஞ்சளும் புற்றை மூடிவிடடன.

வீட்டுக்குத் திரும்பினர் பாட்டி பேத்திக்கு மகன் பிறந்தால் நாகராஜன் என்று பெயர் வைப்பதாக வேண்டிக்கொண்டாள். புல்லய்யாவின் காதில் விழுந்தது. சீறி விழுந்தான். "என் மகன் பேரா? எங்கய்யா பொறந்து வருவாரு. எங்கய்யா மீசை முறுக்கிய நாயுடு! என் மகன் அவரை மாதிரியே ஆவணும். அவன் சீறி விழற நாகப பாம்பா இருக்கமாட்டான்,"

"தப்பு தப்பு, " என்றாள் பாட்டி

"தப்புமில்லே, கிப்புமில்லே. என் மகன் பேரு மல்லு நாயுடுதான்"

இன்னும் பாட்டிக்கும் புல்லய்யாவுக்கும் வாககுவாதம் வளர்ந்து கொண்டே இருந்தது. பலமாகச் சிரித்துக்கொண்டே நீலி அங்கு வந்து சேர்ந்தாள்.

"மரத்திலெ காயே காய்க்கலே. . . எதுக்குள்ள அப்படி அடிச்சிககிறீங்க? ரெணடுபேரையும் வெச்சிடலா மாவட்டும். . . பேருலே என்ன இருக்குது?"

"இல்லே? எங்கய்யா பேரு வெக்கலேன்னா, செத்து சொர்க்கத்துலெ இருக்கற எங்கய்யாவுக்குக் கோவம் வராது?"

"வருமா கண்டிப்பாவரும். . ." என்று ஏதோ ஒரு புதிய குரல் கேட்டது.

"குருடா, உண்மையைச் சொன்னடா" என்று புல்லய்யா ஆதரவை நாடிப் போனான்.

கையில் தடி . . . உயரமான ஆள். எலும்புகள் தெரிந்தாலும் ஒரு காலத்தில் திடமாக இருந்தான் என்பது தெரியும். புல்லய்யா இன்னும் அவனிடம் பேசிக் கொண்டே இருநதான். நீலி கூட்டத்தில் இலை போட்டாள். குருட்டு வெங்கன்னா, "பொறந்த வீட்லெ ஏழைகளுக்குக் கஞ்சி ஊத்தி காப்பாத்தினே. உன் வீட்லெ சோறு போட்ற தாயே! என்ன ஆனாலும் ஆளுங்க போயிடுவாங்க, ஆனா பேரு என்னெக்கும் போவாது," என்றான்.

சாப்பிடும்போது இன்னொரு கிழக்குரல் கேட்டது "வெங்கனனா வேலெ முடிஞ்சது – அதிஷ்டம் – "

"ஏண்டி முண்டெ! உன் திமிரு அடங்கலியா . . கூனு வளெஞ்சாலும் ஆததிரம் போவலயா --" என்றான் குருட்டு வெங்கன்னா.

"சும்மா இரு! வா . . . கன்னெம்மா! . . . நீயும் வந்து இந்தப் பக்கம் உக்காரு." நீலி இன்னொரு இலை போட்டாள்.

"இப்படி குடுத்துடு தாயே! ஒரே வேளைல வாயிலெ போட்டுக்கறதுக்குப் பதிலா ரெண்டு வேளைக்கு வச்சிக்கறேன். . "

"கை நிறைய பணமும் ஊர் நிறைய பூமியும் வச்சிக்கிட்டு, எச்சில் கையால கூட காக்கா ஓட்டாமெ, நீயும தின்னாம கெடந்தெ -- என்னா ஆச்சி? தின்னு முண்டை! திங்கறதுதான் நிக்கும்," என்றான் குருட்டு வெங்கன்னா.

கன்னம்மா சோற்றை மூட்டை கட்டிக்கொண்டு போய்விட்டாள்.

குருட்டு வெஙகய்யான்னா சாப்பிட்டுக்கொண்டே பேச்சை வளர்த்தான்.

"ஏம்பா! புல்லய்யா! குதிரைக்கி ரெண்டு முழம் வாலிருக்குது – எறாவுக்கு சாண் நீள மீசை இருக்குது -- லாபமென்ன? இந்த மனுஷங்களுக்கு ஏன் இவ்வளவு கர்வம் வருதுன்னு தெரியலே? அவனிருக்கறானே அந்த ராஜுப் பய -- இன்னும் என் மேலெ

ஆத்தரம் தீரலே. பாத்துகிட்டேயிருக்கேன் சிங்கமிருக்குதே . . கிழமானாலும் நோயானாலும் . . புல்லை மேயுமா? மாடு தெம்பட்டுதுன்னதா கண்ணெ மூடிக்கிட்டா இருக்கும்?"

"போடா! திருட்டு மவனே! கண்ணு மட்டும் போவலேன்னா . . நீயா? . . இந்தபபக்கத்து ஊரைலலாம கொளுத்திட்டிருப்பே!"

"அப்பா! மாடு பள்ளத்திலெ விழுந்ததுன்னா ஒவ்வொருத்தரும் ஒண்ணொணணு சொல்லுவாங்க!"

"நீயா! கண்ணிலலாத சிஙகமாச்சே. . . பலலு பிடுங்கன பாம்பாச்சே -- எத்தனெ குடும்பங்களெக் கெடுத்துத் தொலசசெ உன் கொழுப்பாலே! அவனவனுக்குத் தகுநதா மாதிரிதான் முடிவுகாலம் இருக்கும் . ."

புல்லய்யா கோபமாகச் சொல்லிக்கொண்டே எழுந்து போனான்.

நீலி மெதுவாகச சொன்னாள் 'சோறு போட்டுடட்டு திடறது தப்பில்லையா? வெங்கன்னாவின் அருகில் சென்று, "உன் கிட்டே விளையாட்டாப் பேசிகிட்டிருந்தாரு. ஒண்ணும் நினைச்சிக்காதே!"

கிழவன் சிரிததான "தாயே, அந்தக் காலெத்திலெ நானொரு புலி. . சிலம்பாட்டத்திலெ என்னெ மிஞ்சினவன புல்லய்யா -- நானு ஜனங்க மத்தியிலெ கெட்டவனுன்னு பேரெடுத்தேன் -- உன் புருஷன் சபாஷ்ன்னு பேரு வாஙகனான். காலமெல்லாம நீ மஞ்சள் குங்குமத்தோட, ரெண்டுபேரும எநதக குறைச்சலுமில்லாமெ சௌககியமா இருப்பீங்கமமா!"

"போடா ! உன் ஆசீர்வாதம் இஙகெ யாருக்கு வேணும் திருட்டுப் பயலே!" என்றான் புல்லய்யா.

"நீ நாயுடு. . . நான இடையன. . . '

"ஜாதியெ ஏன் இழுக்கறேயயா! ஆகாசததுக்குக் கீழெ எல்லாரும் ஒரே ஜாதிதான," என்றாள் நீலி.

"எங்கெம்மா! குளுந்த நிலா மாதிரி இருக்கற உன் சாந்தம தான் உன் புருஷன் கோபத்தெ மாயமாக்கிவிடும். . . "என்று சொல்லிக்கொண்டே எழுந்து, தடியைத் தட்டிக்கொண்டே போனான். போகும்போது, "அம்மா!" என்று கூப்பிட்டான். குரல் தழுதழுத்தது. கண் குருடானால் கண்ணீர் இருக்காதா?. . . நிலைமையைப் புரிந்துகொண்ட நீலி சற்று முன்னால் நடந்தாள். நடந்த உண்மெ இன்னையை வரைக்கும் யாருக்கும் தெரியாதும்மா!. . . " அழுகை பீறிட்டுக்கொண்டு வந்தது. "அழாதேய்யா! நம்ம கையிலெ ஒண்ணுமில்லே. மனுஷங்களுக்குத் தெரியலேன்னாலும், கடவுளுக்கு எல்லோரோட நல்லதும் கெட்டதும் தெரியுமாக்கும். ."

"என் மகளே! சின்னவளாயிருந்தாலும் உண்மையெச் சொன்னே!"

பொழுது அந்தப் பக்கம் திரும்பியது. மஞ்சள் பூசிய சுமங்கலிகள் ஆசாரத்தையொட்டி, இருவர் இருவராக வயல்களை நோக்கிப் புறபபட்டார்கள். மஞ்சள் பூசிக்கொண்ட வயல்கள் தலைகளை ஆட்டிக்

குரல் கொடுத்தன. காற்றில் வளையும் கதிர்கள சிறிய சந்தடி செய்தன. அறுவடை தொடங்குவதற்கு இன்னும் அதிக நாட்கள் இல்லை. ஓய்வில்லாத வேலை நாட்கள் நெருங்கிக் கொண்டிருந்தன. வயது அதிகமாகாத சுமங்கலிகள் தனியாக ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். வயதானவர்கள் விளைச்சலின் நாடியைப் பிடித்துப் பார்த்துக் கொண்டிருந்தனர். கூடைக்கு எவ்வளவு அரிசி காணும் எனறு ஆராயந்தனர். அதில் விழும் தவிடு மாடுகளுக்கு எத்தனை நாட்களுக்கு வரும்? -- நிலச் சொந்தக் காரனுக்கு குத்தகை நெல் கொடுத்த பிறகு எவ்வளவு மிசசப்படும்? மிஞ்சியதில் தச்சன, வண்ணான், முடிதிருததுபவர் முதலியவர்களுக்கு கொடுத்த பிறகு எவ்வளவு தேறுமோ?. . . மிஞ்சியதை வைத்து வருஷம் முழுவதும் ஓட்டுவது எப்படி? இப்படிப் பலவிதமான பிரச்சனைகளை அலசிக் கொண்டிருந்தனர். கவலையோடு சிலர் திரும்பிப் போகத் தொடங்கினர்.

நீலியும் சென்று வந்தாள். அவள் இப்படியெல்லாம ஒன்றும் யோசிக்கவில்லை. உடம்பு திடமாக இருந்தால் உழைத்துப் பிழைக்க முடியாதா என்ற தைரியம் அவளுக்கு.

வந்த உடனே புல்லய்யா, "காலு வலிக்கலியா?" என்று மனைவியைக கேட்டான்.

நீலி பதிலுக்கு ஒரு புன் சிரிப்பையே உதிர்த்தாள். புல்லய்யாவின் முகத்தில் ஏதோ ஒரு வெறுப்பு தெளிவாகத் தெரிந்ததால, நீலி அருகில் வந்து, "சொல்லு, ஏன் அப்படி இருக்கறே?" என்று கேட்டாள

புல்லய்யா ஒரு குதி குதித்தான் "அநத அயோக்கியப் பயலுககும் அயோக்கிய முண்டைக்கும் சோத்தெப் போடடு, ஒன்னப் படடினி கெடககச் சொல்லி யாரு சொனனாங்க ஒனக்கு?"

"யாரு அயோக்கியங்க?" என்று கேட்டாள் நீலி சிரித்துக்கொணடே.

"இல்லே பின்னே? அவ பணத்துக்கு ஆசெபபட்டுப் புருஷனெக்கொணணவ. அவெ ஒரு திருட்டுப்பய. . ."

"அவ்வளவுதானா?" நீலி மலர்ந்த முகத்தோடு கணவனின் இடுப்பைக் கைகளால் வளைத்துப் பிடித்துக்கொண்டு, "இஙகெ பாரு!" என்றாள்.

"என்ன பாக்கறது. அவனுக்குக் கண்ணு போனாலும் திமிறு போகாது, அவளுக்கு முதுகு வளைஞ்சாலும் திமிரு போவாது!"

"நமக்கு இல்லியா? எல்லா மனுஷங்களும் ஒரே மாதிரி இருக்கறாங்களா?- உன் காலெ மாதிரி உன் கை இருக்குதா? எல்லாம் காலாலே ஆயிட்டா மனுஷன் பொழக்க முடியுமா? நீ ஏன் சும்மா ஒர்த்தர் மேலெ இவ்வளவு வெறுப்பு வெக்கறே? வெறுப்பு இருந்தாக்கா ஆயுசு ரொம்பக் குறைச்சலாம். . . பாரு!'

புல்லய்யா முகத்தை மனைவி பக்கம் திருப்பினான். அவள் அமைதியான முகத்தோடு வார்த்தைகளைக் கொட்டிக்

கொண்டிருந்தாள். . ." கிணறு மாதிரி சூரம்மா இருந்தா. தோண்டி மாதிரி வெங்க்கன்னா மொண்டுகிட்டிருந்தான். அவ செத்தப்பறம் . . பாவம்! யானெ மாதிரி இருந்தவன செதத பாம்பாயிட்டான்! கென்னம்மா அவ்வளவு வசதியா இருந்தா . . . ' சோறு போடு தாயே' ன்னு பிச்சையெடுத்துக்கிட்டிருக்கறா! வுனக்குத தெரியாது. . வயிறு ஒரு சமுத்ரம். பொழுது விடிஞ்சா வெறும் வயிறுதான் -- தொண்டைக்குக் கீழே நரகம் தான்! மண்ணு பானெயிலே வடிச்சி இந்த வயத்துப் பானெயிலெ கொட்டிக்க வேணடியதுதான். . கை கீழே இருக்கறதெக் காட்டிலும் மேலெ இருக்கறது அதிர்ஷ்டம் இல்லியா-. . . . அப்படி நினைக்காதே!"

புல்லய்யாவால் உடனே ஒன்றும் பேச முடியவில்லை. நீலி கணவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். புல்லய்யாவின மனம் மனைவியின் பேச்சுக்கு மெள்ள மெள்ள வெண்ணெய் போல உருகத் தொடங்கிவிட்டது. அவளை இடுப்பைச் சுற்றி இறுக்கிப் பிடிககப்போனான். அதற்கிடையில அவள் மெதுவாகச் சொன்னாள· "எஙக பாட்டி சொன்னா -- பறககற பஞ்சி ஒரேடியாக் காத்துலியே இருக்காதாம. நீ சும்மாவே அப்படித்துள்ளிக் குதிக்காதே. உன் கால்லெ அடிபடடாக்கா உன் கை சும்மா இருக்குமா? அது மாதிரிதான், நம்ம அக்கம பக்கத்திலே இருக்கறவங்க பசியிலே அழுதுகிட்டிருந்தா சும்மா இருக்கச சொலறியா? . . . "

அவள கணவனை இன்னும் இறுக்கமாக அழுத்திப் பிடிததுக்கேட்டாள். புலலய்யாவின் உடம்பெல்லாம் மயிர்க்கூச்செறிந்து. பதில் சொல்ல முடியாமல், அவள் தலையைத் தன் மார்பில் அழுத்திக் கொண்டான் கணணில நீர் கசியவே, அன்பையெல்லாம் மௌனமாக அவள் மேல் கொட்டினான. நீர் நிறைந்த இருவர் கண்களும் இரண்டறக் கலந்தன!

## 8

குருட்டு வெங்க்கன்னாவின் உண்மையான பெயர் வெங்க்கய்யா ஆகும், குழந்தையா இருக்கும்போது அப்பா இறந்து போகவே, அம்மா மகனைத் தன் பெற்றவர் வீட்டில் விட்டுவிட்டு, இரண்டாம் புருஷன் வீட்டுக்குப் போய்விட்டாள். இரண்டாவது புருஷன் வீட்டுக்குப் போய் அப்படியொன்றும் சுகம் அனுபவிக்கவில்லை அவள். குடிகாரக் கணவன் உதைத்த உதைகளுக்கு உடம்பு கன்னிப்போய்விட்டது. மனக் கஷ்டத்தோடு நீண்ட நாட்கள் உயிரோடு இருககவில்லை மகன் சின்னவனாக இருக்கும் போதே உலகத்தை விட்டுப் போய்விட்டாள். வெங்க்கன்னாவின் தாத்தாவுக்குப் பெரிய ஆட்டு மந்தை இருந்தது. சின்ன வயதிலேயே தாத்தாவுக்குப் பலவித தொல்லைகள் கொடுத்து வந்தான். புதிதாகப் பிறந்த குட்டிகளில் மூன்றில் ஒன்றாவது

மாயமாய் மறைந்துவிடுவது வழக்கம். குட்டிகளைப் ஒண்ணுக்குப் பாதி விலைக்கு விற்றுவிடுவான் வெங்க்கன்னா. அநத இரவே வாங்கினவர் களிடமிருந்து அந்தக் குட்டிகள் மாயமாய் மறைந்துவிடும். விற்ற விலையில் பத்தில் ஒரு பங்காவது தான் ஏழை பாழை என்று நினைப்பவர்களுக்குப் போய்ச் சேர்ந்துவிடும். 'மீசை சரியா வளர்றதுக்கு முன்னாடியே இப்படிப் பண்றானே! இன்னும் பெரியவனானா இவனைப் பிடிக்க முடியாது. . . குழந்தையோ குட்டியோ பெத்தப்பறம் விட்டுட முடியுமா? பொம்பளை பிள்ளையா இருந்திருந்தா . . . ஒரு ஆட்டு ஆட்டி வெச்சிருப்பான் மாப்பிள்ளை . . . என்னானாலும் ஆம்பளை. . . முழம் துணி, ஒரு கவளம் சோறு சம்பாதிக்காமெ போறானா?" என்று தாத்தா சமாதானப் படுத்திக் கொள்வார்.

இளமை முறுக்கேறி வந்தது. தசைப்பற்று பிடித்த இளங்காளை. பாறாங்கற்களோடு மோதி மரங்களைப் பிய்த்தெரியும் பலம். அழகான முகம்! 'திருட்டுக் கழுதைதான் என்றாலும் ஏழை பாழை என்றால் வெண்ணெயாய் உருகி விடுகிறான்' என்று, தாத்தாவுக்குப் பேரனைப் பற்றி உள்ளுக்குள் பெருமையாக இருந்தது. சிலம்பாட்டததில் கெட்டிக்காரன என்று பெயர் வாங்கினான். மீசையை முறுக்கித் தொடையைத் தட்டி வம்பிழுக்கும் அளவுக்கு அகமபாவம் வந்தது. தாய்மாமன் இவன் வம்பைத் தாங்க முடியாமல் சொத்தைப் பிரித்துக்கொண்டு தனியாகப் போய்விட்டான். எஞ்சிய சில ஆடுகளோடு மந்தை உருப்படவில்லை. கிழவன பேரனைத் திட்டிக்கொண்டே கஞ்சி ஊற்றினான். ஆனால் ஒவ்வொரு முறை அப்பா அம்மா இலலாதவன் என்று அழுதுவிடுவான். வெங்க்கன்னாவுக்கு மட்டும் அந்தக் கவலை ஒரு நாளும் இருந்ததில்லை. சொல்லப் போனால் கவலை என்றால் என்ன என்று அறியாதவன். தாத்தா செத்துப்போன நாள் மட்டும் அழுதான். அதற்கு மறுநாள் வரையில் பசி எடுக்கவில்லை. பசி எடுத்தபோது, "தாத்தா கஞ்சி ஊத்தலியா!" என்றான். சுயநினைவு இல்லாமலே! ஆனால் மேலும் அந்த வீட்டில் இருக்க முடியாமல் தெருவில் இறங்கிவிட்டான். யாரும் அவனிடம் சரியாகப் பேச்சுக் கொடுக்கவில்லை. எல்லாரும் தூரத்தில் வரும்போதே, அவனைப் பார்த்துவிட்டு வீட்டுக்குள் போய்க் கொண்டிருந்தார்கள். தெருநாய்கள் கூட ஓரமாக ஒதுங்கிக் கொண்டிருந்தன.

ஒருமுறை, தான் இவ்வளவு கெட்டவனா என்று நினைத்துக்கொண்டான். திருட்டுத்தனம் பண்ணினான்! நாலு பேரைப் பயமுறுத்தினான் – திட்டினான் -- அடித்தான். காசில்லாத போது வழிப்பறி செய்தான். மரியாதையாகக் கேட்டு இருந்ததையெல்லாம் வாங்கிக்கொள்வான். கொடுக்காதவர் முதுகைப் பிய்த்து விடுவான். ஆனால் இதையெல்லாம் தன்னால் எப்படிச் செய்ய முடிந்தது என்று

எண்ணினான். தான் ஒரு தங்கக்கட்டி - சுவர் போல் தாத்தா காவலிருந்து வந்தார் - அது இப்போது இல்லை - அதனால்தான் போலும் - தனக்கொன்றும் மதிப்பில்லை.

தான் கெடடவனாக வேண்டும்! வேறு வழியிலலை. மந்தையில்லை - கிந்தையில்லை. சாப்பாடில்லை. காசுமில்லை - கீசுமில்லை! இந்த உலகத்தில் தனக்குத்தான் தான்! அழுதாலும் தான்தான அழவேண்டும். தான் எதற்கு அழவேண்டும் - தான் கஷ்டப்படக் கற்றுக் கொள்ளவில்லை -- 'சரி, வந்தது வரட்டும். பயந்தா போயிடுமா? ஆனா இந்த ஜனங்க மத்தியிலெ கெட்டவன்னு பேரெடுத்துட்டேன் -- அப்படியே இருக்கறேன் -- மனுஷன் செத்தா பேரு மிஞ்சப்போவுது. மாடு செத்தா எலும்பு மிஞ்சப்போவுது - இந்தச் சுத்துப் பக்கததுலெ நான் செத்தாலும் ராவணன் மாதிரி பேரு நிக்கட்டும்--'' நடநது கொண்டே முடிவு பண்ணினான் வெஙகன்னா.

'எங்க தாத்தா ரொம்ப நல்லவர்' என்ற நினைப்பு அவனுக்கு முதன் முறையாக வந்தது! துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்தது. ஆனால் கண்ணில் நீர் வரவில்லை. முன்னால் அடியெடுத்து வைக்க முடியாமல் எதிரிலிருந்த சூரய்யா வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்து தரையையே உற்றுப் பார்ததுக்கொண்டிருந்தான். தாத்தா தென்பட்டார் - தனனைப் பாாத்து அழுவது போல் தோன்றியது -- தனிக்கட்டை தான்!

சூரய்யாவின் வீடு பெரியதுதான். பத்து ஏக்கர் வளமான நிலம். கண்ணுககுக் கண்ணாக ஒரே மகள் சூரம்மா சூரம்மாவிடம் அழகுக்கேற்ற பேச்சுமிருந்தது. பருவமடைந்தும் அப்பாவின் ஆசை மகளானதால் இன்னும் கலியாணம் ஆகவில்லை; யாராவது வீட்டோடு வரும் மாப்பிள்ளைக்காக காத்துக்கொண்டிருந்தார்.

வெங்கன்னாவைப் பார்த்துப் ''பாவம்!'' என்று சொனனாள். வெங்க்கன்னாவின் காதில் விழவில்லை. ''வயிறு ஒட்டிப்போச்சி. சோறு போடட்டுமா? இனிமையான குயிலின் குரல் போலிருந்தது. முகத்தை ஒரு பக்கமாகத் திருப்பினாள். அந்தப் புனனகை புரியும் அழகு முகத்தைப் பார்த்த உடனே, தனக்குள் சந்தோஷம் பொங்கி வந்தது. அதற்குள் அலைவீசும் கோதாவரி பொங்கிப் பாயத் தொடங்கியது.

சூரம்மாவின் தாய் உள்ளேயிருந்து சத்தம் போட்டாள். ''ஏ தாயே! நாய் வாய்லெ குச்சியெ வெச்சிக் கிளறாதே, லொள் லொள்'ங்கும்!''

தான் நாயா! தனக்கு அந்த நன்றி எங்கே இருக்கிறது? மேலும், தன்னை இந்த விவசாயி மனைவி அவமானப் படுத்தியதாக நினைத்தான். ஒரு கூடெ கடனைக் கூடத் தாங்கிக் கொள்ளலாம்; ஆனால் துளியளவு வார்த்தையைத் தாங்கமுடியுமா? 'என்னைப் போல மனுஷன்தான் அந்த விவசாயி - அவனைப் போல மனுஷன் தான்

நானும். . .

"என்னம்மா தாயே! என்னா சொன்னே?" என்று சொல்லிக் கொண்டே எழுந்தான்.

வெங்கன்னாவின் தோற்றத்தைப் பார்த்து அந்த அம்மா முகத்தில் இல்லாத சிரிப்பை வரவழைத்து, "கிழவன் எவ்வளவு நல்லவன் வெங்க்கன்னா!" என்றாள்.

வெங்கன்னாவின் மனம் மறுபடியும் தாத்தாவின் பக்கம் திரும்பிவிட்டது.

"ஆமாம்மா! அவர் இருந்த நாளெல்லாம் இல்லாத கஷ்டமெல்லாம் கொடுத்தேன். என்னாலெ அவரு ஊருக்கெல்லாம் கெட்டவராயிட்டாரு"

வெங்கன்னா வெளியே வந்த அழுகையை நிறுத்தும் முயற்சியில் அதற்கு மேல் பேச முடியாமல் போய்விட்டான். இதற்குள் புழக்கடை வராந்தாவில் சோற்றைப் பரிமாறிச் சூரம்மா சாப்பிட வரச் சொன்னாள். தாய் ஒன்றும் பேசவில்லை. வெங்க்கன்னா வேண்டாமென்று புறப்படப் போனான், அவனை அமைதியாக உற்றுப் பார்த்தாள். முதல் முறையாக அவன் வாழ்வில் நரம்புகள் புடைக்கத் தொடங்கின.

காலை நகர்த்தினாலும் முன்னோக்கிப் போக முடியவில்லை. அவளுக்குள்ளே இருக்கிற ஏதோ ஒரு மகத்தான சக்தி தன்னைக் கட்டிப்போட்டு அவள் பக்கமே இழுத்துச்சென்றது. மறுபடியும் முகத்தைத் திருப்பினான். அவள் ஒன்றும் சொல்லவில்லை. இன்னமும் அப்படியே நின்றிருந்தாள். வெங்க்கன்னா எதிர் நீச்சல் நீந்த முடியாமல் போய்விட்டான். போய் இலை முன்னால் உட்கார்ந்து விட்டான். மாட்டுக் கொட்டிலை நோக்கித் தாய் போய்விட்டாள். எதிரில் நின்றிருந்த சூரம்மாவைப் பார்ப்பதற்கு வெட்கமாக இருந்தது. ஒரு முறையாவது தலையைத் தூக்காமல் இருக்க முடியவில்லை. தன் தசைகளையும், உடற்கட்டையும் பார்த்து அவள் மெய்மறந்திருந்திருக்கிறாள் என்று தெரிந்து கொண்டான்.

பீமன் போன்ற பலசாலி -- இளமை நிறைந்த பெண் பார்த்து அலுத்துவிட்டாள். அவ்வளவு தான். ஒரே வார்த்தை சொன்னாள்· "நீ எவ்வளவு நல்லவன்!"

வெங்க்கன்னா அந்த வார்த்தையைக் கேட்டு அதிர்ந்து போனான். உலகத்தில் தன்னையும் நல்லவன் என்று சொல்பவர்கள் இருக்கிறார்களே! சாப்பாட்டுக்கில்லாத ஏழை தானெங்கெ? மகராசன் வீட்டு இந்த அழகுராணி எங்கே?

வாய்க்குள்ளே சோற்றுருண்டை போகவில்லை. முகம் ஓரளவு உயர்ந்தது. கடைக் கண்ணால் பார்த்தான். ஜிவ்வென்று நரம்புகள் இழுத்துக்கொண்டு நடனமாடுவது போலிருந்தது. உடம்பு சிலிர்த்தது. எந்தப்பக்கம் பார்த்தாலும் . . . அழகு . . . ஆனந்தம்! அவள் உடம்பெல்லாம் அழகுதான் . . . சட்டென்று எழுந்து ஏதோ

செய்துவிடலாம் என்று நினைத்தான் எழுந்து போனான்.

"என்னைப் போல கெட்டவன் யாருமில்லே!"

அதோடு போய்விட்டான் . . . திரும்ப பார்க்கவில்லை. தனக்குள்ளே சூறாவளி வீசியது . . . எவ்வளவு நேரமாகியும் அடங்கவில்லை.

கூடில்லாத குருவிபோல் திரிந்தான். சூரம்மா சொல்லி அனுப்பினாள். ஏதோ பயம் தோன்றியது. பணம் அனுப்பினாள். வாங்கிக்கொண்டான். பிறகு, "பொம்பிளெ பணம் எனக்கு வேணாம்," என்று கூறிக் கொடுத்து விட்டான். எங்கே போனானோ என்ன ஆனானோ, ஆறுவாரங்கள் வரையில் யார் கண்ணிலும் அவன் தென்படவில்லை.

மறுபடியும் கௌரி பௌர்ணமி அன்று வந்தான். வானத்தில் சந்திரனின் குளிர்ந்த பார்வையில் நட்சத்திரங்களின் கண் சிமிட்டல் சரியாகத் தென்படவில்லை! ஊரெல்லாம் கொண்டாட்டமாக இருந்தது. கருணை புரிந்த கௌரி அம்மன் மேளதாளத்தோடு தப்பட்டைகள் டமடமக்க ஆரவாரத்தோடு ஊர்வலம் வந்து கொண்டிருந்தாள். இளைஞர்கள் இளம் பெண்கள் மெச்சிக் கொள்ளும் வகையில் அம்மன் எதிரில் சிலம்பம் ஆடிவந்தார்கள். சூரம்மாவுக்கு வேண்டிய உடல் சற்று நேரம் வரையில் அரங்கத்தில் குதிக்கவில்லை. தப்படடை அடிபபவர்களுக்குப் பைத்தியம் பிடிக்க வைத்துவிட்டான் வெங்க்கனனா! ஆனாலும் மனம் மனமாக இல்லை. கௌரி அம்மன் நகர்ந்து போகலானாள். முன்னும பின்னும் சுற்றிலும் ஜனங்கள் நகரலானார்கள்.

மகிழ்ச்சியில் குதி போட்டனர் சிலர். ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் போனார்கள் மேலும் சிலர். வெங்க்கன்னா ஆட்டத்தை நிறுத்திவிட்டதைப் பார்த்த சூரம்மா தோழிகளிடமிருந்து தப்பிச் சென்றாள்.

அவள் வீட்டுப் பின்பக்கம் -- அடர்ந்த புதர் போன்ற மருதாணிச்செடி -- பக்கத்திலேயே வைக்கோல் போர்! அந்த மறைவில் நின்றிருந்தாள்! நினைத்தபடியே வெங்கன்னா அந்த வழியாகவே போகலானான்; சைகை செய்தாள். நின்று விட்டான். ஆனால் வரவில்லை. பார்த்தான். அடக்க முடியாமல், அருகில் போய் கையைப் பிடித்துக்கொண்டாள். அப்போதும் நகரவில்லை. "யாருமில்லை," என்றாள்.

"நான் யாருக்கும் பயப்படலே. பத்துப்பேர் வந்தாலும் எலும்பெ முறிச்சிடுவேன்."

"என் பேச்செக் கேக்கமாட்டே?"

வேண்டுதலோடு கூடிய விருப்பத்துக்கு மறுப்பு சொல்ல முடியவில்லை அவனால். பின் தொடர்ந்தான். வானம் களங்கமில்லாமலிருந்தது. பட்டப்பகல் போல் காய்ந்து கொண்டிருந்தது வெண்ணிலா!

"இநத நாளு எப்பொ வருமோன்ன எத்தெனையோ நாளாக் காத்துக்கிட்டிருக்கறேன். உன்னைக்கட்டிப் பிடிச்சிகிட்டு ஆனந்தத்திலெ முழுகிப் போகணும்னு . . . கழுதெ ஜாதிங்க!"

வெங்க்கன்னா அவளை இன்னும் தொடவில்லை. சொன்னான் "அழகு நிறெஞ்ச பொண்ணு நீ! தங்கமான குடும்பத்துலெ போய்ச் சேருவே. என்னைப்போல பாவியோடு ஒனக்கேன் வம்பு?"

அவள் அவனது வாயை அடைத்துவிட்டாள். "என் கல்யாணம் நிச்சயமாயிட்டது. இரவும் பகலும் ஒனக்காகவே காத்துக்கிட்டிருக்கறேன். எங்கெயாவது போயிடலாம் வா . . . வா!"

அவள் இறுக்கமாக அழுத்திப் பிடித்துக்கொண்டாள். கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. வெங்க்கன்னாவுக்கு உள்ளுக்குள் சலனம் தோன்றினாலும் வெளியே சிலை போல அசையாமல் நின்றான்.

"வேணாம்! இவ்வளவு பலசாலியெ தண்ணிய விட லேசா, பஞ்செவிட மென்மெயாப் போயிடச் சொல்றியா-"

அவள் பேசவில்லை.

"வேணாம் சூரீ! இந்தத் திருடனெ இப்படியே பொய்யக்க வுடு!"

அவள் கண்களிலிருந்து நீர் வழிந்து கொண்டிருந்தது. பார்த்தான். மனம் மறுபடியும் இளகிவிட்டது. "சூரீ! என்னெ நல்லவனுன்னு சொன்னது இந்த உலகத்திலே நீ ஒருத்திதான்! உலகத்திலெ எனக்கு நல்லது செய்யணும்னு ஆசெப்பட்ட உன் ஓர்த்திக்கு அநியாயம் பண்ணிட்டா இந்த பூமி என்னைப் போல பாவியெச் சுமக்க முடியுமா? இன்னெக்கி இங்கெ இருக்கறேன் -- நாளெக்கி எந்த ஊரோ எந்த மூலையோ -- சந்தோஷமா இருக்கற எசரெ துக்கத்துலெ தள்ளிக்காதே!".

அங்கிருந்து போகவெண்டுமென்று அவள் கண்ணீரைக் கையால் துடைத்தான். அவள் அதற்கு மேல் அழவில்லை. வெண்ணிலாவை ஒரு மேகம் விழுங்கிக் கொண்டிருந்தது. அவள் துன்பத்தை ஓர் ஆசை விழுங்கிக் கொண்டிருந்தது.

பாரு! நானொண்ணு கேக்கறேன். முடியாதுன்னு சொல்லாதே . . . "

வெங்க்கண்ணா அடி யெடுத்து வைக்கப் போனவன் நின்றுவிட்டான். "சொல்லு," என்றான்.

"இதோ!" கையை நீட்டினாள்.

மேகத்திரை விலகிப போயிற்று. மெருகேறிய சந்திரன் மெதுவாக நகர்ந்து கொண்டிருந்தான்.

விடிவதற்குள் வெங்க்கன்னா ஊரில் இல்லை. ஒரு வாரத்திற்குள்ளாகவே ஊரில் பேண்ட் வாத்தியம் கேட்டது. எர்ரய்யா கலியாண மாப்பிள்ளை. யானை போன்ற மனிதன் -- செக்கு மாடு போன்ற உடற்கட்டு. முதல் மனைவிக்குக் குழந்தை குட்டி கிடையாது. இந்தக் கணவனுடன் வாழ முடியாதென்று பிறந்த வீட்டுக்குப் போய்,

கலியாணத்தை முறித்துக்கொண்டாள். ஊரில் நாலுபேர், சூரம்மா மிகவும் நன்றாக இருக்கிறாள், அழகு ராணி என்றார்கள். பத்துப் பேர் புகழ்ந்து சொல்லும் பெண்ணைக் கலியாணம் செய்துகொள்வது என்று சபதம் செய்து கொண்டான், கலியாணம் ஆய்விட்டது. பணத்திற்கும் அவனுக்கும் ஒரு தனி ராசி. அதற்காக என்ன செய்யச் சொன்னாலும செய்து விடுவான.

சூரம்மா குடித்தனம் செய்ய வந்தாள். 'உழமாட்டாதவனுக்குக் கழனி எதுக்கு? ஆள் மாட்டாதவனுக்குக் கல்யாணம் எதுக்கு?' என்று நினைத்துக்கொண்டாள் சூரம்மா. வீட்டில் தனக்கு ஒரு குறையுமில்லை என்றாலும் சந்தோஷம் என்பது இல்லாமற் போய்விட்டது. இரண்டு மாதங்கள் கடந்தபிறகு வெங்க்கன்னா ஓர் இரவு அயலூரில் திருடிவிட்டு வந்து கொண்டிருந்தான். மூன்று பேர் அந்த இருட்டில் மாடுகளோடு எதிரே வந்துகொண்டிருந்தனர். மாடுகள் எர்ரய்யாவினுடையது என்று தெரிந்துகொண்டு, கையிலிருந்த குண்டாந்தடியை வீசி அவர்களோடு போர் நடத்தினான். திருடர்களுக்குச் சரியான அடிகள் விழுந்தன. ஒருவனுக்குக் கால் முறிந்தது. வெங்க்கன்னாவுக்கு மேலாகச் சில அடிகள் பட்டன.

அந்த இரவு மாடுகளை ஓட்டிக்கொண்டு கால் ஒடிந்த ஆளைச் சுமந்துகொண்டு வந்த வெங்க்கன்னாவைப் பாாத்து, எல்லாரும் 'சபாஷ்' என்றார்கள் எர்ரய்யா நன்றியோடு இரண்டு வேளை வீட்டில் சாப்பிட்டுப் போகச சொன்னான்.

அதுதான் சிக்கலைக் கொண்டு வந்தது. நீாப்பாய்ச்சலில்லாத செழிப்பான நிலத்துக்குக் கால்வாய் நீா வந்தது. வெங்ககன்னா தன்னோடு இருக்கவில்லையென்றால் தற்கொலை செய்து கொள்வதாகச் சூரம்மா முறையிட்டாள.

ஊரில் அக்கப்போர் ஆரம்பித்தது. போகப்போக வெங்க்கன்னாவின் இருப்பிடம் எர்ரய்யாவின் வீடாகிவிட்டது. எந்த லாபமும் பார்க்காமல் அன்றாட வேலைகளில் உதவி செய்கிறானென்று எர்ரய்யா மகிழ்ச்சி அடைந்தான். சூரம்மாவுக்கு ஒரு வினாடி வெங்க்கன்னா இல்லையென்றால் உயிரோடிருப்பது கஷ்டமாகி விட்டது. அந்தச் சாப்பாட்டில் தசைகள் பெருத்தன. கவலையில்லை. நாலுபேரிடையே நாயகனாக நடத்தப்பட்டான். சிலர், 'பெரிய ஏரித்தண்ணிக்கும் பெரிய வீட்டுக்கும் 'தோஷமில்லை' என்று சொல்லிக் கொண்டனர். சிலர், இளம்பெண் இருக்கும் வீடு பசைபோல் ஒட்டிக்கொள்ளும் என்று தங்களுக்குள் எண்ணிக்கொண்டனர். யாரோ கிசுகிசுத்தார்கள் என்று எர்ரய்யா துடிதுடித்தான். ஆனால் மனைவி அழுதபோது உருகிப்போனான்.

சூரம்மாவுக்கு மகன் பிறந்தான். ஊரில் வெங்க்கன்னா ஜாடையே என்று வம்பளந்தார்கள். சூரம்மாவின் ஒரே மகன் ராஜன்னா மீசை முளைத்தபோது வெங்க்கன்னாவை வீட்டை விட்டுப் போகச்

சொன்னான். மிகவும் அசிங்கமெல்லாம் நடந்துவிட்டது. அந்தத் தகராறினால் வெங்க்கன்னா இரண்டு நாட்கள் எர்ரய்யாவின் வீட்டுக்குப் போகாமலிருக்கவே சூரம்மாவுக்குக் காய்ச்சல் கண்டுவிட்டது. எர்ரய்யா மகனைக் கண்டித்தான். "உங்க அம்மாகிட்டெ வம்பை வளக்காதே. அவ வந்த யோகம் சொத்து இப்படி பொங்கி வந்தது. அவ பொழச்சியிருக்கற வரைக்கும்தான் இந்த வீட்லெ லட்சுமிஇருப்பா," என்று சொன்னான். மகன் அதற்கு மேல் பேசாமலிருந்தான். எர்ரய்யா போய் வெங்ககன்னாவைக் கூப்பிட்டான். ராஜன்னாயுடு, அதாவது ராஜன்னாவுக்குக் கலியாணமாயிற்று. மனைவி மாமியார் போல அவ்வளவு அழகில்லையென்றாலும் பிடிவாதக்காரி. ஒரு வாரம் குடித்தனம் பண்ணிய பிறகு அந்தக் குடும்பத்தை வார்த்தைகளாலேயே குத்திக் குதறிவிட்டாள்.

"நல்ல குடும்பம்! மரம் மாதிரி மகனை வெச்சிக்கிட்டு. . . எங்கம்மா . . . எங்கமாமிக்கு வெக்கமில்லேன்னாலும் . . . உனுக்கில்லே?"

இந்த பரிகாசத்தில் அந்த இரவு முழுவதும் ராஜன்னாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. "எனக்கு இந்த விவகாரம் தெரிஞ்சிருந்தா, இந்த வீட்டுக்கு மருமகளா வந்திருக்கவே மாட்டேன்,"என்றாள். அப்பாவிடம் பயம் உள்ள மகன். இன்னமும் பொறுமையாக இருந்தான். ஒரு நாள் இரவு, "எதுக்கு அவ்வளவு பெரிய மீசை- " என்றாள் . அத்தோடு ராஜன்னாவுக்கு கட்டுக்கடங்காத ஆத்திரம் வந்துவிட்டது. தயவு தாட்சண்யம் பாராமல் சொல்லிவிட்டான், வெங்கன்னா வீட்டில் அடி வைக்கக் கூடாதென்று. இந்தக் கூச்சல் அக்கம் பக்கத்தார் காதில் விழுந்து ஊரெல்லாம் பரவிவிட்டது. தாயின் இயல்பு மகளுககு வருமே தவிர மருமகளுக்கு எப்படிவரும் என்று சொன்னார்கள் சிலர். சூரம்மா பாதி செத்துவிட்டாள். இந்தக் கலாட்டாவில், "நீ யாருக்குடா பொறந்தே மகனே! " என்று கேட்கலாம் என்ற அளவு ஆத்திரம் வந்துவிட்டது. ஆனால் மகனென்றால அளவு கடந்த பாசம். ஒரு பக்கம் வெங்க்கன்னா, இன்னொரு பக்கம் மகன். எந்தப்பக்கமும் பேச முடியாமல் குமைந்து போனாள். "அவன் போகலேன்னா நான் தனிக்குடுத்தனம் போறேன்," என்றான் மகன்.

வெங்க்கன்னாவுக்குத் தன்மானம் பாதிக்கப்பட்டதென்றாலும், சூரம்மாவைப் பிரிந்து வாழ முடியாத நிலை. வார்த்தைகள் முற்றிக் கைகலக்கும் நிலை வந்தது. ராஜன்னாயுடுவைக் கீழே தள்ளுவதற்கு ஒரு கை போதும் . . . ஆனால் . . . நின்று விட்டான் . . . போய்விட வேண்டும் என்று எண்ணினான். ஆனால் அவளை விட்டுவிட்டு இருக்க முடியாது!

ஒரு நாள் நள்ளிரவு, - இயற்கை கறுப்புத் துணியைப் போர்த்திக்கொண்டு தூங்கியது. அந்த நிசப்தத்தில், இடைஇடையே, வெகு தொலைவில் குளிர்த் தொல்லையையும் பசித்தொல்லையையும்

பொறுக்க முடியாமல் ஒரு கிழநரி அழுது கொண்டிருந்தது. வெங்க்கன்னா தனியாக, எர்ரய்யாவின் புழக்கடைத் திண்ணை மேல போர்வை போர்த்திக் கொண்டு படுத்திருந்தான். நீண்ட நேரம் வரையில் தூக்கம் வரவில்லை. எப்போது மில்லாமல் கடநது போன நாட்களை அசைபோட்டுக் கொண்டிருந்தான். தன் உடலை அறுத்தால் இரத்தமெல்லாம் பாவம நிறைந்ததாக இருக்குமே என்றெண்ணினான். தான் எார்யயாவாகவோ ராஜன்னாவாகவோ இருந்திருந்தால் சூரம்மா செய்த வேலைக்கு என்ன நடந்திருக்கும்? மறுபடியும் பாவி நடந்ததை, நடக்கப் போவதை ஆலோசிக்கக் கூடாதென்று நினைத்துக்கொண்டான். படுப்பதற்கு முன்னால் தன்னருகில் யாரோ இருப்பதுபோல் தோன்றியது. எழுந்து பாாத்தானா பிசாசா? 'நூறு பிசாசு வரட்டும -- தனியாகச் சுடுகாட்டில் படுததுக்கொள்வேன்!' பிறகு ஏதோ நகர்ந்தது போலிருந்தது. புழக்கடைத் தொழுவததில் மாடுகள் இன்னும் விழித்தபடியே இருந்தன. பக்கததிலேயே இருந்த பசு அரைத்தூக்கத்திலிருந்தது. படுத்துக் கொண்டே வானத்தில் நட்சததிரங்களைப் பார்த்தான. "வானத்துலெ சின்ன பெரிய நட்சத்தரங்களை விட்டுவச்சான. பூமியிலெ எனனெ மாதிரியும் எர்ரய்யா மாதிரியும் ஆளுஙகளெ படைச்ச கடவுளே, நீ பலே ஆளு தான். . .' என்று சொல்லிக கொண்டான். . . அப்படியே ஆழ்ந்த தூக்கம் கவ்விக்கொண்டு வநதது

நான்கு பேர் சுற்றிக் கொண்டார்கள வாயில் துணியை அடைத்தார்கள. கைகாலகள கட்டப் பட்டன. 'ஐயோ, அப்பா!' என்று கததப் போனான். அந்தக் கூபபாடு இதயத்தில் எதிரொலித்தது. எல்லாம் இருட்டு உலகமெலலாம் ஒரே இருட்டு தன் சூரம்மா எப்படி இருப்பாளோ, இப்பொழுது கற்பனை செய்துதான் பார்க்கவேண்டும். குத்தப்பட்ட கண்களிலிருந்து இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. தான் வெங்கன்னாயுடு அல்ல இப்போது -- குருட்டு வெங்க்கன்னா. சத்தம் போட்டு அழப்போனான். நான்கு சிங்கங்களின் பலத்தோடு ஆத்திரம் பொஙகி வந்தது. . . . மாடுகளும் பசுக்களும் கட்டியிருந்த முளைகளைச் சுற்றிச் சுற்றி வந்தன. கிழ நரி உரத்த குரலில் கத்திக் கொண்டிருநதது.

ஏதோ சத்தம் கேட்டுச் சூரம்மா கைவிளக்கு எடுத்து வந்தாள். மகனும் இன்னும் மூன்று பேரும்! 'ஆ என்ன. . .' அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை. பாாத்தாள். . . தன் ஆசை நாயகனின் கண்களிலிருந்து இரததம் ஒழுகிக்கொண்டிருந்தது. பெருமூச்சு விட்டபடி மேலெ விழுந்து விட்டாள். கண்களிலிருந்து கண்ணீர் தாரைதாரையாக வழிந்தது. . . மகன தாயைக் காலால் உதைத்துக் காரித் துப்பிவிட்டுப் போய்விட்டான்.

வாயிலிருந்த துணியை வெளியே எடுத்தாள். மிருகம் ஒன்று வந்ததை மோப்பம் பிடித்த பசித்த சிங்கம் போல் இருந்தான்

வெங்க்கன்னா. ஆனால் கண்கள் குச்சிகளால் குத்தப்பட்டுக் குருடாகிவிட்டன. சூரம்மாவைப் பிடித்துத் தள்ளியபடி, அழுகையிடையில் "ராஜிப்பய ரத்தத்தெக் குடிககாம விடறதில்லே!" என்று தன் கொதிப்பைக கொட்டிக் கொண்டிருந்தான்.

அவளுடைய எலும்பு மூட்டுகள் எல்லாம் ஒரே சமயத்தில உடைந்து விட்டாற்போலிருந்தது. அப்படியே குனிந்து வெங்க்கன்னாவின் பாதங்களில் விழுந்து தன் கண்ணீரால் அவன் பாதங்களைக் கழுவலானாள்.

அந்தப் பெண் மனைவி என்பதை விடத் தாய் என்ற நிலையில் தான் அதிகம் பரிணமித்தாள் அப்போது கண்ணே கண்ணென்று ஒரே ஒரு மகன் - பெற்ற வயிறு திக்கென்றது. . . இந்தச் சிங்கம் போன்ற மனிதன் நினைத்தால் என்ன வேண்டுமானலும் செய்ய முடியும். கொஞ்ச நேரம் கழித்து வெங்க்கன்னா, "சூரீ! என் குடிசையிலெ கொண்டுபோய் வுடு," என்றான். அந்தக்குரலில் இதுவரையில் இருந்த ஆத்திரம் இல்லை. அவள் தோள்மீது கையைப் போட்டுக் கொண்டான்.

"ஒரு அடி, ரெண்டடி, அழைத்துக்கொண்டு போ. . . நிக்காதே சூரீ! நாலடி வெச்சாக்கா நரகம்! நடநட சூரீ!"

இப்போது கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. நடந்து கொண்டே சூரியின் தோள்கள், முகம், மூக்கு. . . தலை. . . தொட்டுப் பார்த்தான்!

மீண்டும் தன் குடிசை! எல்லாம் மயக்கமருந்து சாப்பிட்டது போல் . . . புதிதாகக் குடித்துவிட்டவன் போல் ஏதோ ஒரு போதை.

உட்கார்ந்து கொணடான். இருட்டு. அந்த இருட்டில் தன் காதல் நாயகனைத் தொட்டாள். மீண்டும் இளமை அவளிடம் திரும்பிவிட்டது போலொரு உணர்ச்சி.

"பாரு! நானொண்ணு கேக்கறேன . . முடியாதுன்னு சொல்லாதே!"

வெங்க்கன்னாவுக்கு அந்த நிலா வெளிச்சத்து இரவு நினைவு வந்தது.

"சொல்லு" என்றான்.

"இதோ," என்று கையை நீட்டினாள். வெங்க்கன்னா மீண்டும் நோவுக்கிடையிலே இளமையை மீட்டுக் கொண்டிருந்தான். அவள் இந்த முறை சுகத்தைக் கேட்க வேண்டுமென்று நினைத்தாலும் கேட்கவில்லை. கண்களில் நீர் பொங்கிப்பொங்கி வந்தது. "அவன் மிருகமாயிட்டான். என் மகனில்லே உன் மகன்தான் . . . அவனுக்கு ஒண்ணும் கெடுதல் பண்லேன்னு. . ." அவள் தொண்டை அடைத்துக் கொள்ள, வேதனையோடு வெங்க்கன்னாவின் மடியில் தலையை வைத்து விக்கி விக்கி அழத் தொடங்கினாள். குருட்டு வெங்க்கன்னா அவள் கையைத்தடவிப் பிடித்தான். கையில் கை வைத்து, பொங்கி வரும் துக்கத்தை வலுக்கட்டாயமாக அடக்கிக்கொண்டு, "சூரீ! குடுத்து வெச்சது அவ்வளவுதான்!" அதற்கு மேல் பேச்சு வரவில்லை. சற்று

நிறுத்தி, மெதுவாக, "நான் பண்ணின பாவத்துக்குத் தண்டனெ இது . . . உன் மகன் இநத தண்டனெ குடுக்கலே. . . அவன் யாரு குடுக்கறதுக்கு. . .? கடவுள்தான் இநத தண்டனெ குடுத்தாரு. . . சாக மாட்டேன் ஆவட்டும். . . ஆனா ரொம்ப அனுபவிப்பேன். . . " அழுகையை நிறுத்த முடியவில்லை அவனால். கண்ணீர் அவள் தலை மீது துளித் துளியாக விழுந்து கொணடிருந்தது. "நாதியில்லாத நாய் மாதிரிதெருவுலெ சுததிச் சாவறேன் ஆவட்டும் -- போய வா சூரி!"

அவள நீண்ட நேரம் பொறுத்து எழுந்து மௌனமாக, அவன் பாதங்களில் தன் தலையை வைத்து வணங்கிவிட்டுப் போய்விட்டாள. போகும் போது, "கடவுளே" என்று தனக்குள பிரார்த்திக் கொண்டே போனாள். இவ்வளவு நடந்த பிறகும திரும்பிப் போகும்போது, வீட்டுத் திண்ணையில் கணவன் கும்பகர்ணனைப் போல் உறங்கிக் கொண்டிருந்தான். பொழுது விடிந்ததும் அந்த ஊரில் மட்டுமில்லாமல், அக்கம் பக்கத்து ஊர்களிலும் செய்தி பரவிவிட்டது. எர்ரய்யாவும் விசாரித்து வரப் போனான்.

"ராத்ரி இருட்லே முள்ளு பொதர் மேலெ விழுந்துட்டேன். முள்ளு குததிடிச்சி," என்று சொனனான். சிலர் நம்பினார்கள். இன்னும சிலர், "திருட்டுப் பொழப்பு அவன் கூடவே பொறநதது. எங்கெயாவது போயிருப்பான். யாரோ கண்ணெக் குத்திக் வீட்லெ கொண்டாந்து போட்டிருப்பாங்க," என்று சொல்லிக் கொண்டார்கள். இருக்கறது தொலஞ்சாலொழிய வேதாந்தம் பொறக்காது,' என்று இன்றும் சிலர் முணுமுணுத்தார்கள்.

சூரம்மா அந்த நாளிலிருந்து வெங்க்கன்னாவைப் பார்க்கவில்லை. நாளுக்கு நாள் ஏக்கத்தால் இளைத்துப் போய். . . ஆறு மாதங்கள் முடியவில்லை -- இந்த முறை முன்பு போல் மாமியார் வீட்டுக்கல்ல யமன் வீட்டுக்குப் போய்விட்டாள.

சூரம்மா இறந்து அப்போது ஐந்து வருஷங்களிருக்கும். வெங்கன்னா அவள் இறந்த மறு நாளிலிருந்து கிண்ணத்தை ஏந்தித் தெருவில் இறங்கிவிட்டான்.

## 9

நீலி -- கஞ்சியோ, கூழோ ஏதோ குடித்துவந்த வயிற்றுக்கு ஓரளவு அரிசிச்சோறு கிடைத்து வந்தால் நரம்பில் சற்றே முறுக்கேறியது; இளமை கொழித்து உடல் முழுவதும் பரவலாயிற்று. அழகு எல்லா உறுப்புகளிலும் தலைகாட்டி மார்பிலும் குடியேறியது. அவள் இப்போது இதழ் விரிந்த ரோஜா, தேன் நிறைந்த மலர்.

புல்லய்யா பட்டணம் போவதாகச் சொன்னானல்லவா! கையில் காசிக் கயிற்றைக் கட்டினான். மெல்லிய வெள்ளைச் சட்டை, உள்ளே

கறுப்பு நிறப் பனியன். பனியன் மேல் வெள்ளைக் கயிற்றில் கோத்த செப்புத்தகடு, கழுத்திலும் காசிக் கயிறு துண்டைக்கொண்டு தலைப்பாகை கட்டினான் ; அக்குளில் பாணாத்தடி. கிருதாக் குடுமியில் வழிய வழிய எண்ணெய் , முழங்கால் வரைக் கீழ்ப் பாசு. புறப்படுவதற்கு முன் கண்ணாடியில் நன்றாகப் பார்த்துக்கொண்டான்

சாலையில் கால் வைத்தார்கள் இருவரும். காலை வெய்யில் முதுகில் இளஞ்சூட்டுடன் பட்டது. இதையும் அதையும் பேசிக் கொண்டே போனார்கள் இருவரும்.

எட்டு மைல் தூரம் நடக்க எவ்வளவு நேரம்?

இனி அவனுக்கு நிலத்தைக் குத்தகைக்கு விட்ட எஜமானின் விஷயம்! அவர் பெயர் சீதாராம சுவாமி, பி. ஏ., பி. எல். வக்கீல் இவருடைய தந்தை அந்தக் கிராமத்துக் கணக்கராக இருந்தார். கிராமத்தில் பாதி நிலம், அந்தக் காலத்தில் ஒரு பெரிய மனிதருக்குச் சொந்தமாக இருந்தது. அவர் பெரிய பட்டணத்தில் வாழ்ந்து கொண்டு நிலக் குத்தகை வசூல் விஷயத்தையெல்லாம் இந்தக் கணக்கரிடம் விட்டிருந்தார். சில ஆண்டுகள இப்படியே நடந்து கொண்டிருந்தது. அந்த பொய மனிதரால் கொஞ்சம் வருமானம் இருந்து வநதது கணக்கருக்கு அவர் குடும்பத்திற்குக் கிடைத்து வந்தது. ஓராண்டு மட்டும ஏமாற்றி விட்டார்!

அந்த வருஷம் தெற்கத்திய பிரதேசததில் பஞ்சம் வந்தது தானிய விலை திடீரென்று ஏறிவிடடது. ஏறிய விலைகககு விறறு, விலை ஏறுவதற்கு முன்பே விற்று விட்டதாகச் சொல்லி மீதிப் பணத்தை ஏப்பம் விடடுவிட்டார். நிலங்கள் வாங்கினார். மகனைப பட்டினத்திற்கு அனுபபினார். பெரிய படிப்புப படிக்க வைத்துக் கலெக்டராக்கப் போகிறேனென்று ஊரெல்லாம் சொல்லிக் கொண்டார். மகனின் பேச்சைக் கேட்டு அவன் தவறாமல் கலெக்டா ஆவானென்று நம்பினார். வாய்க்கும் மூளைக்கும் பொருத்தம் அமையவில்லை. பல முற்றுகைகள் நடத்திக் கடைசியில் ஒருவழியாகச சென்னையில் வக்கீல் பட்டம் சம்பாதித்துக் கொண்டான் மகன்.

மகன் சொந்தக் கிராமத்திற்கு அருகாமையில இருந்த பட்டணத்தில் தொழிலை ஆரம்பித்தான். வருமானம் பூஜ்யம். கிழவனார் உதவி பண்ண வேண்டியதாயிற்று. இரண்டு குடும்பங்கள் செழிப்பாக வாழ்வதற்கான வருமானத்திற்காக -- அதிலும் மீதப் படுத்திச் சொத்தைப் பெருக்குவதற்காக -- கிராமத்தாரைத் துடைத்து விடுவார் கணக்கர். கிராமத்தாரிடம் பயமும் பக்தியும் இருந்து வந்த காலம். கிழவனாரின் வார்த்தைக்கு எதிர்ப்போ தடையோ இருந்ததில்லை. 'அவர் குடுத்துவெச்சவர் -- அனுபவிக்கிறார். நமக்கு குடுத்து வெக்கலே. ஒர்த்தருக்கு இருக்குதுன்னு பொறாமைப்பட்டா ரெண்டு கண்ணும் போயிடும்,' எனறு தங்களைத் தாஙகளே சமாதானப்

படுத்திக் கொள்வார்கள். பொறாமை என்பது அந்தக் காலத்து மக்களிடையே பொதுவாக இருந்ததில்லை. அந்தத் தலைமுறை விஷயம் அப்படி.

சீதாராமஸ்வாமி தலைமுறை வந்தது. இவருடைய பட்டண வாசம் இந்தக் கிராமத்து வீட்டைப் பாழடித்து விட்டது. தந்தை இருக்கும் போதே பட்டணத்தில் பெரிய வீடொன்று கட்டிக் கொண்டார். அந்த நாட்களில் வாடகை வண்டிகளில் கல், செங்கல், மற்றும் சுண்ணாம்பும நவிரியிலிருந்தே, செலவில்லாமல் போய்ச் சேர்ந்தன. அவ்வளவு பெரிய வீடு அதிக செலவில்லாமல் கட்டி முடிக்கப் பட்டது. கிழவருக்கு வீட்டில் மனைவி, வெளியே வைப்பாட்டி இருந்து வந்தார்கள். சீதாரமஸ்வாமிக்கு அப்படியொன்றும் இல்லை யென்றாலும் பெண்கள் என்றால் கொஞ்சம் சபலம் இருக்கத்தான் செய்தது. பெற்றோர்க்கு ஒரே குழந்தை அவர் மனைவி. சொத்து வந்து சேரும் என்ற எண்ணத்தில் சம்பந்தம் பார்த்து முடித்தார் கிழவர். மனைவி கிராமத்திலிருந்து வந்தாலும் அந்தக் காலத்துப் பெரிய வீட்டு ஃபாஷன்கள் தெரிந்தவள். மணிக்கட்டுவரையில் கைவைத்த ஜாக்கொட்டுகளைப் போடுவாள். பட்டணத்துக் காற்று பட்ட உடன் பேச்சும் மாறியது. ஒரு விதத்தில் கணவனையும் மிஞ்சிவிட்டாள. செக்ஷன்களோடு சேர்த்து வழக்குகளைப் பற்றிக் கிராமததாரிடமும் பெண்களிடமும் அவர்கள் நம்பும் படியாகச சொல்லத் தெரியும் அவளுக்கு. அது மட்டுமா அவர் வாய் திறந்தால முன் சீஃப் ஆசசரியததில் வாயடைததுப போகிறாரெனறும, கிரிமினல கேஸேல்லாம் தன் கணவாதான் நடத்துகிறாரெனறும் சொல்லும்போது, தான கணவருக்கு உதவி செய்ய விரும்பினாலும் முடியாமல் போவதற்கு வருத்தம் தெரிவிப்பாள் படுக்கையறையில் கணவன் சொன்ன செக்ஷன்களை அப்படியே ஒப்பிக்க முடியும் என்ற கர்வம் இருந்தது அவளுக்கு. சீதாராமஸ்வாமி முதலில் ஒல்லியா இருந்தார். மனைவி நாகூக்கான உயர்ந்த கொழுத்த விக்ரகம் போன்றவள் மாமியாருக்கு மருமகன் இப்படி இருப்பது பிடிக்காமல் நாட்டு மருந்துகள் வாங்கிக் கொடுத்தாள். ஆனாலும் ஆள் அப்படியே இருக்கிறார்.

சீதாராமஸ்வாமி சுதந்திரப போராட்டத்தில் பஙகெடுத்ததாகச் சொல்லிக் கொள்வார். தன் மனைவியும் பங்கு கொண்டாள் என்று அவர் சொல்லியதில்லையென்றாலும், அவர் மனைவி சொல்லிக் கொள்வாள். அப்படி அவள் சொல்லிக்கொள்வது அவருக்கு இஷ்டமில்லை. அந்தக்காலத்தில் பெண்களுக்குப் பூரண சுதந்திரம் இருக்க வேண்டுமென்று வாதிட்டவர், இந்தக் காலத்தில் வாதத்திற்கு வந்தால் மனைவி தான் சொலவதைக் கேட்காமலிருக்கக் கூடாதென்பார். அவர் வாழ்க்கையில் இது சம்பந்தமாக ஏதோ ஒரு வேதனை அவருக்கு இருந்தது, அது ஏதோ ஒரு சந்தேகத்தினால் வந்திருக்கலாம்.

ஓரிரண்டு முறை தற்கொலை செய்து கொள்ளலாமென்று எண்ணியதாக நினைவு. இருந்தாலும் தான் ஆண்பிள்ளையென்றும், உத்தமனென்றும் நினைத்து மனைவியைத் தன் சொல்லுக்குக் கட்டுப்பட்டிருக்க வைக்க முயற்சித்தார் -- வெற்றியும் கண்டார்.

ஆனால், ஐம்பதுக்கு மேற்பட்ட இந்த வயதில் அவள் கைதான் ஓங்கிவிட்டிருந்தது. அவள் வாய், இவருடைய வார்த்தைகளையெல்லாம் விழுங்கக் கூடிய சக்தி பெற்றிருந்தது. அவள் கிழிநத கோட்டைத் தாண்டக்கூடாது. மனைவி போட்ட தடைகளை மனதுக்குள்ளேயே மீறுவது பழக்கமாகிவிட்டது இப்போது. ஒவ்வொரு முறை அவருடைய பேச்சை அவள் தட்டாமல் நடந்து ஆச்சரியத்தை விளைவிப்பதும் உண்டு.

சீதாராமஸ்வாமிக்கு கட்சிக்காரர்கள் (கிளையன்டுகள்) மிகக் குறைவு என்றுதான் சொல்ல வேண்டும். தந்தை சம்பாதித்து இல்லை என்றால், போர்டை எடுத்துப் போட்டுவிட்டு, எந்த ஆபிஸிலாவது குமாஸ்தாவாகச் சேரவேண்டியதுதான். ஆனால், தனக்கிருக்கும் பிராக்டீசினால் எங்கேயும் போக முடிவதில்லையெனறு வரும் சில பேரிடம் சொல்லாமல் இருக்க முடியாது அவரால். தன்னிடம் இருக்கும் சிறப்பு வரப் போவதை முன் கூட்டியே அறியும் துரதிருஷ்டிதான் என்று சொல்லிக் கொள்வார்! தன் ஒரே ஒரு மகனின் விஷயமே அதற்கு உதாரணம். மகனின் பெயர் வெங்ககட அப்பல ராமநரசிம்ம ராவு -- கடவுள், தாய், தந்தை எல்லார் பெயரும் இந்தப் பெயரில் ஐக்கியமாகிவிட்டன. இந்த ராவும் ஒரு வக்கீல் தான். தந்தைமகன் இருவர் போர்டுகளும் கேட்டுக்கு இரண்டு பக்கங்களிலும் காட்சியளிக்கும். இரண்டும் ஒரே சைஸ்தான் என்றாலும், இரண்டு பேரின் சைஸும் வெவ்வேறு ஆகும. அடிமரம் -- விளக்கு மாற்றுக்குச்சி! தந்தைக்கு வாயிருக்கிறது, மூளையில்லை -- மகனுக்கு மூளையிருக்கிறது, வாயில்லை. அதனால் வரும்படியில்லை. சொத்துக்களை நம்பியே இருக்கவேண்டியுள்ளது.

வெங்க்கட அப்பல ராமநரசிம்மாவுக்கு -- எல்லாவற்றையும் மனதிலேயே வைத்துக்கொள்வது வழக்கம். தந்தை ஒரு சம்பந்தம் பார்த்தார். அந்தப் பெண்!கூல் ஃபைனல் வரைப் படித்திருந்தாள். உடல்வாகிலும் தனக்கு எதிரிடை. ராவு தசைப்பற்றுள்ள வெப்பமான அணைப்பிற்காகத் தவித்துக் கொண்டிருந்தான். இருந்தாலும் தந்தையிடம் இஷ்டமில்லை என்று சொல்லவில்லை. அந்தப்பெண்ணிற்கு ஒரே ஒரு தம்பி இருந்தான். அவளைப் போலவே விளக்கு மாற்று குச்சியாக இருப்பான். ராவுக்குக் கலியாணமாகி பத்துமாதங்களிலேயே அந்த அற்பாயுசுக்காரன் செத்துவிட்டான். அந்தச் சொத்தெல்லாம் மருமகளுக்குச் சேரப் போகிறது. தன்னுடைய தூரதிருஷ்டிக்கு உதாரணம் இதுவென்றாலும், சாதாரணமாக வெளியாரிடம் சொல்லமாட்டார். ராவின் மனைவி

குடும்பம் நடத்த வந்து இந்த நான்கு ஆண்டுகளில் மூன்று பெண் குழந்தைகள் பிறந்தார்கள் எல்லாரும் ஏறத்தாழ அம்மாவின் ஜாடையே -- போதாதற்கு ஒரு பெண்ணுக்கு மாறுகண் வேறு! இன்னொரு பெண் கறுப்பாக இருப்பாள். இவர்கள் வளர்ந்து செலாவணி ஆவதற்கு அந்தச் சொத்து போதாதே என்ற கவலை குறுக்கிடுகிறதோ என்னவோ!

புல்லய்யாவுக்கு அவனுடைய பாட்டன் காலத்திலிருந்து இவர்களுடன் தொடர்பு இருந்தது வந்தது. புல்லய்யாவின் பாட்டன் இரண்டு ஏக்கர் நிலத்தை ராவின் பாட்டனிடமிருந்தது குத்தகைக்கு எடுத்துக் கொண்டார். புல்லய்யாவின் தந்தை மல்லு நாயுடு மிகவும் மானஸ்தர். சீதாராமஸ்வாமி கொஞ்சம் கால தாமதத்திற்கு ஒத்துக்கொள்ளாமல் ஏதோ சொல்லப் போக, சொந்த நிலத்தை விற்று, விளைச்சல் வீணாகப் போயிருந்தும், குத்தகை தானியத்தை அளந்து கொடுத்தார், அன்றிலிருந்து எல்லாம் தன்னிச்சையாக நடந்து வந்தது.

புல்லய்யா மனைவியோடு பட்டணம் சேரும்போது வெயில சுள்ளென்று அடித்தது. வக்கீல்கள் இருவரும் வீட்டிலேயே கோர்ட் ஏற்பாடு செய்திருந்தார்கள. மனைவி வாதம் நடத்திக் கொண்டிருந்தாள் ஏதோ விஷயமாக. மகன் பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தான். புல்லய்யாவைப் பார்த்ததுமே பெரிய வக்கீல், "என்னய்யா, புளி அய்யா!" என்று சிரித்துக்கொண்டே சொன்னார்.

"அவன் எங்கே? இனிப்பான மனுஷன், அதனாலெதான் சாமந்தி மாதிரி பெண்டாட்டியெக் கட்டிகிட்டான்," என்றாள் மனைவி. காலில் விழுந்து வணங்கிவிட்டு இருவரும் கொஞ்சம் வெட்கத்துடன் நின்றிருந்தனர். சிறிய வக்கீலின் பார்வை ஒரு முறை நீலி மீது விழுந்தது. மனது அதற்கு மேல் வேலையில் முழுகிவிட்டது. ஓய்வில்லாத வேலை! 'அன்றிரவு அவர்கள் தங்கிவிட்டால். . . புல்லய்யாவுக்கு நல்ல தூக்கம் பிடித்துவிட்டால். . . தான் ஏதாவது புத்தகம் வைத்துக்கொண்டு வராந்தா அறையில், இரவு பன்னிரண்டு மணிவரையில் விழித்துக் கொண்டிருந்தால். . . நீலிக்குத் தூக்கம் பிடிக்காது. . . அந்த வெளிச்சத்தையே கண்கள் பார்த்துக் கொண்டிருக்கும். . . தன்னால் எழுந்திருக்க முடியாது . . . அவளே! . . . அழகு கிராமத்துப் பெண்களின் சொத்து . . . நாள் முழுவதும் கண்ணாடி முன்னாலிருந்தாலும் . . . இந்தப் பட்டணத்தில் அழகு அரை நிமிடத்திலேயே கரைந்துவிடுகிறது! . . . இருந்தாலும் நீலிக்குத் தூக்கம் பிடிக்காது.'

மருமகள் சமையலறைக்குப் போனாள். புல்லய்யா கொஞ்சம் வெட்கத்தோடு," ஐயோ! பொம்பிளெ இல்லாத வீடு. என்ன சமெச்சாலும். . . வாய் செத்துப் போச்சீங்க. இதோ இந்தப் பொண்ணெ. . . " என்று சொன்னான்.

"நல்லது . . . நல்லது," என்று தலையை ஆட்டினார் பெரிய வக்கீல். "உன் பேரென்ன?" என்று கேட்ட எஜமானியம்மாவைப் பார்த்து புல்லய்யாவே, "நீலம்மா — ஊரெல்லாம் நீலின்னு கூப்பட்றாங்க," என்று சொன்னான்.

"நல்லா வேலெயெல்லாம் பாத்துக்கறாளா?"

"ஓ! அதெக் கண்ணாலெ பாக்க முடியாதுங்க! வெலெ செய்யலேன்னா உடம்பு எப்படி திடமாயிருக்குமுங்க? பெரியவங்க சொல்லுவாங்க . . . உக்காந்து கிடக்கிற மக எதுக்கும் உதவாம போயிடுவா, வேலெ செய்யற மருமக திடமாயிப் போவான்னு,"

புல்லய்யா சொன்னதைக் கேட்டுப்பெரிய வக்கீல் பகபகவெனச் சிரித்துக்கெண்டே, "எங்க வீட்லெ வந்து சொல்றியே — ரெண்டு வேலைக்காரிங்க . . . "

மனைவி சற்றுக் கோபமாகப் பார்த்ததனால் போலும் நிறுத்திவிட்டார். ஆனால் மனைவி வாய் திறந்தாள். "எங்களுக்கென்னப்பா புலலய்யா! அவருக்கு ஜட்ஜ் வேலெ கொடுக்கறோம்னா ஏன் வேணாம்னாரு தெரியுமா–"

"சொல்லுங்க! சொல்லுங்க!"

"நமக்குச் சுதந்திரம் இருக்காதுய்யா! நாளெக்கி எலக்ஷன் வந்துதுன்னா அவரு மந்திரி ஆயிடமாட்டாரு!"

"அப்படியேங்க!"

"உக்காரும்மா!" பெரிய வக்கீல் நீலியின் பக்கம் திருமபிப் பார்த்துச் சொல்லிவிட்டு உள் கூடத்திற்குச் சென்றார். நீலி புடவையைச் சரிப் படுத்திக் கொண்டு அந்த முன் பக்கத்து வராந்தாவில் தரையில் உட்கார்ந்தாள். வராந்தாவை ஒட்டியிருந்த அறையில சிறிய வக்கீல் நாற்காலியில் உட்கார்ந்தபடி, உடம்பெல்லாம் கண்ணாக்கிக்கொண்டு வாயைப் பிளந்து நீலியை விழுங்கிக்கொண்டிருந்தான் . . . சிந்தனை. . . எல்லாவற்றையும் கடந்து . . . புடவையையும் ஊடுருவிப் போயக் கொண்டிருந்தது.

எஜமான் சைகை செய்யவே புல்லய்யா கூடத்திற்குப் போனான். இரண்டு மாதச் சம்பளம் இன்னும் கொடுக்கவில்லை யாதலால் மருமகளிடம் சொல்லிக் குறைப் பட்டுக் கொண்டிருந்தார். சமையல் தொடங்கிச் சாப்பாடு நேரமாகிவிட்டால் ஒன்றரைப் படி அரிசி வீணென்று, பெரிய எஜமானியம்மா இவர்களைச் சீக்கிரம் அனுப்பிவிட வேண்டுமென்று எண்ணினாள்.

இப்படி அப்படி வராந்தாவில் நடந்துகொண்டே சீதாராமஸ்வாமி சொன்னார், "நல்லா இருக்கறா! பேஷான பொண்ணைத்தான் கல்யாணம் பண்ணகிட்டே. ஆனா . . . ." நிறுத்திவிட்டார்.

"என்னங்க ஐயா?"

"நீ சொல்றதெக் கேக்கறாளா?"

"கேக்காம என்னங்க," கொஞ்சம் வெட்கத்துடன்," என்ன

சொன்னாலும் அப்படியே செய்வா!" என்று சொன்னான்.

"அப்படியா!. . . இருந்தாலும் பொமபளெங்களெ அடக்கி வெச்சிக்கணும். . . நம்ப முடியாது!" -- புல்லய்யா இந்த வார்த்தைகளின் உள்ளாத்தத்தைப் புரிந்து கொணடதால் போலும, சிரித்துக்கொண்டே, "நீங்க சொல்றது புரியுதுங்க. என்ன வந்தாலும் பொமபளெங்களாலெதான் வருது," எனறான்.

"நல்லா சொன்னே! அவங்களெ அடுபபுகிட்டெ -- பூனங்க கூட அடைச்சி வைக்கணும. வீட்டெவுட்டு வெளியே விட்டா . . ."

வக்கீல் மீண்டும் மீண்டும் முற்றத்து வராந்தாப்பக்கம் பார்த்துக்கொணடார். புல்லய்யா, "பெண்டாட்டியெப் புருஷன், புருஷனெப் பெணடாட்டி நம்பலேன்னா, இந்த உலகம் எப்படி நடக்கும் ஐயா! அவங்களும் நம்பளெ மாதிரி உயிரிருக்கறவங்கதானே? யாத்திரைக்கும் திருவிழாவுக்கும் போயி பாக்கலேனனா . ." என்றான்.

"டேயி பைத்தியக்காரா? போவப் போவ நீயே தெரிஞ்சிக்கிவே ஆவட்டும . . . என் பேச்செக் கேட்டு . . . குழந்தெ குட்டி ஆகறவரெக்கும் பெண்டாட்டிக்கு அதிகாரம் கொடுக்காதே!"

புல்லய்யா புன்சிரிப்பு சிரித்தான். பெரிய வக்கீல், "நான் சொல்றது உனுக்குப் புடிக்காது ஆவட்டும! எவ்வளவோ ஆயிரம் பேரு, பின்னாடி நடக்கப்போறதெ முன்னாடியே சொல்ற சக்தி எனக்கு இருககுதுன்ன ஒத்துகிட்டிருக்கறாங்க . . நான் கோர்ட்டுக்குப் போக வேண்டியதில்லே. என்னெத் தேடிகிட்டு வாறாங்க."

"அப்படி!"

"இவ்வளவுக்கும் நான் சொல்றது என்னென்னா, பொமபளெஙக ஏமாததுவாங்க, ஜாக்ரதெ, அவ்வளவுதான்!"

புலலயயா பேசவில்லை. மாமியாரும் மருமகளும் புழக்கடையில் ஏதோ சிறு வாக்குவாதம் நடத்திக் கொண்டிருநதார்கள் -- மாமியாருக்கும தெரியாமல் வந்தவர்களுக்கென்று மருமகள் சமையல் காரனிடம் சொல்லி அரிசி கழுவவைத்ததற்காகச் சண்டை।

பொழுது திரும்பியது. இருவரும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்கள். அதுவரையில் மலையளவு கற்பனை செய்து கொண்டான் ராவ். முதுகெலும்பு உடைந்துவிட்டது வழியில் மனைவி என்னென்னவோ கேட்டுக்கொணடு வந்தாள். புல்லய்யா மனம் ஏதோ ஒரு மாதிரியாக இருநததால் என்னவோ பதில் சொல்லிக் கொணடிருந்தான். புருஷன் அப்படியிருந்தது அவளுக்குக் கொஞ்சமும பிடிக்கவில்லை. ஏஜமான் வீட்டுக்காரர்கள் எல்லாரும் நல்லவர்கள் என்று சொன்னாள் - இன்னும என்னவோ சொல்லிக் கொண்டிருந்தாள் - புல்லய்யா ஓரக் கணணால் பார்த்து -- "டம்பத்துக்கு ஒண்ணும் குறைச்சலில்லே," என்றான.

"ஏன் அப்படிச சொல்றே? " என்று கேட்டாள்.

"வாய் வாழைப்பழம், கை கருணைக் கிழங்கு," என்றான்.

குளிர்காலத்துப் பொழுது வேகமாகக் கடலை நோக்கி இறங்கிக்கொண்டிருந்தது. சாலையில் மாட்டு வண்டிகள் கடகடவென்ற சத்தத்துடன் சந்தையிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தன. ஒரு கரி பஸ் ஊஞ்சலாடிக் கொண்டு போயிற்று பட்டணத்தை நோக்கி. ஆலமரங்களின் நிழலைக் கடந்து வரும்போது சற்றுத் தூரத்தில் ஏரி தென்பட்டது. ஏரியைத் தொட்டாற்போல் கிராமத்து வயல்கள். அவற்றைத் தொட்டாற் போல் மேட்டுநிலம். அந்த மேட்டை ஒட்டி ஒரு சிறியகுன்று!

போசமல் கணவன் வார்த்தைகளின் பொருளைக் கிரகித்துக்கொண்ட நீலி மெல்லச் சொன்னாள், "நமக்கு வெச்சாக்கா புகழ்ந்தும் - வெக்கலேன்னா திட்றதும் நல்லால்லே. ஒருத்தரோட நல்லதெத்தான் நினெக்கணுமே தவிர, அவங்க கெட்டதெ நினெக்கக் கூடாதுன்னு எங்க பாட்டி சொல்லுவாள். அந்த ஐயா பொழைக்கறதுக்கு வழி காட்னாரில்லியா! எதுக்கு அப்படிச் சொல்றே?"

புல்லய்யா அதற்கு மேல் ஆத்திரத்தை அடக்கமுடியாமல் போய்விட்டான். "மாமியாரும் மருமவளும் எப்படி ஆயிட்டாங்க பாத்தியா? நாம சாப்டறதுக்கா போனோம்? அந்த ஐயா உன்னெ நம்பாதேன்னார் -- ஏமாத்திடுவியாம்!"

அதற்கு மேல் கோபத்தில் வார்த்தைகள் வரவில்லை. எதிரில் ஏரி தென்பட்டது. ஏரி அருகில் நின்று கைகாலகளைக் கழுவிக் கொண்டு மேற்குப் பக்கம் திரும்பி ஒரு வினாடி கண்ணை மூடினாள மறுபடியும் கணவனைப் பின் தொடாநத படி, 'பெரிய ஐயா . . . அந்தப் பேச்சு எதுக்கு வந்ததோ . . . நம்ம கையிலெ என்ன இருக்குது! எல்லாத்துக்கும் அந்தக் கடவுளு இருக்கறாரு!' என்று எண்ணிக் கொண்டாள்.

புல்லய்யா ஓரக் கண்ணால் பார்த்தான்.

## 10

முற்றிய நெற்கதிரை அறுவடை செய்யாமலே, பயறு விதைத்தனர். குளிர்காலம் தன் சொரூபத்தைக் காட்டிக் கொண்டிருந்தது. ஆண், பெண், குழந்தை, குட்டி எல்லாரும் போர்வைகளையோ, புடவைகளையோ போர்த்திக் கொள்ளத் தொடங்கினார்கள். கிழவிகள், கரி அடுப்புகளை முன்னால் வைத்துக்கொண்டு சுருட்டுகளைப் பற்ற வைத்து காலையிலும் மாலையிலும் மூலையில் உட்கார்ந்து விடுவார்கள். சுற்றிலும் வந்து உட்கார்ந்த குழந்தைகளுக்குக் கொஞ்சல்களுடன, ஏழைப் பெரியம்மாக்கள் கதைகள் சொல்வாகள். வெய்யில நேரத்தில் அவர்களும் அரிவாள்களை எடுத்துக்கொண்டு செல்வது வழக்கம்.

அறுவடை நடந்து கொண்டிருந்தது. எல்லாருக்கும் ஓய்வில்லாத வேலை. இல்லாதவர்களும் சிறியவர்களும், பெரியவர்களும் வயலோரமாக விழுந்து

கிடந்த தப்புக் கதிர்களைப் பொறுக்கினார்கள். கூடை நிறைந்த பிறகு வீட்டை நோக்கிப் போனார்கள். தலையெடுத்த பயத்தம் முளைகளின் இளம பசசை நிறத்தால் வயல்கள் நிறைந்து கணணுக்கினிமையாகக் காட்சியளித்தன. ஒரு மூலையிலிருந்து தொடங்கி, ஜோடி ஜோடியாகப் பாட்டுப் பாடிக்கொண்டு, வேலையினால் ஏற்பட்ட களைப்பைக் கொஞ்சமாவது குறைத்துக்கொணடு, முன்னேறிக் கொண்டிருநதார்கள் அறுவடையான வயலின ஒரு மூலையில் நெல் குவிக்கப் பட்டிருந்தது. இன்னொரு பக்கம் நெல்லை மரக்காலால், அருகிலிருந்த களத்து மேட்டில் தூற்றிக் கொண்டிருந்தார்கள். எங்குப் பார்த்தாலும உற்சாகம்தான். நீலியும் கூட வயலில பாட்டுப் பாடினாள். புல்லய்யா அவ்வப்போது பின்பாட்டுப் பாடினான். இப்படிச் சிரமமில்லாமல் வயலிலிருநது நெல் களத்து மேட்டிற்கு வந்து சேர்ந்தது. களத்து மேட்டிலிருந்து வீட்டிற்கு, பின் வீட்டிலிருந்து குத்தகைக்கு விட்ட நிலச் சொந்தக்காரா வீட்டிற்குப் போக வேண்டும்.

அரிவாளை வயலுக்குக் கொண்டுபோன நாளிலிருந்து, புதுநெல்லை அவிச்சிக் காயப்போட்டுக் குத்தி, புழுங்கல் அரிசிச் சோற்றைச் சாப்பிடுவது பலபேருக்கு வழக்கம். நீலிக்கு வீட்டு மேறபார்வைப் பொறுபபு வந்தது. கணவனுக்கு இஷ்டமில்லாமற் போனாலும் கைககுக் கட்டுப் பாடில்லை. வணணானுககும் நாசுவனுக்கும் கொடுததாள். ஊாப் பள்ளி ஆசிரியருக்குக கொடுக்கும போது புல்லயயா குறுக்கிட்டான.

"நமக்கின்னா பசங்களா இருககறாங்க படிக்கறதுக்கு? மரக்கா நெல்லுன்னா சும்மாவா வருது," எனறான்.

"பாவம, குழந்தை குட்டிக்காரா அந்த வாத்தியார்! நாலு பேருநாலு மரக்கா குடுததாக்கா அவர் பொழச்சிககுவார்," என்றாள்.

முகத்தைச சுருக்கிக்கொண்டு ஒரு பக்கமாகப் போனான் கணவன். நெல்லைப் போரடித்துப் பிரிக்கும் வேலை முடிந்தது.

தூற்றி முடிந்த பின்னர் ஒரு பககமாகக் குவித்து வைத்தான. கொஞசம் நெல்லை எடுத்து முறத்தில போட்டுக் கொணடு வயலுக்குக் கொண்டுபோனான. வளைந்த கழியால வயலில் ஒரு குழி தோண்டினான். குழியில் நெல்லைக கொட்டினான் வணங்கினான். அநத மண்ணுருண்டையைச் கொண்டு பிள்ளையாா செய்து களத்தில் நெற்குவியல் மேல் வைத்தான். வயல் திருநாளன்று அரிசிக் கொழுககட்டை செய்தாள் நீலி. உப்பு வெல்லம் போடாத அந்த அடையை விநாயகர் ஜீர்ணம் செய்தார். தேங்காய் நீரால் அபிஷேகம் செய்துகொண்டு, வீட்டில் நெற்களஞ்சியததில் முதலில் உட்கார்ந்து கொண்டார் -- அதறகு மேல் நெற்குவியல் களத்திலிருந்து வநது விழுந்தது. களஞ்சியத்தில் — களஞ்சியத்திலிருந்து பட்டணத்திலிருக்கும நிலச் சொநதக்காரர் வீட்டுக்குப் போகவேண்டும்.

பூம் பூம் மாட்டுக்காரர்களுக்கு இதுதான் சமயம்! ஊரில் பேரய்யாச் செட்டிக்குச் சம்பாதிப்பதற்கு இதுதான் நேரம் -- மருத்துவச்சி ஜோஸ்யக்காரிக்குக் கூட இதுதான் டைம்.

"ஓ அம்மா! -- பக்கவாதத்துக்கு வாயு நோவுகளுக்கு மருந்து -- நல்ல நல்ல மருந்து இருக்குது --"

உடம்பு முழுவதும் பித்தளை நகைகள், கழுத்து நிறையப் பவள மாலைகள் -- இடுப்பில் குழந்தை -- கையில் தம்பூரா -- தலையில் கூடைவாய் நிறை வார்த்தைகள் -- இதுதான் ஜோஸ்யக்காரி.

"குழந்தை இல்லே"... பகக்தது வீட்டம்மா சொல்லிவைத்தாள்.. நீலியைப் பார்த்து ஜோஸ்யக் காரி சொன்னாள் "இல்லாமெ போவதாவது தாயே -- பதினெட்டு கழுதெங்க மேலெ புராணங்க -- கண்ணு போனாலும், காலு போனாலும், குழந்தெ இல்லாமெ போனாலும் எல்லாத்தும் எங்ககிட்டெ இல்லாதது ஒண்ணுமில்லே — அளந்து முப்பது படி அளக்காம முப்பதுபடி -- இது ஒரு கட்டளெ, தாயே! குரு கட்டளெ. குரு கட்டெளெயெ மீறனவங்க குதிரையாப் பொறப்பாங்க -- மரியாதெ தெரிஞ்சி பொழெக்காதவங்க கழுதையாப் பொறப்பாங்க!...

"நர்த்திக்கு இவ்வளவு குடுக்கணுமா? -- "பக்கத்து வீட்டமமா மூக்கின் மேல் விரலை வைத்தாள். உளளேயிருந்து பாட்டி சொன்னாள் "நீலம்மா! நீயென்ன கெழவியா, இல்லெ மலட்டுப் பொம்பளயா? மருந்து மாயத்துலெ போயி விழாதே"

ஜோஸ்யக்காரிக்குக் கோவம் வந்தது. முகத்தை முன்னால் நீட்டி அபிநயத்தோடு பாடினாள்

"ஓ நரெச்ச மயிர்க்காரி -- குருட்டுக் கண்ணழகி
போட்ட சாப்பாட்டுலெ மண்ணெ போடறியா?
ஒரேடியாகக் குதிச்சா மழை பெய்யாது --
கீழே இறங்கிட்டாப் பயிரிருக்காது --"

இந்தச் சாபத்தைக் கொடுத்துவிட்டு, மருந்து கொடுக்காமலே போகத் தொடங்கினாள் -- ஜோஸ்யம் சொல்லாமலே ஓடத் தொடஙகினாள். நீலி கூப்பிட்டாள் -- வரவில்லை. மறுபடியும் கூப்பிட்டாள்...

"நாடி தெரிஞ்வன்தான் வைத்தியன் -- எதுக்கும சாமர்த்தியம் வேணும் ... குரு கட்டளெ" என்று சொல்லிக்கொண்டே திரும்பி வந்தாள்.

"பாரு ஜோஸ்யக்காரம்மா! எனக்கு எதுக்கு மருந்து -- இந்தா இதெ வாங்கிட்டுப் போ," என்று சொல்லிக் கொண்டே ஒரு மரக்கால் நெல்லைக் கொட்டும்போது, பக்கத்து வீட்டம்மா மூக்கின் மேல் விரலை வைத்தாள. ஜோஸ்யக்காரி, "அடுத்த வருஷம் இதே நாளு வருவேன் ... அபபொ தங்க விக்கிரகம் மாதிரி மகன் உன் கையிலெ இருப்பான் தாயே!" என்று ஆசீர்வதித்தாள்.

புல்லய்யா நிலச் சொந்தக்காரனுக்கு நெல் அளந்துவிட்டு, ஊர் வழக்கப்படி, ஆதெம்மக்காவிடம் கலியாணத்திற்காக வாங்கிய பணத்திற்கு வட்டியாக நெல்லை அளந்து கொடுத்தான். ஆதெம்மக்காவின் மருமகன் பணத்திற்குப் பத்திரம் எழுதி வாங்கிக் கொண்டான். அந்தக் கடனை எப்படி அடைப்பது - மிஞ்சிய நெல்லை வைத்துக்கொண்டு வருஷம் முழுவதும் ஓட்ட வேண்டும்... முன்பெல்லாம் ஒரே ஜீவன். இப்போது மூன்று ஜீவன்கள்.

அதிலும் மனைவிக்குக் கை இறுக்கம் கிடையாது! கேட்டால் நீலி 'கையும் காலும் இல்லியா' என்று சொன்னாள்.

புரட்டாசி மாதம் காத்தானிக்காரரின் பாடல்களோடும், சாமந்திப் பூக்களின் வாசனையோடும் ஊஞ்சலாடிக் கொண்டே கடந்து விட்டது. வந்தது மார்கழி. வைகுண்ட ஏகாதசியன்று மலைமேல் திருவிழா. நவிரிக்குத் தெற்கில் -- மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது அந்த மலை -- ஸாலெகுண்டம் -- வரலாற்றுப் புகழ் பெற்றது அது -- அந்த மலை மேல் விஷ்ணு கோவில். அந்தச் சுறறுப் புறத்து ஊர்களிலிருந்து ஆண், பெண், குழந்தை குட்டிகள் புறப்படடனர் -- காலையில பொழுது புலர்ந்தது -- குளிர் காற்று வீசிக் கொண்டிருந்தது -- மலை அடிவாரத்தில் பாய்ந்து கொண்டிருந்த வம்ஸதார நதியில் ஆயிரக் கணக்கான மககள் குளித்துக் கொண்டிருந்தனர் -- குளிக்கும் துறையிலிருந்து மலைக்குப் போகும் வரையில், இரண்டு பககங்களிலும் பிச்சைக்காரர்கள் வரிசையாக துணிகளை விரித்து உட்கார்ந்திருந்தனர். குளிக்கும் துறையில் பஜனை செய்பவர்கள் தப்பட்டைகளை முழக்கிக் கொண்டு, அந்த மணலில் பரவசத்தோடு கூத்தாடினர்! அந்தப்பாட்டுக்கள் ஒரு மைல் தூரத்திலிருந்து பார்த்தால் எறும்புகளின் சாரைகளைப் போலிருந்தது. சந்நியாசிகள் அநதக் கும்பலில் சேர்ந்து கொண்டு, மக்களுக்கு விபூதி பூசி தட்சணை பெறறுக்கொண்டிருந்தனர்.

நீலியும் புல்லய்யாவும சேர்ந்து திருவிழாவுக்குப்போனார்கள். தலை முழுகிவிட்டு ஒளி கொடுக்கும் அப்பனுக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு மலையை நோக்கிப் புறப்பட்டார்கள. முந்தானையில் கட்டிய அரிசியை, வழியில் இரண்டு பக்கங்களிலும் விரித்திருந்த துணிகளில் போட்டுக்கொணடே நீலி முன்னாலும், பின்னால் புல்லய்யாவும் நடநதனர். பட்டணத்தில் தென்படாத அழகு இங்குதானிருந்தது. இந்தக் கிராமத்து இளம் பெண்களின் நடையில் இயல்பான எழிலோடு சேர்ந்த ஒய்யாரத்தை அநுபவிப்பதற்காக .... வந்திருந்தனர்! ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு பேதைத்தனமாக முன்னால் நடந்து போகும் அழகு தாணடவமாடும் உடல்களின் இறுக்கங்களைக் கண்டு களித்துக்கொண்டிருந்தனா சிலர். இளமை கொழிக்கும் குமரிகளின் -- தங்கச் சாயலுடன் கூடிய சிருங்கார எழிலையெல்லாம் ஜீரணித்துக் கொண்டு, முன்னேறிக் கொண்டிருந்தனர் -- பார்ப்பவர்களுக்கு கண்ணுக்கு விருந்தாக இருந்தது.

மஞசள் பூசிய முகததில் பெரிய குங்குமப் பொட்டை வைததுக்கொண்டாள் நீலி. பழங்களும் காய்களும் வாங்கிக் கொண்டு மலைமேல் ஏறலாயினர் -- அங்கங்கே பந்தல்கள் போடப் பட்டிருந்தன -- அந்தத தென்னை யோலைப் பந்தல்கள் மேல் பழங்களை எறிந்து கொண்டிருந்தனர் -- அங்கங்கே நின்றுகொண்டு பாட்டுக்கள் பாடும் பிச்சைக்காரர்கள் -- பின்னாலேயே வெடிக்சிரிப்பு சிரித்துக்கொண்டு, பின் தொடரும் பட்டணத்து இளைஞர்கள் -- அந்தச் சிரிப்பைக் காதில் வாங்காத கிராமத்து ஜனங்களின் ஒரே இலக்கு

— மலை மேல் கடவுள் -- அந்த அப்பனின் தரிசனம் கிடைக்க வேண்டும் . ஜன்மம் கடைத்தேற வேண்டும்! கல் விக்ரகத்தில் பேரழகைப் பார்த்தார்கள். அதில் ஜீவன் மின்னிடுவது போலிருந்தது. அவர்களுடைய பிரார்த்தனைகளைக் கேட்டு, மனக் குறைகளைப் புரிந்து கொள்கிறது அந்த விக்கிரகம்! தாங்கள் தங்கள் பக்தியை அர்ப்பணித்ததற்கு அடையாளமே இந்தப் பழங்களும் காய்களும்! நம்பிக்கையோடு வாழ்கிறார்கள் -- நம்பிக்கையே அவர்களுக்கு ஆதாரம் -- அந்த நம்பிக்கையிலேயே ஆனந்த மடைகிறார்கள்.

ஜனங்கள் மேலெ ஏறிப் போய்க்கொண்டிருந்தார்கள். இநதத் தம்பதியர் பக்திப் பரவசமாய் முன்னேறிக் கொண்டிருந்தனர். ஒரு சாமியார் அருகில், உயரத்தில் பார்வதி, பரமசிவன் நந்தி வாகனத்தின் மேல் உட்கார்ந்திருக்கும் பொம்மை இருந்தது -- சங்கரன் சிரித்துக் கொண்டிருந்தான் -- அதோ ஆலகால விஷம் விழுங்கிய நீலகண்டன் புன்சிரிப்பை உதிர்த்துக்கொண்டிருந்தான் -- நந்தி வாகன மூர்த்தியாக வந்து கொண்டிருந்தான். பக்தியோடு இருவரும் தலை குனிந்தனர். சாமியார் இருவர் தலைமேலும் கைவைத்து, " பழம் தானம் செய்தீங்க! தங்கம் மாதிரி மகன் பொறப்பான்! " என்று ஆசிர்வதித்தார். புல்லய்யாவுக்கு உடல் சிலிர்த்தது! மகன் – சில நாட்களாக மனைவியின் தளுக்கு மினுக்கில் சொக்கிப் போய் மகன் விஷயத்தை மறந்து போனான், மகனுக்காகத்தானே தான் கல்யாணம் செய்தது! நியாயத்துக்கும் நீதிக்கும் கட்டுப்படுபவன் – திருடர்களைப் பிடிக்கும் துரை – கண்ணில் படும் சிறுவர்களிளெல்லாம் தன் மகன் தெனபடுவது போலிருந்தது --'என் மகன் இவ்வளவு செவப்பா இருப்பானா! இதெவிட முகம் நல்லா இருக்கும் - ' இபபடி நினைத்துக்கொண்டே அந்த மலை முழுவதும் ஏறலானான்.

மகன் நினைப்பிலேயே மலை ஏறிவிட்டான். கோவிலருகில் ஜனங்கள் நெருக்கிக் கொண்டிருந்தனர். அந்தக் கும்பலில் புகுந்து போவது ஒரு பிரம்மாண்டமான வேலை. தான் மட்டுமென்றால் போய்விடுவான். நீலியும் தானுமாக இருவரும் போக வேண்டும். மனதாரத் தொழவேண்டும். . பலபேரைப் போல இவர்களும் கோவிலுக்கு மேல் வாழைபபழங்களை வீசியெறிந்தார்கள். கடவுள் தரிசனம் அவ்வளவு எளிதில் கிட்டவில்லை. காத்திருக்கும் நேரத்தில் பொழுது சாயத் தொடங்கியது. குளிர்காலத்துச் சூரியன் மடமடவென்று இறங்கலானான். ஜன நெரிசல் குறைந்த பிறகு சாமி தரிசனம் செய்துகொண்டு, மற்றொரு பக்கமாக மலை இறங்கினார்கள். பட்டணத்திலிருந்து வந்த ரகரகமான பொருள்கள் அடுக்கிய கடைகள், காஃபி ஓட்டல்கள், கிராமத்துக் கரும்பு வண்டிகள் -- பண்டரிபுரத்துப் பஜனைக்கூட்டம் எல்லாம் வந்திருந்தன. ஒரு பக்கத்தில் கழைக்கூத்தாட்டம் நடந்து கொண்டிருந்தது. -- இன்னொரு பக்கம் ரங்கராட்டினம்! திருவிழாக்காட்சிகளெல்லாம் பார்த்தார்கள் -- அதற்குள் ஜனத்திரள் குறையத்தொடங்கியது. -கடலை பேர்ச்சம் பழம், கரும்பு முதலியன வாங்கினார்கள். எவ்வளவு வற்புறுத்தினாலும் நீலி ஒன்றுமே

சாப்பிடவில்லை. உடம்பெல்லாம் பிரட்டித்தள்ளுவது போலிருந்தது. ஆனால் கணவனிடம் ஒன்றும் சொல்லாமல், பின்னாலேயே நடந்து கொண்டிருந்தாள். அந்தப் பக்கத்திலிருந்து நவிரிக்கு வருவதற்கு ரோடு ஒன்று இருநதது. அந்த ரோட்டில் கொஞ்ச தூரம் வந்த பிறகு, குறுக்கு வழியில் வயல் வரபபுகளின் மேல் நடக்கலானார்கள். நீலியின கால்கள் ஒத்துழைக்கவில்லை. அவர்களுககுப் பின்னால் புறப்பட்டவர்கள் அவர்களைக் கடந்து போகலானார்கள்.

பொழுது சாயும் நேரம்! மேலைவானம் வெள்ளை சிவப்புக் கலப்புகளுடன் ரம்மியமாக இருந்தது. அங்கங்கே சிதறிய மேகங்கள் குங்குமச் சாரத்தில் குளித்தாற் போலிருந்தன. ஒரே ஒரு பனை மரம் வானத்தைக் குததிக் கொண்டிருந்தது. பறவைகள் சிவப்புப் பழங்கள் நிறைந்த பெரிய மரங்கள் என்று நினைத்தன போலும் -- அந்துப் பக்கமாகப் பறந்து செல்லலாயின! கீழே பயிறு நிறைநத வயல்கள கண்ணுக்கின்பம் தரும் வகையில் இலைப்பச்சை வண்ணததைப் பூசிக்கொண்டிருந்தன. தன்னந்தனியான ஒரே ஒரு குன்று கரடிபோல் சூரியனை விழுங்கிக்கொண்டிருந்தது!

முன்னால் பார்த்தால் ஆறு! மெதுவாக அந்த எழில் நிறைந்த இயற்கை அழகை ரசித்துக்கொண்டே கிழக்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. அடுதத கரையில் அடர்த்தியாக உயரமாக வளர்ந்த சவுக்க மரங்கள் ராகங்கள் இசைத்துக கொண்டிருந்தன. ஒரு தனிச் செம்படவன் மீன்களுக்காக வலை வீசிக கொண்டிருந்தான்.

அந்தக் காட்சிகளெல்லாம இன்பத்துள் இன்பமாக இருந்ததால புலலய்யாவின் கால்கள் விறுவிறுவென்று இயங்கத தொடங்கின! நீலிக்கு உடம்பெல்லாம் ஏதோ பித்துப் பிடித்தாற்போல் இருந்தது. ஓரிடததில் மேலே, நடககமுடியாமல் உட்கார்ந்துவிடடாள. -- அதற்கு அருகிலேயே ஒரு பாம்புப் புற்று!

"கொஞ்சம் பொறுத்துக்கோ -- அதோ தெரியுது பாரு நம்ப ஊரு"

நீலி ஒனறும் பேசவில்லை. பின்னால் வருபவர்கள் அப்படியொன்றும் அதிகமாக இல்லை. இருட்டுவதற்கு இன்னும் அதிக நேரமில்லை. அதற்குள்ளாகக் குளிர்காற்று வீசத் தொடங்கியது. சந்திரன் ஒளிக் கதிர்களை வீசுவதற்கு முயற்சி செய்து கொண்டிருந்தான்.

நீலிக்கு வயிற்றைப் பிரட்டி ஒரு முறை நிறைய வாந்தி எடுத்தாள். புல்லய்யா பயந்துவிட்டான். நீலி பரவாயில்லையென்று சொன்னாலும், பக்கத்தில் நின்றுகொண்டு, மனைவியின் கன்னஙகளை இறுக்கிப் பிடித்துக்கொண்டான். அந்தப் புற்றின் பக்கத்திலிருந்து ஒரு பாம்பு அவர்களைப் பார்க்காதது போலவே போகும்போது நீலி சடடெனறு எழுந்தாள். இருவரும் வணங்கினர். அந்த நாகராஜன் இவர்கள் பக்கம் பார்க்காமலே, அப்படி வயல் பக்கமாக, பயிறு வயல்களைக் கிழித்துக்கொண்டு போனான்.

இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர். மெல்ல,

கணவன் தோளைப் பிடித்துக்கொண்டு, நடந்து போகும்போது, மறுபடியும் வயிற்றைப் புரட்டியது. அப்போது அந்த வழியாக ஒரு கிழவியும் பேரனும் யாத்திரையை முடித்துக்கொண்டு, மெல்ல நின்று நின்று வந்து கொண்டிருந்தனர். பயத்தில் ஆழ்ந்திருந்த புல்லய்யாவைப் பார்த்துக் சிரித்துக்கொண்டே பொக்கை வாய் திறந்து கிழவி கேட்டாள்,

"எத்தனெ நாளாச்சிப்பா, கல்யாணமாயி?"

புல்லய்யா அந்த வார்த்தைகளைக் கேட்டிருந்தாலல்லவா பதில் சொல்வதற்கு! பொக்கை வாய்க்கிழவி மெல்ல அடி எடுத்து வைத்து முன்னால் வந்து, நீலியின் முகத்தை உற்றுப் பார்த்துவிட்டு மென்சிரிப்போடு, "தங்க விக்கிரகம் மாதிரி குழந்தையைத் தூக்கிக்குவே ஆவட்டும்!" என்றாள்.

புல்லய்யா அந்த வார்த்தைகளைக்கேட்ட உடனே ஒரு துள்ளு துள்ளினான். நீலியின் உதட்டில் ஒரு புன் சிரிப்பு மின்னல் போல ஒரு முறை மின்னியது!

## 11

அந்த வருஷம் குளிர் வழக்கத்தைவிடக் கடுமையாக இருந்தது. சொல் மன்னனான பீஸ், குளிர் அதிகமானதற்கான காரணத்தைப் பட்டணத்திலிருந்து தெரிந்துகொண்டு வந்ததாகச் சொன்னான் "ஜப்பான்காரன் தோத்துப் போறப்போ அணுகுண்டைப் போட்டுட்டானாம்! அது காத்துலெ கலந்து உலகமெல்லாம் சுத்தி வருது!" பல பேர் இதை உண்மை என்று நம்பினர்.

இந்தக் குண்டின் விளைவு, குருட்டு வெங்கன்னா கென்னம்மா போன்ற கதியில்லாத கிழவர்களைப் பொறுத்தவரை மிகவும் அதிகமாக இருந்தது. நீலி, கொஞ்சம் கிழிந்த சேலையைக் கொடுத்தாள். "எங்கம்மா, அன்னைக்கித் தேவப்பட்றப்பொ பேரன் கீழே போட்றதுக்கு ஒரு பழைய துணி குடுக்கறேன," என்றாள் கென்னம்மா. நீலி மென்சிரிப்புச் சிரித்து, "பேத்தி பொறந்தா?" என்று கேட்டாள். புல்லய்யா அதைக்கேட்டதும், "வாயெமூடு," என்ற கத்தினான். "என் மகன் என்னெ மாதிரி சிலம்பாட்டத்துலெ வஸ்தாதா இருப்பான் . . . துரெ!" என்றான் பெருமையோடு.

நீலி பதில் சொல்லவில்லை. புல்லய்யா யோசனையிலாழ்ந்தான். மகனுக்கு என்னென்ன கலைகளை எப்படியெப்படிக் கற்றுக்கொடுப்பது? ஒரு வருஷத்திலியே குதித்து பல்டி அடிக்கமாட்டானா என்று நினைத்தான்.

பீஸ் ஜோஸ்யம் சொன்னான் "விலெவாசியெல்லாம் உசந்து போயி, ஜனங்க கஞ்சியில்லாம துடிதுடிச்சி சாகப்போறாங்க! பட்ணத்துலெ இப்பவே ரேஷன் வந்துட்டுது! . . . . நமக்கும் வரவுப்போவுது. இருக்கப்பட்டவன் இல்லேன்னப் போறான் இல்லாதவன் பொழைக்க முடியாம அவஸ்தெப் படப் போறான். நம்மகிட்டெ இல்லாம போனாலும் நீயும் நானும் ஒண்ணா இருக்கறோம். அப்பொ, ஒனக்கு நீயே, எனக்கு நானேன்னு ஆயிடுவோம்! பட்ணம் முதல்லியே மோசம், இன்னும் மோசமாவப்போவுது! பறக்கற பறவையெக் கூண்டுலெ வெக்கறேங்கறான்

கவர்ன்மெண்டகாரன்। நாளெக்கிக் காலெலெ பல்லெக் கவர்ன்மெண்ட்காரன்தான் விளக்கணும்னு சட்டம் போடப் போறாங்களாம்!"

எல்லாரும் ஆச்சரியத்தோடு இந்த வார்த்தைகளைக் கேட்டார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக நினைத்துக்கொண்டார்கள். கோவில் தாசன் தன்னுடைய சிறப்புத்தானத்தைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும் என்று அன்று மாலை நீலம்மன் கோயிலில் ஆவேசப் பேச்சு பேசத்தொடங்கினான் "மருந்துக்குக் கோடாலி இருக்குது . . . மனுஷனுக்கு மனுஷன் புலியும பன்னியும் மாதிரி ஆகப்போறான। ஆகாசத்துலெ மேகங்க இருக்காது. கீழெ பச்சையான இடமே இருக்கப்போறதில்லே। யமதூதனுங்க ஜனங்க மேலெ விழுந்து விழுங்கப்போறாங்க। கோலாகலமா இருந்த ஊரு எல்லாம் குப்பமேடாகப் போவுது --"

சுற்றிக் குழுமியிருந்தவர்கள் கைகளைக் கூப்பினார்கள். "தாயே! நீயே கைய விரிச்சிட்டா குழந்தைங்க வயிறு காயாதா? நீ நினெச்சீன்னா ஆகாசத்துலெ மேகங்களுக்குப் பஞ்சமா ? ஒங் குழந்தைங்க நல்லா இருந்தாத்தானே ஒனக்குத் திருவிழா நடத்துவாங்க!"

தாஸனின் குரல் வானத்திற்கு எட்டிக்கொண்டிருந்தது "அடே தம்பீங்களா! நான் யமதூதனுங்களோட சண்டைக்கு இறங்கியிருக்கிறேன்! என் குழந்தைக்கிட்டேயிருந்து சோத்தெப் பிடுங்கிடுவேனா? யாரு சொல்ற ஜோஸ்யத்தையும் நீஙக நம்பாதீங்க. துடியனுங்க மாதிரி மாமியார் வீட்டுப் பானெனைா தூக்கிப் போட்றது — பொறந்த வீட்டுப் பானென்னா கவனமாச் சுமக்கிறதுங்கற வேலெயெச்செய்யாதீங்க। எல்லாரும் ஒண்ணுதானுன்னு -- கஷ்டகாலத்துலெ, இருக்கப்பட்டவங்க ஏழெங்க கஷ்டத்தெப் பாத்ததாங்கன்னா -- மனுஷனெ மனுஷன் நம்பனாங்கன்னா -- ஆகாசம் பிளந்து போனாலும், பூமி தகதகன்னு எரிஞ்சி போனாலும் . . . ஜனங்க ஏமாற வேண்டியதில்லே !"

தாஸன் தன் வேலையை நிறைவேற்றி விட்டான். இனி பேரய்யா செட்டி முன்பெல்லாம் பெரிய படியில் அரிசி அளந்து, சின்னபபடியில் உப்பை அளந்து கொடுத்து, கொசுறும் போடுவது வழக்கம. இப்போது கொசுறு போடுவதை நிறுத்தவே, ஊரெல்லாம் விலைவாசி ஏறுவது தெரிந்து விட்டது. சிறுவர்கள் என்ன வாங்கப் போனாலும் வெல்லத்துண்டு ஓசிக்குக் கிடைப்பது வழக்கம். அது சுத்தமாக இப்போதில்லை. எடைக்கற்களை வேறு லேசாகத் தேய்த்து விட்டிருந்தான்।

அந்த ஊரிலிருந்து மிலிட்டரிக்குப் போன ஒரே ஒரு ஆள் திரும்பி வந்தான். பல ரகமான பொருள்களைக் கொண்டுவந்தான். ஊரெல்லாம் அவனைப் பற்றிப் பேசினார்கள்। ஜப்பான்காரனோடு இப்படிப் பட்டவங்களெல்லாம் சண்டைப் போட்டு எப்படித்தோற்று விட்டார்களென்று நினைத்துக் கொண்டார்கள் । பீஸ் கேள்விகள் கேட்டான். "டாங்க்கிக்கி இறக்கெயிருந்தா அது ஆகாயத்துலெ பறந்து போவாதா?" என்று கேட்டான். அது தரையின் மேல் தான் போகுமென்றால் — இராமாயணத்தில் புஷ்பக விமானம் -- பாரதத்தில் அஸ்திரங்கள் பற்றிச் சொன்னான் "நம் பாரதத்தில்

வரும் அஸ்திரங்கள் -- வருணாஸ்திரம் -- நாராயணஸ்திரம் -- பாசுபதாஸ்திரம் -- இந்த ரகஸ்யத்தையெல்லாம் ஜெர்மன்காரன் என்னைக்கோ தெரிஞ்சிக்கிட்டான். அவன் அந்த ரகஸ்யத்தைத் தெரிஞ்சிகிட்டு, அணுகுண்டுங்க, டாங்க்கிங்க, அதெல்லாம் செய்யப்போய் -- இங்கிலீஷ்காரன் அமெரிக்காக்காரன் ஜப்பான்காரன் இவங்களெல்லாம் கத்துக்கிட்டாங்க!"

பீஸ்வின் அறிவு வளத்தை ஊரெல்லாம் மெச்சிக்கொணடாாகள். எத்தனைப் பட்டணங்க சுத்தி, யுத்தம் பண்ணிவிட்டு வந்தாலும், அறிவு ஒரு நாள்ளியே வந்துடுமா?" என்று அங்கங்கே சொல்லிக் கொண்டான் பீஸ்.

இன்னொரு புது விசேஷம் என்ன வென்றால், பட்டணத்திலிருப்பது போன்ற சின்ன காபி ஓட்டல் கூட ஒன்று அந்தக் கிராமத்தில் முளைத்தது ரோட்டின் பக்கமாக। தெற்கேயிருந்து இறக்குமதியான இட்லி சாம்பார் தயாராகி வந்தது. பேரய்யா செட்டியின் மகன், தன் தந்தையைப் போல் மூன்று மடங்கு கனமுள்ள மூட்டையைத்தோளின் மேல் போட்டுக்கொண்டு, எல்லாவிதமான பொருள்களையும் விற்பதற்கு, ஊரிலும் அக்கம் பக்கத்து ஊர்களிலும் திரிவதற்குத் தெம்பில்லாததால், ஏதாவது சுலபமான வழியில் பணம் சம்பாதிக்க வழி என்ன என்று பார்த்து, இந்தக் காபி ஓட்டலை வைத்தான் -- ஊரில் யாராவது குடிப்பார்கள் என்றல்ல, வழியில் ரோட்டில் போவோர் யாராவது வருவார்களென்றுதான். ரஷ்யன் வோட்கா, ஃப்ரெஞ்ச் ஷேம்ப்பேன் ஆகியவற்றை விஞ்சிய புளித்த பழையசோறு சில்லென்ற கூழ் முதலியவற்றைப பழகிய இந்தக் கிராமத்தினர் காட் ஓட்டலுக்கு ஓடும் நிலை முதலில் வரவில்லை. சில நாட்கள் வரை ஓட்டலுக்கு வாடிக்கையாளர் வராததைப் பார்த்து, வற்புறுத்திக் கடன் கொடுத்தான். ஓயவிருககும் போது, ரோட்டுப் பக்கம் போகும் விவசாயிகள், சூடாக, இனிப்பாக, வாசனையாக -- அதிலும் கடன் -- கொஞ்சம் போல ருசி பார்த்தார்கள் -- வரவர விடியற்காலையில் பழைய சோறு இந்தப் புதிய சுவைகளுக்கு முன்னால் நிற்க முடியாமற் போய்விட்டது। ஊரில் வளர்ந்து வரும் இளவட்டங்கள. இந்தப் பழக்கத்தில் கொஞ்சமோ அதிகமோ விழுவதற்குக் கற்றுக் கொண்டார்கள்.

நாட்கள் இப்படிச் சிறுசிறு மாற்றங்களோடு உருண்டு கொண்டிருந்தன. போர்க்காலத்தில் பெருகிய காகிதங்களை, இதுவரையில் எப்போதும் காகித முகத்தைப் பார்க்காதவர்கள் கூடப் பார்க்கலானார்கள். காகித ரூபா செல்லாதென்று வாங்க மறுத்த கிழவிகள்கூட அந்த ஊரில் இருந்தார்கள்।

நீலியும் புல்லய்யாவும் இந்த மாறும் சூழ்நிலையில் அகப்படாமல் தப்பிக்க முடியவில்லை. பிள்ளைத்தாச்சியான அவள் வீட்டில் சமையல் முதலிய வேலைகளோடு, கணவனுக்கு வயல் வேலைகளிலும் உதவி செய்துவந்தாள்.

நவிரிக்கு மேற்கில், வடக்கு தெற்காகப் பாயும் நதி ஊர் கடநததும் கிழக்குப் பக்கமாகத் திரும்பிப் போகும். முந்திரித்தோட்டங்கள் பரவலாக இருந்தன. அங்கங்கே உயரமான பனைமரங்கள் -- எங்கோ ஒவ்வொர்

இடத்தில் ஆலமரங்கள் கூட இருந்தன. இந்தத் தோட்டங்களுக்குப் பக்கத்திலேயே தீவுகளிருந்தன. அங்கிருந்த வயல்களுக்குத் தண்ணீர், கிழக்குப் பக்கத்திலிருந்து கால்வாய் வழியாக வந்து பாயும் வசதி இருந்ததால், குளிர் காலத்தில் நெற்பயிரும், பிறகாலங்களில் காய்கறிகளும நன்றாக விளைந்து வந்தன. இந்த வயல்களுக்கு மூன்று பக்கங்களிலும் இருந்த உயரமான சவுக்குத் தோப்புகள். . . தோப்புகளிலிருந்து வரும மெல்லிய இன்னிசைகள். . . அங்கே பக்கத்திலேயே மெல்லப் பாய்ந்து செல்லும் நதி. . . முந்திரித் தோட்டத்திலிருக்கும் பலவகையான பறவைகள், மற்றும் சவுக்குத் தோப்பிலிருக்கும் பச்சைச் கிளிகளின் சத்தங்கள். . . ஆலமரத்தின் மேல் பகலெல்லாம் தூங்கும் வெளவால்கள் -- ஒற்றை ஈச்ச மரத்தில் கூடுகளில் இருக்கும் தங்கக் குருவிகள் -- அடர்த்தியாக வானத்தைத் தொடும் புதர்கள், பனைமரத்தில் கீழ் ஆந்தையின் அலறல் -- சாய்ந்திரமானால் பொந்துகளிலிருந்து வெளியே வரும் நரிகள் -- அதோ தூரத்தில் கிழக்குத் தொடர்ச்சி மலைகள் எவ்வளவு வசதியாக இருக்கின்றன -- ஓவென்று இரையும் வங்காள விரிகுடாவின் சத்தம் -- இந்தப் பக்கம் வராமல் தடுக்கின்றன போலும்!

இந்த ஜோடி கூடிக் கலந்து இந்த வயல்களில் வேலை செய்துகொண்டு . . . கடனைக் கொஞ்சம் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று தவித்துக் கொண்டிருந்தது. சந்தையில் எல்லார்கரும் முன்னால் காய்கறிகளை விற்க வழி செய்ய வேண்டுமென்று, அப்போதெ வயல்களைச் செப்பனிட்டு, சிறுசிறு பாத்திகளைப் போட்டுக் கொண்டிருந்தனர்.

கோடைக்காலம் வந்தது. ஆற்றில் தண்ணீர் பாய்வதில்லை. அங்கங்கே சின்னச் சின்ன குட்டைகளிருந்தன. அவற்றில் மாடுகள், மனிதர்கள கூடக் குளிக்கலானார்கள். ஏரிகள் காய்ந்து வரண்டு போனதால் செம்படவர்கள் வேலையில்லாமல் வலைகளைப் பின்னுவதற்கு நூல் சரியாகக் கிடைக்கவில்லையென்று தங்களுக்குள் கிசுகிசுத்துக் கொண்டார்களே தவிர, இன்னும் வெளியே சொல்லிக் கொள்ளவில்லை. ஊரில் கைக்கோளன் துணிகளின் விலையை உயர்த்தியதுமே ஊரெல்லாம் அதிர்ச்சி அடைந்தது. நூல் கிடைக்காததால் . . . கை நூற்பு நூலின் விலை ஏறியதென்று இராட்டினம் வைத்திருந்த கிழவிகள் அடைந்த சந்தோஷம் கொஞ்ச காலம் கூட இருக்கவில்லை -- காரணம் நூலோடு கூடப் பஞ்சின் விலையும் ஏறிவிட்டாது.

நீலி இப்போது நிறை கர்ப்பிணியாயிருந்தும் ஒரு மூலையில் உட்காரவில்லை. ஒருவர் உதவியில்லாமல் வீட்டு வேலைகளெல்லாம் செய்துகொண்டாள். புல்லய்யா மகனுக்காகத் தினமும் கனவு கண்டு கொண்டிருந்தான் -- அவ்வப் போது பிதற்றிக் கொண்டிருந்தான். தூங்கிக்கொண்டிருக்கும் மனைவியை உற்றுப் பார்ப்பான். 'அசையறான் வயத்திலெ -- என் மகன்! இவன் பொறக்கற நாளு சலசலவென்று தூறல் விழாதா? இவன் பேசற அன்னைக்கி, பறவைங்க பதில் பேசாதா? இவனை என் நெஞ்சு மேலேயே போட்டு வளக்க மாட்டேனா? ஆமாம், என் மகன்!

மீசை முறுக்கற வஸ்தாதாயி ... ஊர்லயும் ... அக்கம் பக்கத்து ஊர்லயும் ... நீதி, நியாயம் சொல்ற பெரிய மனுஷனாவான் ... தானும் தங்கம் ... ஊரும் தங்கம் – மகனோ ...? சிந்தனையிலாழ்ந்தான்.

ஒருநாள் இப்படியே யோசித்து உணர்ச்சி வசப்பட்டு ஒரு குதி குதித்தான். நீலிக்கு விழிப்பு வந்தது, "இன்னும் தூங்கலியா?" என்று கேட்டாள்.

"ஏன் தூங்கணும்? பாரு என் மகன் 'அப்பா'ன்ன கூப்பிடுவான் ... 'அம்மா'ன்னு கூப்பிடமாட்டானோ!"

நீலி, சிரிக்காமல், "எனக்கொரு கனா வந்தது,"என்றாள்.

"என்க்குத்தெரியும். கனவுலே, யானெ தென்பட்ட தில்லியா! பிரமாதமான பையன் பொறப்பானாவட்டும்!"

"இல்லெ, பொண்ணுதான் பொறந்து, 'அம்மா, அம்மா'ன்னு கூப்பட்றா மாதிரி ..."

"நீலி அதற்கு மேல் பேசாமல் கண்ணை மூடிக்கொண்டாள. புல்லய்யா "பாக்கலாம்! எங்கப்பா மல்லு நாயுடு -- ரொம்ப தீராதி தீரன். சாவறப்பொ என்ன சொன்னாரு! ஆம்பளெயாப் பொறக்கலேன்னா ... கழுத்தெ அமுக்கிட மாட்டேனா ..?" என்று சொல்லிக்கொண்டே, மனைவியின பக்கம் இரண்டு கைகளையும் நீட்டிக்கொண்டு உட்கார்ந்தான்.

"யாரு கழுத்தெ அமுக்கப்போறே"? என்று கேட்டாள்.

"யாரு கழுத்தையா? என்று அதற்கு மேல் சொல்ல முடியாமல் நிறுத்திவிட்டு, மனைவியைப் பார்த்தான். நீலி கண்ணைத் திறந்தாள். அந்த இலேசான வெளிச்சத்தில், அந்தப் புன் சிரிப்பு பொலியும் முகம காட்சியளிக்கவே, புல்லய்யா அப்படியே பார்த்துக்கொண்டே பேசுவதை மறந்துவிட்டான். அவள் அவன் கைமேல் கை வைத்தாள். மெல்லத் தடவிக்கொண்டே, "சந்தோஷம் வந்தா நம்மாலே நிறுத்தமுடியாது! துக்கம் வந்தாத் தாங்க முடியாது!" என்றாள்.

"யாராலே?" என்று கேட்டாள் புல்லய்யா.

"உன்னாலென்னு சொல்லலே ஆவட்டும்! பாரு, இப்படி ஒரேடியாக் குதிக்கிறேல்லியா — நம்ம தலையெழுத்து சரியாயில்லாமெ பெண் குழந்தெ பொறந்துட்டா நீ வீட்டுக்கு வருவியா – குழந்தைன்னாலும் குட்டின்னாலும் விட்டுடுவோமா? குன்றுதான மலையாவுது -- மகன் பொறந்தாக்கா நாலு பட்டம் கிடைக்கப்போவுதா? அப்பொ நீ நாலு பட்டம் கட்டிக்கோ! குழந்தைங்க பொறந்துட்டாலே போதுமா பூ பூக்கணும்னா செடிக்கு நல்ல எரு போடணுங்கற விஷயத்தை மறந்துட்டா என்ன லாபம்?"

புல்லய்யா பேசவில்லை. இவ்வளவு நேரம் மனைவி பேசுவதாகவே நினைக்கவில்லை. வானத்திலிருந்து யாரோ சொல்வது போலிருந்தது. அவளது தலையை வருடிக்கொண்டிருந்தான். நீலி தூங்கிவிட்டாள்.

அதற்கடுத்த நாள், இரவு, பெரிய தெருவில் குடுகுடுப்பைக்காரன் பாட்டைக் கேட்க, நிறை மாதக் கர்ப்பிணியான நீலி கூடப் போனாள். பனி மேலே விழாதபடி அருகிலிருந்த ஒரு வீடுத்திண்ணை மேல் உட்கார்ந்தாள்

குடுகுடுப்பை பத்மநாபம் பெண்வேஷம் போட்டிருந்தான். மலை குரங்கு

போன்ற முகம், மீசை முளைத்த பெண் - சிவப்பு நார்ப்புடவை கட்டியிருந்தான். அழுக்குப் படிந்த ஜாக்கெட்!

"ஒரு பக்கம் போர்வை, ஒரு சரம் பூவு, ஒரு பெரிய தலைவர், ஒரு பககம் இனிமை!" 'குடுகுடு' என்று சத்தம் கேட்டது! நடுத்தெருவில் நட்ட கழிக்கு இரணடு பக்கமும் மண்ணெண்ணெயப் புட்டிகள் -- மத்தியில் எண்ணெய் ஊற்றும் பொனல். பின்பாட்டுக்காரர் இருவர். எண்ணெய ஊற்றுபவன் ஒருவன் -- இந்த குழு தெருநடுவில் வந்து சேர்வதற்குள், ஊரிலுள்ள குழந்தை குட்டி சின்னவர்கள் பெரியவர்கள அத்தனை பேரும் அந்த இடத்தில் நிறைந்திருந்தார்கள்!

நார்ப்புடவை கட்டிய, மீசை முளைதத பெண்மணி துதிப் பாடலைத் தொடங்கினாள். பின்பாட்டுக்காரர்கள் இவளது பாடல அடியைப் பின்பற்றி அடிஎடுத்து வைத்து அபிநயம் பிடித்தாரகள். இனிய குரலில் ஆலாபனையோடு "எங்களெப் பெத்த தாயே, ஓ மஞ்சு வாணீ!" என்று தொடங்கினாள். குடுகுடுப்பைச் சத்தம் பலமாகக கேட்டது. தனக்குக் கைவந்த கலையைப் பகிரங்கப்படுத்தலானாள் அவள்.

"இந்த சபையில் கூடியிருக்கிற கனவான்களே ராஜாக்களே, வணிகப் பெருமக்களே நீங்கள் அனுமதி கொடுத்தால், முழுவதும் பாடுவேன." பெரிய விவசாயி, " எனக்கு என்னடா கதெ தெரியும்?"

"காக்கா கதை, சஸிரெகா பரிணயம், பாணாசுரன் யுத்தம் . . . இன்னும் . . ."

ஜனங்களிடையே இருநது,'சஸிரேகா பரிணயம் !" என்ற கூச்சல் வந்தது. கதையைத் தொடங்கினாள், கதையைத் தொடங்கி கொஞ்ச தூரம் வந்தாள்.

பெணகளானந்தம் பொங்கும் காப்பாற்றில் விழுந்தேன்,
நடை மெலிய தொப்புள் தெரிய
நகை பாரமாக அதிகமாக
முலைக்காம்பு கறுப்படைய மேனியோ வெளுப்படைய
நேரம் நாழிகையில்லாமல் மண்ணு தின்னும் ஆசை பெருக
பெண்மணி எனக்கு ஒன்பது மாதங்கள நிறைந்த . . .
சுபநாளில் . . .'

நளளிரவு கடந்துவிட்டது. நீலி கேட்டுககொண்டிருந்துவிட்டு, கதை முடிவதற்கு முன்பே வீட்டிற்குப் போய்விட்டாள். புல்லய்யாவும் கூடவே போனான்!

இந்தப்பக்கம் தெருவில் சசிரேகாவன் விரக வேதனை 'என்னை விட்டுப் போனியா என் மாமா . . . என் மாமோ! . . .' அந்தப் பக்கம் நீலிக்குப் பிரசவ வேதனை, அறையில் ஆதெம்மாக்கா மற்றும் அக்கம் பக்கத்துப் பெண்களும் நுழைந்தார்கள்.

எல்லாரும் அவரவர் வீட்டுப் பிரசவம் போலவே கவனித்தனர். புல்லய்யா, நீலம்மா பிறந்தபோது எந்த மருத்துவச்சி வநதாளோ, இப்போதும் அவளேதான்! பெரிய கூடை போன்ற நரைத்த முடியோடு வந்து அங்கிருந்தவர்கள் எல்லாரையும் ஒரு பக்கம் தள்ளினாள். அவளுக்கு இது

எத்தனை ஆயிரம் பிரசவமோ!

புல்லய்யா, வெளியே இப்படியும் அப்படியும் உலவிக் கொண்டிருந்தான். அவ்வப்போது சிறிய முனகல் சத்தம் கேட்டது. புல்லய்யா ஒரே கவலை மயமானான். கிழக்கு வெளுத்தது 'குவா' என்று அழுகைச் சத்தம் புல்லய்யாவுக்குத் திக்கென்றது -- அதே நேரததில்ஒரு துளளு துள்ளினான். யோசிக்காமலே, 'மல்லூ!' என்று வாயிலிருந்து வந்ததோடு, ஒரு பல்டி அடித்தான்.

உள்ளேயிருந்தே ஊர் மருத்துவச்சி "மல்லமமா!" என்றாள். "அப்படியானா ஒலகம் தலைகீழாயிடும்!"

உள்ளேயிருந்து கதவைத் திறக்காமலே, பெண்களெல்லாம் கொல்லென்றுச் சிரித்தார்கள். "நாலு பட்டங்க வாங்கிவிட்டான் புல்லய்யா"

இந்த வார்த்தைகள் அடுத்து, உடனே சில வினாடிகளில அழுகைச் சத்தத்தில் வீட்டுக் கூரையே பறக்கலாயிற்று. கொஞ்ச நேரமான பிறகு, ஆதெம்மக்கா வெளியில் வந்து சிரித்துக்கொண்டே, "அழறாளே தவிர ... மக எவ்வளவு அழகா இருக்கறா தெரியுமா ..! எப்படியிருக்கறான்னா — தண்டுக்கீரை மாதிரி தலைமயிரு .... !"

புல்லய்யாவுக்கு ஏதோ ஒரு பலமான ஆசை, நம்பிக்கை "எழுந்திருங்க -- பாக்கறேன் ... மல்லு நாயுடு ... எங்கப்பா ... சொர்க்கத்துக்குப் போயி மோசம் பண்ணுவாரா? மகன் தான் -- நான் நம்பமாட்டேன் ... எழுந்திருங்க!"

தள்ளிக்கொண்டு உள்ளுக்குள் வலுக்கட்டாயமாகப் போகும் போது, ஆதெம்மக்கா, கையைப்பிடித்துக்கொண்டு, "நல்லது கெட்டது பாத்துக்கிட்டுப் போப்பா ... !"

"கெட்டது ஒண்ணுமில்லே ... " என்று சொல்லிக் கொண்டே உள்ளே போய்விட்டான்... பெண்கள் ஒரு பக்கமாக ஒதுங்கிக் கொண்டார்கள். பாட்டி ஒரு மாதிரியாகச் சிரித்துக் கொண்டிருந்தாள். இன்னும் சிம்னி விளக்கு எரிந்து கொண்டுதானிருந்தது... அந்த வெளிச்சத்தில் மரக்கட்டிலில் நீலி -- அந்த முகம் -- புயல் நடுவில் கரையோரம் வந்து சேர்ந்த பெண்ணைப் போல -- பக்கத்திலேயே ... உண்மையில் தங்க வீக்கிரகம் போனற பையன் தான் ! புல்லய்யா தோள்களைத் தட்டிச் சிரித்துக்கொண்டு ... ஒரு முறை மீசையை முறுக்கினான் ...

மகன் இப்போது இப்படி இருக்கறானல்லவா ... தன்னை விட வஸ்தாது ...கெட்டிக்காரன் ஆக மாட்டானா? அந்தப் பார்வை மெள்ள மெள்ள நீலியின் அப்பாவிப் பார்வையில கலந்தது -- கண்கள் பேசிக்கொண்டன! பெண்ணுக்கு இன்னும் என்ன வேண்டும்? இதுவரையில் பருவக் கொழிப்பில் கணவனை ஆராதித்தாள். இப்போது தங்க விக்கிரகம் போன்ற குழந்தை! அவளுடைய பார்வையில் ஓரிழை கர்வம் கலக்க வேண்டும் -- உண்மையில் கலந்தது!

# 12

இரவு பாட்டெல்லாம் முடிந்தபிறகு சபையினரைப் பார்த்து, "தயவு காட்டணும்!" என்று சொன்னான் குடுகுடுப்பைப் பாட்டுக்கார பத்மநாபம். சொன்ன உடனே எழுந்தவர்கள போயேவிட்டார்கள். மிஞ்சியிருந்தவர்கள் கொடுத்ததெல்லாம் கூடடிப் பார்த்தால் நாலணா தேறவில்லை. மண்ணெண்ணெய்க்கே ஆறணா ஆய்விட்டது காலையில் ஊரில வீடுவீடாகச் சென்று வசூல் செய்துகொணடு, புலலய்யாவின் வாயிற்படியில் கால் வைத்தான்.

"பாரதம் முழுக்க வடிகட்டிப் பாத்தக்கா மிஞ்சியது, ஒரு கிழவனும் ஒரு பையனும்தான். பையன் பாட்டைக கேட்டான். சிலலுன்னு காலையில வந்து பொறந்தான்! அந்த மாதிரி பேரு சம்பாதிககமாட்டானா !" என்று சொன்னான் புல்லய்யா.

புல்லய்யா பத்மநாபத்துக்குச் சன்மானம் கொடுத்தான். அவன் சூட்டிய புகழ்மாலைக்கு மீசையை முறுக்கினான். "டேய் பத்மநாபம்! தூறல் விழுந்ததுடா . . ?"

"நல்ல சகுனம், நல்ல சகுனம்!" குடுகுடுப்பையை அடித்துக்கொண்டே அடுத்த வீட்டை நோக்கி நடந்தான்.

நீலி ஐந்தாவது நாளே சமையலறைக்குப் போகத் தொடங்கும் போது, பாட்டி வேணடாமென்று சொல்லவில்லை. பதினொன்றாவது நாள் வீட்டுக்கு வேலையெல்லாம் செய்யத்தொடங்கினாள். இருபததி ஒராவது நாளும் வந்தது. நீலியைச் சிலர் சடங்குகளுக்காக, மஞ்சள குங்குமத்தோடு ஆற்றங்கரைக்கு அழைத்துச்சென்றார்கள். மணலை மூன்று குவியலகளாகக் குவத்துப பூஜை செய்ய வைத்தார்கள. "எங்க மகனைக் காப்பாத்து!" என்று வேண்டிக் கொண்டார்கள். இதைத் 'தவளை வேண்டல்' என்பார்கள். பிறகு நீலி பானையில் தண்ணீர் கொண்டுவந்தாள. அன்றிலிருநது வயல் வேலைகளைக் கூடச் செய்யலானாள். அரசாங்கச சவுக்குத் தோப்பிற்குச் சென்று குச்சிகள பொறுக்கி வருவது, சமையல் செய்வது, மகனைப் பார்த்துக்கொள்வது எல்லாம் வழக்கமான வேலையாகிவிட்டது. வெளியே போகும் போது, பாட்டி பேரனைப் பார்த்துக்கொள்வாள்.

குழந்தைக்கு ஒரு நாள் விட்டு ஒரு நாள் உடம்புககு ஊற்றினார்கள். தலைமுடி தண்டுக்கீரை போல வளர்வதைப் பார்த்து பல தாய்மார்களும் முத்தமழை பொழிந்தார்கள். "பொண் குழந்தைதானா" என்று சொன்னார்கள். அந்த வார்த்தையைச் சொன்னால் எரிச்சல் புல்லய்யாவுக்கு. தந்தை குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டால் குழந்தை மெலிந்து போகும் என்று பாடடி தடுத்தாள். பூசணிப் பழம் போல இருக்கிறான் என்றும், அப்பாவைவிட ஆறு மடங்கு அதிகமாக வளருவான் என்றும் ஊர்க்காரர் ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகச் சொலல, பாட்டி திருஷ்டி கழிப்பதற்கு எங்கில்லாத கரி, விளக்குமாற்றுக் குச்சிகள், மிளகாய்பழங்களைத் தீர்த்துவிட்டு, இன்னும் இல்லையே எனறு வருந்துவாள். குழந்தைக்குத்

பேரு ஆசிர்வாதிக்கணும்' வந்தவர்கள் ஒரே குரலில் ஆசிர்வதித்தார்கள். குழந்தையின் முகத்தைப் பார்த்ததுமே ஆசிர்வதிக்கத் தோன்றும். ஒரு மாதம் முடிவதற்குள் நாலு மாதத்துக் குழந்தைபோல் இருந்தான்.

ஆகஸ்டு மாதக் கடைசி நாட்களில் வெயில் குறைந்து பூமி குளிர்ச்சியடைந்தது. வயல்களில் நட்ட நெற்பயிர் பூமியிலிருந்து சத்தை ஈர்த்துக்கொண்டு, மேல் நோக்கி வளர்ந்தபடி, காற்றில் ஆடிக்கொண்டிருந்தது. விவசாய ஜனங்களுக்கு வேண்டிய அளவு ஓய்வு. ஆதெம்மாக்காவினுடையதுதான் இந்தப்பண்டிகை மேற்பார்வையெல்லாம். மறுபடியும் கல்யாண நாளைப் போல் முந்தானையைச் செருகிக்கொண்டு வேலையில் இறங்கினாள். இந்தச் சில நாட்களிலேயே வீட்டில் அந்தம்மாவின் அதிகாரம் குறைந்து மருமகனுடையது அதிகமாயிற்று. நெல் விலையோடு கூடவே, பிற விளைபொருள்களின் விலையும் உயர்ந்து போகவே, தானதர்மங்களைக் குறைக்க வேண்டி வந்தது. இந்தச் சூழ்நிலையில ஆதெம்மாக்கா தடுமாறிப் போனதால் அதிகாரத்தை மருமகன் வாங்கிக்கொண்டான். பொருளாதாரத்துறையில் கைகள் கட்டப்பட்டாலும், நல்ல வார்த்தைகளைப் பேசிக்கொண்டு நாலு பேருக்கு உதவி வந்தாள். 'நான் எதுக்கும் உபயோகமில்லாமெ போயிட்டேன்'பா! என கையிலெ என்ன இருக்குது? பேரனுக்கு வெள்ளி அண்ணாக்கயிறு கூடப் பண்ணிப் போடமுடியாம போயிட்டுது!" என்று சொன்னாள்.

அதற்கு நீலி "குடுக்கறதுக்கு மேலெ சொல்லிட்டேக்கா! இன்னும் போகப் போக அக்காவெ ஆட்டி வெக்க மாட்டானா இவன் ?" என்றாள்.

உலகத்துக்கு அக்கா, ஆதெம்மாக்கா சிரித்துக்கொண்டே, "யாரு பெறந்து வந்திருக்கது! வீட்டுக்கு மட்டுமில்லே ஊருக்கெ பெருமெ தேடித்தந்தாரு செத்து சொர்க்கத்துலெ இருக்கறாரு. ஆனாலும் . . . !" என்றாள்.

புல்லய்யாவுக்குத் தன் அப்பாவின் பேரை எடுத்ததும் உடம்பு பூரித்தது. அப்போது மகன் துள்ளி விளையாடுவதாகத் தோன்றியது ஒரு துள்ளு துள்ளி, "அக்கா! அக்கா! அதோ பாரு துள்ளி விளையாட்றான் — மல்லு நாயுடு பேரன் . . . மல்லு! " – உற்சாகம் கரைகடந்து போகவே மகனை எடுத்துக்கொண்டான். அதுவே பெயர் சூட்டினாற் போலாகிவிட்டது.

அந்த வினாடியிலிருந்து 'மல்லு' என்றால் உயிர். தாய்ப்பாலோடு குழந்தை நாளுக்கு நாள் நன்றாக வளர்ந்து வந்தான். மனைவி முன்பு போல, தன்னை நோக்கி இனிமையிலும இனிய பார்வைகளை வீசவில்லையென்றாலும், அந்த அமுதம் போன்ற மென்மையான ஸ்பரிசம் இல்லாமற் போனாலும் — வளர்ந்து வரும் மகனைப் பார்க்கும்போது அன்பு, பாசம் முதலான எல்லா உணர்ச்சிகளையும் அனுபவித்து வந்தான் புல்லய்யா.

குருட்டு வெங்கன்னா பேரனுக்கு ஒன்றும் கொடுக்கமுடியவில்லையே என்று துடிதுடித்துப் போனான். கென்னம்மா பழைய நாட்களை நினைத்துக்கொண்டு அழுதாள். மகனைத் தொட்டிலில் போட்ட நாள் நீலி அவர்களுக்கு வயிறு நிறையக் கொடுத்தாள். அவர்களுடைய மனக் கஷ்டத்தைப் புரிந்து கொண்ட நீலி, "அய்யா! கடவுள் கிட்டே காய், பழம்

இதெல்லாம் எடுத்துக்கிட்டுப் போய்த்தான் ஆகணுமா? பூவைப் போட்டுக் கும்பிட்டவங்களுக்கு மோட்சம் கிடைக்காதா? இவ்வளவு நல்ல மனுஷங்க நீங்க, என் மகனை ஆசிர்வாதம் பண்ணுங்க, போதும்!" என்று மகனை அவர்கள் அருகில் கொண்டு போனாள்.

வெங்கன்னா குழந்தையைத் தடவிப் பார்க்கும் போது, மனதில் ஏதோ ஓர் ஆசை முளைத்தது. கொஞ்சிக் கொண்டே சொன்னான் "நான் பாவி தாயே! கண்ணு மட்டும் இருந்ததுன்னா . . .!"

கென்னம்மா குழந்தையை வர்ணிக்கத்தொடங்கினாள். வெங்கன்னா கேட்டுக்கொண்டே, "தாயே! நீ பண்ண தர்மமெல்லாம் சும்மாப் போவுமா? உன மகன எந்த மாதிரி வம்சத்தில் பொறந்தான்! நான் ஏன் சொல்லணும்? நாலு பேரும் 'சபாஷ்' னு சொல்லமாட்டாங்களா!" இப்படிச் சொல்லிக் கொண்டே, தரையில் வலது கையால் இப்படியும் அப்படியும் தடவினான். கைக்கு ஒரு மண் உருண்டை கிடைத்தது. அதோடு மனதில் ஏதோ ஆனந்தம் பொங்கி, புன்சிரிப்போடு, குழந்தையின் கையைத தடவிப் பிடித்தான். குழந்தையின் உள்ளங்கையில் அந்த உருண்டையை வைத்து, "பேரா! மனுஷன் பூமியிலெ விழுந்த நாளெ இருந்து இத்தோடதான் வேலெ'ப்பா!" என்று சொன்னான.

கென்னம்மா, "பொன்னு கின்னு குடக்க முடியாம போனா சும்மாக் கெடக்கணும் . . ." என்று அதட்டினாள.

ஆனந்தத்தில குருட்டு வெங்கன்னாவின் கணகள் குளமாயின. இந்தப் பரம ஏழையின் கருணையுணர்ச்சியை நனகு புரிந்து கொண்ட நீலி, பெருஞ்செல்வம் கிடைத்தது போலாகி, மகனைக் கையில் மண் உருணடையோடு, வீட்டிற்குள் எடுததுச் சென்றாள. அந்த உருண்டையை மகனின் தலைமாட்டில் பத்திரமாக வைத்தாள்.

நாட்கள் கடந்து கொண்டிருந்தன. அதற்கிடையில புல்லய்யா மனைவியிடம் ஒரு சம்பந்தமும் இல்லாதது போலவும எலலாம் அந்த மகனோடவே இருப்பது போலவும் நடந்து கொண்டிருநதான் ஒரு நாள் வயலுக்குப போய்விட்டு, வேகமாகத் திரும்பி வந்த புலலய்யாவை நீலி பார்த்தாள. ஓரக் கண்ணால் பார்த்துச் சிரித்தாள. புல்லயயா பார்க்கவில்லை. தொட்டிலில இருந்த குழந்தையை ஆட்டிக்கொண்டே தாலாட்டுப் பாடினான் . .

'முறக்காதுன்னு யானையை வேணாம்னு சொன்னேன -
குளம்புக்காலுன்னு குதிரையை வேணாம்னு சொன்னேன் -
படம் வெச்ச தலைன்னு பாம்பை வேணாம்னு சொன்னேன் -
குரங்கைக் கல்யாணம் பண்ணி மகனைப் பெத்தேன் . . .
ஆராரோ . . . ஆராரோ -'

புல்லயயா மனைவியை நிதானமாக உறறுப் பார்த்து — குரங்கு மாதிரி முகத்தைச் சுளித்தான. மறுபடியும் சரசங்கள், சல்லாபங்கள், தளுக்குக் குலுக்குகள இருவரிடையே பரிணமிக்கலாயின.

# 13

குளிர்காலம் ஒரு நாள் மாலைப் பொழுது போன பிறகு, நீலியும் புல்லய்யாவும் வயலிலிருந்து வரும் பொழுது, நீலம்மாவின் கோவிலில் தாசன் சாமி வந்து ஆவேசமாகப் பேசிக் கொண்டிருந்தான். இரண்டு பேரும வெளியே நின்றபடியே அம்மனைக் கும்பிட்டார்கள். இந்த வருஷம் விளைச்சல் அவ்வளவு சந்தோஷப் படும்படியாக இல்லை. கதிர்வரும் நேரத்தில் நோய் வந்து தொற்றிக் கொண்டது. வயலில் பயிர் நன்றாக வளர்ந்து கண்ணிறைந்து இருந்தது, ஆனால் பாதிக்குப் பாதி பதர்தான். நிலத்தின் சொந்தக்காரன் மிகவும் கராரான பேர்வழி. அதுவும் விலைவாசி பெருகிக் கொண்டே இருக்கும் இந்த நாட்களில் ஒரு தானியம் குறைவாகக் கொடுத்தாலும் வாங்கமாட்டான். இரண்டு பேரும் இந்த விஷயமாகப் பேசிக் கொண்டே வயலிலிருந்து வந்தார்கள்.

கோவிலை, கோவிலிலிருக்கும் விக்ரகங்களை, பூஜை செய்யும் தாசனைப் பார்க்கும்போது, இந்த ஜனங்களிடையே ஏதோ மாற்றம் வந்தது தெளிவாயிற்று. இரண்டு வருஷத்திற்கு முன்பும் இப்போதும் எவ்வளவோ மாறுதலிருந்தது. தாசனின் ஆவேசப் பேச்சுக்குப் பயப்படுபவர்கள் இல்லையென்றில்லை. அப்படி பயப்படுவோர் கையில் எந்த அதிகாரமும் இல்லை. நாயுடுவும் பெரிய விவசாயியும் அந்த பிரிவைச் சேர்ந்தவர்கள். யாரும் ஆவேசப் பேச்சுத் தொடங்கினால் காதில் போட்டுக்கொள்வதில்லை. இப்போது அதைக் கேட்பதற்கு அவர்களுக்கு நேரமில்லை. தாசனுடன் விக்ரகங்களும் விக்ரகங்களுடன் கோவிலும் இந்தப் புதிய சமூகத்தில் முக்கியத்துவம் இழந்துவிட்டன. உற்சவங்கள் நடத்த வேண்டுமென்று சொல்லும் தாசனின் கத்தல காற்றில் கரைந்து விடுகிறது -- அவ்வளவுதான்.

உடலில் போர்த்தி கொள்வதற்குத் துணியில்லாத தாசன் ஆவேசப் பேச்சு பேசுகிறான். சுற்றிலும் இருட்டு. கோவிலில் சிறிய விளக்கு. அது அணைவதற்குத் தயாராக இருந்தது.

நகர்வதற்குத் தயாராக இருந்த இந்தத் தம்பதிகளைப் பார்த்துத் தாசன் கையினால் சைகை செய்தான். நின்றவர்கள் அருகில் வந்தார்கள். "கேட்டீங்களா அந்தம்மா என்ன சொன்னாங்கன்னு. போய் அந்த நாயுடுகிட்டெயும் அந்தப் பெரிய விவசாயிகிட்டெயும் சொல்லுங்க. நான் சொன்னா எனக்குப் புத்தி கலங்கிடுச்சின்னு சொல்றாங்க."

'சரி' என்று சொல்வது போல் தலையாட்டினார்கள். தாசன் கோவில் கதவுகளை மூடிவிட்டு அவர்கள் பின்னால் வந்தான். கிழத்தனம் வந்ததுபோல் உடம்பு நடுங்கியது. சொல்லிக் கொள்வதற்கு அவனுக்கு எத்தனையோ கஷ்டங்கள் இருந்தன. அவன் எந்த மகன் மீது ஆசை வைத்திருந்தானோ அவனே தனக்குச் சரியாகக் கஞ்சி ஊற்றுவதில்லை. பக்கத்துத் தெருவில் சீட்டாடுகிறான். அவன் தோற்கும் நாளில் எல்லார் மேலும் எரிந்து விழுவான். ஜெயிக்கும் நாளில் கள்ளச் சாராயக்கடையில்

போய் உட்கார்ந்து விடுவான். குடித்துவிட்டு வந்து அப்பாவைச் சண்டைக்கு இழுப்பான். தாசன் யாரோ தன்னை ஏமாற்றி விட்டது போல் நொநது போய்விட்டான். யோசித்தபடியே மெதுவாக நடந்து கொண்டே, "அம்மா, நீலம்மா பாரு. இந்தப் புல்லு மேலெ நடந்து கொண்டிருக்கிறோம். புல்லு தின்னும் கழுதெ சாகுமே தவிர, புல்லு என்னிக்கும் சாகாது. நானு செத்துப் போறேன். என்னெ மாதிரியே என் மகனும் செத்துப்போவான். நானு சட்டை எப்பவும் போட்டதிலலே. என் மகன போடறான். அவன் மகன் பட்டணத்துத் துரெ மாதிரி கோட்டுப் போட்டாலும் போடுவான். 'முகம் லட்சணம் இடுப்பிலே சிரங்கு' -- இப்படி இருந்தா என்ன பிரயோஜனம். இபபடித்தான் ஊரு மாறிவருது.

லட்சுமி லடசணங்களைக் கொண்டுவரும்னு சொல்றாங்க. பணம் இதயத்தை மறைச்சிடுது. அமமா! உயிரோடிக்கறப்பவும் ரெண்டு, செத்தப்புறமும் ரெண்டு இருக்குதே!"

அவர்கள் வீடு வந்தது. தாசனை நீலி உள்ளே அழைததாள். சிறிய புட்டி விளக்கு, கட்டில் அருகில் தலைப் பக்கம் எரிந்து கொண்டிருந்தது. கால பககம பாட்டி உட்கார்ந்துகொண்டு, பேரனைப் பார்த்து புன் சிரிப்புச் சிரித்துக்கொண்டிருந்தாள். மூன்று மாதம் கடந்த குழந்தை விளக்கைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தது.

" டேய், தாத்தா" எனறான் தாசன். மலலு கை கால்களை ஆட்டிக்கொண்டு சிரிக்கலானான். புல்லய்யாவும் நீலியும் ஆளுக்கொரு பக்கம் நின்றிருந்தார்கள். தாசன் கடடிலில் உட்கார்ந்து குழந்தையின் முகத்தில் முகம வைத்துச் சிரித்தான, கொஞ்சி விளையாடினான். பயமில்லாமல் விளையாடிக் கொண்டிருநத குழந்தையைத் தொட்டபடி, "அதுக்குள்ளேயே 'அம்மா'ன்னு சொல்றான்," என்றான். புலலய்யா உடனே குறுக்கிடடு, "அம்மா' இல்லே 'அப்பானனு சொல்றான்," என்றான்.

தாசன் சிரித்துக்கொண்டு, "பன்னி பத்துக்குட்டி போடுது. யானை ஒரு குட்டியைப போட்டா என்ன? போவப் போவ பஞ்ச காலம் வரப்போவுதுப்பா. சோத்துப் பருக்கையெ மூணு பாகமாச் செய்து குடுத்து வளத்தா, உன் மகனாவது பெருகிகிட்டிருக்கற அநியாயங்களெ ஒழிச்சிடுவான்"

தம்பதிகளின முகங்கள் இந்த ஆசிர்வாதத்தால் பிரகாசமடைந்தது. தாசன் புறப்பட்டுக்கொண்டே, "பாட்டி பேரன் கல்யாணத்தைப் பாக்க மாடடியா?" என்று கேடடான். பாடடி, "டேய் ராமா! என் தலெமேலெ கொடே என்னெககிப் போச்சோ அன்னெக்கே கெத்துப் போயிட்டேண்டா," என்றாள்.

பாட்டியின் புருஷன் எவ்வளவு மூர்க்கனென்பது தெரிந்திருந்த ராமன் 'பக்' கென்று சிரித்தான். அந்தச்சிரிப்பைப் புரிந்துகொண்டு, "எவ்வளவு கெட்டவனுன்னு உலகம் சொன்னாலும் நம்பினவளுக்கு அவன் நல்லவன் தான். உலகத்துலெ யாராவது ஒர்ததரெ நம்பணும். அவன் எப்படிப்பட்டவனா இருந்தாலும் அந்த நம்பிக்கையோடவே சாகணும்."

தாசன் பாட்டிக்கு வணக்கம் சொல்லிப் புறப்படும்போது, "தம்பி நாலு பேரு நல்லாயிருக்கணும்னா ஒர்த்தர்கிட்டெயாவது கஷ்டப்படணும். இந்த

கள கோப்பாரேடிவ் போர்ட் ஏற்பாடு செஞ்சான் அந்த நாயுடு. பெரிய விவசாயி, கணக்குப்பிள்ளை, மீசை முறுக்கினவங்கெல்லாம் சேர்ந்தாங்க -- நியாயம்காட்டுக்குள்ளே ஓடி ஒளியுது. கவர்னமெண்ட்காரன் நல்ல சாராயம் குடுத்தான். இந்தத் திருட்டுச் சாராயத்தெக் காய்ச்சி பெரியவங் பொழச்சிக்கிடுவாங்க. என் வயிறு எரியுது தம்பி. அந்த அம்மாவோட காலெப் பிடிச்சிகிட்டு புலம்பறேன்," என்றாள் பாட்டி.

புல்லய்யா, "செத்துத் தொலஞ்சா தொலையட்டும்" எனறான். "வேணாம்பா, அவங்க நூறு வருஷம் உயிரோட இருக்கட்டும். அவங்க செத்தா நமக்கு என்ன வரப் போவுது - அவங்களெ நல்ல மனுஷங்களா ஆக்கம்மா. பணத்தோட சந்தோஷமா இருக்கட்டும், யாரு வேணாம்னாங்க. எதிர்லே இருக்கறவங்களையும் பாத்துக்கணும். எப்போதும் போல அம்மனுக்கு உற்சவம் ஊர்வலம் எல்லாம் நடந்தா பயிரு நல்லா விளையும், ஜனங்க சுகப் படுவாங்க."

தாசனை வழியனுப்பிவிட்டுத் திரும்பி வந்தான் புல்லய்யா. நீலி மல்லுவுக்குப் பால் கொடுத்துக்கொண்டிருந்தாள். பாட்டி ஒரு மூலையில் கட்டையைச் சாய்ந்தாள். கட்டில் மீது உட்கார்ந்தபடி," இங்கெ நடக்கற விஷயம் ஒண்ணும் சரியில்லே," என்றான்.

"என்ன விஷயம்?" என்று கேட்டாள் நீலி.

"இந்த ரேஷனுன்னு பேரு வெச்சி, நம்ம பேர்லெ கார்டு, நமக்குக் கூழு, நாயுடு வீட்லெ அரிசிக் குதிர். இந்தத் தடவெ கார்டு கொடுப்பேனா? பட்டணத்துக்காரன் வந்து இவங்களெப் பக்கத்துலெ வெச்சிகிட்டு, ரெட்டை விலைக்கு விக்கறான். திருட்டுப் பசங்க, மாடியும் பங்களாவும் கட்றாங்க."

நீலி பேசவில்லை. குழந்தையைக் கட்டில் மீது போட்டாள் அதற்குள்ளாகவே பொம்மைகளைப் பிடிப்பதற்கு முயற்சி செய்யத் தொடங்கிவிட்டான். சாப்பாடு முடிந்தபிறகு புல்லய்யா திண்ணை மேல் உட்கார்ந்தான். நீலி சமையலறை வேலைகளை முடித்துக்கொண்டு மகன் பக்கத்தில் உட்கார்ந்தாள். குழந்தை விளையாடிக்கொண்டிருந்தான். இதற்கிடையில் சஞ்சீவி அங்கு வந்து,"புல்லய்யா" என்று குரல் கொடுத்தான். "என்னடா -" என்று கேட்டதும் வந்து பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். சஞ்சீவி அந்த ஊருக்குக் குள்ள மனிதன். சிலம்பாட்டத்தில் தேர்ச்சி பெற்றவன். முருங்கைக்காய் போன்ற உடம்பு. கிருதா, கிராப், முகம் நிறைந்த மீசை. கையில் மூங்கில் கழி எப்போதும் இருக்கும். வயது புல்லய்யாவைவிடப் பத்து அதிகம். குள்ளனுக்கு அறிவு அதிகமென்று எல்லாரும் சொல்வார்கள். அண்மையில், சர்க்காரையே எதிர்த்து, அக்கம் பக்கத்தில் பெயர் சம்பாதித்தான். அந்தக் காலத்தில் சாராயம் காய்ச்சி அதிகாரிகளுக்கு நிறைய வேலை வைத்தான். சிலபேர் இவன் முதுகை நன்றாகக் கவனித்தார்கள். இவன் சிலம்பாட்டத்துக்குத் தாக்குப் பிடிக்க முடியாமல் நடுங்கினவர்களும் உண்டு. சஞ்சீவியைப் பிடித்துக்கொடுப்பவனுக்கு ரூ.500/- இனாம் கொடுப்பதாக அறிவித்தார்கள். ஒரு வருஷம் வரை அகப்படவில்லை. ஒரு இன்ஸ்பெக்டர் ஊரில் நான்கு

நாட்கள் பேரா போட்டு, சஞ்சீவி விஷயம் துப்புத்துலக்க முயற்சித்தும் வெற்றி பெற முடியவில்லை. ஒரு கிராமநாயுடுவுடன் சேர்ந்து, அந்தச் சுற்றுப் பக்கத்தில் பத்துக் கிராமங்களில் தண்டோரா போடச செய்தான் 'வடக்கே இருந்து ஒரு பயில்வான் வந்திருப்பதாகவும், அவனைத் தோற்கடிக்கிற மீசையுள்ள ஆம்பிள்ளை யாராவது இருந்தா குறிப்பிட்ட கிராமத்தருகே குறிப்பிட்ட நாளவந்து சேரும்படியாக.' உண்மையில் அந்தப்பயில்வானைப் பார்த்தே பலபேர் பயந்து போனார்கள். நாலுபேர் நாலு விதமாகத் தன்னைக்குறித்து நினைப்பது சஞ்சீவிக்குப் பிடிக்கவில்லை. ஊர்ப்பெயரைக் காப்பாற்ற வேண்டுமென்று கோதாவில் குதித்தான். நாலு பேர் 'சபாஷ்' என்றார்கள். இன்ஸ்பெக்டர் நினைத்தபடி அந்தப் பயில்வான் படுதோல்வி அடைந்தான். ஆனால் சஞ்சீவி போலீஸில் அகப்பட்டுக்கொண்டான். ஊரெல்லாம் திரண்டெழுந்தது. போலீஸ்காரர்கள் துப்பாக்கியைக் காட்டினார்கள். மூன்று வருஷம் சிறைததண்டனை அனுபவித்துவிட்டு வந்தான். நாலுபேர் முன்னால் நின்று பேசுவதற்கு வெட்கமாக இருந்தது. இவ்வளவுக்கு மேல் அவ்வளவு கவலையோடு ஒடுங்கிப் போகுமளவிற்கு வேதனையை அவனுடைய வைப்பாட்டி கொடுத்துவிட்டாள். இன்னொருவனைப் பார்த்துக்கொண்டதால் அவளைக் கொல்லவேண்டுமென்று நினைத்தான். ஆனால் அவள் பரிகாசமாகச் சொன்னாள் "சாகடிக்கறதுக்கு வந்தியா. நான் என்னத்தெ சாப்ட்டு உசிரோடிருக்கிறதுன்னு நீ ஜெயிலுக்குப் போனே. ஆத்திரத்துக்கு மட்டும் குறைச்சலிலலே. ரூபா ஆகாசத்துலேருந்து வந்து கொட்டுமா? அந்தப் பொண்டாட்டி அழுகையே உன்னெ இந்தக்கதிகக்குக் கொண்டுவந்தது, அவள சரியா வச்சிக்கோடா," உண்மையில் அந்த அறிவுரை நல்லதாகவே இருந்தது. சஞ்சீவியைவிட அவள் கொஞ்சம் வயதில் பெரியவள் தான். அவளைக் கொல்ல முடியாதென்பது தெரியும். கொல்ல முடியுமென்றாலும் கொல்வதாக இல்லை. அந்தக்கத்தியை நட்டாற்றில் எறிந்தான். அந்த ராத்தியே குளிரிலேயே தலை முழுகிவிட்டான். வீட்டுக்கு ஈரத்துணியோடு வந்து கதவைத் தட்டினான். மனைவி திறந்தாள். அவளை ஆரத்தழுவி அழுதுவிட்டான். "இனிமே எப்பவும் இன்னொரு பொம்பளையெப் பாக்க மாட்டேன்," என்று சத்தியம் செய்தான். மனைவி கண்ணைத் துடைத்தாள், முத்தமிட்டாள். மார்பாரத் தழுவி சந்தோஷத்தோடு கண்ணீர் உதிர்த்தாள்.

அன்றிலிருந்து கிரகம் மாறிவிட்டது என்று சொல்லிக் கொள்வான். உடம்பு வளைந்து வயலில் வேலை செய்வது, இது என்னுடையது என்று சொந்தம் கொண்டாடுவது -- இது நடந்து ஒரு வருஷத்தில் ஒரு மகனுக்குத் தந்தையானான். சீர் கெட்டுக்கொண்டிருந்த வீடு உருப்பட்டது. குடும்பம் நன்றாக நிலைபெற்றது. மனைவியின் சிக்கனத்தாலும் மனைவியின் கட்டுப்பாட்டில் தான் இருந்து வந்ததாலும், ஊரில் தானும் ஒரு முக்கியஸ்தன் என்ற பெயரை ஐந்தாறு ஆண்டுகளில் சம்பாதித்துக்கொண்டான். இப்பொழுதுமூன்று குழந்தைகளுக்குத் தகப்பனானாலும் முகம் பெரிய மீசையோடு பொலிவுடனேயே இருந்தது.

புலிவேஷம் போட்டு, வீடேறி, கோழிக் குஞ்சுவின் கழுத்தைப் பல்லால் நெறிக்கும் சக்தி இருந்தது.

அந்தச் சஞ்சீவி புலலய்யாவிடம் பேச்சுக் கொடுத்தான். இருவரும் ஊரில் நடக்கும் அநியாயங்களைப பற்றிப் பேசிக்கொண்டார்கள். நேற்றைக்கு இன்று விலைவாசி எவ்வளவு உயர்ந்துவிட்டது, இல்லாத ஜனங்கள் எவ்வளவு கஷ்டப்படுகிறார்கள்; இருப்பவர்கள் கையை உதிர்க்காமல் இருந்து வந்தார்கள். நாயுடுவையும் பெரிய விவசாயியையும் அதட்டிக் கேட்க வேண்டுமென்று புல்லய்யா சொன்னான்

இதற்கிடையில், நீலி குழந்தையைத் தூக்கிக்கொண்டு திண்ணை அருகில் வந்து," எல்லாம் கேட்டுக்கிட்டுதானிருக்கிறேன். நாளெக்கி நாயுடு 'உங்க ரேஷனை வாங்கிக்கோங்க, உங்க துணியை வாங்கிக்கோங்க'ன்னு சொன்னா ஊர்லே எத்தனெ பேர்கிட்டே பணமிருக்குது–" என்று கேடடாள்.

"உண்மையைச் சொன்னே மகளே," என்றான் சஞ்சீவி.

புல்லய்யா, "உண்மையா, விவசாயிக்குத் தேவையில்லேன்னா, திரும்பி கவர்னமென்டகாரனுக்கே கொடுத்துட்டா, இன்னொருத்தனுக்குக் கொடுத்துட்டுப் போறான். நம்ம பேரைச் சொல்லி, நம்ம வயத்திலே அடிச்சி, அவன் வாங்கிக்க மாட்டான். எல்லாம் ஏமாதது வேலெதான்," என்று சொன்னான்.

கோபத்தோடு எழுந்து போய்க் கொண்டிருந்த கணவனைப் பார்த்து மென்சிரிப்பு சிரித்தாள். புல்லய்யா புஸ்ஸென்று சீறி, " நாளைக்குப் போயிஸ்டோர்கிட்டெ உக்காநதுக்கறேன். வர்றவங்க போறவங்ககிட்டெ இநத அநியாயத்தைச் சொல்றேன்," என்றான்.

'நாயுடு வாங்கறவங்களெக் காட்டச் சொன்னா –"

"ஏன் கேக்கறான் – கவர்னமெண்ட்காரனுக்குச் சொல்லமாட்டேனா?"

சஞ்சீவிக்கு ஸ்டோரில கொஞ்சம் செல்வாக்கு இருந்ததால, "புல்லய்யா, உக்காரு" என்று சொல்லிக்கொண்டே எழுந்தான்.

"அம்மா, நீலம்மா வைக்கப் போர்கிட்டெ நாய் என்ன பண்ணும், தானும் தின்னாது, தின்னவும் விடாது. புல்லய்யா, ஊரலெ பெரியவங்க மத்தியிலெ அவங்க தயவிலெ பொழெச்சிக்கிட்டிருக்கறே. ஏன் சும்மா அந்தத் தயவெ அழிச்சிக்கிறே. அமமா அப்பா போனா பொழெச்சிக்கலாம், தயவு போயிட்டா பொழெக்க முடியாது. நாளெக்கி இந்த இல்லாதவங்கெல்லாம் ஒனக்கு என்னா செய்வாங்க. செய்தாக்கா பெரியவங்கதான் செய்யணுமே தவிர," என்று சொல்லிக்கொண்டே போய்விட்டான்.

புல்லய்யா பேசவில்லை. மீசையை முறுக்கிக்கொண்டே, மனைவியைப் பார்த்தபடி, குழந்தையை வாங்கிக்கொண்டான். திண்ணை மேல் சாய்ந்து மகனைத் தன் மார்பின் மேல் படுக்க வைத்துக்கொண்டே, "மல்லு, உன் தாத்தாவோட மகன், உங்கப்பன் வயிறு காய்ஞ்சாலும் நியாயத்துக்காகப் போராடுவான் ... நீயோ –" என்று கேட்டான். மகன் பகபகவென்று சிரிக்கவே உடம்புக்குக் கிச்சு கிச்சு மூட்டியது போலிருந்தது.

# 14

பொங்கல் வந்தது. மல்லு குப்புற விழத் தொடங்கினான். வீடு முழுவதும தவழ்ந்து வரலானான். புல்லய்யாவைப் பார்த்து இளம் சிரிப்பை உதிர்த்துக் கொணடே அருகில் போவான். ஆனந்தத்தில் தலைகால் தெரியாமல் புல்லய்யா மகன் எதிரில் குதித்துக்கொண்டே, "பினக் பினக் ஸோ," "குஞ்சினக்கடி . . . குஞ்சினக்கடி . . ." என்று கொஞ்சுவான. மகன் கைவீசி ஆடுவது போலிருக்கும்... வாய் திறந்து அவனும் சொல்வது போல் பிரமை தட்டும் ஒரு தடவை மகனைத் தலைக்கு மேல் உயரத்தில் தூக்கினபோது, அவன் அழவில்லை. ஆனால பாட்டி அலுத்துக்கொண்டாள்.

"யாருன்னு நினைச்சிகிடடே -- உங்க வீட்டுப் பையன்னு நெனைச்சிகிட்டியா - நானு பல்டி போட்டு வளைஞ்சி நின்னாக்கா, அவன் குதிசசி மேலெ ஏறி நிப்பாம் பாரு."

மல்லுவுக்கு ஆறுமாதம் ஆகவிலலை . . . உட்காரத் தொடஙகிவிட்டான். "அதோ அதோ உக்காந்தான் பாரு. சுவத்தெப் பிடிச்சிகிட்டு நிக்கறதுக்குப் பாக்கறான்.... என் மல்லு ... என் மல்லு ..." என்று ஒரேயடியாக முத்தமழை பொழிந்தான்.

பாட்டி பொக்கைவாய்ச்சிரிப்போடு, "வயசுக்கேதத சோறு - சோத்துக்கெத்த உடம்பு -- உன் மகன் அடுதத வருஷத்துலெ பானையையே காலி பண்ணிடுவான் . . . அய்யோ, பாழாப் போனவ . . . நானே கண்ணு போடுறேன் . . ." என்றாள்.

சினனவன் நாளுக்கு நாள் வளர்ந்து மனதை ஆனந்தம் அடையச செய்தான்.

விளைச்சலில் பயத்தம் பருப்பில கொஞ்சம் பூச்சி பிடித்திருநதாலும், ஓரளவு நன்றாகவே விளைந்திருந்தது. குத்தகை நெல்லை நிலத்துக்காரருககு அளநது கொடுத்தபிறகு அந்த வயலால் மிஞ்சியது பயததம் பருபபுதான். புல்லய்யாவின் சொந்த நிலததில் விளைநத நெல்லால் நாட்கள் ஓடிக்கொணடிருந்தன. அதைக்கவனமா உபயோகிககாமல போனால் ரேஷனுக்குக் காசு ஏது? இராட்டினம் சுற்றி நூலை விறறு வரும் காசு சொல்லக்கூடிய அளவுக்கு இருக்காது. மறுபடியும் கோடைக்காலம் கடநத பிறகுதான் வேலைகள் இருக்கும். அடுத்த பயிர் வேலை கோடைக்குப் பிறகுதான் தொடங்கும்.

வாழ்க்கைப் பிரச்சினைகள் இப்படி இருந்தாலும், மகன் மல்லுஅந்த விஷயங்களைப் பற்றி யோசிக்க அப்பாவுககு வாய்ப்புக் கொடுக்கவில்லை. புழக்கடையில் இருக்கும் மாடுகள் கததினாலும் அவன் பயப்படுவதில்லை , சந்திரனைப் பார்த்துக் கைவீசக் கற்றுக்கொணடான. அரசமரத்தில் குருவிகள் கத்திக் கொணடிருந்தால் அவற்றைக் கூர்ந்து பார்ப்பான், அம்மாவைப் பார்த்து அப்பாவைப் பார்த்துச் சிரிப்பான, அவர்கள் தூக்கவில்லை என்றால் அழக்கூடத் தெரிநது கொண்டான். சினனப்பல் வந்தது. அவன் சிரிக்கும் போது அந்தப பாற்பல் அழகாகக் காட்சி

அளித்தது!

அந்த வருஷம் தான் சர்க்கார் தானியம் கொள்முதல் செய்யத்தொடங்கியது. ஊர்க்கோடியில் இருந்த கிழவி கூட இங்கிலீஷ் பேசத்தொடங்கினாள். 'பொக்யூர்மென்ட்' என்றால் எல்லாருக்கும் ஏதோ இனமறியாத பயத்தை உண்டாக்கியது. சிலர், "ஏன் கொடுக்கணும்?" என்று கேட்டார்கள். "எங்க வியர்வை -- எங்க இஷ்டம் -- கவான்மென்ட்காரனுக்கு அளக்க நியாயமில்லை," என்றனர் சிலர். பீஸ் மிகவும் ஆர்ப்பாட்டம் செய்தான். அவன் பேச்சை முக்காலே மூணு வீசம் பேர் நம்பினர். "கணக்கெலாம் பயிரு வயல்லெ விளைஞ்சிகிட்டிருக்றாப்பவே தயாராயிட்டுது. இப்பொ திருட்டுக் கணக்குக் சொன்னாக்கா, கவர்ன்மெண்ட்காரன் போலீஸு, எப் எஸ்ஓ, டிஎஸ்ஓ -- எல்லாரையும் அனுப்பி, கொடுக்றியா சாவறயான்னு பயமுறுத்துவான். அதிகமாப் பேசனா அரெஸ்டுதான்."

புல்லய்யா மீசையை முறுக்கினான் ." எவன் அவன் என் குதிருப்பக்கம் வர்றான்னு பாக்கறேன். இருக்கப்பட்டவன குதிரெக் காலிசெஞ்சிட்டு இல்லாதவன் கிட்டெ கவர்ன்மெண்ட்காரன் வரட்டும் . . . அப்பொதான் அவனுக்கு முடிஞ்சதெக் குடுப்போன்."

"இந்த வருஷம் எப்படியோ போயிட்டுது போ. கவர்னமெண்ட்காரன் அடுத்த வருஷம் முன்னாடியே பயிரெப் புடிக்கிற பூச்சி மாதிரி வரப் போறான் பாரு," என்று ஜோஸ்யம் சொன்னான் பீஸ்.

கிராமக் கணக்கன் வேலை பரம்பரைப் பாத்யதைப்படிப் பட்டணத்திலிருககும் 'ப்ளீடர்' சீதாராமஸ்வாமிககுப் போய்ச் சேர்ந்தது. ஆனால், அவர் தம் பாத்யதையைப் பத்து வருஷத்துக்கென்று நானூறு ரூபாய் வாங்கிக்கொண்டு, ஊரிலிருந்த பட்நாயுடுவுக்குக் கொடுத்துவிட்டார். இப்போதிலிருந்து வந்த கணக்கனுக்கு வயது முப்பது தான் என்றாலும் ஆறு குழந்தைகளுக்குத் தகப்பன். அவனுடைய அப்பா சரியான கிழட்டு நரி. பெரிய காரியக்காரன. நிலம் சம்பந்தமான விவகாரங்களைத் தீர்த்து வைத்துப்பணம் சம்பாதித்துக் கொண்டிருந்தான். மகன் கணக்கனானதும் அவருக்கு அதிகாரம் வந்து சேர்ந்தது. ஆனால் இந்த அதிகாரம் இதுவரையில், நிலம் விற்றல் வாங்கல் நடக்கும் போதுதான் பணம் பண்ணுவதற்கு அவனுக்குப் பயன் பட்டு வந்தது. ஆனால் இப்போது 'ப்ரெக்யூர்மெண்ட்' உண்மையான அதிகாரத்தைக் கொடுத்தது.

இந்தக் கிழட்டுநரி ஒரு காலத்தில் மிகவும் வசதியும் செல்வாக்கும் இருந்த பேர்வழி. பத்து ஏக்கர் நிலம் குறைவில்லாமல் விளைந்து வந்தது. பக்கத்துக் கிராமத்திலும் அவர் பெயர் பரவி இருந்தது. அவளுடைய வார்த்தைக்கு மதிப்பு இருந்தது. இருந்த ஒரு மகளின் கல்யாணத்தை ஐந்து நாட்கள் கோலாகாலமாக நடத்தினார். ஜலமூரு பண்ணையார் என்றால் அந்தக் காலத்தில் சக்கரவர்த்திக்குச் சமானம். அவர்களுடைய வரும்படிக்கு ஏற்றபடியே வீட்டில் லட்சுமியும் சரஸ்வதியும் தாண்டவமாடினார்கள். அத்தகைய குடும்பம் அந்தத் தலை முறையோடு சரி. அந்தக் குடும்பத்துப் பிள்ளைகள் இப்போது கரக்பூரில் ரயில்வே உத்தியோகம் பார்த்து

அழுதாலொழிய வயிறு நிறையாது என்ற நிலை. அந்தப் பண்ணையாரைக் குறித்து இப்போதும் அக்கம்பக்கத்துக் கிராமங்களில் பேசிக்கொள்வார்கள். திருவிழாக்காலங்களில் புகழ்ந்து காசு வாங்க வருவோர் இன்னும் அந்தப் புகழ் மாலைகளை மறக்கவில்லை. அந்தக்காலத்தில் மகளுக்குச் சம்பந்தம் பார்த்துக் கலியாணத்தை நடத்தினார். அருவாமனையிலிருந்து, கொசுவலைப பந்தல் தாங்கிய தேக்கு மரக்கட்டில் வரை சீர் வரிசை கொடுத்துப் பல்லக்கிலேற்றி, பதினெட்டு மாட்டு வண்டிகளும் நூற்றி எட்டுக் காவல்காரரும் பின்தொடர மகளை மாமியார் வீட்டுக்கு அனுப்பி வைத்தார். அந்தக் காலத்தில் வரதட்சிணை இருக்க வில்லை. வரதட்சிணையென்றால் அருவருப்பு இருந்து வந்தது. சில வருஷங்கள் வரை இவர் நடத்திய கலியாணத்தைப்பற்றி அந்த வட்டாரத்தில் பேசாதவர்கள் இல்லை. இந்தப் புகழ் அவருடைய பத்து ஏக்கரை விழுங்கிவிட்டது.

அவர் இதுவரையில், தன் வாழ்க்கையில் ஒரு பெரிய காரியத்தைச் செய்தார். அதுவே போதும் என்று பெருமைப் படுவார். மகள் மாமியார் வீட்டுக்குப் போனவுடன் ஒரு சம்பவம் நடந்தது. பதினெட்டு வயது நிறையாத அந்தப் பெண்ணின் அறிவை மாமியாரும், விதவையான நாத்தனாரும் சோதிக்க விரும்பினார்கள். பொறியலுக்கு, கூட்டுக்கு, குழம்பிற்குத் தேவையான காய்கறிகளை அரிந்து ஒரு தாம்பாளத்தில கலந்து சமையலறை அருகில் வைத்துவிட்டார்கள். பண்ணையார் வீட்டு மனைவியும் மகளும், வேலைககாரர் இருந்தாலும், வீட்டில் சமையல செய்தாகவேண்டும், வந்த விருந்தினர்க்குப் பரிமாறவேண்டும். மருமகளும் அந்த வீட்டு மரபையே பின்பற்ற வேண்டும். அதற்கு வேண்டிய காய்கறிகளை, அவள் பிரித்தெடுத்ததைப் பார்த்து இரண்டு பேரும் பெருமைப்பட்டார்கள். அடுப்பிலிருந்து பானையை இறக்குவதற்குக் கரித்துணி இல்லையென்று, அந்தப் பெண் மாமியாரைக் கேட்டாள். மாமியாா பரிகாசமாக, "பெத்தவங்க குடுக்கமாட்டாங்களா –" என்று கேட்டாள். அவள் உடனே கட்டியிருந்த பட்டுப் புடவையின் முந்தானையைக் கிழித்துக் கரித்துணியாக உபயோகித்தாள். இந்த நிகழ்ச்சியை இப்போதும், அந்தத் தந்தையான கிழவன், எத்தனையோ பேரிடம சொல்லி, தன் கௌரவத்தை மகள் நிலை நாட்டினாள் என்று பெருமை பட்டுக் கொள்வார்.

. நிலம் போனபிறகு ஏதோதோ விவகாரங்களில் ஈடுபட்டுப் பிழைப்பை நடத்திக்கொண்டு, மகனைக் கணக்குப் பிள்ளையாகச் செய்தார். அந்தக் கணக்குப் பிள்ளையின் காதுகளில் அந்த ஊரில் அடிபடும் வம்புதும்புகள் வந்து விழுந்து கொண்டிருந்தன. ஒரு பக்கம் சம்பளத்தை உயர்த்தவில்லை என்று அரசாங்கத்தின் மீது, மற்றொரு பக்கம் தன் மாமூலை உயர்த்தவில்லை என்று கிராமத்து மக்கள் மீது கோபம் அதிகம் ஆனது. நாளுக்கு ஒரு கணக்கு, அதுவே வயிற்றுப் பிழைப்பு. மொத்தத்தில் அரசாங்கத்தின் கட்டுப்பாடு அவ்வளவாக இல்லாமற்போனதால், விவசாயிகள் தாங்களாகவே கொடுத்த கொஞ்சம் தானியத்தையே

கொள்முதல் செய்தார்கள். கோடைக்காலத்தில் சோளப் பயிர் நன்றாக விளைந்தது. மறுபடியும் நெற்பயிருக்கு நாற்று நட்டார்கள்.

பத்து வருஷங்களுக்கு முன் அறுபது ரூபாய் இருந்த நானூறு மரக்கால் நெல் இப்போது அறுநூறு ரூபாய் ஆகிவிட்டது. உலகம் தலைகால் தெரியாமல் போகிறதென்று ஏழைபாழைகள் எல்லாரும் சொல்லிக் கொண்டார்கள். வாழ்கைச் சுமையைத் தாங்க முடியாமல், சாகவும் முடியாமல், கடவுள் மீது பாரத்தைப் போட்டுவிட்டு வேதனையோடு கடவுள் மீது பாரத்தைப் போட்டுவிட்டு வேதனையோடு காலம் கடத்தி வந்தார்கள். தானியத்தோடு கூட உப்பு மிளகாய் முதலியவற்றின் விலையும் கடுமையாக ஏறிக்கொண்டிருந்தது. பேரய்யாச்செட்டி, படிக்கு ஓரணா உயர்ந்தால் ஐந்தணா உயர்ந்து விட்டதாகக் கத்தினான். நாயுடு, பெரிய விவசாயி முதலியவர்களின் தேவைகளுக்கு கோ-ஆப்பரேடிவ் ஸ்டோர் கண்ட்ரோல் விலைக்குக் கொடுத்துவிட்டு, எஞ்சியவை இரட்டிப்பு விலைக்கு விற்பதற்கென்று பட்டணத்திற்குக் கடத்தப்பட்டது

தாசனின் ஆவேசப பேச்சுக்குச் செவிசாய்ப்பவர்கள் யாருமில்லை. தாசனே பசியால் துடிதுடித்துக்கொண்டிருந்தான். ஆனாலும், மாலையானால் நீலம்மாவின கோவில் கதவைத் திறப்பதை நிறுததவில்லை. ஒவ்வொரு முறை அழுவான். அந்தக் கண்ணீரோடு அம்மன் தன் கஷ்டங்களுக்குச் செவி சாய்த்தாள் என்றால் அவன் வயிறு நிறையும். ஊரில் சென்று நாலு பேரிடம் அம்மனுக்குத் திருவிழா நடத்துங்கள் விலைவாசி குறையும் என்று சொன்னால, இல்லாதவர்கள் கிராமப் பெரியவர்களிடம் சொல்கிறோம் என்பார்கள், பெரியவர்கள் பெருஞ்சிரிப்பு சிரிப்பார்கள். அத்தோடு மறுபடியும் பசியால் உடம்பெல்லாம் குன்றிப் போய்விடும். வாய்திறந்து கேட்பதறகு வெட்கம் குறுக்கிட்டது. ஒரு நாள் இருட்டில் போயக் கொண்டிருக்கும்போது, அன்றிரவு தான் பட்டினி கிடக்க வேண்டும் என்பது நினைப்பு வந்ததுமே, கால்கள் முன்னே போக மறுத்துவிட்டன. அந்த வழியில் போய்க்கொண்டிருந்த புல்லய்யாவைப் பார்த்ததும போன உயிர் மீண்டு வந்தது. இதுவரையில் பெரியவர்களை இரண்டு முறை கேட்டுவிட்டு, அவர்களுடைய கோபத்திற்கு ஆளானான புல்லய்யா. மறுபடியும் கேட்கச் சொன்னாலும பிரயோசனம் இல்லை. இருந்தாலும் அவன் தோள் மீது கைபோட்டுக் கூடவே சென்றான். நரம்பெல்லாம் சுருங்கிக் கொண்டிருந்தாலும் பொறுமையோடு மெல்ல அடி எடுத்து வைத்து, புல்லய்யாவின் வீட்டிற்கு வந்து மௌனமாக உட்கார்ந்து கொண்டான். மல்லு அப்போது நடக்கத் தொடங்கி விட்டான். "அத்தெ ... தாத்தா" என்று பேசத் தொடங்கியிருந்தான். விளையாடிக் கொண்டே அவனருகில் வந்தான், முகத்தைப் பார்த்தான். புட்டிவிளக்கு வெளிச்சத்தில் கறுப்பாக அழுக்கேறிய தாடியுடன் எலும்புக்கூடு போலிருந்த தாசன் மல்லுவை அணைப்பதற்குக் கைநீட்டினான். மல்லு அருகில் வந்துகொண்டே, "தாத்தா" என்றான்.

'அந்த அம்மன் காப்பாத்தணும்! இருட்டிலே சூரியன் ... கடல்லெ படகு போல ஆவான்'மா!"

புல்லய்யா மகன் எதிரில், "சினக் சினக் ஷோ . . ." என்று சொல்லிக் கொணடே குதித்தான். மல்லுவும் குதித்தான், ஆனால் உடனே கீழே விழுந்து விட்டான். அழுவான் என்று நினைத்து மீண்டும் எழுந்திருக்க முயற்சித்த மகனைத் தூக்கிப் பிடித்து மார்போடு அணைத்துக்கொண்டான். அப்பொழுது," அம்மா . . . அத்தெ," என்று மழலையாக மகன் சொல்லியது, 'அப்பா !' எனறு சொல்வது போலவே புல்லய்யாவுக்குக கேட்டது. தாசனின் மனதைப் புரிந்துகொண்டே நீலி, சோளமாவில் செய்த ரொட்டியைக் கொண்டு வந்து கொடுத்தாள். அதைக்கண்ணில் ஒற்றிக்கொண்டான் தாசன். நீலம்மனை நினைத்துக்கொண்டே, அப்படி உடகார்ந்து மென்று தின்றான். வினாடியில் பலம் திரும்பி வந்தது. மல்லுவைக் கொஞ்சிவிட்டு, மெதுவாக எழுந்து வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான். புல்லய்யா மகனைக் கொஞ்சுவதில் மூழ்கிவிட்டான்

நடுத்தெருவில் ஏதோ தகராறு நடப்பது போலிருந்தது. பீஸ்யைச் சுற்றி நிறைய பேர குழுமியிருந்தார்கள். பெரிய குரலில் பீஸ் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தான்.

"நீங்கெல்லாம் கேட்டீங்களோ இல்லியோ, அந்தக் கிருஷ்ணபரமாத்மாவுக்கு அர்ஜுனனைப் போன்றவர் நேரு காந்தி மகாத்மா இருக்கறரே, அவர் கடவுளேதான். அந்தத தெய்வம் மனம் வெச்சா, அப்படிப்பட்ட லட்சலட்சமான சேணையோடிருந்தாலும் வீரரான கௌரவர் படையே தோத்துப் போச்சில்லெயா, இந்த வெள்ளெக்காரன் ஒரு கணக்கா? நாளலே 'ருந்து வெள்ளெக்காரன் ராஜ்யம் போய் கறுப்பர் ராஜயம் வருதாம். இனிமே பாருங்கய்யா . . ."

இன்னும் ஜனங்கள் வந்து குவிந்து கொண்டிருந்தார்கள். தாஸன் அந்தக் கிராமத்தில் பெரிய விவசாயி வீட்டுத்திண்ணை மீது உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்தான். பீஸ் அபிநயத்தோடு, "இப்பொ இருக்கறதெல்லாம் மாறிப் போயிடும். இந்தக் காங்கிரஸ்காரங்களுக்கு பெரியவங்க சின்னவங்கன்னு கணக்கில்லே. நிறையக் குழநதை இருக்கறவங்களுக்கு நிறைய நிலம், குறையாக குழந்தை இருக்கறவங்களுக்குக் குறையா நிலம் குடுக்கப் போறாங்க . . ."

"குழந்தைங்க இல்லாதவங்களுக்கு?"

யாரோ கும்பலிலிருந்து கேட்டான்.

"அப்படிப்பட்டவங்களுக்கு கவர்ன்மெண்ட்காரன் ரொம்ப ரொம்பக் குறையா நிலம் தருவான்."

பீஸ் குரலைச் சிரிசெய்துகொண்டு, "பட்ணத்துலே கூச்சல் கூப்பாடு கொஞ்சம் நஞ்சமில்லே. உன் மகன் என் மகன் எல்லாம் கூடக் கலெக்டர் ஆகலாம்!"

"போடா போடா," என்றான் யாரோ ஒருவன்.

"கிணத்துலெ தவளெ மாதிரி இருக்கற ஒனக்கு என்ன தெரியும்? புத்திசாலியானவன் என் மகனா இருந்தா என்ன, உன் மகனா இருந்தா என்ன– அவனுக்குப் பெரிய வேலெ கிடைக்கும். நான் ஏழையா இல்லாட்டாலும்

என் மகன் புத்திசாலியா இல்லேன்னா. அவன் ஏழையா ஆயிடுவான். மனுஷனுக்கு மனுஷன் வித்தியாசம் இருக்காது. வண்ணான் பொண்ணுக்கும் அம்பட்டன் மகனுக்கும், அம்பட்டன் பொண்ணுக்கும் பிராமணன் மகனுக்கும் கல்யாணம் நடக்கும். முடியாதுங்கறவங்களைக் கவர்ன்மெண்டகாரன் ஜெயில்லே புடிச்சி போடுவான்,"

"எந்த மகாராஜா வந்தாலும் இந்தப் பஞ்சத்தெ ஒழிக்க முடியுமா?" என்று ஒரு கிழவி கேள்வி கேட்டாள்.

"இந்தப் பஞ்சத்துக்குக் காரணமானவங்க எலலாருக்கும் ஜெயில்தான் அத்தோட பஞ்சம் பஞ்சாப் பறந்து போயிடும். நம்ம ஆளு கவர்னமென்ட்காரன் ஆனா, நமக்கு நல்லதெ பாக்க மாட்டானா? எலலாம் மந்திரம் மாதிரி நடக்கப்போவுது பாருங்க -- பாருங்க!"

இந்தப் பேச்சு பலபேருக்குப் பிடித்ததோ என்னவோ, தாசனுக்குப் பிடிக்கவில்லை. மெதுவாக எழுந்து அநதக கும்பல் அருகே சென்றான். போய்ச் சேர்ந்ததும், அங்கே இருந்த சிலபேரைப் பார்த்ததும் உடம்பு எரியத் தொடங்கியது. அந்தக் கிராமததுககு இப்போது பெரியவாகள என்று கருதப்பட்ட இளவட்டங்களெல்லாரும் அங்கேதான் இருநதாாகள இவர்களுக்குத் திருட்டுசசாராயம் குடிக்கத்தெரியும், பத்துத் தடவை பட்டணத்துச் சினிமாவுக்குப போவது, சிகரெட் புகையை வளையம் வளையமாக விடுவது தெரியும். கண்ணிறைந்த அழகான பெண்களை ரசித்துப் பார்த்து, காரியத்தை நிறைவேற்றிக் கொளளத் தெரியும். இப்போது இவர்கள் கிராமத்துத் தலைவர்கள. இவர்களுடைய பெற்றோர் வார்த்தைகளுக்கு மதிப்பில்லாமல் போய்க்கொண்டிருந்தது

இவர்களெலலாம் 'சபாஷ்' போடுகிறார்கள். தாஸன் எதனாலோ ருததிரனாகிவிட்டான். பீஸ் ஏதோ வாய்க்கு வந்ததப பேசுவதாகத் தோன்றியது. கும்பலை நெருங்கியதும, "பீஸ்!" என்று சத்தம் போட்டான். இந்தச் சத்தத்தோடு அமைதி வந்தது. "யாருடா அவன் உனக்குச் சொன்னவன் மநதிரம் மாதிரி ஆயிடும்னு?" பீஸ் ஏதோ சொல்லத் தொடங்கும்போது, வாயப்புக கொடுக்காமல தாஸன், "மனசுககேத்த வாழ்வுதான் நமக்கு. யாரு வந்தாலும் நமக்குள்ளே நீதி நியாயம் இல்லாமப் போனா இதைக் காட்டிலும் ஊர் இன்னும் மோசமாப் போயிடும்"

நாயுடு சிவந்த கண்ணோடு பார்த்தான். தாசன் பெரிய குரலில், "இந்தப் பெரிய மனுஷங்கள்ளே எத்தனெ பேர்கிட்டே நீதி இருக்குது? ஜனங்க இப்படிச் செத்து சுண்ணாம்பாய்ககிட்டிருந்தா, பணத்தெக் கொள்ளெ அடிச்சிகிட்டிருக்கற இந்தக் குடிகாரனுங்க எல்லாம பெரிய மனுஷங்களா பீஸ்?"

"வாயை மூடுடா அம்பட்டப் பயலே!" கத்தினான் நாயுடு.

தாசனின் மூளை குழம்பியது போலாகிவிட்டது. தன் நிலையையே மறந்து, "மூட்றேன், மூட்றேன். பொம்பளைக்குத் தாசனாயிட்ட நீ என்ன பெரிய நாயுடு? ஊர்ப் பெரியவனா இருந்தா என்னைக்கோ அந்த ...ம்மனுக்குத் திருவிழா நடத்த வேணாம் -- இந்தப் பஞ்சம் பட்டினியெல்லாம் தீநதிருக்குமே."

தாசனின் தலை அறுந்து விழுவது போல ஓர் அடி விழுந்தது. சாராய வாசனை சுற்றிலும் வீச நாயுடுவோடு சேர்ந்த இளைஞர்களின் கைகள் தாசனின் மேல் மோதின. மோதிக் கொண்டிருந்தாலும் தாசன் தன் வசவு மொழிகளை உச்சஸ்தாயில் பொழிந்து கொண்டிருந்தான். "நீங்கெல்லாம் ஒரு அப்பன் அம்மாவுக்கு பொறந்திருந்தா, அந்த பேங்க்லே அமுக்கி வச்சியிருக்கிற பணத்தெ வெச்சி ஏழை பாழெங்க பசியிலெ செத்துப் போகாமெ பிழெக்க வெச்சிருப்பீங்களே, நியாமில்லாத ஆளுங்க!" என்று கத்திக் கொண்டிருந்தான்.

இந்தக் கத்தல் புல்லய்யாவின் காதில் விழுந்ததும் ஓடினான். அப்போது சிலர் அடிதடியில் கலந்து கொண்டிருந்தாலும், புல்லய்யா நாலு பேரை ஒவ்வொரு பக்கமாகத் தள்ளிவிட்டு, கீழ உட்கார்ந்திருந்த தாஸனைப் பார்த்தான். அந்தக் கண்களில் இருந்த கோபாவேசம், ஒரு முறை புல்லய்யாவைப் பார்த்ததுமே, அன்பு நிறைந்து கண்ணீராக மாறிவிட்டது. புல்லய்யா அந்தப் பெரியவர்கள் எல்லாரையும் மனதில் கருதி, "நீங்கெல்லாம் எருமெ மாடுங்க, அதுகளுக்காவுது நீதி நியாயமிருக்கும். தாசன் மேலெ மறுபடியும் கையை வெச்சீங்கன்னா ஒவ்வொர்தர் குடலையும் அறுத்து எடுத்துடுவேன். போறீங்களா இல்லையா? ஊருக்குப் பெரியவங்க கோமணத்தாண்டிங்க!"

"யாரு? " முனகினான் நாயுடு

"நானு புல்லய்யாதான். நாயுடுவா இருந்தா நாயுடு மாதிரி இரு".

இடையில் ராஜி, "போ, போடா!" எனறான். புல்லய்யாவுக்குப பற்றி எரிந்தது , அவன் கையைப் பிடித்துத் தள்ளியதில் அவன் கொஞ்ச தூரத்தில் போய் விழுந்தான். அங்கிருந்தபடியே அவன "உன்னெ ஒரு கை பாக்கலேனனா, நான் எர்ரய்யா மகனில்லே," என்றான்.

"போடா மடையா! நீ எர்ரய்யாவுக்குப் பொறந்த மாதிரியே பேசறே. குருட்டு வெங்க்கன்னா தாண்டா உங்கப்பன்"

நிலைமை இன்னும் மோசமாயிருக்கும். நாலு பேர் சேர்ந்து ராஜியை அவன் வீட்டுப் பககம் தள்ளிக்கொண்டு போனார்கள். "ஆடு புலியைக் கடிக்குதா, உன் பிழைப்பு எனன ஆகும் தெரியுமா?" என்று கததிவிட்டுப் போனான்.

புல்லய்யா தாசனை எழுப்பிவிட்டு, கையைப் பிடித்துக்கொண்டு அவன் வீட்டை நோக்கி நடநதான். தாசன் துக்கத்தில் பேசவிலலை. வழியில் ஒரு வீட்டில் திண்ணை அருகில் குருட்டு வெங்க்கன்னாவும கென்னம்மாவும் உட்கார்நதிருந்தார்கள். அங்கே நடந்த விஷயம் அதற்குள் ஊர் முழுவதும் பரவிவிட்டது. அந்த வீட்டம்மா கஞ்சி ஊற்றிக் கொணடிருந்தபோது, வெங்க்கனனா சொன்னான · "தாயே, அந்தத் தாசன் திருவிழா திருவிழான்னு புலம்பிக்கிட்டிருககறான். இந்த ஜனங்ககிட்டெயிருந்த நீதியெல்லாம் அந்த நீலம்மாகிட்டெப் போய்ச சேந்துட்டுது அந்த அம்மன்கிட்டெ நியாமிருந்தா இந்தக் கிராமத்துலெ பெரிய வீடகள்ளெ நாலு பேரெ இல்லாம பண்ணியிருக்காதா?

தாசன் "சே, சேர்" என்று சொல்லிவிட்டு, "அந்த அம்மன்கிட்டே நீதி நியாயமிருக்குது, அதனாலெதான் மகன்களுக்கு அறிவு இல்லாம் போனாலும் இன்னும் தாங்கிகிட்டிருக்கறா," என்றான்.

அவ்வளவுதான், அதற்கு மேல் பேசவில்லை. வீடு நெருங்கிக்கொண்டிருந்தது. அவிழ்ந்த குடுமியைக்கூட முடிந்து கொள்ளவில்லை. வானத்தில் நட்சத்திரங்கள் மினுமினுத்தன. தெருவில் வேறு யாரும் நடக்கவில்லை. தாஸன் சற்று நின்று, "தம்பி, புல்லய்யா" என்று சொல்லத்தொடங்கினான். "நானு முதல்லே பொய் பேசிகிட்டிருந்தவன், இல்லாத வேஷமெல்லாம் போட்டவன்தான். அந்த அம்மனுக்கு வேண்டிகிட்டேன். எனக்கு நல்ல கதி கிடைச்சிது. இவங்கெல்லாம் . . ."

புல்லய்யா சட்டென்று "நீ எதுக்கும் பயப்படாதே," என்று ஆறுதல் கூறினான்.

தாசன் மென் சிரிப்பு சிரித்துவிட்டுச் சொன்னான் "பயமா, நியாயத்துக்காக வயிறு காய்ஞ்சி செத்தாதான் என்ன? நாலுபேர்கிட்டெ அடிவாங்கினா என்ன? தம்பி அழறவனுக்குத்தான் அந்தத் தாய் ஆறுதல் குடுப்பா. என் மனசுலெ எந்தக் கெட்ட எண்ணமும் இல்லாமெ போனா என்ன யாரு என்ன பண்ணாலும் எனக்கு ஒண்ணும் ஆகாது. போய்வாப்பா, திருவிழா நடத்துங்கன்னு நான் ஏன் புலம்பணும். நீ சிலம்பம் மறந்து போனாலும் பரவால்லே. அந்தப் பொறந்தவங்க பொழச்சிருக்க வேணாமா?"

புல்லய்யா பின்னுத் திரும்பினான். தாசன் மெல்ல மெல்ல அடிவைத்து வீட்டை அடையும் போது, மகன் நெருப்பு மழையைக் கொட்டினான். "பெரியவங்ககிட்டெ எல்லாம் சரிசமமாச் சண்டை போட்றியே. ஊர்லெ எல்லார்கிட்டேயுமா சண்டெ. எனக்கிருந்த கௌரவமெல்லாம் போச்சி. தனியாப் போய்த்தொலை," என்றான் கடைசி மகன்.

தாசன் அந்த வினாடி மினுக் மினுக்கென்னும நட்சத்திரங்களைப் பார்க்கும்போது, நீலம்மனின் பாதங்கள் தென்பட்டதால், மௌனமாக ஒரு சிறு சிரிப்பு சிரித்தான்.

## 15

வீராவசத்தோடு வீட்டுக்குப் போன ராஜு மனைவியின் பேச்சைக் கேட்பதிலிருந்து தப்பமுடியவில்லை. மனைவி வாயைத் திறந்ததும் நாயுடு சத்தம் போடாமல் அடங்கிவிட்டான். ராஜுவின் மனைவி, புல்லய்யாவைச் சமயம் வரும்போது காலில் வந்து விழும்படிச் செய்வதாகக் கணவனுக்கு உறுதிமொழி அளித்தாள். தந்தை தாசனுக்கு ஆதரவாகப் பேசவே, மருமகள் எரிந்து விழுந்தாள். ஒரு வருஷமாகிவிட்டது, எந்த விஷயத்திலும் தனக்குச் சம்பந்தம் இல்லாதது போல அவர் நடமாடிக் கொண்டிருந்தார். அப்படியே எதுவும் வேண்டுமென்றாலும், எதுவும் செய்ய நினைத்தாலும் அவர்

ஆசை நிறைவேறாது. மருமகள் ஊற்றுவது ஏதோ அதைக் குடிக்க வேண்டியதுதான்.

அரிசி, பருப்பு முதலியவற்றின் விலை நாளுக்கு நாள் ஏறிக்கொண்டே இருந்தது. கஞ்சி கூடக் குடிப்பதற்கு வழியல்லாமல் சில குடும்பங்கள் தவித்துக் கொண்டிருந்தன. இருந்த ஒன்றிரண்டு தட்டுமுட்டுச்சாமான்களையும் விற்றுக் கொண்டிருந்தார்கள். இன்னும் அறுவடை `தொடங்கவில்லை. ஆகவே எங்கேயும் வேலைவெட்டி இல்லை. பசி அலைக்கழித்தது. சிலரை ஊரைவிட்டுப் பட்டணம் போகும்படிச் செய்தது. அங்கேகூலி வேலை கிடைக்கவில்லை என்றால் திருடுவதே தொழில். ஏதாவது கிடைத்தால் வீட்டுக்கு வருவது, இல்லையென்றால் சந்தோஷமாக ஜெயிலுக்குப் போவது! இத்தகைய கஷ்டமான நிலை வந்த பிறகு, பீஸ்யின் வார்த்தைகளை வெறும் பொய் என்று குத்திக்குதறினார்கள். சொல்லப்போனால் பீஸ்யும் வேதனைப் பட்டுக்கொண்டு தானிருந்தான். இரவில் சாப்பாடு இருந்தால் சாப்பிடுபவன்தான், இல்லாத குறை, ஆகவே பிள்ளைகளுடைய பசியாவது தீரட்டும் என்று, "உபவாசம் இருக்கிறேன்--", என்று சொல்வான். "பொறந்த உடனே குழந்தை நடந்துடுமா - பேசத் தொடங்கிவிடுமா - பொறுமையா இருங்க. நம்ம கவர்ன்மென்ட் காரன் பெரியவனானப்புறம் நம்மெ இந்த மாதிரியா வெச்சிருப்பான்? நம்மெக் கவனிக்கமாட்டானா? என்று நான்கு பேரிடம் நம்பிக்கையூட்ட முயற்சித்தால், சிலர், "கவர்ன்மென்ட் நினெச்சா என்னா நடக்காது? ஆனையைப் பூனையா பண்ணுவான், பூனையை ஆனையாப் பண்ணுவான். பஞ்சம் ஒழியணும்னு ஒரே பிடிவாதமா வேலெ செஞ்சாப் போவாதா?" என்று கேட்டால் "அட போய்யா ! ஜனங்க நல்லதுக்குன்னு கன்ட்ரோல் கொண்டு வந்தான். அதன் பேரெச் சொல்லி அந்தப்பக்கம் கவர்ன்மென்ட் உத்தியோகஸ்தன், இந்தப்பக்கம் வியாபாரி எல்லாரும் ஜனங்க வயத்துலெ அடிச்சி மூட்டெ கட்டிக்கிறாங்க! கட்டட்டும் -- எப்படி வந்ததோ அப்படியே போயிடும்! வேர்வெ சிந்தி சம்பாதிக்கறதே நிக்கறதில்லே -- இதெல்லாம் தண்ணியிலே குமிழ் மாதிரிதாண்டா! அந்தக் 'கஜேந்திரன் முறையிட்டதனாலெதானே கடவுள் அந்த வினாடியே இறங்கி வந்தாரு.' உனக்கும் எனக்கும்தான் சாவு இருக்குமே தவிர, நீதிக்கும் நியாத்துக்கும் என்னைக்கும் சாவு கிடையாதுடா!" கையால் மார்பில் ஓங்கி அடித்துக்கொண்டே, "என் கவர்னமென்ட் காரன் பெரியவனானாக்கா நான் சுகப்பட மாட்டேனா! இவங்கெல்லாம் குய்யோ முறையோன்னு அழமாட்டாங்களா - செஞ்ச வெலெயெக் கெடுத்துடலாமா? இந்த மாதிரி நியாயத்துக்குக் கட்டுபட்டுச் செத்துப்போவானே தவிர . . . அநியாயத்துக்கு துணை நிப்பேனா?" என்று புலம்பினான்.

அங்கேயிருந்த புல்லய்யாவின் உடல் சிலிர்த்தது. "நல்லாச்

சொன்னேய்யா! இப்படிச் செத்தாலும் சாவோமே தவிர . . . அநியாயத்தைக் கும்பிடுவோமா? இந்தக் கிராமத்துப் பெரியவங்க என்ன பண்றாங்களோ, பாககலாம். "

எல்லாரும் 'சரி சரி' என்று சொன்னார்கள். அந்தப்பக்கம் வந்து கொண்டிருந்த ராஜு தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டான். "என்ன பீஸ், ரேஷனு வாங்கிகிட்டுப் போவலியே . . . உனக்கு வேணாம்னா, கார்டு குடுத்தா வெறெ யாருக்காவது உபயோகப் படாதா?" என்றான் நாயுடு.

"நான் குடுக்க மாட்டேன். என்கிட்டெ காசு வாறன்னக்கி வாங்கிக்கிறேன். இல்லாதன்னக்கிப் பேசாம இருக்கறேன்."

"நீ கார்டு குடுக்கலேன்னா -- ஒண்ணும் வேலெ ஆகாதிங்கே," சொல்லிக்கொண்டே, கைக் கடிகாரத்தைப் பார்த்தபடிப் போய்விட்டான் நாயுடு.

புல்லய்யா குரலை உயர்த்தி, "பீஸ்! டி. எஸ். ஓ. கிட்டெச் சொல்லணும்டா இந்தத் தடவை," என்றான்.

"எல்லாம் ஒரு குட்டையிலெ ஊறின மட்டைங்க தான் . . . அவன் பொண்ணு கல்யாணமுன்னு தாலுக்காவையே துடைச்சி எடுத்துட்டான்! சேத்துத் தண்ணி பாய்ஞ்சப்பறம் நல்ல தண்ணி எப்படி வரும்? அவங்க பண்ணெ கர்மத்தை அவங்க அனுபவிக்க மாட்டாங்களா? உன் கண்ணெயும் என் கண்ணெயும் மூடுவாங்க. அவங்க கண்ணெ, அவங்க கண்ணுக்கும் கண்ணான கடவுள் கண்ணெ மூடிட முடியுமா?" சொல்லிக்கொண்டே பீஸ் போய்விட்டான்.

புல்லய்யா வீட்டிற்குப் போனதும், மகன் சிரித்துக்கொண்டும், குதித்துக்கொண்டும, முன்னால் வந்து வரவேற்றான். தந்தை தூக்கிக் கொண்ட உடன் துள்ளித்துள்ளி குதித்தான். நெறபயிர் அறுவடைக்குத் தயாராகிக் கொண்டிருந்தது. முன்னாடி விதைத்தவர் சிலர் அப்போதே அறுவடை தொடங்கி இருந்தனர். நெல் கண்ட்ரோல் விலை நானூறு மரக்கால் முன்னூறு ரூபாதான். ஆனால் ஜனங்களுக்கு அந்த விலைக்குக் கிடைக்கவில்லை. கறுப்பு மார்க்கெட்டில் 600, 650, 700 வரை ஏறிக்கொண்டே இருந்தது.

அந்த வருஷம் நன்றாக விளைந்தது. வரப்பிலிருந்து நெல் களத்திற்கு வந்தும், யாரும் முன் வருஷங்கள் போல், யாரையும் தொடவில்லை. நெல்லைப் பொன்னைப் போல பாாக்கத் தொடங்கி விட்டார்கள். நீலி இத்தனை வருஷங்கள் போலவே கொடுக்க வேண்டியவரிக்கெல்லாம் கொடுத்துக்கொண்டிருக்கவே, புல்லய்யா எரிந்து விழுந்தான். இப்போது நெல் தங்கத்திற்குச் சமமானதால் கவனத்தோடு கொடுக்கச் சொல்லிச் சொன்னான். "இது தங்கம்னு கையை மூடிக்கச் சொல்றியா? எல்லாம் எனக்குத்தான்னு நினைச்சா கையிலே ஒண்ணுமே நிக்காமெ போயிடும். எங்கப்பாட்டி சொன்னா: 'கிணறிருந்து தாம்புக் கயிறு இல்லேன்னாலும், தாம்புக் கயிறிருந்து

கிணறு இல்லேன்னாலும் பொழக்க முடியாதுன்னு' என்றாள் நீலி.

புலலய்யா அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை. குத்தகை எஜமான் அநத வருஷம் பர்மிட் வாங்கிவந்து நெல் அளந்து கொண்டு போனான். களத்திற்கு மகன் வந்ததால் தான் நெல் நிறைய கண்டதாகப் புல்லய்யா மனைவியிடம் சொல்லிக் கொண்டான்.

1948 ஆவது வருஷம் அடி எடுத்து வைத்தது. நிலங்களில் பயத்தும் பயறு விளைந்து கிடந்தது. பொங்கல் பண்டிகைக்கு, மகனுக்கு கழுத்தில் போட வெள்ளியில் சங்கிலி செய்தான். புல்லய்யா, மல்லு முதலில் அதை அறுக்கப் பார்த்தாலும் பிறகு பழக்கப்பட்டு விட்டுவிட்டான். அப்போதுதான் அவன் தாயைவிட்டு மெல்லத்தந்தையிடம் நெருங்கிப் பழகத் தொடங்கினான். இரவில் நீலி ஆழ்ந்து தூங்கிவிடுவாள். அவன் ஆழுதால், புலலய்யா தான் எடுத்துக்கொண்டு, இப்படியும் அப்படியும் திரிந்து. மார்பின மேல் போட்டுத் தூங்க வைப்பான். கை மேல இருந்தாலொழிய தூங்க மாட்டான். புல்லய்யா கையை எடுத்துவிட்டால 'குய்' என்று கத்தத் தொடங்குவான். பாட்டி, குழந்தை தொடர்நது நாலு நாட்கள் தூக்கமில்லாமல் அழுது கொண்டிருககவே, 'எந்தக காத்துப்பட்டதோ' என்று சொல்ல முள்ளிருக்கும் ரணபேரிக்காய் உள்ள கிளையினைக் கூரையில் செருகினாள் அதன் பிறகு அழுகை குறைந்தது. ஒரு நாள் முன்னோர்களை நினைததுக்கொண்டு பேரனுக்கு ஒரு குறையும் வராமல் பாதுகாக்கச் சொல்லி வேண்டிக்கொண்டாள். ஒவ்வொரு முறை அடம் பிடித்து ஆழுவான். அப்பா சமாதானப்படுத்தினால் கொஞ்சம் நிறுத்துவான் அப்பா இல்லையென்றால் அவர் வரும் வரைக்கும் அழுகை நிற்காது. ஒவ்வொரு முறை அப்பா வெளியே போகும் போது கூடவே இவனும் புறப்படுவான், அழைத்துக்கொண்டு போகவில்லை என்றால் அழுகைதான்।

பாட்டி பையனின் அழுகையைக் கேடடதும ஏதோ பாடடுகள் பாடுவாள். இருந்தாலும் முனகல் ஓயவதில்லை. ஏதாவது திருஷ்டிபட்டிருக்குமென்று மண்பொம்மை ஒன்று செய்து, ஐநது கிளைகள், ஐந்து இலைகள், ஐந்து பேரீச்சம் பழங்கள், கறுப்புத்துணி, கொஞ்சம் தலைமுடி, சாதம், விளக்கோடு முறத்தில் வைத்து ஊருக்குத் தெற்குப்பக்கம் போடும்படிச் செய்தாள். அழுகை குறைந்தது. ஆனால், பையன் மெலிந்தபடியே இருந்தான். மேற்கு வானத்தில் இரத்த நிறத்தில் மேகங்கள் தினநதோறும் தென்பட்டன. ஏதோ அசம்பாவிதம நடக்கப்போவதாகப் பாட்டி சந்தேகிக்கத் தொடங்கினாள். "எங்க காலத்துலெ இந்தக் கன்ட்ரோல் இதெல்லாம் தெரியாது। இருக்கப் பட்ட அம்மா பக்கத்துவீட்டு இல்லாத அம்மாவுக்கு இலையோ கிளையோ ஏதாவது முடிஞ்சதைக் கொடுப்பா. ஆனாலும் தாட்சண்யம் இல்லாமயே இருந்து கிட்டிருந்தா பொழைக்கறது எப்படி?"

நீலி, இருக்கும் கஞ்சித் தண்ணீரை வெங்கன்னா, கென்னம்மா போன்ற அனாதைகளுக்கு ஊற்றுவாள். ஒரு நாள் புல்லய்யா பொழுது போயும் வீட்டிற்கு வரவில்லை. கணவனுககாகச் சாதம் எடுத்து வைத்திருந்தாள். பிச்சை கேட்டுக்கொண்டே குஷ்ட ரோகி ஒருவன் வந்தான். பார்பபதற்கு பயங்கரமாக நோய் உடம்பு முழுவதும் பரவி இருந்தது. "ஊர்லெ அந்த முனையிலெருந்து கேட்டுக்கிட்டே வாறேன். எந்தம்மாவுக்கும் கருணெ பொறக்கலே. ரெண்டு நாளு ஆச்சிம்மா . . . வாயிலெ ஒரு மடக்கும் கஞ்சி ஊத்தலே. இப்படியே போயி அந்த ஆத்துலெ விழுந்து சாவறேன். என் பொணத்தை எந்த நாயோ நரியோ தின்னுதுன்னா கொஞ்சம் புண்ணியமாவது வரும்," என்றான்.

"ராம, ராம!" என்றாள் நீலி.

"எனக்கு எந்தப் பாவமும் தெரியாது தாயே! எனக்கிப்படி ஒரு கொடுமை வந்தது. இப்படி வந்ததே அதுக்காக கடவுளைத் திட்றேனா? எந்த ஜன்மத்திலே என்ன பாவம் பண்ணேனோ, இந்த ஜன்மத்திலெ அனுபவிச்சிட்டா அடுத்த ஜன்மத்திலியாவது சுகப் படுவேன்."

நீலி அவனுடைய எவர்சில்வர் கிண்ணத்தில், கணவனுக்கு வைத்திருந்த சாதத்தில் பாதியைப் போட்டாள். நின்று கொண்டே ஒரு நிமிஷத்தில் காலி செய்துவிட்டான்! மறுபடியும் கொஞ்சம் கொண்டு வந்து போட்டாள். பிறகு கணவனுக்கு இல்லாமற் போய்விட்டது. "தாயே! இந்த வயிறு ஒரு சமுத்ரம் அம்மா! பசி நெருப்பு மாதிரி. நெருப்புக்கு ஏதாவது ஒண்ணு போடாமப் போனா, மனுஷனையே எரிச்சிடுது. ஒரு உசிரெக்காப்பாத்தனே தாயே! உன் தர்மமே உன்னைக் கொட மாதிரி காப்பாத்தும்," என்று வாழ்த்தினான்.

நீலி அடுப்புப் பற்ற வைத்துச் சமைத்துக்கொண்டிருந்தாள். ஆனால் உடம்பெல்லாம் ஏதோ சுற்றுவது போலிருந்தது. புல்லய்யா விறுவிறென்று நடுங்கிக்கொண்டே வந்தான். மகன் எதிரில் வந்து சிரித்துக்கொண்டிருந்தான். ஆனால் ஒன்றும் சொல்லாமல் மரக்கட்டிலில் உட்கார்ந்து பொலபொல வென்று அழுது கொண்டிருந்தான். நீலி வந்து பார்த்துவிட்டு ஆச்சரியத்தில் பேச முடியாமல் வாயடைத்து நின்றாள். ஒரு தடவை சத்தமாக அழுதான். மல்லு அப்பாவைக் பார்த்துவிட்டு ஒரே ஆர்ப்பாட்டம் பண்ணத் தொடங்கிவிட்டான். இவர்கள் இருவருடைய அழுகையிடையே நீலியின் கண்களில் நீர் கசிந்து மெதுவாக உதிரத் தொடங்கியது. பாட்டியின் கண்களை நீர்ப்படலம் போர்த்திவிட்டது! இதற்குள்ளாக ஊரெல்லாம் கொந்தளித்து விட்டது. சிறியவர்கள், பெரியவாக்ள், சிறுவர்கள், குழந்தைகள் எல்லாருடைய கண்ணிலும் நீர்தான் தென்பட்டது. வித்தியாசமில்லாமல் எல்லாரும் அழுது கொண்டிருந்தார்கள். உலகமே தலைகீழாகிக்கொண்டிருந்தது. 'இனி நாம எதுக்காக இருக்கணும்? இனி நாம் நல்லா இருப்போமா? –' என்று

ஒவ்வொருவரும் சொல்லிக் கொண்டிருந்தார்கள். குஷ்டரோகி கூட விஷயத்தை அறிந்த உடன் தலையிலடித்துக் கொண்டு அழுதான்.

ஊரெல்லாம் நீலம்மன் கோவிலருகில் கூடியது, 'சரி! யாரோ அறிவில்லாத வெறியன் அந்தக் காந்தி மகாத்மாவைச் சுட்டுக் கொன்று விட்டான். அந்தக் கடவுள் இனிமேல் மனித உருவத்தில் இல்லாமற் போனாலும் நம்ம மனசிலே அப்படியே இருப்பார். கடவுள் இல்லேன்னா இந்த உலகம் இருக்குமா --' என்று ஒவ்வொருவரும் ஒவ்வொன்று சொன்னார்கள். அவருடைய ஆத்மா சாந்திக்காகப் பிராத்தனை செய்தார்கள். பத்தாவது நாள் நீலம்மனின் கோவிலெதிரில், ஊரெல்லாம் கூடி ஏழைகளுக்கு அன்னதானம் செய்தார்கள். எல்லாரும் ஒன்று சேர்ந்து இணைந்து கனத்த இதயங்களோடு இந்த வேலையை நிறைவேற்றினார்கள். அந்தச் சமயத்தில் தாசன் நீலம்மன் கோவில் கதவைத்திறந்து, வாயிற்படி அருகில் சந்தோஷத்தோடு கம்பீரமாக நின்று கொண்டிருந்தான். சாப்பிட்டுகொண்டிருந்த முகங்களைப் பார்க்கும் போது அவனுக்கும் எவ்வளவோ இரக்கமாக் இருந்தது. நீலம்மாத் தாயைப் பார்த்தான். ஆனந்தத்தோடு சிரிப்பது போல் தோன்றியது -- காட்சி அளித்தது! ஒரு தடவை ஜனங்களைப் பார்த்து, "மக்களே பாருங்கப்பா! இந்தத் தாயோட சந்தோஷம் இவ்வளவு அவ்வளவுன்னு சொல்லமுடியாது! அந்தக் காந்தி மகாத்மா கடவுள் -- கடவுள் பேரைச் சொல்லி நீங்க நல்லா வெலை செய்யறீங்க -- நல்லா வேலை செஞ்சா யமதூதனுங்க விலகிப் போக மாட்டாங்களா? அந்தத் தாய் சந்தோஷப் பட மாட்டாளா?"

பீஸ் எழுந்தான். "அந்தத் தெய்வத்தை, அந்த உருவத்திலெ இனிமே பார்க்க முடியாது. ஆனா, அய்யாமாரே! அந்தத் தெய்வம் காட்ன வழியிலே போனா, இந்த ஏழை பாழைகளுக்கு அந்தப் பெரிய விவசாயி மாதிரியே விரலெல்லாம் வாய்க்குள்ளே போவும். வீட்டுக்குள்ளே ஒர்ததன் வயிறு நிறையத் தின்னு அவஸ்தைப்பட்டு, மத்தவங்க வயிறெல்லாம் காய்ஞ்சிதுன்னா அந்த வீடு வீடுதானா? நிறைய விளைஞ்சிதுன்னா, இருக்கறதெ நாலு பேருக்குப் பங்கிட்டுத் தர்றவன் மனுஷன். . . தான் மட்டும் தனியாச் சாப்பிடாமெ மத்தவங்களுக்கும் கொடுக்கறவன் பெரிய மனுஷன். எல்லாரும் பெரிய மனுஷங்களாயிடுவாங்க!"

பெரிய மனிதர்கள் முகங்களைத் திருப்பினார்கள். சிறிய மனிதர்கள் கவனத்தோடு கேட்டு உண்மைதான் என்று எண்ணிக் கொண்டார்கள். இதற்கிடையில் சஞ்சீவி காதில் நாயுடு ஏதோ சொன்னான். விறுவிறென்று சென்று பீஸ்வின் கையைப் பிடித்துக்கொண்டு, "சொற்பொழிவு ஆற்றுவது இருக்கட்டும் வாடா! பத்து பேருக்குச் சாதம் வடிக்கணும் வா!" என்றான்.

பீஸ் கையை உதறிக்கொண்டு, குழம்புப் பாத்திரத்தை எடுத்துக்

கொண்டே, "மைனர் தர்பார் பெரிய தர்பார்," என்று முணுமுணுத்துக் கொண்டான்.

## 16

மகன் தன் கைகளால் கழுத்தைச் சுற்றிப பிடித்துக் கொண்டதுமே, புல்லய்யா அப்படியே மெதுவாக ஓட்டமும் நடையுமாய் தெருவில் போய்ச் சேர்ந்தான். மகன் சந்தோஷத்தோடு சிரித்துக்கொண்டிருந்தான் மறுபடியும் மெதுவாக நடக்கத் தொடங்கியதும், ஊ! ஊ! அப்பா!" என்று, ஓடச்சொல்லிச் சிணுங்கினான். அப்படியே நடையும் ஓட்டமுமாக ஆதெம்மக்கா வீடு வந்து சேர்ந்துவிட்டான்.

ஆதெம்மக்கா வயிற்று வலியால் அழுது கொண்டிருந்தாள். ஓமம், சீரகம் ஆகியவை இப்பொழுது வேலை செயயவதில்லை. பக்கத்து ஊரிலிருந்த நாட்டு வைத்தியர் சூர்ணப் பொட்டலங்கள் கொடுத்தார். கொஞ்சம் குணமாக இருந்தாலும், மறுபடியும் ஒவ்வொரு முறை தாங்க முடியாத அளவு வலி எடுத்தது.

சுற்றி இருந்தவர்கள் ஒவ்வொருவர் ஒவ்வொன்று சொல்லலானார்கள். "பட்ணத்துக்கு அழைச்சிகிட்டுப் போனா போட்டோ எடுப்பாங்க. என்ன இருக்குதோ தெரிஞ்சி போயிடும்," என்று பீஸ் ஆலோசனை கூறினான். எந்த ஆலோசனையையும் மருமகன் காதில் போட்டுக் கொள்ள வில்லை. வீட்டில் மேற்பார்வை அவனுடையதுதான். "எதுக்குடா, அந்த வைத்தியர் தலைமேலெ அடிசசி சரி பண்றேன்று சொல்லிகிட்டிருக்கப்பொ? அவசரப்படாதீங்க," எனறு சால்ஜாப்பு சொல்லிக்கொண்டிருந்தான். மருந்து ஒரு பொட்டலம் போட்டதுமே கொஞ்ச நேரத்தில் வலி குறைந்தது. ஆதெம்மாக்கா முகம் மல்லுவைப் பார்த்ததும் கொஞ்சம் மலர்ந்தது. அந்த மரக்கட்டிலில் நகர்ந்து படுத்து, மல்லுவை அருகில் உட்கார வைத்துக் கொண்டாள். ஆனால் அவன் சிணுங்கிக் கொண்டே அப்பாவை நோக்கி நகர்ந்து விட்டான். மறுபடியும் தன் சின்னக் கைகளால் கழுத்தைச் சுற்றிக்கொண்டு அப்பாவுக்கு முத்தங்கள் கொடுக்கத் தொடங்கினான்.

எதிர்பார்த்த வார்த்தைகள் மருமகன் வாயிலிருந்து வந்தன. புல்லய்யா கல்யாணத்திற்கு வாங்கிய இருநூறு ரூபாயைச் சீக்கிரமாகத் திருப்பித் தந்து விடவேண்டும் என்றான். மலை ஆடுகள் வாங்க வேண்டிய அவசியம் வந்ததாகவும், பணம் குறைவதாகவும் சொன்னான். புல்லய்யா பதிலொன்றும் சொல்லவில்லை. ஆதெம்மக்கா, அவசரப்படுத்தினா எப்படிப்பா?" என்றாள். "அவன் தேவைக்குக் கொடுததப்பொ, நமக்குத் தேவை இருக்கறப்பொ அவன் கொடுக்கணுமா வேணாமா? நேத்து நூறு ரூபாய் வித்த மலையாடு இன்னக்கி நூத்தி இருபத்தஞ்சி விக்குது. புல்லய்யா சீக்கிரமா எப்படியோ பாத்து, கடனை அடைச்சீன்னா எனக்கு நஷ்டமில்லாம

இருக்கும்," என்றான்.

தலை ஆட்டிவிட்டு வீட்டுக்கு வந்து மனைவியிடம் சொன்னான்" அவனுக்கு யாரோ சொல்லிக் கொடுத்ததை அப்படியே சொல்றான். இல்லேன்னா, இப்பொதான் நெல்லு பெரிய கலம் எழுநூறு வீதம் வித்தான், பணம் எபபடி இல்லாமெ போயிடும் !'

நீலி, ஒரு வினாடி மௌனமாக இருந்துவிட்டு, "இத்னெ நாளு சும்மா இருந்தாங்க -- இன்னொரு விவசாயியா இருந்தா சும்மா இருப்பாங்களா?" என்றாள்.

"நமக்குச் சும்மா குடுத்தாங்களா என்ன? வட்டி நெல்லை இப்பொ கூட குறைக்காமெ குடுக்காமயா இருக்கறோம்?"

"இந்த தங்கத்த வெச்சிகிட்டு என்ன பண்றது?" என்று சொல்லிக்கொண்டே போட்டிருந்த தெல்லாவற்றையும் கழற்றி, கணவன் கையில் வைத்து, பலவந்தப்படுத்தி, தட்டான் சின்னானிடம் அனுப்பினாள். திரும்பிவந்து, "மட்டமான தங்கம்ன்னு சொல்லி தோலாவுக்கு நாலு ரூபாய் அடிச்சிக்கலாம்னு பாக்கறான். பட்ணத்திலெ கொண்டு போய்ப் பாககலாம்" என்றான்.

நீலி, " ஊரெ நம்பிப் பொழக்கறவனெ விட்டுட்டு, யாருக்கோ கொண்டுபோய்க் குடுக்கறப் போறியா? குழந்தை குட்டி இருக்கறவன், பேராசை பிடிச்சிருக்குது அவனுக்கு. நாம வாங்கன விலையெவிட அதிகப் பணம் வருதில்லியா . . இவன்கிட்டேயே குடுத்துடு," என்று வற்புறுத்திக் கணவன் மீண்டும் அனுப்பினாள்.

கடனை அடைத்த பிறகு, மிஞ்சிய பணத்திற்குத் துணி வாங்கலாமென்று போனான். கோ-ஆப்பரேடிவ் ஸ்டோரில் துணி இல்லை. "ஏன் இல்லெ?" என்று கேட்டதற்கு, "என்னைக்கோ உனக்குப் பணம் வரும்னு துணிய ஒழிச்சி வெக்கணுமா " என்று பரிகாசம் செய்தான் ஸ்டோரில் இருந்த நாயுடு.

கிழவன் காலி பாப்பய்யாவிடம் சென்றான். நூல் விலை மிகவும் ஏறிவிட்டதாகவும், கண்ட்ரோல் நூல் என்று பெயரே தவிர, கிடைப்பதில்லை என்றும், தன் கஷ்டங்களைச் சொல்லிக்கொண்டே, புடவைகளைக் காட்டினான். மிஞ்சிய பணத்திற்குத் தனக்கொரு வேட்டி, மனைவிக்கொரு புடவை பாட்டிக்கொரு தானு வந்தது. முன்பு இரண்டு ரூபாய்ப் புடவை இப்போது பத்து ரூபாய் ! ஊரை நம்பிப் பிழைத்து வந்த சாலி பாப்பாய்யாவிடம் வாங்கியதற்காக நீலி சந்தோஷப்பட்டாள்.

நீலி புதிய துணிகளைப் பெரியவர்கள் உறவினர்களுக்குக் காட்டினாள். பாட்டி பொக்கைவாய்ச் சிரிப்போடு புதிய தானைக் கட்டிக் கொண்டாள். பேரனைக் கொஞ்சி முத்தமிட்டாள். வயலிலிருந்து வரும் அப்பாவைப் பார்த்த உடனே, பாட்டியின் கைகளிலிருந்து வழுக்கிச் சென்று, மடமடவென்று துள்ளிக் குதித்தபடி, சிரித்துக்கொண்டே அப்பா எதிரில் போனான். அப்பாவின்

மேலேறியதும், புல்லய்யா திண்ணை மீது உட்கார்ந்து கொண்டு மகனுடன் விளையாடத் தொடங்கினான். புது வேட்டியை முதலில் மகன் மீது போர்த்தினான். பொக்கை வாய்ச் சிரிப்பைப் பார்த்து, அவனை அப்படியே தூக்கவே,. கூரைவளையைப் பிடித்துக் கொண்டான் மல்லு. ஊஞ்சல் போல் ஆட்டினால் அவன் அழவேயில்லை. மகனை மார்போடு அணைத்துக் கொண்டு, "பலே! பலே!" என்றான். நாளுக்கு நாள் மல்லுவுக்கு அப்பாவிடம் தான் நெருக்கும் அதிகமாகி வந்தது. இரவில் அழும் போது அப்பா அருகில் இருந்தால் அழுகை போய்விடும். பாட்டி சிரித்துக்கொண்டே," அவன் அப்பா மகனே தவிர, அம்மா மகனில்லை!" என்று சொன்னதற்குப் புல்லய்யா, "யார் மகனா இருந்தாலும், உன் பேரன்தான் ஆவட்டும்!" என்று சொன்னதும் பாட்டி, ஆனந்தத்தில், பல்லில்லாத உதட்டுச் சிரிப்போடு மெய்ம்மறந்து போய்விட்டாள். கூன் விழுந்த அந்த உடம்பை எங்கே சாய்த்தாலும் ஒரு கண் அந்தப் பேரன் மேலெதான் -- அந்த மெலிந்த உடம்பு எங்கே இருந்தாலும் மனத்தில் அந்தப் பேரன் நினைப்புதான் --।

ஒவ்வொரு சமயம் கடந்த காலம் நினைவுக்கு வரும். 'அந்தத் தெய்வம் -- எங்கப்பா!' என்று நினைத்து உள்ளம் மகிழ்ச்சியால் நிறைந்து போகும். எதற்கும் அவள் அலுத்துக் கொண்டதில்லை. துக்கத்தில் முழுகிப் போய்விட வில்லை. சந்தோஷத்தில் தலைகால் தெரியாமல் ஆடியது மில்லை. பேரன் வயலுக்குப் போகும் அப்பாவின் பின்னால் போக மெல்ல நடை போட்டுக் கொண்டிருந்ததால் அவனைப் பிடித்துக் கொண்டாள். திமிறிக்கொண்டு, பாட்டியின் முடியைப் பிய்க்கத் தொடங்கினான். அப்போதும் விடவில்லை.; எப்படியோ திமிறித் திமிறி விடுவித்துக்கொண்டான். பாட்டி பலமாகச் சிரித்தாள், 'எந்த மரத்தின் விதை. . . !' என்று சொல்லிக்கொண்டாள். அப்பா தென்படவில்லையாதலால், அழத் தொடங்கி விடுவான். யார் எவ்வளவு சமாதானம் சொன்னாலும் கேட்பதாக இல்லை. அழுது அழுது களைத்துப் படுத்துக் கொண்டான்.

புல்லய்யா வயலிலிருந்து மீண்டு வந்ததும், தரையில் படுத்திருந்த மகனைத் தூக்கி கட்டில் மீது படுக்க வைக்கப் போக, விழிப்பு வந்து, "அப்பா!" என்று ஒரு கூச்சல் போட்டான். அப்பாவைப் பார்த்ததும் உயிர் வந்தது; மடியில் ஏறி நின்று கழுத்தைக் கைகளால் சுற்றிக்கொண்டான்.

கிராமக் கணக்கனுடைய தந்தைக்கு, இழந்துவிட்ட ஆஸ்தியை மீண்டும் சம்பாதிக்க வேண்டும் என்ற ஆசை இருந்தாலும் இல்லாமற் போனாலும், மகன் தன் குடும்பத்தைக் காப்பாற்றும் அளவிற்குப் போதுமான நில வசதியை, இந்தக் கண்ட்ரோல் நாட்களில் சம்பாதித்துக் கொள்ள வேண்டும் என்று படாதபாடு பட்டான்.

இரவோடு இரவாக ரோட்டை ஒட்டி, குறுக்கு வழியில், கறுப்பு மார்க்கெட்டில் வாங்கிய நெல் மூட்டைகள் போய்க் கொண்டிருந்தால், கணக்கன் நிறுத்தாமலிருக்க முன்னாடியே கொஞ்சம் பணம் அவன் கைக்கு வந்து சேர்ந்துவிடும். கோவாப்பரேடிவ ஸ்டோர்ஸ் மூலமாகக் கொஞ்சம் பணம் வந்து சேரும். மேலும், ஊரில் ப்ரொக்யூர்மெண்ட் கணக்கு விவகாரங்களில் கிடைக்க வேண்டியது தாராளமாகவே கிடைத்தது. இவ்வளவு வந்தாலும் கிழவனுக்குத் திருப்தி ஆகவில்லை. வருவதைப் பாதுகாக்கும் கலை மருமகளுக்குத் தெரியாது. மனைவி அவளை விட மோசம். மாசத்திற்கு, அதை விடப் பெரிய குடும்பங்களுக்கு இரண்டு சேர் நல்லெண்ணெய் செலவானால், இவர்கள் வீட்டில் ஐந்து சேர் எண்ணெயும் போதாது. சத்தம் போட்டாலும் கிழவனை அவர்கள் லட்சியம் செய்வதில்லை. இவ்வளவு வந்தும் வீட்டில் நிலைமை சரியில்லை.

புல்லய்யா, அனுப்ப வேண்டியதை அனுப்பச் சொல்லிக் கேட்டால், "என்கிட்டெ என்ன இருக்குது?" என்று சொல்லி விட்டான். இந்த விஷயம் நீலிக்குத் தெரியாது. அந்த வருஷம் ப்ரொக்யூர்மெண்ட் ஏப்ரல், மே மாதங்களில் தீவிரமாக நடந்து வந்தது. ஏஜண்டுகள் வந்து கொண்டிருந்தார்கள். நெல் கண்ட்ரொல் விலை, பெரிய கலம் முன்னூறு ரூபாய். அதே ஏஜண்ட், இரவு நேரத்தில் கறுப்பு மார்க்கெட்டில் பெரிய கலம் எழுநூற்றுக்கு வாங்கிக் கொண்டிருந்தான். இநத விஷயத்தில் அவனுக்கு உத்தியோகஸ்தர்களின் உதவி நன்றாகக் கிடைத்து வந்தது. முன்பெல்லாம் பணத்தைக் கண்ணில் ஒற்றிக் கொள்வார்கள். இப்போது மாமூலாக வந்த நோட்டுக் கட்டுகளைக் காகிதக் கட்டுகளாகப் பார்த்து, நெல்லைத்தான் கண்ணில் ஒற்றிக் கொண்டார்கள். கணக்கன் கொடுத்த கணக்குகளால், பத்துப் பெரியகலம் விளையும் பெரிய விவசாயி, ஒரு பெரிய கலம் ப்ரெக்யூர்மென்டுக்கு அளந்து கொடுத்தான். ஒரு பெரிய கலம் விளையும் சிறிய விவசாயி, பாதி அளக்க வேண்டும். இது அநியாயம் என்றால், பெரிய விவசாயியின் கூலிக்காரர்களுக்கு, சாப்பாட்டிற்கு, ஆடுமாடுகள் தீனிக்கென்று கணக்குப் போட்டுக் கழித்தால் மிஞ்சியது ஒரு பெரிய கலம்தான் ! அந்தக் கலத்தைத்தான் ப்ரொக்யூர்மெண்டுக்கு அளந்து கொடுப்பதாகச் சொன்னார்கள். பெரிய விவசாயிகளின் இந்தக் கணக்கு, போலீஸின் உதவி, அவ்வப்போது வரும் ஆஃபீஸர்களின் துணை, கிராம உத்தியோகஸ்தர்களின் ஆதரவுமிருந்தால், சிறிய விவசாயிகளால் எதிர்த்துப் பேச முடியவில்லை.

புல்லய்யாவின் முறைவந்தது. பதினைந்து கூடை (கூடைக்கு 40 படி) அளக்க வேண்டும் என்று சொன்னார்கள். "என் குதிர்லெ பத்துக் கூடை கூட இல்லே. இன்னும் ஒரு வருஷத்துக்குச சாப்பிடணும் -- ஏர் உழவறங்களுக்கு, நாத்து நட்றவங்களுக்கு, அறுவடை செய்யவறங்களுக்கு -- எல்லாம் கூலிக்கு என்னத்தெக்

கொடுப்பேன்? நானு அளக்க மாட்டேன்," என்று புல்லய்யா ஆவேசமாகச் சொன்னான். "அளக்காமெ தப்பிக்க முடியா" தென்று நாயுடு, கணக்கன் முதலியோர் வலுக்கட்டாயமாக வீட்டிற்குப் போனபோது, பாணாத் தடியைத் தூக்கிக் கொண்டு, குதிர் அருகில் சென்று, "எவன் வந்து என் குதிரெத் தொட்றனோ பாக்கறேன்." என்று நின்று கொண்டான்.

தொலைவிலிருந்தே எல்லாரும் பின்வாங்கிவிட்டார்கள். அந்த நேரம் நீலி வீட்டிலில்லை, ஆற்றுக்குப் போயிருந்தாள். திரும்பி வந்ததும் பாட்டி நடந்ததைச் சொன்னாள். உடனே விர்றென்று கணக்கன் வீடடிற்கு ஓடினாள். கணக்கன் ஊர் இளந்தலைவர்களுடன் சீட்டாட்டத்தில் மூழ்கியிருந்தான். காலைப் பிடிக்காத குறையாக ஆபத்திலிருந்து எப்படியாவது காப்பாற்றும் படிக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள். கணக்கன் காதில் வாங்காதது போலவே, "நீ என்ன சொன்னாலும் பிரயோஜனமில்லே. அந்த அறிவு உன் புருஷனுக்கு கிருந்தா இந்தத் தொந்தர வெல்லாம் வருமா? இந்தக் காலத்திலெ நல்லவனா இருந்தா பொழக்கமுடியுமா?"

நீலி என்ன சொன்னாலும், கணக்கன் சீட்டாட்டத் தொல்லையில், "போ போ," என்றே விரட்டிக் கொண்டிருந்தான். வீட்டிற்குத் திரும்பினாள். 'என்ன நடக்கப் போவுதோ!' என்று பயந்து கொண்டிருந்தாள். புல்லய்யா வீராவேசமாக, "இனிமே குதிர்கிட்டெ வருவானா எவனாவது-" என்று சொல்லி மீசையை முறுக்கிக் கொண்டிருந்தான்.

மகனுக்கு அப்போதே குஸ்தி கத்துக் கொடுக்கத் தொடங்கினான். மீசையை முறுக்குவது, தொடைகளைத் தட்டுவது ஆகியவற்றைக் கற்றுக் கொடுக்கவே, நீலி அதைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்து விட்டாள். "இந்தத் தடவை குதிர்கிட்டெ யாராவது வந்தா, நான் எதுக்குப் போவணும்? மல்லுவே போதும்," என்று சொல்லி, உரக்கச் சிரித்துக்கொண்டே, மகனைத் தூக்கிக் கொண்டு தெருவில் இறங்கிப் போனான்.

இந்த நிகழ்ச்சி நடந்து நான்காவது நாள் ஊருக்குள் போலீஸ்காரர், எஃப். எஸ். ஓ, டி. எஸ். ஓ எல்லாரும் வந்தார்கள். சிறிய விவசாயிகள் இவர்களைப் பார்த்த உடன் நெல் அளந்து கொடுத்து விட்டார்கள். அளக்கும் போது கண்களில் கண்ணீர் வழிந்தது. நெல்லுக்காகக் கொடுத்த காகிதங்களை மரப் பெட்டிகளில் எறிந்தார்கள் சிலர்.

புல்லய்யா மீசையைத் தடவிக்கொண்டு, தடியைப் பிடித்தபடி குதிரின் படியில் உட்கார்ந்திருந்தான். பாட்டி புழக்கடையில் வைக்கோல் போருக்கு அருகில் வரட்டி தட்டிக் கொண்டிருந்தாள். மல்லு தொட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தான். நீலி இலை பறிப்பதற்காகத் தோட்டத்திற்குப் போயிருந்தாள்.

தண்டல் கூட்டம் புல்லய்யா வீட்டிற்கு வந்தது. டி. எஸ். ஓ. "நீ

தான் புல்லய்யாவா?" என்று கேட்டார்.

"உத்திரவு"

"நீ அளக்க வேண்டிய பதினஞ்சி கூடை நெல்லெ அளக்கறியா? இல்லெ ஜெயிலுக்குப் போறியா?"

"ஏன் துரெ அப்படிக் கோவிச்சிக்கிறெ?"

"உன் முடிவு!"

"அளக்க மாட்டேன்."

"நீ அளக்கலேன்னா, நாங்களே அளந்துகிட்டு, உன் பணத்தெ உன் மூஞ்சிலெ எறிஞ்சிட்றோம்," என்று சொலலிவிட்டு, முன்னால் வரத் தொடங்கியதும், புல்லய்யாவிற்கு உடம்பெலலாம் கோபத்தால் பற்றி எறியத் தொடங்கியது. பாணாத் தடியைத் தாங்கிக் கொண்டு, "அங்கேயே நில்லுங்க. என் குதிர் மெலெ கை பட்டுதுன்னா உங்க முதுகெல்லாம் பழுத்துப் போயிடும். பத்துப் பெரிய கலம் விளைஞ்சவனும் நானும் ஒரே அளவு அளக்கணுமா? இந்தத் திருட்டுக் கணக்கைக் காட்டி எங்க வயத்தெக் காயவெக்கிறீங்களா?"

"பிரசங்கத்தை நிறுத்திவிட்டு இடத்தை விட்டு நகர்றியா இல்லெயா?" என்று சொல்லிக்கொணடே, டி. எஸ். ஓ. மேலும் முன்னால் வரவே, புல்லய்யா ஆத்திரத்தோடு கும்பீரமாக அவர் கண்களில் முறைத்துப் பார்த்தான். இதற்கிடையில் அதிகாரி போலீஸ்காரரைப் பார்த்து சைகை செய்தான். அவர்கள் சுற்றிச் சூழ்ந்து வரவே, அதிகாரி குதிரின் படியில் ஏறப் போனார். புல்லய்யாவுக்கு உடம்பெல்லாம் ஆத்திரத்தால் எறியவே, "குதிரத் தொடாதே!" என்று சத்தமாகக் கர்ஜிததான. அந்தச் சத்தத்தைக் கேட்டு அதிகாரிக்கு நடுக்கம் கண்டாலும், சாவதானமாகக் குதிரைத் தொட்டார். உடனே புல்லய்யா ஒரு துள்ளு துள்ளி, அந்த உயரத்திலிருந்து அதிகாரியைக் கீழே தள்ளிவிட்டான்.

கீழே விழுந்த அதிகாரியின் கண்கள் சிவந்தன. "புடிங்க! விலங்கை மாட்டுங்க!" என்று கத்தினார். சுற்றிச் சூழ்ந்து நெருங்கி வந்த போலீஸ்காரரை எட்டி உரைத்தான். எரியும் வயிற்றோடு, வாய் என்ன பேசுகிறது, கைகால்கள் என்ன செய்கின்றன என்பது தெரியாமல், உணர்ச்சிக் கொந்தளிப்பில் தடுமாறிக் கொண்டிருந்தான். இதற்கிடையில் நீலி ஓடோடி வந்தாள். ருத்ர மூர்த்தி போல தாண்டவ மாடிக் கொண்டிருந்த கணவனைப் பார்த்ததும் பயந்து போனாள். தொட்டிலில் பையன் ஓவென்று அழுது கொண்டிருந்தான். பாட்டி இந்தக்காட்சியைக் கணணால் பார்க்கமுடியாமல்ஸ்தம்பித்திருந்தாள். நாலு போலீஸ்காராகள் கை கால்கள் முறிவதற்கு இன்னும் அதிக நேரம் பிடிக்காது. அவர்களுடைய லத்திகள், ராக்கட் போல் சுழலும் புல்லய்யாவின் பாணாத் தடியின் முன் செயலற்றுக் கிடந்தன! ஊரெல்லாம் வந்து அங்குக் குழுமி விட்டது.

இந்தக் கொந்தளிப்பான நிலையில், நீலி தலை மீதிருந்த

கூடையைக் கீழே இறக்கிவிட்டு, கணவனின் கால்களைப் பிடித்துக்கொண்டு ஏதேதோ சொன்னாள். அந்த ஆரவாரத்தில யாருக்கும் அவள் சொன்னது இன்னதென்று கேட்கவில்லை. புல்லய்யா முகத்தில் வியர்வை பெருக்கெடுத்து வழிந்தது. அந்த வியர்வைத் துளிகள் கீழே இருந்த மனைவி மீது விழுந்தன. சுற்றி இருந்த ஜனங்கள் இப்போது தென்பட்டனர் தன் கண்களுக்கு.

காலருகில் இருப்பது தன் மனைவிதான் என்பது நினைவிற்கு வந்து எட்டி உதைக்கவில்லை. அவளைப் பார்த்ததும் தான் ஏதோ பெரிய குற்றம் செய்து விட்டோமோ என்ற எண்ணம் மனத்தில் தலை தூக்கியது. அப்போதுதான், இத்தனைப் பேர் பேசிக் கொண்டிருந்தாலும், மகனின் அழுகைச் சத்தம் காதில் கேட்கத் தொடங்கியது. அவ்வளவு நேரம் தான் இந்த உலகில் இல்லாதது போல் பிரமை தட்டியது. அடிபட்ட போலீஸ்காரர் மெல்ல மெல்ல அருகில் நெருங்கிக் கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்தும், ஏனோ கருணைப் பிறந்தது. 'எலும்பும் தோலுமா இருக்கற இந்தப் பசங்க மேலெயா, நான் இவ்வளவு நேரம் என் பலத்தெக் காட்டிகிட்டிருந்தேன்!' - தனக்குள் நினைத்துக் கொண்டான்.

விறுவிறுவென்று அங்கிருந்து நகரப் போனால், போலீஸ்காரர்கள் பிடித்துக்கெண்டார்கள். அவர்களிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு, ஓடி வீட்டிற்குள் நுழைந்து, தொட்டிலில் அழுது கொண்டிருந்த மகனைத் தூக்கிக்கொண்டு முத்தங்கள் கொடுத்துக்கொண்டே, "மல்லு! உன்னெக் குதிருக்குக் காவலிருக்கச் சொன்னோன்'லலே! இன்னக்கி உங்கப்பா மீசையில்லாத பசங்ககிட்டே சண்டெ போட்டான் -- இந்த மீசை இருந்து என்ன பிரயோஜனம்!"

மகன், இதெல்லாம் தனக்காகச் சொல்லப்பட்டது என்று நினைத்துப் புரிந்துவிட்டது போல் அப்பாவைப் பார்த்தான். உடம்பெல்லாம் சந்தோஷத்தில் குலுங்கிவிட்டது. ஆனால் அந்த நிமிஷத்தில் வீடெல்லாம் கொல்லென்று ஒரே ஆரவாரம்! கைகளில் விலங்கு விழுந்த புல்லய்யா, ஓயாமல் அழுது கொண்டிருந்த மல்லுவைப் பார்த்தான். இன்னும் கொஞ்ச நேரம் பார்ப்பதற்குக் கூட வாய்ப்பில்லாமல் போய்விட்டது. கைகளில் விலங்கோடு நீலியைப் பார்த்தான். அவள் கண்களில் நீர் நிரம்பியிருந்தது. அவள் தன்னைப் பார்த்துவிட்டுக் கண்களைத் திரும்பி விட்டதால், தான் ஏதோ பெரிய குற்றம் செய்து விட்டதாகத் தோன்றியது. அப்படியே வீட்டை விட்டு நகர்ந்து, ஊர் நடுத்தெரு வழியாகக் கை விலங்கோடு நடந்து போகும்போது, இதற்கெல்லாம் காரணமான ராஜு வீட்டுத் திண்ணை மேல் நின்று கொண்டு பார்த்துச் சந்தோஷமடைந்தான்.

# 17

பீஸ்யும் தாசனும் பட்டணத்திற்கு ஓடினார்கள். மாலை திரும்பி வந்து அடுத்தநாள் ஜாமீன் எடுக்கப் போக வேண்டு மென்றார்கள். வக்கீலை வைக்க வேண்டு மென்றார்கள். வீட்டில் பணம் இல்லை. யாரைக்கேட்கலாம் என்று நீலி யோசித்துக் கொண்டிருக்கையில், ராஜுவின் மனைவி வீட்டுக்கு வந்து நல்லது கெட்டது பேசிவிட்டு, ஐம்பது ரூபாய் கடன் கேட்காமலெ கொடுத்தாள். நீலி நன்றி தெரிவித்தாள்.

மறுநாள் பத்து மணிக்கு மறுபடியும் போலிஸ்காரர் புடை சூழ முந்திய நாள் வந்த தண்டல் கூட்டம் வந்தது. அவர்களைப் பார்த்ததும் நீலி வெளியே வந்தாள்.

முந்திய நாள் அவமானப்பட்ட அதிகாரி "நெல்லு அளக்கணும்மா", என்றார்.

நீலி ஒன்றும் பேசாமல் குதிரின் சாவியைக் கொண்டுவந்து கதவைத் திறந்தாள். திறந்த பிறகு, அதிகாரி முன்னால் நின்று, மிகவும் பணிவோடு, "ஐயோ! எல்லாம் போக மிஞ்சுனதை இந்தக் குதிர்லெ தான் போட்டு வெச்சோம். விதைக்கறதுக்கு, சாப்பிட்றதுக்கு எவ்வளவு விட்டு வைப்பீங்களோ - பெரிய துரைங்க, நல்லது கெட்டது உங்களுக்குத் தெரியாதா? உங்களுக்கு நியாயம்னு பட்றதைச் செய்யுங்க," என்றாள்.

அவள் சொல்ல வந்ததைச் சொல்லும் முறையைக் கேட்டதும் அதிகாரியின் மனம் கரைந்தது. குதிருக்குள்ளே எட்டிப் பார்த்துவிட்டுச் சற்று அருகில் வந்து, "பட்டணத்திலே உங்களெ மாதிரி ஜனங்க இருக்கறாங்க. அவங்களை விவசாயிங்க காப்பாத்தலேன்னா அவங்க செத்துச் சுண்ணாம் பாயிட மாட்டாங்களா –" என்றார்.

"உத்திரவு துரை! நாலு பேரும் சுகமா இருந்தாத்தான் இந்த உலகம் நிலெச்சி இருக்கும்!"

"நானும் மனுஷனில்லியா -- ஒரு கூடை நெல்லு குடு, ப்ரொக்யூர்மெண்டுக்கு," என்றார் அதிகாரி.

அவள் முகம் பிரகாசித்தது. "துரெ, ரெண்டு கூடெ எடுத்துக்கோங்க," என்றாள்.

அதிகாரி சந்தோஷப்பட்டார். ஏஜன்டிடம் ஒரு கூடை நெல்லை அளந்து கொண்டு, பணம் கொடுக்கும்படிச் சொல்லிவிட்டு, இன்னொரு வீட்டை நோக்கிப் போனார்.

எரிக்கும் வெய்யிலில் நடந்து புல்லய்யா, பீஸ், தாஸன் மூவரும் பட்டணத்திலிருந்து வந்தார்கள். ஜாமீனில் விடுதலை பெற்ற புல்லய்யாவுக்குத் தெருவழியாக வருவதற்கு வெட்கமாக இருந்தது. புழக்கடை வழியாக வந்து வீட்டிற்குள் நுழைந்தான். தந்தைக்காக அழுது கொண்டிருந்த மல்லு அப்பாவைப் பார்த்ததும், சந்தோஷத்தில்

கத்திக்கொண்டே மேலெறிக் கொண்டான். மகனைத் தடவியபடியே, "என் மல்லு . . . தொடப்ப குச்சி மாதிரி ஆயிட்டியேடா . . . இந்த ஒரு நாள்ளியே . . . !" என்றான்.

பீஸ் சிரித்துக்கொண்டே "நீ இந்த மகனை நினைச்சிகிட்டே தொடப்ப குச்சி மாதிரி ஆயிட்டே!" என்றான்.

நீலி இந்த அன்பு அரவணைப்புகளெல்லாம் நடக்கும் போது ஒன்றும் பேசவில்லை. புல்லய்யாவுக்குச் சாதம் சாப்பிடும் போது எதிரிலிருந்த மனைவியைப் பார்ப்பதற்கு வெட்கமாக இருந்தது. அதற்கிடையில், தனக்கு அநியாயம் செய்த கிராமத்துப் பெரியவர்கள் மேலும், அதிகாரிகள் மேலும் ஆத்திரம் உள்ளுக்குள் பொங்கிக் கொண்டிருந்தது. மகனும் தன்னுடன் சேர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான். நீலி ஒன்றும் பேசாமல் எதிரில் நின்று கொண்டிருந்தாள். பாட்டி மரச்சீப்பைக் கொண்டு, தெருத் திண்ணையில் உட்கார்ந்து தலையில் சிக்கெடுத்துக் கொண்டிருந்தாள். புழக்கடையிலிருந்த மாடுகள் புல்லய்யாவையே பார்த்துக் கொண்டிருந்தன! சாதம் சாப்பிட்ட பிறகு கூழ் ஊற்றினாள். புல்லய்யா, தன் மகனும் அந்தக் கூழை எடுத்துச் சாப்பிடுவதற்காகக் கை நீட்டிய போது, வேண்டாம் என்று மூக்கின் மேல் விரலை வைத்துத் தடுத்தான். மகன் அப்படியே முகத்தைப் பார்த்து நிற்கவே, அவனை அருகில் அழைத்துக்கொண்டான். இதற்கிடையில், புல்லய்யா பட்டணத்திலிருந்து வந்தானென்ற செய்தி கேட்டு ஊர்க்காரர் பலபேர் வீட்டுக்கு வந்து நலம் விசாரித்தார்கள். அவர்கள போன பிறகு, சுய கெளரவ நினைப்பு பொங்கி எழவே, வீட்டில் இப்படி அப்படியும் நடந்து கொண்டு கர்ஜித்துக் கொண்டிருந்தான். காரணமாக இருந்தவர்களைச் சும்மா விடப் போவதில்லை என்றான். இந்த ஆர்ப்பாட்டத்தைப் பார்த்த பாட்டி "எதுக்கு இந்த மாதிரி துடிச்சிப் போறப்பா? நீ திட்டிகிட்டிருக்கறியே அவங்களும் மனுஷங்கதான்! மனுஷனுன்னா நல்லது கெட்டது தெரியாமப் போயிடும் –" இன்னும் ஏதோ சொல்லப் போனாள். அதற்குள் புல்லய்யா, "சும்மா இரு" என்று அதட்டினான். பாட்டி அதற்கு மேல் பேசவில்லை. நீலி, கணவன் கோபத்தின் பெரும் பகுதியைக் கொட்டித் தீர்க்கும் வரையில் பேசாமலிருந்தாள். திண்ணையை நோக்கிப் போனவன் திடீரென்று நினைவு வரவே புழக்கடைக்குச் சென்றான். சுற்றுப் புறத்துக் கிராமங்களிலெல்லாம் சிலம்பாட்டத்தில் பெயர் வாங்கிய புல்லய்யா நியாயவானெனப் பெயரெடுத்த மல்லு நாயுடு மகன், நடுத்தெரு வழியாகக் கைவிலங்கோடு போனான் என்பது எல்லார்க்கும் தெரிந்து விட்டது. ஜெயிலில் ஒரு நாள் இருந்துவிட்டான் -- இது தனக்கெவ்வளவு அசிங்கமான விஷயம்? தான் கனவில் கூட இப்படி நடக்கும் என்று நினைத்ததே இல்லை. "இந்தக் காலத்திலெ நியாயத்துக் கிடமில்லே," என்று மனதில் மட்டுமல்லாமல் வெளியேயும்

சொலலி விட்டான். இராட்டினம் சுற்றிக் கொண்டிருந்த நீலி வார்த்தைகளைக் கேட்டு, "உலகத்தெ காலத்தெ ஏன் கோவிசசிககறே?" என்று கேட்டாள்.

"ஏன் கோவிச்சிக்கக கூடாது? இந்த ஊரெ நாசமாப் போவப் போவுது பாரு!"

"ஊரு நாசமாப் போனா நாம் எங்கெ இருப்போம், மறந்துட்டியா? பறக்கற பஞ்சி காத்துலெ எவ்வளவு நேரம் தான் இருக்கும்? பூ செடியிலெ இருக்கற வரைக்கும்தான் அதுக்கழகு--"

"அப்படின்னா என்னாடி சொல்றே? " என்று கேட்டான் எரிச்சலோடு. மகன் இந்த மூலையிலிருந்து எதிர மூலைக்கு 'ஆ--ஆ' என்று கத்திக்கொண்டே நடந்து கொண்டிருந்தான.

"அந்தக் கோபமும் ஆணவமும் இல்லாமெ இருந்தா இந்தத் தொல்லையெல்லாம் ஏன் வருது? "

புல்லய்யா ஒன்றும் பேசாமல் மீசையைத் தடவிக் கொண்டான். நீலி கணவனின் கண்களை ஒரு முறை நிதானமாகப் பார்த்துவிட்டு, மறுபடியும் இராட்டினம் பக்கம் பார்வையைத் திருப்பிக் கொண்டே, "நீ எந்தத் துரையைக் கீழே தள்ளினியோ, அதே துரைதான், ரெண்டு கூடை எடுத்துக்கோச் சொன்னா, ஒரு கூடைதான் வாங்கிகிட்டாரு. எந்த ராஜியை வாய்க்கு வந்தபடி பேசினியோ அவன் பெண்டாட்டிதான அம்பதுº ரூபாய் குடுத்து, உன்னை வீட்டுக்கு வரவழைக்க வழி பண்ணினா. நீ ஒர்த்தரையும நல்லவன் இல்லேன்னு சொன்னீன்னா, உன்னெ ஒர்த்தர் நல்லவனுன்னு ஏன் சொல்லப் போறாங்க?"

புல்லய்யா மனைவியைப் பார்த்தான். இன்னும் ஏதாவது சொல்லப் போகிறாளோ என்று எதிர்பார்த்தான். ஆனால் அவள் அதற்கு மேல் பேசவில்லை. ஆனால் கணவன் செயத காரியத்தைப் பறறிய வெறுப்பு அவள் முகத்தில் தெளிவாகப் புலப்பட்டது.

புல்லய்யா இரண்டு நாட்கள் வீட்டை விட்டு நகரவில்லை. விசாரிக்க வருபவர்கள் வந்து கொண்டிருநதார்கள். வீட்டில் மனைவியிடம் கூடச் சரியாகப் பேசுவதில்லை. எல்லா நெருக்கமும் பேச்சும் மகனிடம் தான். அந்த மகனும் தந்தையை விட்டு நகருதில்லை.

இந்தக் கேஸ் வாய்தா தள்ளிக் கொண்டே வந்தது. வக்கீலுக்குக் கொடுப்பதற்குப் பணம் வேண்டும். பட்டணம் போகும் போதெல்லாம் ஏதாவது செலவாகிக் கொண்டே இருந்தது. விற்பதற்குப் போதுமான நெல் இல்லை. இருப்பதை விற்றுவிட்டால் மறுபடியும் இந்த விலைவாசியில் வாங்குவதென்பது கஷ்டம். அதனால் வேறு வழியில்லாமல் கடன் கேட்கப் போக வேண்டியிருந்தது. முன்பு போல் வாய் வார்த்தையை நம்பி கடன் கொடுப்பார் இல்லை. பெயருக்குப் பத்திரத்தில் கவர்னமெண்ட் ரேட் பிரகாரம், நூற்றுக்கு ஆறு ரூபாய் எழுதப்பட்டிருக்கும். ஆனால், வட்டி கொடுக்கும் போது, நெல்லாக வருஷத்துக்கு நூற்றுக்கு மூன்று கூடை கொடுக்க வேண்டும்.

இந்த வட்டிக்கு ஊரில் பேரய்யா செட்டி மட்டுமல்லாமல்,, பெரிய விவசாயிகளும் எவ்வளவு வேண்டுமானாலும் கொடுத்து வந்தார்கள். இது அநியாயமென்று புல்லய்யா கடன் கேட்கப் போகவில்லை. ஆனால் போகாவிட்டால் முடியாதென்ற நிலைவந்தது. தன் சொந்த பூமியை அடமானம் வைக்க வேண்டியிருந்தது. ராஜுவின் மனைவியே இரண்டு கூடை நெல்லுக்கு, நீலி கெஞ்சிக் கேட்டுக் கொண்டதால், கொடுத்தாள்.

தள்ளிப் போட்டுத் தள்ளிப் போட்டுக் கடைசியில் மழைக் காலத்தில் கேஸுக்குத் தீர்ப்பைச் சொன்னார்கள். அந்த ஐந்து மாதங்களில் இருநூறு வரைக்கும் செலவாயிற்று. மேஜிஸ்ட்ரேட் நூறு ரூபாய் அபராதம், அதைக் கொடுக்க வில்லையானால், இரண்டு மாதம் சிறைத் தண்டனை என்று தீர்ப்பளித்தார். அன்று கோர்ட்டில் நவிரி ஊர்க்காரர் முப்பது பேர் வரைக்கும் இருந்தார்கள். புல்லய்யாவுக்கு என்றைக்குமில்லாத ஆத்திரம் வந்தது. அந்த நாற்காலி மீது உட்கார்ந்திருந்த மனிதரிடம் நியாய மில்லையென்றும், இந்த உலகத்திலேயே நியாயம் செத்துவிட்டது என்றும் எரிந்து விழுந்தான். இந்தச் சந்தர்ப்பத்தில் ராஜுவின் மனைவி தன் ஆத்திரத்தையெல்லாம் கொட்டித் தீர்த்தாள். என்ன சொன்னாலும் நீலி பதில் பேசவில்லை. சும்மாக் கொடுப்பது போல் நூறு ரூபாய் கொடுத்துவிட்டு, "இதையெல்லாம் உன் புருஷன்கிட்டே சொல்லுவேன்னுதான் உன்கிட்டே சொல்றேன். எவ்வளவு காலம் நம்பிக்கெ பேர்லெ கொடுக்குது. நிலத்தைச் சுவாதீனப் படுத்தி எழுதிக் கொடுக்கலேன்னா ஒத்துக்க முடியாதுன்னு உங்க மச்சினர் சொல்றார்," என்று சொன்னாள்.

நீலி அந்த விஷயத்தைக் கணவனிடம் சொல்வதாகக் கூறினாள். 'சமயத்திற்கு உதவியதை என்றும் மறக்க மாட்டேன்' என்றாள். புல்லய்யா இந்த முறை ஒரு வாரம் வரையில் வீட்டை விட்டு நகர வில்லை. மகனோடு மட்டும்தான் பிணைப்பு. ஆனால் போகப் போக வயலுக்கு, மாடுகளுக்காகப் புல்லுக்கென போக வேண்டியதாயிற்று. போவானே தவிர, தான் ஏதோ நலிந்து விட்டதாகவும் தன்னை எல்லாரும் விரலால் சுட்டிக் காட்டிப் பரிகாசம் செய்வது போலவும் நினைத்து வேதனைப் பட்டான். ஒவ்வொரு முறை மகனைத் தோள் மேல் ஏற்றிக்கொண்டு நீலம்மன் கோவிலுக்குப் போவான். அங்கே தாஸன் ஆவேசம் வந்து பேசும் போது அப்பாவும் மகனும் பேசாமல் கேட்டுக் கொண்டிருப்பார்கள். இருட்டுவதற்கு முன்னால் பேரனை வீட்டுக்கு அழைத்து வரவில்லையென்றால் புல்லய்யாவிடம் பாட்டி புலம்பத் தொடங்குவாள். 'எந்தக் காத்தோ கீத்தோ பட்டால் பையன் மெலிந்து போவா'னென்ற பயம் அவளுக்கு.

இன்னும் நெற்பயிர் முற்றவில்லை. ஒரு மாதமாகும் அறுவடை நடக்க, குதிரில் ஒரு நெல் மணி இல்லை. சோளம் கூடத் தீர்ந்து

விட்டது. யாரிடமும் கடன் கேட்கப் புல்லய்யாவுக்கு மனம் இல்லை. நீலி ராஜுவின் மனைவியிடம் கடன் கேட்கப் போனாள். அப்போது ரூபாய்க்கு இரண்டு படி அரிசி விற்றது. பஞ்சம் பயங்கரமாக தாண்டவமாடியது. கண்ட்ரோல் அரிசி சிவப்பாக எலிப் புழுக்கை போல இருக்கும்! மாடுகூடச் சாப்பிடாது! அது கொஞ்சம் மலிவாக இருந்தது என்பதற்காக வாங்கி இடித்தால் நொய்யாகி விடும். அந்த நொய்ச் சாதத்தைப் பார்த்தாலே சாப்பிடத் தோன்றாது. வெளியே வாங்கினால் ஒரு ரூபாய்க்கு இரண்டு படி. அரிசி மட்டுமல்லாமல் உப்பு, பருப்பு, எண்ணெய் எல்லாவற்றின் விலையும் விபரீதமாக உயர்ந்திருந்தது. இருப்பவர்கள் மேலும் பணம் பண்ணவும், இல்லாதவர்கள் மேலும் காய்ந்து அவதிப்படவும், கொஞ்ச நஞ்ச முள்ளவர்கள் நாசமாகப் போவதற்கான காலம் அதுவே ஆகும். அந்த நாட்களில் கூட நீலியின் கை சுருங்கவில்லை. எங்கேயும் எதுவும் கிடைக்க வில்லையென்றால், சாகாமல் உயிரை நிறுத்தி வைப்பதற்கு ஒரு வாய்க் கஞ்சி நீலி வீட்டில் கிடைக்கும் என்பது குஷ்ட ரோகி, வெங்க்கன்னா, கென்னம்மா ஆகியோருக்குத் தெரியும்.

அரிசி ரூபாய்க்கு இரண்டு படி வீதமும், சோளம் நான்கு படி வீதமும் கொடுத்து, புல்லய்யா கொடுக்க வேண்டிய கடனை, அறுவடை முடிவதற்குள் முன்னூற்று ஐம்பதிலிருந்து நானூற்று ஐம்பதுக்கு ஏற்றி விட்டான் ராஜு. புஞ்சை நிலத்தில் ஒரு மாதிரியாக விளைந்தது. குத்தகை நிலத்தில் பாதிக்குப் பாதி பதர். அந்த வயலில் விளைந்த மூன்றில் இரண்டு பங்கு வட்டிக்குப் போய்விட்டது. மிஞ்சிய ஐந்து கூடையில் தானதர்மம், வண்ணான், அம்பட்டன் எல்லார்க்கும் போக வீட்டுக்கு வந்தது இரண்டு கூடைகளே! நிலத்துக்கார எஜமானனுக்கு அளப்பதற்குச் சரியாகப் போய்விட்டது அவர் நிலத்தில் விளைந்தது! இரண்டு கூடை நெல்லை வைத்துக்கொண்டு ஒரு வருஷம் கடத்துவது எப்படி - இந்த கவலைகள் வேண்டாமென்றாலும் புல்லய்யாவின் மனத்தில் தலை தூக்கச் செய்தன. தான் முன்பிருந்தது போல் சுறுசுறுப்பாக இல்லை. தான் மெலிந்து வருவதாகத் தன் சிஷ்யர்கள் நினைத்தார்கள். அவர்களும் வளர்ந்து காளைப் பருவம் அடைந்தார்கள் -- ஆனால் சுறுசுறுப்பில்லை. அவர்கள் வயதில் தான் எவ்வளவு சுறுசுறுப்பாக இருந்தான். அவர்கள் சிலம் பாட்டத்தில் வல்லவர்கள் என்று பெயர் வாங்கவில்லை. அக்கம் பக்கத்து ஊர்களில், அவர்களில் ஒருவன் பெயராவது யாருக்கும் தெரியாது. இந்தத் தலைமுறை ஆட்களிடம் ஏதோ குறை இருப்பதாகத் தோன்றியது. துள்ளிக் குதிக்கும் தன் மகனைப் பார்க்கும் போது பெருமையாக இருந்தது. வயிறு நிறையச் சாப்பிட்டது போல் மனதுக்குத் திருப்தியாக இருந்தது. 'என் மகன் தலை முறைக்காரங்க இந்த உலகத்தில் மறுபடியும் நீதி நியாயத்தைக் கொண்டு வர மாட்டாங்களா? என் மகன் நட்சத்திரங்க மத்தியிலெ நிலா மாதிரி ஜொலிக்க மாட்டானா - இவன்

இருக்கறப்பொ எனக்கென்ன குறை', என்று தன்னைத் தானே தேற்றிக்கொள்வான். இப்படிப் பெருமைப் பட்டுக்கொண்டே, ஊரில் புதிதாகக் கட்டப்படும் ஓட்டு வீடுகளைப் பார்ப்பான். பேரய்யா செட்டியின் குடிசை மொட்டை மாடியாக உருமாறியது. வசதியிருந்த பெரிய விவசாயிகள் ஓட்டு வீடுகளைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். வீட்டுக் கூரையில் கோரைப் புல் வேய்ந்திருந்த சிலர், இந்த வருஷம் அதை மாற்றிப் புதுப்புல் வேய முடியாத நிலையிலிருந்தனர். மனிதர்கள் கொடுத்த வாகுக்கு கட்டுப் படுவதாக அவனுக்குத் தோன்றவில்லை. பணத்தால் நல்லதும் கெட்டதும், நீதியும் நியாயமும் அளப்பது, வீட்டுக்குள்ளேயும், வெளியேயும் நடந்து கொண்டிருநதது. இதையெல்லாம பார்த்துக் குழம்பிக் குழமபித் தன் குடுமி வெளுத்துக்கொண்டு வருவது போல் சந்தேகம் வந்தது. இந்தக் கஷ்டமான சூழ்நிலையைப் பார்த்து, தாஸன் ஊரில் இரவு பகலென்று பார்க்காமல், பெரிய மனிதர்கள் அனைவரிடமும, எங்கே பார்த்தாலும் அங்கேயே கேட்டுக் கொண்டிருந்ததால் நாலு பேர் அவனுக்குப் பைத்தியம் பிடிததுவிட்டதென்றார்கள்.

பீஸ் ஒரு முறை புல்லய்யாவின் வீட்டிற்கு வந்து கொண்டிருந்தான், நியாத்திற்குக் கட்டுப்பட்டு, குத்தகை எஜமானுக்கு அளக்க வேண்டியதை அளந்து பின்னர் மிஞ்சியது தீர்ந்து போகும் நிலை வந்துவிட்டது. இந்தப் பெண்ணோடு எப்படிக் காலம் கடத்துவது என்பது புரியவில்லை. மல்லுவைக் கட்டிப்பிடித்துக கொண்டான. அவனோடு விளையாடிக் கொண்டிருந்தால் இந்தக் கவலை கொஞ்ச நேரம் மாயமாய்ப் போய்விடும். மல்லு பீஸ்த் தாத்தாவின் தோளில் ஏறி அரைகுறையாக வளர்ந்த பற்களால் முத்துமழை பொழிந்து விடுவான். தாத்தாவின் மூக்கு, மீசை, குடுமி ஆகியவற்றை, ஒவ்வொரு முறை கோபம் வந்தால் பிடுங்கிவிடுவான்.

சிவராத்திரி வந்தது. ஊரில் சில குடும்பங்கள் அவர்களுடைய இஷ்ட தேவதைக்கு விழாக் கொண்டாடினார்கள். அப்பொழுது மார்பில் மாலை கட்டிக்கொண்டு ஆடவேண்டும். அவர்கள் ஏற்கனவே வசதியுள்ளவர்கள். இந்த விலைவாசிகளில் இன்னும் நன்றாக சம்பாதித்துக்கொண்டார்கள். வழக்கத்தின் படி புல்லய்யாவும் சென்று ஆடினான். மல்லு தனக்கும் மாலை கட்டினாலொழிய முடியாதென்று வம்பு செய்தான். உபவாசமிருந்த அவன் அப்பொழுது தீவட்டி பிடித்துக்கொண்டு ஆடிக் கொண்டிருந்தான். களைத்தது போலிருந்தான். சுற்றி இருந்தவர்கள், "களைத்துவிட்டாயா என் ஸ்வாமி!" பாட்டை வாசித்துக்கொண்டே துள்ளிக் கொணடிருந்தார்கள். மல்லு தாளம் போட்டுக் கொண்டே அப்பாவைப் பார்த்தபடிக் கொஞ்ச நேரம் துள்ளி ஆடினான். சுண்டலும் வாழைப்பழமும் எல்லாருக்கும பங்கிட்டுக் கொடுத்தார்கள். இதில் பீஸ்யும் பங்கெடுத்தான். ஆனால், நீண்ட நேரம் ஆட முடியாமல் போய்விட்டது. கால்கள்

ஒத்துழைக்கவில்லை. முந்திய நாள் இரவு பச்சைத் தண்ணீரைக் குடித்துவிட்டுப் படுத்தவன். கிடைத்த பலகாரத்தில் கொஞ்சம் மீதி வைத்து வீட்டுக்குக் கொண்டு போனான்.

புல்லய்யாவுக்கு மகனை விட்டால் இந்த உலகத்தில் வேறு எதன் மேலும் பிடிப்பில்லை. நீலி போட்டதையே சாப்பிடவேண்டியது. ஏதோ வயலில் வேலை இருந்தால் செய்ய வேண்டியது. மல்லுவுக்கு இரண்டரை வயது. இப்போது அப்பாவின் கூட வயலுக்கும், வேறு எங்குப் போனாலும் கூடவே போவான். அம்மாவின் தேவையே அவனுககில்லை. சாப்பாடு கூட அப்பாவுடன் சேர்ந்தே சாப்பிடுவான். விளைந்த பயத்தம் பயறைக குத்தகை எஜமானுக்குக் கொடுத்தது போக, விதைக்கு, வீட்டுத்தேவைக்கு வைத்துக்கொண்டு மிஞசியதை விற்றுவிட்டான்.

ஒரு நாள் இருட்டின நேரம். சமையல் முடிந்த பிறகு பாட்டி கூப்பிட்டாள். தெருத திண்ணை மேல் பாட்டியும் பேத்தியும் உட்கார்ந்திருந்தார்கள். புல்லய்யா மகனுடன் ஊருக்குள் எங்கேயோ போயிருந்தான். அந்தச் சமயத்தில் ஏதோ முணுமுணுத்துக் கொண்டும், கனைத்துக்கொண்டும் நடந்தபடியே ஆவேசப் பேச்சு பேசிக்கொண்டே வந்தான தாசன். உண்மையில் பசியில் சுருண்டு கொண்டிருந்தான். விளக்கேற்றுவதற்காக நடந்து போகிறானே ஒழிய தடுமாறிக் கொண்டிருந்தான் அந்த நிலையைப் பார்ததால் குடித்தவன் அல்லது பைத்தியக்காரன என்று நினைததுக கொள்ளலாம். புல்லய்யா வீட்டைப் பார்த்ததும், சற்றே உயிர் வந்தது போலிருந்தது. "அப்பா! புல்லய்யா! . . என்று சொல்லிக்கொண்டே முற்றத்தில் பொத்தென்று விழுந்து விட்டான்

நீலி, "ஊருக்குள்ளே போனாரு'யா," என்று குரல் கொடுத்தாள். தாசனுக்கு மிகவும் வயதாகிவிட்டது., ஒன்றும் முடியவில்லை என்று நினைத்தாள். சற்று நேரம் வார்த்தை ஒன்றும் வெளிவரவில்லை. சற்று நேரம் பொறுத்து, வெறித்துப் பார்த்துக்கொண்டே," அந்தத் தாயக்கு . . கோபம் வந்ததுனனா. . . பூ. . . சக்ரம். . . தாறு . . . தாறுமாறா. . போயிடும். . எவ்வளவுதான் . . இவங்க எல்லாரையும் காப்பாத்தச்சொல்லி. . . பாதங்களைப் பிடிச்சிகிட்டு . . . விளக்கேத்தி. . ."

அசதியால் அவனால் மேலெ பேச முடியவில்லை. சில நிமிஷங்களில் பசி ஜெயித்துவிட்டது. உடம்பெல்லாம் பரவிய அந்தப் பசித்தீ தாஸனை மூர்ச்சையில் தள்ளுவதற்கு முயற்சித்தது. ஆனால், தாஸன் சாவுக்கும் பிழைப்புககுமிடையே போராடிக்கொண்டே,, "தாயே! எல்லாம் மாயை. . . சாவு அழைக்குது. . . தாயே!. . ."

நீலி சட்டென்று அறையிலிருந்து புட்டி விளக்கைக் கொண்டுவந்து தாஸனைப் பார்த்தாள். உயிரை அந்த இடத்திலேயே விட்டுவிடப் போகிறானோ என்று பயந்து விட்டாள். கண்கள் செருகும் நிலையில்

தாசன் கையால் சைகை செய்தான். நீலி சமையலறைக்கு ஓடி, கிண்ணத்தில் சாதத்தைப் போட்டு, அவசரமாகத் தண்ணீரில் கரைத்துக் கொண்டு வந்து, விறுவிறென்று தாசனின் வாயில் ஊற்றினாள். பசித்தீயை அணைப்பதற்கு ஆகாரம் கிடைத்த உடனே தாஸனின் கண்கள் திறந்தன. கண்ணிலிருந்து சாரைசாரையாகக் கண்ணீர் வழியத் தொடங்கியது. இடது கையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, வலது கையால் சாதத்தை எடுத்துக்கொண்டு, அந்த விக்ரகத்தைப் பார்க்கப் பார்க்க, எங்குமில்லாத பரிவும் துக்கமும் இரண்டறக் கலந்து வெளியேறின. கண்ணில் துளிர்க்கும் நீரைச் சிந்தாமலிருக்க புடவைத் தலைப்பால் ஒத்திக்கொண்டாள்.

தாஸன் கடைசியில் தண்ணீரைக் குடித்துவிட்டு, அப்படியே சுவரில் சாய்ந்து களைப்பைத் தீர்த்துக் கொண்டான். எவ்வளவு நேரமோ, மௌனம் கலையவில்லை. கடைசியில் எழுந்து நடக்கத் தொடங்கி நின்றான். நன்றி உணர்ச்சி பெருக்கெடுத்துக் கண்களில் நீராக உருவெடுத்தது. "அம்மா! நீலம்மா தாயே! இந்தத் தாசனுக்கு எத்தனை நாட்களுக்கப்புறம் தரிசனம் கொடுத்த தாயே!" என்று சொல்லிக் கொண்டே, மெல்ல மெல்ல அடி எடுத்து வைத்து நடந்து போனான்.

## 18

தாஸன் போன பிறகு புல்லய்யா மல்லுவுடன் திரும்பி வந்தான். நீலி அப்போதும் தாஸனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தாள். மனைவி எப்போதோ செத்துப் போய்விட்டாள். இருந்த மகனும் குடிகாரன் -- குழந்தைகள் வேறு! மருமகளோ சரியான சண்டைக்காரி. ஆஸ்தியெல்லாம் அந்த அம்பட்டப் பெட்டிதான். அதை முழுநேரம் கவனித்தால் பிழைப்பு நடக்கத்தான் செய்யும்! பாவம்! இந்தக் கிழ வயதில் தாஸனுக்கு எவ்வளவு கஷ்டம் வந்து சேர்ந்ததென்று நீலி வருந்தினாள்.

மல்லு தாயெதிரில் துள்ளிக் குதித்து, "பினக் பினக் . . . ஸோ!" என்று சொல்லிக் கொண்டிருக்கிறான். முழுகாமலிருந்த நீலி தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டாள். புல்லய்யா மிகவும் வேலை செய்து களைத்திருந்தானோ என்னவோ, போட்டதை உடனே காலி செய்துவிட்டு மனைவியைப் பார்த்தான். மகனும் காலி ஆய்விட்ட வெண்கலத் தட்டை அம்மா பார்க்கவில்லையோ என்ற சந்தேகத்தில் கூப்பிட்டுக் காட்டினான். புல்லய்யா நீலியை மேலும் கீழுமாப் பார்த்துவிட்டு எழுந்து போனான். மல்லுவும் அப்பாவைப் பின் பற்றினான்.

பேரனைக் கட்டில் மீது போட்டு, ஏதோ ஒரு பாட்டை முணுமுணுக்கத் தொடங்கினாள் பாட்டி. சற்று நேரத்தில் புல்லய்யா

அருகில் வந்து மேலே கை வைத்துத் தட்டியதால் மல்லு தூங்கிவிட்டான், ஒரு கண்ணில் மனைவி என்ன செய்து கொண்டிருக்கிறாள் என்பதையும் அவன் கவனித்துக் கொண்டிருந்தான்.

நீலி சமையலறையில் வேலைகளை முடித்துக்கொண்டு அறைக்குள் வந்தாள். பாட்டி ஒரு மூலையில் புரண்டு கொண்டிருந்தாள். புரண்டு கொண்டே, "நாயுடுவோட சின்னக்கண்ணு நாராயணம்மா," என்ற பல்லவியை ராகமிழுத்துப் பாடிக்கொண்டிருந்தாள். புல்லய்யா மாடுகளுக்கு வைக்கோல் போடுவதற்காகப் போனான். நீலி புழக்கடையில் சென்று நின்றாள். இருள் நிறைந்த இரவு. வானமெல்லாம் நட்சத்திரங்கள் நிறைந்திருந்தன.

மாடுகள் நின்று கொண்டு, வைக்கோலைத் தின்று கொண்டிருந்தன. இந்த இரவில் சந்தோஷத்தோடு வரும் மனைவியைப் பார்த்தான் புல்லய்யா. தான் ஏன அந்த அளவு அதிகமாகச் சாப்பிட்டோம் என்று நொந்து கொண்டான். அத்தோடு நெல்லும் தீர்ந்து விட்டது என்ற நினைப்பும் வந்தது. அந்த நிலத்தின் மேல் இன்னும் கடன் வாங்கித் தின்றால் அது இந்த வருஷமே முழுகிப் போய் விடும். பிறகு . . .?

புல்லய்யா வந்து மனைவி அருகில் நின்றான். அவளைப் பார்த்துக்கொண்டிருந்தால் சந்தோஷம்! பெருமை! ஐய்யோ! இரண்டு பேர் பட்டினி கிடக்கிறார்களே என்ற பரிவு உணர்ச்சி மேலெழுந்தது. ஏன் சாப்பிடவில்லை என்று கேட்பதற்கு வெட்கமாக இருந்தது. ஆனால், ஏதோ ஒரு வகையில் இந்தக் கேள்விகளைக் கேட்டாலொழிய மனம் அமைதி அடையாது. அவள் தோள் மேல் கையை வைத்து, பின்னால நின்று கொண்டான். நீலி கண்ணை உயர்த்தப் பார்த்தாள். மெல்ல கன்னத்தைத் தடவிக்கொண்டே . . ."குதிர் காலி யாயிட்டுதா?" என்று கேட்டான்.

"இன்னையோட சரியாயிட்டது," என்றாள்.

"எனக்கொண்ணும் மனசு சரியாயில்லே. இப்பொ இருக்கற நிலமையைப் பாத்தா பயமா இருக்குது. போவப் போவ ஒரு வாய் கஞ்சியாவது கிடைக்குமோ, இல்லியோ?" என்று சொன்னான்.

நீலி நிதானமாகச் சொன்னாள் "ஏன் அப்படிக் கெட்டதே நினைக்கணும்? உடம்பு திடமா இருந்தா ஒர்த்தர் கீழே கூலிவேலெ செய்தாக்கூட வயித்துப் பொழப்பு நடந்துடும்!"

இந்தக் 'கூலி வேலெ' என்ற சொற்கள் புல்லய்யாவுக்குப் பிடிக்கவில்லை. தன் தாத்தா காலத்திலிருந்து இருந்து வரும் கௌரவம், மட்டு மரியாதைகள் தன் இரத்தத்தில் ஊறிப் போயுள்ளன. அவை தாம் தொல்லை கொடுத்து வந்தன.

"நாளைலே'ருந்து அந்த ராஜிதானா கதி" என்று கேட்டான்.

கணவனின் குரலில் ஏமாற்றம் தெளிவாகத் தொனித்ததால் நீலி மென்சிரிப்பு சிரித்து, கணவன் பக்கம் திரும்பினாள். அந்தக் கிருதாக்

குடுமியை மெல்லத் தடவிக்கொண்டே, மார்பின் மீது தலையை வைத்து, "இங்கெ பாரு! தைர்யம் தான் லச்சுமி தேவின்னு சொல்றாங்க. பயத்தம் பயறு வித்த பணத்தை வெச்சி நெல்லு வாங்கலாம். அதெக் குத்தி அரிசி வியாபாரம் பண்ணலாம். மிஞ்சின தவுடு மாடுகளுக்காவுது. குருணை கோழிக்காவும். கொஞ்சம் அரிசி எடுத்துச் சமைக்கலாம்!" என்றாள்.

நம்ம வீட்லெ இந்த மாதிரி வேலெ நடக்காது," என்றான்.

"நாம பிச்செ எடுக்கலேல்லே! கோடெ காலத்துல சோளப பயிரு உதவியா யிருக்கும். கோமார்த்தி போயி பீரக்கம் விதைங்களெ வாங்கிவா. தோட்டத்திலெ பயிர் செய்யலாம். பீர் காயெச் சந்தையிலெ போய்கொண்டு வித்தாப் பணம் வராதா?

புல்லய்யாவுக்கு இந்தப் பேச்சு எல்லாம் ஏதோ புதுமையாக இருந்தது. தன் குடும்பத் தகுதிக்கு ஏற்ற வேலைகளாக இவை தோன்றவில்லை.

"எனக்கொண்ணும் -- மனசு சரியாயில்லே . . ." என்றான்.

நீலி கண்ணை உயர்த்திக் கணவனின் கண்களை உற்று நோக்கினாள். புல்லய்யா சொன்னான். "இந்த ராஜுப்பய நம்ம நிலத்தெ முழுங்கிடணும்னு பாத்துக்கிட்டிருக்கான். குழந்தைங்க பிறக்கறாங்களே! அவங்களுக்கு என்னத்தெக் கொடுப்போம்? இந்த ஊர் முழுதும் அநியாத்திலெ கொள்ளெ போய்க்கிட்டிருக்குது. இந்தப் பெரிய மனுஷங்களெயெல்லாம் கவர்ன்மென்ட்காரன் ஜெயில்லே புடிச்சி போட்டுட்டா!"

நீலி சட்டென்று குறுக்கிட்டாள்: "அடுத்தவங்களப் பத்தி சொல்றதுக்கு முன்னாடி நம்மகிட்டெ இருக்கற கெட்டது என்னங்கறது தெரிஞ்சிகிட்டா நல்லது. அந்த மாதிரி வெளஞ்சி தின்னா நமக்குக் கூடப் பணத்து மேலெ ஆசை இருக்கும். இவன் சாவணும் அவன் ஜெயிலுக்குப் போகணும் -- இதுக்கெல்லாம் நாம ஏன் ஆசெப் படணும்? சாபம் தான் மிஞ்சும். நாம கஷ்டப்பட்டு உழைச்சி நம்ம பொழப்பெப் பாத்துகிட்டா இவங்கெல்லாம் என்ன பண்ண முடியும்?"

"ஒண்ணும் பண்ண மாட்டாங்களா? பிழைக்க விடுவாங்களா?"

"அவங்கவங்க செய்ற பாவத்துக்கு அவங்கவங்களே தண்டனெ அநுபவிக்கிறாங்க. நீயும் நானும் அவங்களெத் தண்டிச்சி பாவத்தெத் தேடிக்கணுமா - கையும் காலும் நல்லா இருக்கறப்பொ புழைக்க முடியாதுங்கறியே ஏன்? கையையும் காலையும் அந்த நோய் தின்னப்பவும் கூட அந்தக் குஷ்ட ரோகியே பொழைச்சிகிட்டிருக்றானே! எல்லாரும் மனுஷங்கதான் -- எல்லாரும் பொழைக்கரதுக்குத்தான் இந்த மண்ணிருக்குது. ஒரு மரத்துக் காயெல்லாமே ஒரே மாதிரி இருக்கறதில்லே. எல்லாம் உன் கையிலேயே இருக்குதுன்னு நினைச்சிக்காதே. எல்லாத்துக்கும் நீயே பெரிய மனுஷன்னு நினைச்சிகிட்டிருக்கறதனாலெதான் இப்படி ஆய்கிட்டிருக்கறே.

ஒர்த்தர் மேலெ மனசுலெ கெட்டதெ நெனைச்சிக்கிட்டு என்னத்தெ எடுத்துகிட்டுப் போப் போறோம்! மனுஷங்க எல்லாரும் நல்லவங்க தான்! உன்னப் பொறுத்துதான் என் நல்லது -- என்னைப் பொறுத்துதான் உன் நல்லது இருக்கும். ஒருத்தருக்குக் கெட்டதெ நினைச்சிகிட்டுப் பாத்தா அவங்க நல்லது எப்படிக் கண்ணுக்குத் தெரியும்?"

தொடர்ந்து நீலி மெல்ல மெல்லப் பேசிக்கொண்டே இருந்தாள. கணவனால் ஒன்றும் பேசமுடியவில்லை. அவனைத் தொட்டுக்கொண்டே, அப்படி அண்ணாந்து வானத்தைப் பார்த்தாள். அந்த நட்சத்திரங்கள் . . . வெளிச்சங்கள . . . இன்னும் ஏதேதோ உணர்ச்சிகள் . . . ஒரு வினாடி இந்த உலக சம்பந்தமான விஷயங்கள் பற்றி ஒரு விநோதமான இயலாமை . . . எல்லாவற்றையும் மறந்து விட்டான். தன்னுள்ளிருந்த துவேஷங்கள் அனைத்தும் சின்னா பின்னமாவது போல் தோன்றியது. தலையைக் குனிந்து பார்த்த போது மனைவியின் முகம் அந்த வெளிச்சத்தில் பிரகாசிப்பது போலிருந்தது. அவளைக் கெட்டியா மார்போடு அணைத்துக்கொண்டு அவள் தலையை அன்போடு தடவிக்கொண்டே கண்களில் அன்பையெல்லாம் நிரப்பிவிட்டான்.

விழிப்பு வந்த மல்லு அப்பா பக்கத்தில் இல்லாமல் போகவே, 'அப்பாடா!' என்று முனகிக்கொண்டே சத்தம் போட்டான். மேலெ கை போட்டுத் தட்டிக் கொண்டிருந்தாலொழிய மறுபடியும் அவனுக்குத் தூக்கம் வராது. நீலி கீழே புடவையைப் போட்டுப் படுத்துக்கொண்டாள். புல்லய்யாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. எத்தனையோ சிந்தனைகள் வந்து அலை மோதின. அதற்கு முன் சிந்தித்த அனுபவம் கிடையாது. எதற்கும் வேதனைப்பட்டது கிடையாது. இப்போது எல்லாம் சிந்தனைகளே ஒவ்வொரு சிந்தனையும் ஒரு வேதனையே! பாட்டி குறட்டை விட்டுக்கொண்டிருந்தாள். எப்பொழுது பிராணனை விட்டுவிடுவாளோ – அவள் செத்தால் அடுத்து அன்றாட, வாரக் காரியங்களுக்கு எவ்வளவு செலவாகுமோ? நாலு சொந்தக்காரரை அழைக்காமல் போனால் அசிங்கமில்லையா?

மகன் நன்றாகச் சாப்பிடும் காலம் வரும்போது இந்த மாதிரி நிலைமை வந்துவிட்டதே என்று நொந்து கொண்டான். 'நிலம் கையை விட்டுப் போய்விடும். ராஜு அடுத்த வருஷம் விழுங்கி விடுவான். மிஞ்சியது குத்தகை நிலம். அந்த நிலச் சொந்தக்காரனும் ஒரு நிலையில்லாத பேர் வழி! நல்ல விலைக்குப் போகுதுன்னு வித்துட்டா! எப்படி விப்பான்?– தாத்தாக் காலத்துலெயிருந்து குத்தகைக் கொடுத்து செய்றோமில்லியா? என்னவோ வித்தா வாங்கிக்கறதுக்குப் பணமிருந்தா எவ்வளவு நல்லா இருக்கும். அதுலெ வர்ற நெல்லெ வருஷ முழுக்கச் சாப்பிடலாம் -- நீலி எத்தனை பேருக்குத் தானம் பண்ணாலும் சரியா இருக்கும். பணம்

எங்கேயிருக்குது? விக்கறதுக்கு எவ்வளவு தைர்யம் இருக்கணும்? -- இப்படி யோசித்துக் கடைசியில் நீலி சொன்னதே சரியென்றுபட்டது. விடியற்காலையில் எழுந்தான். மல்லு இன்னமும் தூங்கிக் கொண்டிருந்தான். மனைவியிடம் சொல்லிவிட்டுப் பீர்க்கம் விதைகளைக் கொண்டு வருவதற்காக கோமார்த்தி கிராமத்திற்குப் போனான்.

விழித்துக்கொண்ட மல்லு அப்பா காணமற் போகவே, புழக்கடைக்குப் போய்ப் பார்த்தான். அங்கேயும் அப்பா இல்லை. "அப்பா எங்கே? " என்று கேட்டான். ஒரு மாடு தலை ஆட்டியது. வீடு முழுவதும் சுற்றிப் பார்த்தான். திண்ணை மீது பார்த்தான். சட்டென்று, பல் விளக்கி விட்டு முகம் கழுவிக் கொண்டிருந்து பாட்டியின் முடியைப் பின்னாலிருந்து பிடித்துக் கொண்டு "அப்பா எங்கே?" என்று கேட்டான். "ஊஉறும்!" என்றாள்; அவளுக்கு அழுகு காட்டினான். அம்மா பக்கம் வரவே, "அம்மா, அப்பா எங்கே?" என்று கேட்டான். "கோமார்த்திக்கு வேலையாப் போயிருக்கறார். வருவார். பாட்டி முகம் கழுவறா விட்டுட்டுப்போ," என்றாள் அம்மா.

"அப்பா வரணும்!" என்று முணுமுணுத்துக்கெண்டே, வாசலில் நிலையாக உட்கார்ந்து விட்டான். பொழுது நன்றாக ஏறிவிட்டது. இன்னும் அப்பா வரவில்லை. கண்கள் பூத்துக் கொண்டிருந்தன. போகப் போக அந்தக் கண்களில் நீர் நிறைந்து கொண்டிருந்தது. தொண்டை கூட வரண்டு கொண்டிருந்தது. 'இன்னும் அப்பா வரல்லே' என்று அழத் தொடங்குவதற்கு இன்னும் அதிக நேரம் இல்லை -- அதோ! அப்பா தென்பட்டார். ஒரு துள்ளு துள்ளி ஓடிப்போய் அப்பாவைக் கட்டிப் பிடித்துக்கொண்டான். தூக்கிக் கொண்ட உடன் ஆனந்தத்தால் பூரித்துத் தலைகால் தெரியவில்லை. மகனைத் தூக்கிக்கொண்டு வரும் போது பாட்டி கேட்டாள்: "அவன் அம்மா மகனா? அப்பா மகனா?

மல்லு தந்தை மேல் துள்ளிக் கொண்டு, ஆடிக்கொண்டு, சிரித்துக்கொண்டே, "அப்பா! அப்பா!!" என்றான்.

அன்றே நெல் வாங்கினான். ஊர் முழுவதும் புல்லய்யா அரிசி வியாபாரம் செய்கிறான்' என்று தெரிந்து விட்டதென்று புல்லய்யாவுக்கு வெட்கமாக இருந்தது. ஒரு வாரத்தில் நீலி சொன்ன லாபம் தெரியத் தொடங்கியது. புல்லய்யா நெல்லைக் குற்றி முடிக்க, நீலி புடைப்பாள் . . . இப்படியே கோடைக்காலம் வந்துவிட்டது. களங்களில் கதிரடிப்பதற்கென்று சிலருடைய சோளக் கட்டுகள் இருந்தன. ஏதோ திருட்டுப் போவதாகப் பெரிய விவசாயிகள் சொல்லிக் கொண்டார்களே ஒழிய திருடனை யாரும் பிடிக்க முடியவில்லை.

நீலியின் கையாலும் மல்லுவின் கைகளாலும் போட்ட பீர்க்கம் பாத்திகள் பூத்திருந்தன. பிஞ்சுகள் வந்தன. ஏற்றத்தால் தண்ணீரை ஆற்றிலிருந்து பாய்ச்சி, சோளம் பயிர் செய்தார்கள். புல்லய்யாவுக்கு

அந்த நாட்களில் கைநிறைய வேலை இருந்ததால் முன்பு போல வேண்டாத சிந்தனைகளுக்கு நேரமில்லை. நீலி பிறருடைய சோள நடுவு, களை கொத்தல் போன்றவற்றிற்குக் கூலிக்குப் புல்லய்யாவுக்குப் பிடிக்கவில்லை. நாலு பேர் இந்த விஷயத்தைப் பற்றிக் கேவலமாக நினைப்பார்கள், நினைக்கிறார்கள் என்று போய்க் கொண்டிருந்த மனைவியைப் புல்லய்யா தடுத்து விட்டான். அவள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். "கஷ்டப்பட்டுச் சம்பாதிச்சா அதுக்கேன் வெக்கப் படணும்?"

அப்போதெல்லாம் எதற்கும் ராஜுவிடம் கடனுக்காகப் போக வேண்டிய அவசியம் வரவில்லை. நெல் நாற்று நடுவதற்கு, ஏர் உழுவதற்கு, எருவுக்குத் தேவைப்பட்ட போது ராஜுவிடம் போக வேண்டி வந்தது. மூன்று வயதாகும் மல்லுவும், அதற்குள்ளாகக் கோவணம் கட்டிக் கொண்டு, கையில் சிறிய முள் குச்சியுடன், மூக்கில் சிறிய தங்கக்கம்பி, கழுத்தில் வெள்ளிச் சங்கிலியுடனும் அப்பாவுக்கு உதவி செய்பவன் போலக் கூடப் போய்க் கொண்டிருந்தான். களை வெட்டியைப் பிடித்துக்கொண்டு களை எடுப்பதைக் கற்றுக் கொண்டிருந்தான். நாற்று நடும்போது குலவையிடும் பெண்களுடன் தானும் குலவையிட்டான். நெல் கதிரைக் அம்மனாக வைத்து, வழியில் போவோர் வருவோரிடம் காசு போடச் சொல்லிக் கேட்கவும் செய்தான். மாடுகளை, "ஹேய்! ஹேய்!! என்று அதட்டவும், ஆற்றில் இறங்கப் போகும் மாடுகளைக் கறையேறி வரச் சொல்லிக் கூப்பிடவும் தெரியும். கட்டாயமாக அப்பாவின் கையைப் பிடித்து முளையடிக்கப்பட்ட புளிய மர நிழலுக்கு அழைத்துச் சென்று அப்பாவைச் சுழற்றச் சொல்லிவிட்டு, அப்பா அந்த முளைகளைப் பிடித்துக் கொண்டு சுழற்றினால், அவன் வெறும் கைகளைக் கொண்டு சுழற்றுவது போல் செய்வான். அப்பா சந்தோஷத்தோடு மகனை உயரத் தூக்கி, அந்தச் சிறிய பாதங்களைக் கைகளில் தங்கிக் கொண்டு காற்றில் நிற்கச் செய்தால், முதலில் கொஞ்சம் பயமாக இருந்தாலும், போகப்போக அந்தப் பயம் விலகி, தொடைகளைத் தட்டிக் காட்டவும் செய்வான். புல்லய்யா 'பலே!' என்று சொன்னால், மல்லுவும் 'பலே! பலே!! ' என்று கத்துவான்.

வயல் வேலைகளெல்லாம் முடிந்து விட்டன. மீண்டும் தேவையான அளவு ஓய்வு. மழை பெய்து கொண்டிருந்தது; மின்னிக் கொண்டிருந்தது. ஆற்றில் வெள்ளம் வந்தது. பெரிய வெள்ளம் வந்த போது, புல்லய்யா வட்டத் தெப்பம் ஒன்றில் சென்று கட்டைகளைக் கொண்டுவந்தான். நீலி கரையிலிருந்து அவற்றை வாங்கி, குப்பை கூளங்களை நீக்கி விட்டுக் கட்டைகளை வீட்டுக்குச் சுமந்து சென்றாள். மல்லு அப்பாவுடன் தெப்பத்தில் போக வேண்டுமென்று அழுதான். "பெரிய வெள்ளத்தைப் பார்த்து பயப் படாமெ, இந்த மல்லுப் பயலுக்கு எவ்வளவு தைர்யம் பாரு!" என்று

அங்கிருந்தவர்கள் ஆச்சரியப் பட்டார்கள். இதற்கிடையில் நெல்விலையும், அத்துடன் மற்றத் தேவையான பொருள்களின் விலைகளும் ஏறிக்கொண்டே இருந்தன. பெரிய கலம் நெல் விலை ஆயிரத்து முன்னூறு வரை உயர்ந்து விட்டது! அதாவது ரூபாய்க்கு ஆறு ஆழாக்கு அரிசி! புல்லய்யா ஒருவனே ஒரு ரூபாய்க்கு அரிசிச் சோற்றை ஒரு வேளைக்கேத் தீர்த்துக் கட்டிவிடுவான். ஆனால் நெறநந்து கொள்வதால் அதுவே வீட்டில் எல்லாருக்கும் ஒரு நாளைக்குச் சரியாக இருந்தது.

பீஸ் தினம் வந்து கொண்டிருந்தான். இடையில் நான்கு நாட்கள் பேரனிடம் வரவில்லை. ஐந்தாவது நாள் மாலை வந்தவுடன், மல்லு "தாத்தா!" என்று அழைத்துக்கொண்டே எதிரில் சென்றான். மல்லுவைத் தோளில் ஏற்றிக் கொண்டு, குதிரை போல் குதித்ததால் சந்தோஷத்தில் மல்லு பகபகவென்று சிரித்தான்.

"கையாலாகதவண்டா நீ!" என்றான் புல்லய்யா, மல்லுவை இறக்கிவிட்டுத் திண்ணை மேல் உட்கார வந்த பீஸ்யிடம். அப்பொழுது நீலியும அங்கே வந்தாள். நீலியை இடையில் வைத்து "பாரு மகளே! அந்தக் குத்தகை எஜமானுது நிலம். விலையோ எக்கச சக்கமா ஏறி இருக்குது. இதை வித்தாலொழிய அவன் பொண்ணுக்குக் கல்யாணம் நடக்காது! நாம எப்படி முடியாதுன்ன சொல்றது?" என்று கேட்டான்.

"உங்கப்பா காலத்திலே'ருந்து பயிர் செய்யறோ'ல்லே? ஒனக்கா அவனுக்கா உரிமெ இருக்குது?" என்று கேட்ட புல்லய்யா தொடர்ந்து சொன்னான் · "எங்க எஜமானெ என் நிலத்துலெ கால வெக்கச் சொல்லு, அவங்க தாத்தாவே வந்து எவ்வளவு கொடுத்தாலும் நடக்காது!"

நீலி சிரித்துக்கொண்டே, "இன்னொரு நூறு ரூபாக் கொடுத்தாக்கா? . . . " என்றாள்.

புல்லய்யாவுக்குத் தன்மானம் தலைதூக்கி, "இதோ பாரு!' இந்தத் தடவெ பூனையாயிட மாட்டேன்." என்று சொல்லிக் கொண்டே மீசையை முறுக்கினான். பீஸ் நீலியைப்பார்த்து, "அவங்க விக்கறோம்னா நம்பளாலே வாங்க முடியாது -- இதோ பாரு மகளே -- மரம் வெச்சவன் தண்ணி ஊத்தாமெ போக மாட்டான். நம்மெ நம்பி எஜமான் நிலத்தெக் கொடுத்தான். அவனுக்குத் தேவை வந்து விக்கறான். நம்பனவனெ எதுத்துத் துரோகம் பண்ணா அப்பறம் எப்படி நாம் பொழைக்க முடியும்? சொல்லு மகளே! எனக்கு எவ்வளவோ ஆறுதல் சொல்லிவிட்டான், என்ன பண்றது," என்று சொன்னான்.

நீலி தான் சொன்னதை ஏற்றுக் கொண்டதாக அவளுடைய முகபாவத்திலிருந்து தெரிந்து கொண்டான். வேறு எதெதையோ பேசிவிட்டு, "ஊர்லெ திருட்டுத்தனம் அதிகமாயிட்டு வருதே. குழந்தெ

குட்டி இருக்கறவன் -- சமாளிக்க முடியாமெ நான்தான் பண்றேன்னு சில சின்னப் பசங்க சந்தேகப் படறாங்க. இல்லெ நான் கேக்கறேன்'மா! இப்படி ரெண்டு நாளுக்கு ஒரு தடவெ ஒரு மொடக்குக் கஞ்சியோ கூழோ குடிச்சிட்டு எதுக்கு உசரெ வெச்சிகிட்டிருக்கறேன்? எனக்கு இத்தனெப் பசங்க இருக்கறாங்க -- இவங்க கஷ்டப்பட்டு வேலெ செய்ய நிலமோ, கிலமோ வேலையோ கீலையோ என் கவர்ன்மென்ட்காரன் பெரியவனானப்புறம் கொடுக்க மாட்டானா? இனி வரப்போவது மகளே நல்ல நாளுங்க?" என்றான்.

அந்த நம்பிக்கையிலேயே வாழ்ந்து கொண்டிருநத பீஸ் நீண்ட நேரம் வரையில் பேரனுடன் விளையாடிவிட்டு வீட்டிற்குப் போனான்.

## 19

நீலிக்கு மகள் பிறந்தாள். மகன் பிறந்த போது இருந்த உற்சாகமோ வசதிகளோ இப்போது இல்லை. 'மகள் நல்லா இருக்கறா!' என்று சொன்னார்கள். புல்லய்யா மகளை ஒரு முறை தான் சரியாகப் பார்த்தான். 'இவளுக்கு நலல புருஷனைப் பாக்கணும்' என்று நினைத்தான், பாட்டிக்குச் சந்தோஷம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்லி முடியாது, "வீட்டுக்குப் பேரு கொண்டு வந்தாலும் கீரு கொண்டு வந்தாலும் பெண் பிள்ளைதான் கொண்டு வரணும். 'இன்னாரோட பொண்ணு ஏழெ பாழெங்களெ நல்லாக் கவனிக்கிறா'ன்னு சொன்னா அதைவிட அந்த அப்பா அம்மாவுக்கு வேறென்ற வேணும்?" என்று அவள் சொலவாள். வந்தவர்கள் யாராவது 'தங்கச்சியெக் கொண்டுபோகிறோம்டா!' என்று சொல்லிவிட்டால், மல்லு ஒரு தடியைப் பிடித்துக்கொண்டு வாயிற்படியில் காவலுக்கு உட்கார்ந்து விடுவான்.

இன்னும் அறுவடை தொடங்க வில்லை, ஊரில் நிலைமை மோசமாகிக் கொண்டிருந்தது. திருட்டு அதிகமாகி வருவதாகப் பெரிய மனிதர்களெல்லாம் சொல்லிக் கொண்டார்கள், ஆனால் திருடர்கள் அகப்பட வில்லை, சவுக்குத் தோப்புகளில் முழு மரங்களே இரவுகளில் மாயமாய் மறைந்து கொண்டிருந்தன. ஒரு வீட்டில் சோறு வடித்த பானை அப்படியே மாயமாய் காணாமல் போய்விட்டது. இன்னொரு வீட்டில் வாசலில் போட்ட கட்டு கட்டாகவே இருந்தது. ஆனால் உட்பக்கம் பயத்தம் பயறு பாதி காலியாகி விட்டது. கோழிகள், கோழிக் குஞ்சுகள் கணக்கில்லாமல் மறைந்து கொண்டிருந்தன. நாயுடு சரியான காவல் பந்தோபஸ்து செய்யவில்லை என்று சொல்ல வேண்டியவர்கள் சொன்னார்கள். இருந்த மூன்று தலையாரிகள் இரவு நேரத்தில் ஊரில் திரிந்து காவல் காக்க வேண்டும் என்று நாயுடுவின் மனைவி ஆர்டர் போட்டாள். இரண்டு பேர் தலை ஆட்டினார்கள், மூன்றாமவன் பறை ராமன் முடியாதென்றான். உயரமாக, தடியாக

இருப்பான். பிள்ளைகள் சோறு வயிற்றுக்குள் போய்விடும். எதுவாக இருந்தாலும் எதார்த்தமாக எதிரிலேயே சொல்லிவிடுவான் -- அது தாசில்தாராகட்டும் -- நாயுடுவின் மனைவியாகட்டும் அவனுக்கொன்றும் கவலையில்லை. ஊரில் இந்தக் கடைசியிலிருந்து ஒரு சத்தம் போட்டானானால் அந்தக் கடைசியில் கேட்டுத் தானாகவேண்டும். அவன் மகன் விவசாயம் செய்து கொண்டிருந்தான். பேரன் உத்தியோகம் பார்ப்பதற்காகப் படித்துக் கொண்டிருந்தான், ராமன் ஒருவரிடம் ஒரு காசு கேட்க மாட்டான், தன்னிடத்தில் என்ன இருந்தாலும் யார் கேட்டாலும் இல்லை என்று சொல்ல மாட்டான், இதனால் மனைவியும் மகனும் ஒரு கட்சியாகி விட்டார்கள். மனைவி குட்டுவது போல் வார்த்தைகளைக் கொட்டினால், அந்தப் பெரிய வாயைத் திறந்து கொல்லென்று சிரிப்பான்.

"திருடனைப் பிடிச்சி என்ன பண்ணச் சொல்றே தாயே?" என்று கேட்டான் அவளை.

"இழுத்துக்கிட்டு வா -- பஞ்சாயத்தைக் கூட்டி . . ."

"கூட்டிக் கொரடால் அடிக்கச் சொல்லப் போறியா? பெரியம்மா, இந்த வயிறு காயாத வரையிலெதான் நீதி நியாயமெல்லாம் -- காஞ்சப்பறம் தெரியும். கஞ்சி குடிச்சி பிழைச்சிக்கிறதுக்கு எவன் திருடினாலும் அவன் மேலெ ஈ மொய்க்கறதுக்கு விடமாட்டேன்" என்று திட்டவட்டமாகச் சொல்லிவிட்டான். இப்படிச் சொன்னாலும் தான் இரவு நேரங்களில் திரிவதை நிறுத்தவில்லை -- மற்ற இருவரும் ஒரு வேளை யாரையாவது பிடித்துவிட்டால் விடுவிப்பதற்காக.

ஒரு வாரம் இப்படித் திரிந்தார்கள். ஊரில் திருட்டுக் கொஞ்சம் குறைந்தது. ஆனால், வயல்களில் தோப்புகளில் நடந்து கொண்டிருந்தது. காவல் காக்க இயலாத இரண்டு வேலைக்காரர்களும் வீட்டிலேயே காவல் காக்கலானார்கள். அப்படியே ஒரு மாதம் கடந்து விட்டது. அறுவடை எப்போது தொடங்குவார்கள் என்று விவசாயக் கூலிக்காரர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். வெங்க்கன்னா கென்னம்மா போன்ற அநாதைகளுடைய நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. நீலியிடம் போவதற்கு வெங்க்கன்னாவுக்கு மனம் வரவில்லை. 'அம்மா' என்று போனால், அந்தம்மா மனம் கோணாமல் இருப்பதை ஊற்றி விடுவாள். ஊற்றிவிட்டு வாய்நிறைய அன்பாகப் பேசுவாள், ஆது ஒரு கஞ்சியா இருந்தாலும் வயிறு நிறைந்து குளிர்ச்சியாக இருக்கும். கென்னம்மா மட்டும் தயங்கவில்லை. நீலி ஒரு துடவையும் அலுத்துக் கொள்ளவில்லை. ராஜுவின் மனைவியும் நாலு ஏழைபாழைகளுக்கு இல்லை என்று சொல்லாமல் நன்றாகக் கவனிப்பதாகக் கேள்விப் பட்டாள். ஆனால் வெங்க்கன்னாவுக்கு அந்த வாயிற்படியில் பிச்சை கேட்டுப் போக இஷ்டமில்லை. அங்கே நடந்ததெல்லாம் தன் நினைவுக்கு வரும். தான் குருடனானாலும் அந்தக் காட்சிகளெல்லாம் தெரியும். உடம்பெல்லாம் துக்கத்தாலும்

அவமானத்தாலும் குன்றிப் போய்விடும். ஒரு நாள் இருட்டிக் கொண்டிருந்தது, பசியால் வெங்க்கன்னாவும் கென்னம்மாவும் அவதிப் பட்டுக்கொண்டு நீலம்மன் கோவிலருகில் கடப்பைக்கல் மேல் உட்கார்ந்திருந்தார்கள். அப்போது தாஸன் வந்து கோவிலில் விளக்கேற்றினான். ஆவேசப் பேச்சு பேசாமல் மௌனமாகக் கண்களை மூடிக்கொண்டு தாயெதிரில் உட்கார்ந்திருந்தான். திரும்பிப் போகும்போது இருவரிடமும் பேச்சுக் கொடுத்தான் · "இந்தப் பஞ்சம் எப்போ போகும்?" என்று தாஸனைக் கேட்டாள். "உலகத்தோட தலை எழுத்து சரியாயில்லே! அதனாலெ நல்லவங்களுக்கும் கெட்ட எண்ணங்களே வருது! அந்தக் காலத்திலெ எப்படி வாழ்ந்தே நீ? உன் எழுத்து சரியா யில்லாததாலெதானே பிச்சையெடுத்துப பொழக்கிறே" என்று சொல்லிக் கொண்டே நகர்ந்தான்.

• • • •

கென்னம்மா ஒரு காலத்தில் மிக வசதியான வாழ்க்கையே வாழ்ந்தாள். எவ்வளவோ சுகத்துடன் ஆனந்தத்தில் மிதந்து கொண்டிருந்தாள். குழந்தை குட்டி இல்லாத குடும்பம். கணவன் படு கஞ்சன். அதற்கு மேல் இரட்டை மடங்கு அவள். கழுத்து நிறையத் தங்கம். குதிர் நிறைய நெல். எச்சில் கையால் காக்காய் ஓட்ட மாட்டார்கள் இருவரும். சொந்தக்காரர் யாரும் அவர்கள் வீட்டுக்கு வரும் பாவத்தைச் செய்யவில்லை. அப்படியே வந்தாலும் சாப்பாட்டு நேரம் .வரை இருந்ததில்லை. பணத்துக்கும் அவளுக்கும் பெரும் பிணைப்பு, அந்தப் பணத்தையே பூஜித்தாள். இப்படி இருக்கும் போது கணவனுக்கு நோய் கண்டது. அது சரியாகிவிடும் என்று பேசாமலிருந்தால் மேலும் மோசமாயிற்று, கஷாயங்கள் கிஷாயங்கள் -- தனக்குத் தெரிந்த வைத்தியமெல்லாம் செய்தாள். படுத்த படுக்கையாகி விட்டான். பக்கத்து ஊர் நாட்டு வைத்தியன் பணம் பிடுங்குவதற்குப் பார்க்கிறான் என்று அவனை விட்டுவிட்டு, பைராகியின் துணையைக்கொண்டு நோயைக் குணமாக்க முயற்சித்தாள். நாளுக்கு நாள் நிலைமை மேலும் மோசமாகிவிட்டது. யாரோ ஒரு நாட்டு வைத்தியனை வரவழைத்தாள். பட்டணத்திலிருந்து பெரிய வைத்தியரை அழைத்து வந்தால் தான் நோய் குணமடையுமென்று நாலு பேர் சொன்னார்கள், ஆனால் யார் பேச்சையும் பொருட்படுத்தவில்லை. நாலு பேர் சொல்வதைக் கேட்டுக் கடைசியில் கணவனும் வாய்க்கு வந்த தெல்லாம் சொல்லத் தொடங்கினான். அந்தப் பட்டணத்து வைத்தியரை அழைத்து வரச் சொன்னால், "இவங்கெல்லாம் நீ பொழைக்கனும்னு பாக்கறாங்களா இல்லெ உன்கிட்டெ பணத்தெப் புடுங்கித் திங்கனும்னு பாக்கறாங்களா – " என்று கேட்டாள் அவள். நாலு பேர் நாலு விதமாகச் சொல்லிக் கொண்டிருந்தால் "வர்றவங்க வந்துகிட்டே இருங்க. நீங்கெல்லாம் வைத்தியனுங்கதானா? இப்பொ மருந்து குடுத்தானே, வைத்தியனா

அவன்? அவருக்கும் எனக்கும் நம்பிக்கை இருக்குது. நீங்கெல்லாம் எதுக்கிருக்கிறீங்க? போங்க," என்று சத்தம் போட்டாள். நாட்டு வைத்தியன் 'ஒரு வாரத்தில் நோய் பறந்து போயிடும், என்று சொன்னான். ஒரு வாரத்தில் கணவன் பறந்து போய்விட்டான்.

ஊராரெல்லாம ஒரே குரலில் இந்த முண்டையைத் திட்டவே, அழுது கொண்டே, "ஏன்னெ ஏண்டா திட்டறீங்க! உங்களுக்கும் அந்தக்காலம் வந்ததுன்னா நீங்க மட்டும் இருக்கப் போறீங்களா?" என்றாள் 'அவகிட்டெ எதுக்கு வாயெக் குடுக்கணும்? அவளே தெரிஞ்சிக்குவா,' என்று பேசாமலிருந்துவிட்டார்கள். பொன்னையும் பணத்தையும் இன்னும் சேர்த்தாள். ஆசையும் அந்தஸ்தும் வளர்ந்து கொண்டே இருந்தன. யாரோ தூரத்துச் சொந்தக்காரன் ஒருவன் வந்து சேர்ந்தான். அந்த ஆசையை மேலும் வளர்த்து விட்டான். தன் பேச்சுச் சாமர்த்தியத்தால் நம்ப வைத்ததான் -- மகிழ வைத்தான், மிகவும் கைதேர்ந்தவன் போல் பேசினான், வியாபாரத்தைக் குறித்து, அதில் கிடைக்கும் லாபங்களைப் பற்றிச் சொன்னான். ஆசை பிறந்தது, முதலில் நூறு ரூபாய்தான் தன் பங்காக வியாபாரத்தில் போடச் சொல்லிக்கொடுத்தான். ஒரு மாதத்தில் நூற்றி ஐம்பது கொண்டுவந்து கொடுத்தான், 'மாசத்துக்கு நூத்துக்கு லாபம் ஐம்பது ரூபாயா' கண் சுற்றியது. கேட்காமலேயே ஐந்நூறு கொடுத்தாள். அதற்கு லாபம் இன்னும் அதிகமாயிற்று, அந்தச் சொந்தக்காரன் கடவுள் போல் தென்பட்டான்! வியாபாரம் போகப் போகப் பெரிதாகிவிட்டது, பட்டணங்களுக்குக்கூட அவர்களுடைய சரக்குகள் போய்க் கொண்டிருந்தன, நாலு பேர் அவனைப் பற்றிப் பெருமையாகப் பேசினார்கள். அந்தச சொந்தக்காரன் சொந்தக்காரனைப் போல் இல்லை. வீட்டு மனிதரை விட இன்னும் நெருக்கம் -- அப்படிப்பட்டவனை முழுதும் நம்பினாள். 'உன்பேருக்கும் லாரி வாங்கறேன். லாபம் நூத்துக்கு நூறு வரும்,' என்று சொன்னான். ஒத்துக்கொண்டாள். வீட்டிலும் உடம்பிலும் இருந்த தங்கத்தையெல்லாம விற்றாள். இருந்த நெல் முழுவதையும் விற்றாள். இன்னும் போதமற்போகவே நிலத்தை அடமானம் வைததாள் அந்த அடமான விஷயத்தையும் அவனே ஏற்பாடு செய்தான. ஒரு காகித லாரியைக கொண்டுவந்து காட்டினான். பத்திரமாக அந்தக் காகித்தை யாருக்கும் காட்டாமல் ஒளித்து வைததாள். லாரியில் உட்கார்ந்து பட்டணம் கூடப் போனாள். சினிமாவுக்கும் காஃபி ஹோட்டலுக்கும் அழைத்துச் சென்றான். அந்தக் காலத்தில் இதெல்லாம் ஜமீந்தார் குடும்பததுக்குத்தான் சாத்தியமாகும்! எவ்வளவோ மெச்சிக் கொண்டாள் சொந்தக்காரனை, லாபங்கள் வந்து கொண்டிருந்தன. போகப் போக வியாபாரம் கப்பல் வியாபாரம் போல் பெருகப் போகிறதென்று தெரிந்து நிலங்களை வீற்றுவிட்டாள், அந்தப் பணம் திரும்பி வரவில்லை. எங்கே என்று கேட்டதற்கு

லாரியில் அழைத்துச் சென்று கிடங்கிலிருந்த சரக்குகளைக் காட்டினான். "வேணும்னா இங்கேயே வீடு கட்டித்தர்றேன் இருந்துடு" என்றான். அவ்வளவு நம்பிக்கை இருக்கும்போது தான் ஏன் ஊரை விட்டுப் போக வேண்டும்?

ஒரு நாள் காலையில் . . . நல்ல நாள பார்த்து ஓட்டைக் கையில் கொடுத்தான். ஓ! வென்று அழுதாள். காகிதங்களை எல்லாருக்கும் காட்டினாள். வாய்க்கு வராத வார்த்தைகளெல்லாம் சொல்லித் திட்டினாள். தலையை மோதிக்கொண்டாள். கிணற்றில் குதிப்பதற்கு ஓடினாள். ஊராரெல்லாரும் சமாதானப் படுத்தினார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொன்று சொல்லிக் கொண்டார்கள், 'ஆடு கசாப்புக் கடைக்காரனைத்தான் நம்பும' என்றார் சிலர். 'தன் கையாலேயே தன் புருஷனைக் கொண்ணா. அப்படிப் பட்ட முண்டெச்சிக்கு இதுக்கு மேலெ நல்ல கதி என்ன வரப்போவுது? என்றார் சிலர்.

இருந்த வீடு கொஞ்ச நாட்கள் வருமானமில்லாமல் சாப்பிட்டுக் கொண்டிருக்கவே கடனுக்குப் போய்விட்டது. வயதான காலத்தில் யாரும் அருகில் சேர்க்கவில்லை. யாருக்காவது கொடுததிருந்தால் அந்த ஒருவர் இப்போது அனுதாபப் பட்டிருப்பார்கள். இப்போதும் முதுகு வளைந்து போயும், கர்வம் மட்டும் போகவில்லை. இல்லாத பொல்லாத ஆசைகளை மனத்தில் வைத்துக்கொண்டு இவர்களை அவர்களைத் திட்டிக் கொண்டு வாழ்ந்து கொண்டிருந்தாள்.

. . .

அறுவடை தொடங்கி விட்டது. நெல் களத்திற்கு வந்தது. குதிரில் போடாமலேயே இந்த முறை, புல்லய்யா நிலத்துக்காரருக்கு அவர் பங்கை அளந்து கொடுத்துவிட்டான். அங்கிருந்து வந்ததிலிருந்து மனம் மனமாக இல்லை. மல்லு சிலம்பாட்டத்திற்கென்று இழுத்துக் கொண்டு போனாலும் போகவிலலை. ராஜுவிடம் வாங்கிய பணத்திற்கு வட்டி நெல் கொடுத்து விட்டால் ஒரு மாதத்திற்கு மேல் சாப்பாட்டிற்கு ஒன்றும் இருக்காது. அதனால் நீலி வட்டியை ரூபாயாக வாங்கிக் கொள்ளுமாறு கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள். இந்த விலைவாசியில் தானியமாகக கொடுப்பது கட்டுப்படியாகாது. அப்போது பெரிய கலம் பிளாக்கில் ஆயிரமாக இருந்தாலும் போகப் போக ஆயிரத்தைந்நூறு வரை போகுமே என்றான். நீலி கெஞ்சிக் கேட்டாள். இந்த அளவு உதவி செய்யவில்லை யென்றால் பிள்ளைகள் சாப்பாடில்லாமல் செத்துப்போவார்கள் என்று காலில் விழுந்து மன்றாடினாள். கடைசியில் நிலத்தைச சுவாதீன அடமானமாக எழுதிக் கொடுத்தால் ஒப்புக் கொள்வதாகச சொன்னான். அது மட்டுமல்லாமல், விலைவாசி உயர்ந்திருப்பதால் வட்டியை நூற்றுக்கு இரண்டு கூடையிலிருந்து கொஞ்சம் குறைத்துவிட்டு, மிஞ்சிய நெல்லை, அடுத்த வருஷத்திலிருந்து தானே அவர்களுக்குக் கொடுப்பதாகச் சொன்னான்.

"அந்த நிலத்தில நீங்களே பாடுபட்டுக்கோங்கோ" என்றும் சொன்னான். நீலிக்கு மிகவும் சரியென்றே பட்டது. ஒப்புக் கொண்டாள். புல்லய்யாவுக்குப் பிடிக்கவில்லை. "எப்படியோ ஒரு வழியா இந்த நிலத்தெத தனதாக்கிக்கணும்னு பாக்கறான்; இன்னும் ஒரு வருஷத்திலே அப்படியே போயிடும்" என்று சொன்னான். நீலியின் வற்புறுத்தலினால் ரெஜிஸ்ட்ரேஷன் ஆய்விட்டது.

கோடைக்காலம் வந்தது. ஒரு நாள் மாலை மல்லு, தன் வயதுப் பையன்களை ஒன்று சேர்த்து, அவர்களுக்குச் சிலம்பாட்டம் கற்றுக் கொடுக்கத் தொடங்கினான். "பிளைக் பிளைக் ஸோ. . . " என்று சொல்லியபடி அதற்கேற்ப கால் அடிகளைச் சரியாகப் போட்டுக் கொண்டிருக்க, கொஞ்ச தூரத்திலிருந்து பார்த்த புல்லய்யாவுக்கு என்றுமில்லாத அளவு பெருமையாக இருந்தது. புலி பாதத்தை ஆட்டுவது போல் தன் கையை ஆட்டிக்கொண்டிருந்தான். காலடிகளும் அதற்குப் பொருத்தமாக இருந்தன! திடமாக இருந்த உடம்பில் ஒவ்வொரு முட்டியும் சரியாக வளைந்து கொடுத்தன. தப்பட்டை இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று தோன்றியது புல்லய்யாவுக்கு, 'அப்படியே போய் பூன பல்டி போட்டு வளைஞ்சி நின்னா . . . மகன் மேலெ ஏறி பாதங்க மேலெ நின்னு! . . . கீழே இருக்கறவன் மகன் தான் மேலெ இருக்கறவன்! . . . ' மறுபடியும் பழைய நாட்கள் நினைவுக்கு வந்தன. 'அந்தக் கிழவனாகத் தென்படாத கிழவன் . . . வயசிலே கிழவன் – உற்சாகத்திலெ இளைஞன் . . . பொக்கை வாய்ச் சிரிப்போட அந்த ரெண்டே வார்த்தைக்குள்ளே . . . என்னை மாப்பிள்ளை ஆக்கிவிட்டான் . . . எங்கப்பாவெ அப்படியே திரும்பி வரும்படியாச் செய்தான் . . . எனக்கு மல்லுவைக் கொடுத்தான். . . அந்தக் கிழவன் எங்கெ இருக்கறானோ – . . . என்ன ஆனானோ?"

'நானு பல்ட்டி அடிச்சி வளைஞ்சி நின்னா, 'தனக்குள் சொல்லிக் கொண்டான் புல்லய்யா : 'மகனெ மேலெ ஏறச் சொன்னா ஏறுவான், தன்னாலெ அவனெக் கீழெ விழாம தாங்கிக்க முடியுமா? . . . என் மகன் அவ்வளவு உயரத்துலெ இருந்து விழுந்தா . . . காலோ கையோ முறிஞ்சிதுன்னா . . . அய்யோ! அப்படி நடக்க விடமாட்டேன் 'மெதுவாக மகனருகில் சென்றான். ஆனால் மல்லு ஆட்டத்தில் மூழ்கி இருந்தான். தன்னைப் போலவே நாலு பேர் தெருவில் போவோர் ஆசையோடு பார்த்து வியந்து கொண்டிருந்தார்கள், ஒரு அம்மா, ஆற்றிலிருந்து தண்ணீர்க் குடத்தைத் தலையில் சுமந்து கொண்டு வந்தவள், அப்படிப் பட்டவன் ஒருத்தன் இருந்தாப் போதும் !" என்றாள் புல்லய்யாவின் உடலெல்லாம் புல்லரித்தது, மகன் தந்தையைப் பார்த்துவிட்டு, ஓடிவந்து மேலெ ஏறிக் கொண்டான், வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தான், "அப்பா, பாட்டிக்கும் காய்ச்சல் செத்துப் போயிடுமா?" என்று கேட்டான்,

*அவ்வளவு சந்தோஷமும் ஒரே வினாடியில் மாயமாகி மறைந்து யோசனையில் ஆழ்ந்துவிட்டான் புல்லய்யா.*

*"சிவனவங்கம்மா சொன்னாங்களாம் — யாரோ யானெ மேலெ வந்து . . . உசிரெ எடுத்துகிட்டுப் போவானாம்! எப்பொ வருவான்'பா தடியெப் பிடிச்சிகிட்டு உக்காந்துக்கறேன் பாட்டிகிட்டே!" என்றான்.*

*சிறிய சிரிப்பு சிரித்துக் கொண்டே, "அவன் சொன்னது நிஜமில்லேப்பா!" என்றான் புல்லய்யா.*

*மல்லு உடனே அப்பாவின் முகத்தைப் பார்த்துவிட்டு, அப்பா சொன்னதில் நம்பிக்கைகொண்டு, "நிஜமில்லெயா. . . அப்பொ சிவன் கண்ணு போயிடும்" என்றான்.*

. . .

*ப்ளீடர் சீதாராமஸ்வாமி, மகன் கல்யாணத்திற்குப் பிறகு இப்போது, எதிர்காலத்தில் நடக்கப் போவதை முன்கூட்டியே ஊகித்தார். அவர் ஊகம் செய்ய வேண்டியதற்குக் காரணம், தேர்தல் விரைவில் வந்து கொண்டிருந்தன. அப்போதே வெவ்வெறு கட்சிகள் அங்கங்கே பிரச்சாரத்தைத் தொடங்கியிருந்தன. அதிகமான ஓட்டுகள் கிராமப் புறத்திலேயே இருந்த காரணத்தால் கிராமத்தாரைக் கவரும்படியாகப் பிரச்சாரம் செய்ய வேண்டியிருந்தது. அதனால் உழுபவனுக்கே நிலம் என்ற வாதத்தை வைத்துச் சுயலாபத்தை -- அதாவது தேர்தல் வெற்றியைக் கட்சிகள் தேடலாயின. முதல் போடக் கூடியவன், இந்த விஷயத்தை வைத்துச் சினிமாப் படம் எடுத்து, வெகு சீக்கிரத்தில் பணம் சம்பாதித்துக் கொண்டான். இதே நோக்கத்தோடு, இல்லாத பொல்லாத நிகழ்ச்சிகளைப் பொருத்தி நாடகங்களைப் போட்டு, நிலச் சுவான்தார்கள் மேல் வெறுப்பை அப்பாவி ஜனங்களிடையே உண்டாக்கி வந்தார்கள். அவர்கள் மீது எதிர்ப்புணர்ச்சியை எந்த அளவு தூண்டுகிறதோ, அந்த அளவு நாடகம் வெற்றி அடைந்ததாகக் கருதப்பட்டது. இப்படி அந்த இலட்சியங்களை ஏதோ ஒரு வகையில் சாதித்துக் கொண்டிருந்தனர் என்று தான் சொல்லவேண்டும். இந்த நிலைமை, பல நிலச்சுவான்தார்கள் தம் சொத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய தேவை வந்ததென்று கருதி, அதற்குத்தக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. குத்தகைக்காரரை நீக்கிவிட்டுச் சிலர் சொந்த விவசாயத்தை மேற்கொண்டனர். அந்தக் குத்தகை உழவர்கள் செத்துச் சுண்ணாம்பானார்கள். பட்டினியால் அவதிப் பட்டுச் சிலர் உயிர் மேல் ஆசை இருந்தததால் தற்கொலை செய்து கொள்ளாமல், பிச்சையெடுத்து வயிற்றைக் கழுவிக் கொண்டிருந்தனர். இந்த விபரீதமான விலைவாசி ஏற்றத்தால் கொள்ளை கொள்ளையாகப் பணம் சேர்த்துக்கொண்ட பெரிய விவசாயிகள் அதை என்ன*

செய்வதென்று தெரியாமல் வெளியூர்களில் குடியிருந்த நிலச்சுவான்தார்கள் நிலங்களை வாங்குவதற்குப் போட்டியிட்டு விலைகளைப் பயங்கரமாக ஏற்றிக்கொண்டிருந்தனர். வாங்கிய பிறகு அவர்கள் சொந்த விவசாயம் செய்து கொண்டதால், முன்னால் அந்த நிலத்தைக் குத்தகைக்குச் செய்து வந்த சிறு விவசாயிகள் நாசமாகிக் கொண்டிருந்தனர். இப்படி ஏராளமான பிரச்சினைகளால் அங்கங்கே இரத்தக் களரிகளும் நிகழ்ந்து கொண்டிருந்தன. கிராமங்களில் நிலம வாங்குவோர் கட்சி, உழுவோர் கட்சி உருவாகிக் கொண்டிருந்தன. பணம் இருப்பவர்க்கே வெற்றி. அந்தக் கட்சிக்குப் பலம் அதிகம்.

சீதாராமஸ்வாமி இந்தச் சூழ்நிலையை எப்போதோ ஊகித்துக் கொண்டார். ஆனால் புல்லய்யா நம்பிக்கையோடு தானியத்தைக் கொண்டுவந்து கொடுக்கிறான் என்று மனைவி நிலத்தை விற்பதற்கு ஒத்துக் கொள்ளாததால் பேசாமலிருந்தார். ஒரு வருஷம் பொறுத்து நடக்கப் போகும் தேர்தல்களுக்காகத் தகராறுகள் அப்போதே தொடங்கிவிட்டன. அந்த நிலைமையைப் பார்த்தால், வரப்போகும் அரசாங்கம் உழுபவனுக்கே நிலம் என்பதை நிச்சயமாக அமுலுக்குக் கொண்டுவரும் என்று அவர் முடிவு செய்து கொண்டார். அத்துடன் பட்டணத்திலேயே ஏதோ ஓர் வீட்டை வாங்கி வாடகைக்கு விட்டால் அது நிம்மதியான வேலை. வரும்படி கூட அதிகமாகும் என்று ஒரு நாள் முழுவதும் மனைவிக்கு விளக்கிச் சொன்னார். உலகத்திலேயே இவ்வளவு பெரிய ஜில்லா இல்லை. வரப்போகும் அரசாங்கம் எப்படியும் இதைப்பல பிரிவுகளாகப் பிரித்துவிடும். அப்படிச் செய்தால் அந்தப்பட்டணம் ஒரு ஜில்லாத் தலைநகர் ஆகிவிடும். அப்போது வீட்டு வாடகை ரெண்டு மடங்கு ,ஆகும். இதையெல்லாம் கேட்டுப் ப்ளீடர் மனைவி, புல்லய்யா குத்தகைக்குச் செய்து கொண்டிருந்த இரண்டு ஏக்கர் நிலத்தை விற்பதற்கு ஒப்புக் கொண்டாள். அப்படி விற்று வந்த பணத்திற்கு ஒரு வீடு வாங்குவதென்றும் முடிவாயிற்று.

இந்த இரண்டு ஏக்கர் நிலத்தில் ஒரு ஏக்கர் ராஜுவும், இன்னொரு ஏக்கர் மற்றொரு பெரிய விவசாயியும் வாங்குவதென ஏற்பாடாகிவிட்டது. புல்லய்யாவைப் ப்ளீடர் கூப்பிட்டனுப்பினார் 'பணத்தேவை வந்தது. இந்த நிலத்தை விற்பது தவிர வேறு வழியில்லை,' என்று சொன்னார். புல்லய்யா, "எங்க தாத்தா காலத்துலே'ருந்து நாங்க பயிர் செய்து வர்றோம் துரெ என்னைக்காவது விளைஞ்ச தான்யத்தெ நிறுத்தியிருக்கோமா? எவ்வளவு விளைஞ்சாலும் உங்க பங்கைக் கொண்டு வந்து போட்டுக்கிட்டிருந்தேன். எங்க தாத்தா காலத்துலே'ருந்து இப்படி நடந்துக்கிட்டிருக்குதில்லியா. நீங்க இப்படிச் சொன்னா நாங்க எந்த ஆத்துலெ போய் விழுந்து சாகறது?" என்று கேட்டான்.

இந்த வார்த்தைகளைச் சாந்தமாகவே, கொஞ்சம் தோரணையிலேயே

சொன்னான். ப்ளீடர், முன்பே நிலம் வாங்குவோரிடம் கொஞ்சம் முன்பணம் வாங்கிக் கொண்டு, நிச்சயமாக விற்று விடுவது என்ற முடிவுக்கு வந்திருந்ததால், புல்லய்யா எவ்வளவு கெஞ்சினாலும் உபயோகமில்லாமல் போய்விட்டது. ப்ளீடர் காலில் விழாத குறையாக இருந்த புல்லய்யாவுக்கு ஏதோ கொஞ்சம் பணம் கொடுக்க ஏற்பாடு செய்வதாகச் சொன்னார். "அந்தக் குத்தகெ நெல்லெ நிலம் வாங்கறவங்களுக்கு நான் அளந்து கொடுக்கறேன். அந்த ஏற்பாட்டை நீங்க செய்து குடுங்க," என்று சொன்னான் புல்லய்யா. நிலம் வாங்குபவர்கள் யாரென்று சொல்லி, அவர்களே விவசாயிகள், அதனால் வேறொருவர் பயிர் செய்ய விடமாட்டார்கள், என்று ப்ளீடர் உறுதியாகச் சொல்லி விட்டார்.

இதுவரைக் காலில் விழுந்து கெஞ்சுவது வீராவேசப் பேச்சுவரை வந்தது. ப்ளீடர் பெரிய வார்த்தைகள் சொல்லவே புல்லய்யா சர்ரென்று எழுந்தான். "அந்த லாபாயினட் கீபாயின்ட எல்லாம் இல்லெ துரெ -- எங்க தாத்தா காலத்துலெ'ருந்து அந்த நிலத்தெ உழுது கிட்டிருக்கிறோம். எந்தக் கவர்ன்மெண்ட்காரன் பயிர் செய்ய உரிமை இல்லேன்னு சொல்றான்னு பாக்கறேன். நீங்க எத்தனெ கோர்ட் ஏறி இறங்கறீங்களோ இறங்குங்க. நானு நிலத்தெ மட்டும் விடமாட்டேன்," என்று புல்லய்யா சொல்லிவிட்டு வெளியே போகும்போது, ப்ளீடர் சத்தமாகச் சொன்னார்.

"எப்பொ குத்தகைப் பத்திரம் எழுதானாங்கப்பா. பயிர் செய்ற உரிமெ எங்கே'ருந்து வந்தது- உன்னெ மாதிரி எத்தனையோ பேரெப் பாத்திருக்கிறேன! எதுக்குத் தலைகால் தெரியாம குதிக்கறே. அப்புறம் அந்தப் பணம் கூடக் கிடைக்காது."

"வா துரெ! உங்க காகதித்ததுலெ நியாயம் இல்லாட்டிப் போனா, உன் ஊர்க்காரங்கெல்லாம் கச்சேரியிலெ நிஜம் சொல்ல மாட்டாங்களா - பயிர் செய்ற உரிமெ அப்பொ எப்படி வராம போவுதோ பாக்கறேன்," என்று சொல்லி விட்டு வெளியே வந்து விட்டான்.

புல்லய்யா போன பிறகு ராஜுவும் அந்த இன்னொரு பெரிய விவசாயியும் பளீடர் வீட்டுக்கு சென்றார்கள். "முன்னாடி பத்திரம் எழுதிடுங்க. உங்களாலெ விடுவிக்க முடியலேன்னா நானு விடுவிச்சிக்கிறேன். அவனுக்கு நாளு கிட்டெ நெருங்கிக் கிட்டிருக்குது," என்று ராஜு சொல்லவே, ப்ளீடர் கோர்ட் ஏற வேண்டிய வேலை மிஞ்சியது என்று, சந்தோஷத்தோடு இரண்டு ஏக்கர் நிலத்தையும் விற்று பதிவு செய்து கொடுத்துவிட்டார்.

நவிரி பெரிய தெருவில் பீஸ் வீட்டருகில் இந்த விஷயமாகப் பேச்செழுந்தது. புல்லய்யா நடந்ததெல்லாம் தெரிந்தவுடனே நெருப்பாகிவிட்டான். பீஸ் சமாதானம் செய்யும் முறையில், "அப்பா, புல்லய்யா, கடவுள் பாத்துக்குவாரப்பா!" என்றான்.

"கடவுளா! வயல் வரப்புகிட்டெ எவன் வர்றான்னு பாக்கறேன்!

அவன் மண்டெ உடெஞ்சிடாதா?"

"அவங்களுக்கு மனுஷ பலம் பணபலம் ரெண்டும் இருக்குது. பணம் இருக்கறவன் தாசி மகனாக இருந்தாலும் ராஜாதான்! உன் பக்கம் நியாயம் இருக்குது. நியாயம்தான் கடவுள். கடவுளுக்குச் சாவு இல்லேன்னு சின்னக் குழந்தையைக் கேட்டாலும் சொல்லும்!"

பீஸ் சமாதானமாகச் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, புல்லய்யா இன்னும் ஆவேசமாக," எப்பவும் கடவுள் தெய்வமுன்னு உக்காந்திருப்பியா? கடவுள் --! இதுவாடா நாயம் -- உலகம் எரிஞ்சி கிட்டிருக்குதுடா அநியாயத்திலே -- அந்தக் கடவுள் எந்த மூலையிலெ செத்தானோ? கடவுள் இருக்கறானுன்னு சொல்றே, கடவுளு!"

பீஸ் அமைதியாக, "இருக்கறாண்டா; உன் முகம் மாதிரி என் முகம் ஏன் இல்லே? உன் வாழ்க்கை மாதிரி என் வாழ்க்கை ஏன் இல்லெ? ஒவ்வொரு மனுஷனுக்கும் ஒரு உருவம், ஒரு வாழ்க்கை ஏன் இருக்குது? --" என்று கேட்டான்.

மேலும் பீஸ்யைப் பேச விடாமல் புல்லய்யா," நாளைக்குக் காலையிலெ நிலத்திலெ ஏரு உழப்போறேன். மீசை இருக்கற ஆம்பளெ எவன் வர்ரான்னு பார்க்கிறேன். இந்த ரகளையெல்லாம் பார்த்துக் கேட்டுவிட்டுக் காலை இழுத்துக் கொண்டு வந்த குஷ்ட ரோகி எதிரில் ராஜுவைப் பார்த்தான். அவனுக்கு அதற்குள்ளாகவே எல்லாம் தெரிந்து விட்டிருந்தது. சஞ்சீவியிடம், "எப்படி ஏரு உழறானோ நானும் பாக்கறேன்," என்று மீசையை முறுக்கிக் கொண்டு சொன்னதையும் கேட்டான். மெல்ல நீலியிடம் சென்று சொன்னான். "அம்மா தாயே! நாளெக்கு நிலத்துக்குப் புல்லய்யா துரெ போனார்னா பொழக்க மாட்டாருமா . . . அந்த ராஜுப்பய முரட்டுப் புடி புடிச்சிருக்கறான். நிலத்தைப் பணம் கொட்டி வாங்கிட்டான்- ஜனங்களும் அவன் பக்கம்தான் பேசறாங்க -- கவர்ன்மெண்ட்காரன் கூட அவன் பக்கம்தான் பேசுவான் -- ஆனாக் கடவுளில்லாமலா போயிட்டாரு?"

நீலி கொஞ்சம் பயந்தாலும் தேற்றிக்கொண்டாள். இரவு தூங்கப் போகும் வரையில் இந்த விஷயங்களேதாவது கணவன் சொல்வான் என்று எதிர்பார்த்தாள். புல்லய்யா மௌனமாக, கம்பீரமாக இருந்தான். பாட்டி காய்ச்சல் அதிகமானதால் ஒரு மூலையில் படுத்து முனகிக் கொண்டிருந்தாள். கைக்குழந்தை அப்போதுதான் விழித்துக்கொண்டு சத்தமாக அழத்தொடங்கியது. ஏனோ தாய்ப்பால் போதவில்லை. அந்த சின்னக் குழந்தைக்குச் சோறு கூடக் குழைத்துக் கொடுத்து வந்தாள். பால் வாங்குவதற்குக் கையில் பணம் இல்லை. குழந்தைக்குப்பால் கொடுத்துக்கொண்டே, தூக்கம் பிடிக்காமல் இப்படியும் அப்படியும் புரண்டு கொண்டிருந்த புல்லய்யாவைப் பார்த்தாள். அன்றைக்குப் புளிய மரத்தின் கீழ் பலவந்தப் படுத்திய

புல்லய்யா . . . கல்யாண நாளன்று தான் பார்த்த கடைக்கண் பார்வைக்குப் புலப்பட்ட கணவன் . . . பட்டணத்துக்கு இருவரும் சேர்ந்து போன போது காட்சியளித்த அந்த வஸ்தாது -- இன்றைக்கு வேதனையோடு, திகிலோடு வீராவேசத்தோடு கொந்தளித்துக் கொண்டிருக்கும் விவசாயிக்கும் - எவ்வளவு வித்தியாசம்! அவள் பார்க்கப் பார்க்க கணவன் மேல் இரக்கம் பிறந்தது. இதையெல்லாம் தனக்கு ஏன் சொல்லவில்லை என்பது அவளுக்குத் தெரியும் : 'எவ்வளவு மென்மையான மனம்!'

கொஞ்ச நேரத்தில் குழந்தை தூங்கிவிட்டாள். பாட்டி முனகிக கொண்டே இருந்தாள். மல்லு அப்பாவின் பக்கத்தில் படுத்திருந்தான். நீலி புட்டி விளக்கை இறக்கிவிட்டு, மெள்ளச் சென்று கணவன் பக்கத்தில் உட்கார்ந்தாள். மனைவி உட்கார்ந்ததை, அவள் கை தன் நெற்றியில் படும் வரையில் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை. அன்போடு பார்த்து, இனிமையாகப் புன்சிரிப்பு சிரித்த நீலியை ஒரு முறை பார்த்த பிறகு மறுபடியும் பார்க்க முடியவில்லை அவனால். அவள் அந்தக் கையை மெல்ல மெல்ல அந்தக் கிருதா, தலை முடியிடையே செலுத்தி வருடிக்கொண்டே, தலையைக் குனிந்து முகத்தில் முகம் வைத்தாள். புல்லய்யாவின் உடல் ஏனோ நடுங்கத் தொடங்கியது. அவள் மிக மெதுவாக, சகஜமான, அமைதியான குரலில், "இவ்வளவு நடந்தப்புறமும் ஊருக் கெல்லாம் சொல்லிவிட்டு, என்கிட்டே மட்டும்தானா மறைக்கணும்?" என்று கேட்டாள்.

புல்லய்யா பேசவில்லை. உடலில் மயிர் சிலிர்க்கலாயிற்று. ஏதோ குற்றம் செய்தவன் போலாகி விட்டான். இருந்தாலும் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, அவளைப் பார்த்தபடி, "ஊர்லெ யார் கிட்டெயும் எனக்குப் பயமில்லெ!" என்றான்.

நீலி கணவன் பக்கம் இன்னும் நகர்ந்து உட்கார்ந்து கொண்டு, கணவனின் தலையைத் தன் மார்போடு சேர்ந்து அணைத்துக் கொண்டாள். அன்பு உணர்ச்சி கரைபுரண்டு பாய்ந்தால் இருவர் கண்களிலும் கண்ணீர் நிறைந்து. நீண்ட நேரம் பேச்சு வரவில்லை. நீலி சுவரில் சாய்ந்து உட்கார்ந்தாள். தன் மடியில் தலை வைத்திருந்த கணவனைப் பார்க்காமலெ, "நாளைக்கு வீட்டைவிட்டு போகாதே. ஆத்திரம் வந்தாக்கா மனுஷங்க மிருகங்க ஆயிட்றாங்க. . . நம்ம தலை எழுத்து அப்படி இருக்குதோ என்ன பண்றது? கையும் காலும் நல்லா. . . உறுதியா இருக்குதில்லியா!"

அவள், துக்கம் அடைத்துக்கொண்டு வந்தால் போலும், மேற்கொண்டு பேசவில்லை. ஆனால் அவள் கண்ணீர் ஒழுகி கணவன் மேல் விழவில்லை. மௌனமான அவளுடைய வேதனையைப் புரிந்து கொண்ட புல்லய்யா, "நாலு பேருக்கு, நமக்கு அநியாயம் நடந்ததுன்னு தெரிவிக்க வேண்டாமா?" என்று கேட்டான்.

"இந்தக் குழந்தைங்க முகத்தைப் பார்த்து ஆத்திரத்தெக்

குறைச்சிக்கிட்டீன்னா பிழைச்சிக்குவோம். யாருக்கும் ஆஸ்தி கீஸ்தி அப்படியே இருந்துவிடாது -- யாரும் இந்த உலகத்திலேயே இருந்துடப் போறதில்லெ! நல்லது கெட்டதுதான் மிஞ்சி நிக்கும். ஒரு கண்ணுலெ கண்ணீரு ஒழுகிச்சின்னா இன்னொரு கண்ணு சிரிச்சுக்கிட்டிருக்கனும். அப்பத்தான் பொழச்சிருக்க முடியும் -- உன் இஷ்டம்!"

அவள் அதற்கு மேல் பேசவில்லை. மெதுவாக எழுநது, கட்டில் மேலிருந்த மகள் பக்கத்தில் சென்று எடுத்தாள்.

பொழுது விடிந்தது . . . சற்று நேரத்தில் பொழுது மேலெ ஏறியது. புல்லய்யாவுக்கு இரவு நடந்த தெல்லாம் கனவு போல ஆகிவிட்டது. கொஞ்சமாகக் கஞ்சி குடித்தான். குளிர்ச்சியான கூழையும் குடித்தான். அதற்குள்ளாக, ஊர் முழுவதும் செய்தி பரவி விட்டது. அன்று புல்லய்யாவுக்கும் ராஜுவுக்கும் ஏதோ தகராறு நடக்கப் போகிறதென்று. தலைகள் உடையப் போகின்றன என்று சிலர் ஜோஸ்யம் சொன்னார்கள். முதலில் போகாமல் நின்று விடலாம் என்று எண்ணினான். 'மீசையை எடுத்து விட்டோமா?' என்ற சந்தேகம் வந்தது. 'சே, செத்துப் போறேன், பயந்தாங்கொள்ளி ஆயிட்றதா? மல்லு நாயுடு மகன். ஒரு வார்த்தை சொன்னால், சொன்னபடிச் செய்ய வேண்டியதுதான்! ஜனங்க மத்தியிலெ தலையைத் தைர்யமாக நிமிர்த்த வேண்டியதுதான்!'

பாணாத் தடியை கை இடுக்கில் வைத்துக்கொண்டான். மாடுகளை அவிழ்த்து நுகத்தடியப் பூட்டினான். ஏரை எடுத்துக்கொண்டான். பின்னாலெயே மகனும் இருந்தான். -- நீலி மௌனமாக இந்த வேலையெல்லாம் செய்து கொண்டிருந்த கணவனைப் பார்த்தாள். புல்லய்யா மனைவியை ஏறெடுத்துப் பார்க்கவிலலை. 'சரி!' யென்று புறப்பட்டான். வீட்டிற்குள் கட்டில் மேலிருந்த மகன் 'ஓ' வென்று அழத் தொடங்கினாள். பாட்டி முனகிக் கொண்டு பேரனைப் பிடிக்கப் போனாள். அவன் அவள் முடியைப் பிடித்து இழுத்து அடித்து விடுவித்துக்கொண்டு, அப்பா பின்னால் ஓடினான். நீலி கணவன் என்ன சொல்கிறானென்று பார்த்தாள். பேசாமலேயெ புறப்பட்ட அவன் பின்னால் சென்று, இடுக்கிலிருந்த பாணாத் தடியைப பிடித்துக் கொண்டாள். பின்னால் திரும்பப் போனால் ஏரின் முனை நீலியின் தலையில் 'டக்'கென்று இடித்தது,. அவன் கண்களைப் பார்த்தான் -- தடியை விட்டு விட்டு முன்னால் நடந்து கொண்டிருந்தானே ஒழிய, கண்கள் பின்னாலேயே பார்த்துக்கொண்டிருந்தன.

வயல் வரப்பை அடைந்தான். தன் சிறு வயதிலிருந்தது இந்த வரப்பு தனக்குச் சொந்தமானதே என்று எண்ணி வந்தான். ஆட்டுக் குட்டிக்கு, பந்தய மாடுகளுக்கு, பசுக்களுக்கு இந்த வரப்பில் உயரமாக வளர்ந்த புல்லை அறுத்துப் போடுவது வழக்கம். தன்னைப் போலவே தன் மகனும் அறுத்துப் போட்டு மேய்ப்பான் என்று நினைத்தால் -- இப்போது இப்படி ஆகிவிட்டது. தன் தாய் தந்தையர் மேல் எவ்வளவு பாசமோ இந்த நிலத்தைப் பார்த்தால் அதற்கு இரண்டு

மடங்கு பாசம். இனி இந்த மண் எனதில்லையாம்!'

ஏரை இறக்கினான். மகன் சின்னப் பிரம்பை வைத்துக்கொண்டு மாடுகளை நிறுத்தினான். நுகத்தடிக்கு ஏரைக்கட்டினான். வயலில் கிழக்குத் திசை திரும்பி ஏர் முனையை வைத்தான். அதற்குள் பீஸ ஓடோடி வந்தான். "அப்பா புல்லய்யா, அவங்க கும்பல் கும்பலாகத் தடிகளைத் தூக்கிட்டு வர்றாங்கப்பா! என் பேச்செக் கேளு புல்லய்யா. வா, போயிடலாம் . . . வந்துகிட்டிருக்கறாங்க . . . அதோ தோப்பைத் தாண்டிட்டாங்க . . . அதோ வந்துட்டாங்கோ. அப்பா , எங்கப்பால்லே புல்லய்யா -- உன் காலெப் புச்சிக்கிறேன்'பா . . .! அப்பா . . . . . . "

பீஸ பயத்தில் களைத்து வெலவெலத்துப் போய்விட்டான். அவன் சொன்னதில் ஒரு வார்த்தையும் காதில் விழாததுபோல், புல்லய்யா வயலை உழுது கொண்டிருந்தான். அவர்கள் வந்து விட்டார்கள் . . . அதோ, ஒருவர் இருவரல்ல . . . வயலைச் சுற்றிக் குழுமி விட்டார்கள். . . பீஸ ஆத்திரத்தோடு," வந்துட்டாங்கடா! ஒருத்தனெ அடிக்கறதுக்கு எத்தனெப் பேரு . . . தடியெ எடுத்துகிட்டு வரணுமா? நீங்கெல்லாம் மனுஷங்கதானா? நியாயம் ஊர்லே இல்லே -- காட்டுக்கு ஓடிப் போயிட்டுது."

ராஜு வயலில் இறங்கிப் பீஸயை இழுக்கப் போனான். பீஸ தப்பித்துக்கொண்டு, மல்லுவைத் தூக்கிக் கொண்டு வெளியே போவதற்காக வந்தான். மல்லு அழுது கொண்டே, தாத்தாவை அடித்து விட்டுத் தன்னை விடுவித்துக் கொண்டான். அவனுடைய சின்ன கோவணம் அவிழ்ந்துவிட்டது. அதைச் சரி செய்து கொண்டு மறுபடியும் அப்பாவின் பின்னால் போய்ச் சேர்ந்தான். ராஜு பீஸயை வயலுக்கு வெளியே தள்ளி விட்டான். அங்கே இருந்து பீஸ கத்திக் கொண்டிருந்தான் . "அப்பா புல்லய்யா! . . . அவசரப்படாதே!"

ராஜு மாடுகளுக்கு எதிரில் சென்று நின்றான். புல்லய்யா மாடுகளை அதட்டினான். அவை முன்னே காலெடுத்து வைக்கப்போனால், தடிகளைத் தூக்கிக் கொண்டு, இன்னும் இருவர் முன்னால் வந்து நின்றார்கள். மாடுகளை நிறுத்திக் கட்டுகளை அவிழ்த்து விட்டார்கள். புல்லய்யா பற்களைக் கடித்துக் கொண்டான். சுற்றி இருந்த ஜனங்களை அவன் பார்க்கவில்லை. உடம்பெல்லாம் மரத்துக் கொண்டிருந்தது. கண்கள் எரிந்து கொண்டிருந்தன. அந்த வெய்யிலில் தலை வெடிப்பது போலிருந்தது. கோபத்தால் திரை மூடிய கண்களால் மாடுகளை அவிழ்த்து விட்ட ராஜுவை வெறித்துப்பார்த்தான். கண்களில் ஏதோ விழுந்து விட்டதோ என்று அவற்றைத் துடைத்துக் கொண்டான். இன்னும் அந்தக் கண்ணுக்கு நீலிதான் தென்பட்டுக் கொண்டிருந்தாள் . . . 'என்ன, என் மாடுகளை அவுத்தது ராஜுப்பய இல்லியா? நீலாவா? . . . நீலம்மா .' என்றுமில்லாத அச்சம் சூழ்ந்து கொண்டது -- மல்லுவைப் பார்த்த

உடனே ஒன்றும் செய்ய இயலாமல் குழம்பிப் போனான். கையில் தடியில்லை. தடியிருந்தாலும் மனைவியை அடிக்க முடியுமா?

அந்த இடத்தை விட்டு நகராமல் நின்ற மாடுகளை ராஜு தடியால் ஓங்கி அடிக்கவே, அவை வயலுக்கு வெளியே வேகமாக ஓடிவிட்டன. மல்லுவுக்கு ஆவேசம் வந்தது.

"யார்றா நீ . . . எங்க மாடுகளை அடிக்கிறவன்? " என்று கத்திக் கொண்டே, கையிலிருந்த பிரம்பால் ராஜுவை அடித்தான். ராஜு போகத்தோடு மல்லுவை வயலுக்கு வெளியே இழுத்துக்கொண்டு போகும்போது, ராஜுவின் தொடையில் அழுத்திக் கடித்துவிட்டு, விடுவித்துக்கொண்டு அப்பாவின் அருகே ஓடினான்.

ராஜு ருத்ரனாகி விட்டான். ஏரைத் தூக்கி எறிந்தான். "வயலை விட்டுப் போறியா இல்லெயா –"என்று ஒரு வசவையும் வீசினான்.

புல்லய்யாவின் சர்வ நாடியும் துடிதுடித்தன। ஒரு துள்ளு துள்ளிச் சிங்கம் போல் அவனைப் பாய்ந்து குதறப் போனான். ஆனால் அந்தத் துள்ளலில் ஏதோ ஒரு குறை . . . கால் வழுக்கி உழுத நிலத்தில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்துவிட்டான். உடனே எழுந்து ஓடிச் சென்று ராஜுவின் மேல் பாயப் போனான். மூன்று பேர் குறுக்கேத் தடிகளை நீட்டி, " ஒரு அடி எடுத்து வெச்சீன்னாலும் மண்ட உடெஞ்சிடும், " என்றார்கள்.

அப்படியே நின்ற புல்லய்யா, அந்தத் தடிகளிடையே பார்த்தான். எதிரில் எத்தனையோ பேர் இருந்தார்கள். ராஜுவும் கூட இருந்தான். ஆனால் அவர்களில் யாரும் தென்படவில்லை -- 'யார்து? நீலி . . . என் நீலி . . . என் நீலியைக் கொல்லப் போனேன்? '

அந்த மூவரில் இருவர் அவன் கைகள் இரண்டையும் பிடித்துக் கொண்டார்கள். மகனை இன்னொருவன் பிடித்துக் கொண்டான். ராஜு சொன்னது போல வயலுக்கு வெளியே பிடித்துத் தள்ளிய போது, அந்த வயல் மண்ணை முத்தமிட்டபடியே, அப்பாவும் மகனும் வெளியே வந்து விழுந்தார்கள். ஓடி அருகில் வந்த பீஸ், புல்லய்யாவின் கண்ணில் நீரைப் பார்த்துவிட்டு, "என் புல்லய்யா . .நீயாப்பா அழுறே? புலி பூனையாய்ப் போய்ட்டுதா அப்பா। என்ன கதி வந்துட்டுதப்பா." என்று தலையில் அடித்துக் கொண்டு 'ஓ' வென்று அழுதான்.

## 20

அதே நாள் மாலை. . . மிகக் கடுமையாகக் காய்ந்து. . . காய்ந்து . . . . . பொழுது கீழே இறங்கத் தொடங்கியதும், வானமெல்லாம் மேகங்கள் சூழ்ந்து கொண்டன. அங்கங்கே தூறல்கள் விழுந்தன. போகப் போகக் காற்று வீசியது. மேகங்கள் மேற்கு நோக்கிப் பயணம் செய்து மலைகளில் ஒன்று சேர்ந்தன. அந்தி மாலையில் மலைகளில் மின்னல்கள் பளிச்சிட்டன.

அந்த நேரத்தில் நீலம்மன் கோவில் அருகில், கடப்பைக்கல் மீது, குருட்டு வெங்க்கன்னா, தனியாக உட்கார்ந்திருந்தான். கையில் பாணாத் தடி இருந்தது. கென்னம்மாவிடம், 'உனக்குப் புண்ணியமா இருக்கும்!' என்று கேட்டுக் கொண்டதும் தன் ஆசையை நிறைவேற்றி வைத்தாள். இங்கு விட்டு விட்டுப் போகச் சொன்னபடி, அழைத்து வந்து விட்டுவிட்டுப் போனாள். தடியை முன்னால் போட்டு வைத்து உட்கார்ந்திருந்தான்.

மெல்லக் காலடி ஓசை கேட்டது.

"யாரய்யா அது? என்று கேட்டான். "குருடா, இருட்டி கிட்டிருக்குது. இங்கே ஏன் இருக்கறே" என்று சஞ்சீவி கேட்டான்.

"அய்யா! தாஸன் ஆவேசம் வந்து பேசினாக் கேட்டுட்டுப் போலாம்னு . . . "

"பட்டினியாலெ பாதி செத்தான். ஜொரத்திலெ வேறெ செத்து கிட்டிருந்தா எப்படி வருவான்? வா, ஊர்லெ விடடுட்றேன்," என்றான்.

"வேணாம்யா! தாஸன் எப்படியும் வருவான். . . " என்று சொல்லிவிட்டு, நகர்ந்து நன்றாக உட்கார்ந்து கொண்டான்.

ஆற்றில் தண்ணீர் சளசளவென்று பாயும் சத்தம் கேட்டது. பாலத்தின் மேல், குலுங்கும் கழுத்து மணிகளுடன் ஓடும் மாட்டு வண்டிகளின் ஓசை. அவ்வப் போது 'பொப்பொய்ஞ்' என்ற பஸ்களின் அலறல் . . . இவை எல்லாவற்றையும் கரடிபோல விழுங்க வரும் இருட்டு!

காலடி ஓசை.

"யாரய்யா அது?"

பதில் இல்லை.

"பேரு சொல்லு."

சிறிய முனகல் சத்தம்.

வெங்க்கன்னா தடியைத் தூக்கிக்கொண்டு, "சொல்லலேன்னா மேலெ விழும்," என்றான்

"நான்தாண்டா . . . தாஸன்!"

"அய்யா, பேசாம இருந்து காரியத்தக் கெடுத்திரபாத்திய! ராஜுப்பய இந்தப்பக்கம் வருவான்னு காத்து கிட்டிருந்தேன்."

தாஸன் மௌனமாகக் கோவில் கதவுகளைத திறந்தான். அன்றைக்கு கிழிந்த அழுக்கேறிய துணிகள் -- நனைத்து காய வைத்து மடி கட்டிக் கொண்டு வந்தான். நேற்றும் அவற்றோடுதான் வந்தான். மகன் நேற்று மத்தியானமே, அப்பா ஜுரத்தில் விழுந்து கிடந்ததைப் பார்த்துவிட்டு மெதுவாக, மூங்கில் கூடையிலிருந்த பட்டு வேட்டி . . . ஊரெல்லாம் சேர்ந்து தாஸனுக்கு வாங்கிக் கொடுத்த அந்த நாகப்பழ நிறப் பட்டு வேட்டி -- திருடிக் கொண்டுபோய்க் குடிப்பதற்குக் காசுக்காக விற்றுவிட்டான். பேரய்யா செட்டி கால்வாசி விலைக்கு வாங்கிக் கொண்டான். அந்த வேட்டி போனதற்காகத் தாஸன் மிகவும்

மனம் நொந்து போனான். ஜுரம் இன்னும் அதிகமாயிற்று. அந்த வேட்டி போய்விட்டது — தன் வாழ்க்கையும் அத்தோடு முடிந்தது என்று எண்ணிக் கொண்டான். எழுந்திருக்க முடியாத நிலை. ஆனாலும் கடைசி மூச்சு இருக்கும் வரையில் தாய்க்குத் தன் கையால் கைங்கர்யம் நடந்தாக வேண்டும்! மெல்ல எழுந்து துணிகளை மாற்றிக் கொண்டு. . . அடிமேல் அடி வைத்து களைப்பு அதிகமாகும் போது நின்று ஓய்வெடுத்து — மறுபடியும் நாலு அடி எடுத்து வைத்து. . . இப்படி நீண்ட நேரத்திற்குப் பிறகு நீலம்மன் கோயிலுக்கு வந்து சேர்ந்தான். அங்கே வந்து சேர்ந்த பொழுது மிகவும் களைத்துப் போகவே வெங்க்ன்னாவுக்கு உடனே பதில் சொல்ல முடியாமல் போய்விட்டான்.

விளக்கை ஏற்றி விட்டுக் கீழே பொத்தென்று உட்கார்ந்து விட்டான். ஆவேசப் பேச்சு பேசுவதற்குச் சக்தி இல்லை. கிழப் பிண்டம் போல நடுநடுங்கிக் கொண்டிருந்தான். பழுத்துப்போன குடுமி, தாடி . . . அவற்றிற்கிடையில் மெலிந்து சிறுத்துப் போன முகம் – பற்கள் விழுந்து விட்ட வாய். . . குழிவிழுந்த கண்கள். . . சுவரில் சாய்ந்து கொண்டான்.

வெங்க்கன்னா தடவிக் கொண்டே, மெல்ல மெல்ல கோயில் வாயிற்படிக்கு வெளியே வந்து உட்கார்ந்தான். தாஸனின் முனகல் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

"அய்யா!" என்றான் வெங்க்கன்னா. தாஸன் பதிலுக்கு முனகினான். "அந்த ராஜுப்பய, பச்செக் குழந்தெ மல்லுவெ இழுத்துப் போட்டான். அந்தப் புல்லய்யா நிலத்தெ முழுங்கிட்டான் எத்தனையோ பேரு பொழப்பெக் கெடுத்துகிட்டிருக்கிறான். அவன் – அவன் ரத்தத்தெப் பாத்தாலொழிய புத்தி வராது. அதுக்குத்தான்'யா காத்துகிட்டிருக்கேன்.

தாஸன் முனகிக் கொண்டே, "அப்பா! புலியா? சிங்கமா? மனுஷங்களெக் கொண்ணுத் தின்னாத வரையிலெ நல்லவன் தாம்'பா! . . . "

"நல்லவனா! ஊர்லெ நியாயம் இருக்குதா? இந்தக் கிராமம் நாசமாப் போவுது. பாரு'யா! நீ இவங்கெல்லார்க்கும் எவ்வளவு சொன்னே! எதுக்காக! என்னெப் போலக் குருட்டுப் பய கண்ணெ மூடிக்கிட்டுப் பாத்தாலும், திறந்து கிட்டுப் பாத்தாலும் ஒண்ணுதான்!"

தாஸன் மெதுவாக நிறுத்தி நிறுத்தி , "அவங்கவங்க கிரகத்த. . . பொறுத்து. . . அவங்க. . . வாழ்க்கெ. . . நடக்குது ! இருட்டு இல்லமெ போனா. . . பகல் யாருக்கு வேணும்? கெட்டதில்லேன்னா . . . நல்ல தில்லே!'

நாக்கு இழுத்தது. பேச்சு தடுமாறியது. இருந்தாலும் கடைசி மூச்சு வரையில் வார்த்தைகள் மெதுவாகச் சிதறி வந்தன.

"மேற்கே . . . பொழுதிறங்கினா . . . கிழக்கே எழுந்திருக்காதா? ஒரு நாளு வெப்பம் . . . இன்னொரு நாளு குளிர்ச்சி . . . சாவறோம்

. . . பிறக்கறோம்! சாவு நமக்கில்லே . . . . உலகம் நிலையா இருக்கறதுக்கு!"

ஒரு முனகல் முனகினான். மலைகளில் இடிச் சத்தம் கம்பீரமாகக் கேட்டது. மின்னல்களோடு மேகங்கள் இந்தப் பக்கமாக ஓடோடி வந்தன. வானம் தத்தளித்துக் கொண்டிருந்தது.

வெங்க்கன்னா, "அய்யா!" என்று கூப்பிட்டான். வார்த்தை ஒன்றும் வரவில்லை. 'அம்மன் ஏறிவிட்டது!' என்று எண்ணினான். மௌனமாக, 'மனிதா!' என்ற கம்பீரச் சத்தத்தைக் கேட்பதற்காகக் காதுகளைத் தீட்டிக் கொண்டு, கைகளைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

அகலில் எண்ணெய் இருந்தது. திரியைத் தூக்கி விடுவதற்கு யாருமில்லை. போகப் போக . . . ஒரு நிமிஷத்தில் வத்தி பெரிதாக எரிந்து விளக்கு அணைந்து விட்டது. இருட்டு! எந்தப் பக்கம் பார்த்தாலும் இருட்டு! ஆனால் வெங்க்கன்னாவுக்கு மனதில் ஆனந்தம்! -- 'நீலம்மனின் பேச்சைக் கேட்கப் போகிறான்!'

'ஹோ 'வென்று காற்று வீசியது. அடைமழை பெய்வதற்கான அறிகுறிகள் -- மழை கொட்டத் தொடங்கி விட்டது. படபடவென்று விழுந்தது. வெங்க்கன்னா மெல்லத் தடவிக் கொண்டு கோவிலுக்குள்ளே காலை வைத்தான்.

கதவை மூடுவதற்கு முயற்சித்தான். காற்று கதவுகளைத் திறந்து, தூறலைக் கோவிலுக்குள்ளே அடிக்கச் செய்தது. உள்ளே தாழ்ப்பாள் இல்லை. கதவுகள் அடித்துக் கொண்டிருந்தன. இடிச் சத்தம் கோவிலுக்குள்ளே எதிரொலித்தது. சாஷ்டாங்கமாக விழுந்தான். அப்படி விழுந்த போது முழங்கை அகல் விளக்கில் பட்டது. சட்டென்று எழுந்தான். கோவிலுக்குள்ளே காற்று பலமாக வீசியது . . . தான் நனைந்து கொண்டிருக்கவே, உட்கார்ந்து தடவிக்கொண்டே, ஒரு மூலைக்குப் போகும் போது கையில் ஏதோ தட்டுப்பட்டது. மெதுவாகக் கையால் தடவினான். சில்லென்று பட்டது. அப்படியே கையால் உடல் முழுவதும் தடவினான். தாஸன் இறந்து விட்டானென்று முடிவு செய்வதற்கு ஒரு வினாடி கூடப் பிடிக்கவில்லை.! அந்தப் பிணத்தை . . . அந்தத் தலையை இரண்டு கைகளால் இறுக்கிப் பிடித்துக்கொண்டு தேம்பி அழுதான். அழுகை பீறிட்டுக்கொண்டு வந்தது.

கண்ணீர் கால்வாயாக வழிந்து தாஸன் மேல் விழுந்தது. அந்த அழுகையிலேயே "உன்னெ பட்டினி போட்டே கொண்ணுட்டாங்க . . .எங்கய்யா . . . எங்க தாஸய்யா! உன்னெ பட்டினி போட்டே கொண்ணுட்டாங்கடா! . . . எங்க தாய்க்கு இனிமே விளக்கு யாரு ஏத்துவாங்க? இங்கெ சாமி வந்து யாரு பேசப் போறாங்க? ஒரே அழுகை! அந்த ஓலமெல்லாம் இடிகளின் பயங்கரச் சத்தத்தில் கரைந்து விட்டது. அந்தக் கண்ணீர் தாஸன் உடம்பிலிருந்து வழிந்து

இயற்கை தெளித்த மழையிலே கலந்துவிட்டது!

## 21

மறுநாள் காலை -- மழை நின்று இயற்கை அமைதியாக இருந்தது. முறிந்த மரங்கள், கூரைகள் பறந்து போய்விட்ட வீடுகள் பயங்கரமான முண்டங்கள் போல காட்சியளித்தன. தாஸன் இந்த மண்ணில் பிறந்து, இந்த ஊர் மண்ணையே நம்பி இருந்து, வாழ்ந்து, கடைசியில் ஆற்றங்கரையில் சாம்பலாகி விட்டான்.

மத்தியானத்திற்குள் பெருவெள்ளம் கரைபுரண்டு வந்தது. 'ஹோ றா' - என்று அந்த வெள்ளச்சத்தம் ஊர்க்கோடி வரைக் கேட்டது. இரண்டு கரைகளையும் கடந்து பாய்ந்து, எதிர்க்கரையிலிருந்த பைரி கிராமத்திற்குள்ளே வெள்ளம் நுழைந்து விட்டது. நவிரி கிராமத்தில் அவ்வளவு ஆபத்தில்லை -- கரை உயரமாக இருந்ததாலும், தெற்குப் பக்கம் மண்மேடுகள், அந்த மேடுகளில் சவுக்குத் தோப்புகள் இருந்ததாலும் வெள்ளம் எவ்வளவு வந்தாலும் வெள்ளத்தால் அபாயம் இருக்காது.

ஆற்று வெள்ளம் போகப் போக அதிகமாகி சுழல்கள் உருவாகத் தொடங்கின. மரங்கள், முட்செடிகள், பிராணிகள் முதலியவற்றைச் சுழற்றி அடித்துக்கொண்டு போயிற்று. தெப்பமில்லாமல் எப்பேர்ப்பட்ட கெட்டிக்கார நீச்சல்காரனாலும் ஆற்றில் இறங்க முடியவில்லை. கங்கம்மன் வரவர ருத்ரகாளியாக மாறிவிட்டாள். கரையோரங்கள் திடீரென்று குலைந்து கொண்டிருந்தன. வாராவதி கிடுகிடுவென்று ஆட்டம் கண்டது. தெப்பங்களிலிருந்தவர்களையும் சுழல்கள் கிறுகிறுசென்று சுழற்றி மூழ்கடிக்கப் பார்த்தன -- 'என்ன பயங்கரம்? எதற்கு இவ்வளவு ஆரவாரம்? எதற்கு இவ்வளவு ஆர்ப்பாட்டம்?-- ஏனம்மா முந்தா நாள் கூட நிலா வெளியில் அழகாக, நளினமாக, சலங்கை ஒலியோடு நாட்டிய மாடியவள் -- இதற்குள் இந்தப் பயங்கரம் எதற்காகம்மா? எப்போதும் அந்த இனிமை உன்னிடமிருந்தால் -- கண்ணுக்கு இன்பமாக இருந்து, கரையோரம் இருப்பவர்களிடம் மகிழ்ச்சியைப் பெருக்கெடுக்கச் செய்து, இனிய ராகங்களை எப்போதும் மீட்டிக் கொண்டிருப்பாயே!'

ஆறு சிரித்தது! காரிருளில் ஒரு மூலையில் சிறிய ஒளி, ஏமாற்றத்தினிடையே ஒரு நம்பிக்கைக் கோடு. கடந்து போனதை நினைவுக்குக் கொண்டு வந்தது. ஒரு முறை ஆறு பயங்கரமாகப் பெருக்கெடுத்து வந்தது. வரவரக் குறைந்து பார்வைக்கு இன்பமாக அமைதியாப் பாயத் தொடங்கியது. கோடையில் வரண்டு அசைவற்றது போல் காட்சியளித்தது. புயல் காற்றில் மணல் குன்றுகளே பறந்து போயின. குடிப்பதற்கு ஒரு துளித் தண்ணீரும் கூட இல்லாத அளவு வற்றி உயிரற்றதாகிவிட்டது! மறுபடியும் பயங்கரமாக வெள்ளம்

வந்தாலொழிய அவளிடம் உயிர்த் துடிப்பே அடங்கிப் போய்விடும்।

எந்த நாட்டுச் சரித்திரத்திற்கானாலும், எந்த மனிதன் வாழ்க்கைக்கானாலும் தானே மூலாதாரம் என்பதைத் தெரிந்து கொள்ள முடியாமற் போனதற்காகப் போலும் ஆறு சிரித்தது! அந்தப் பயங்கரமே இல்லாமற்போனால், அந்த மனோகரமான அமைதியான வாழ்க்கைக்குத்தான் ஆதரவு இருக்குமா!

வாழ்க்கையில், உண்மையில், மேடு பள்ளங்கிடையேதான் தாஸன் வாழ்ந்தான். சுகமாக, அசைவில்லாமலிருந்தால் தன்னில் உயிரிருந்தும் இல்லாதது போல்தான். உயிரில்லாத மனிதன், அத்தகைய மக்கள் நிறைந்த நாடு எப்படி உருப்படும்?

நவிரி கிராமத்தில் எத்தனையோ பேர் பிறந்தார்கள் -- எத்தனையோ பேர் மறைந்தார்கள். குறையொன்றும் தென்படவில்லை. ஆனால் தாஸனில்லாத குறை தென்பட்டுக் கொண்டுதான் இருந்தது. நீலம்மன் கோவிலில் விளக்கேற்றுபவர் யாருமில்லை. வேதனையோடு இருக்கும் களத்தோடு இதயங்களை எந்த வார்த்தைகள் இலேசாக்குமோ, அந்த வார்த்தைகள், தேவைப்பட்டவர்களுக்குக் கேட்கவில்லை. ஆபத்தில், ஆத்திரத்தில் -- எந்த இதயம் பழமொழிகளாலும், நல்ல வார்த்தைகளாலும் கொஞ்சம்கூடக் குறையில்லாத அபூர்வமான அன்போடு, பரிவோடு சமாதானப்படுத்துமோ, அந்த இதயத்திற்குப் பஞ்சம் வந்துவிட்டது. தாஸன் இறந்த பிறகும் வாழ்ந்து கொண்டிருந்தான். மருமகள் கோபத்தில் எரிந்து விழுந்து வார்த்தைகளைக் கொட்டுவதறகு இனி மாமனார் இல்லை. மகன் கடித்துக் கொதறித் தின்பதற்குத் தந்தை இல்லை. அவளுடைய கோபத்தை, அவனுடைய அரக்கத் தன்மையை காந்தமாகத் தாங்கிக் கொள்ளும் பானை உடைந்து விட்டது. இப்போது சிதறிய கோபங்கள், வெளிப் படுத்தப்படும் அரக்கத்தனம் அவர்களையே பாதிக்கத் தொடங்கியது. அந்த கிழவன் எவ்வளவு நல்லவன்! மகனுக்கு இப்போது அப்பா நினைவு வந்தால், 'ஓ' வென்று அழுவான். மருமகள், 'நான் எவ்வளவு அநியாயம் பண்ணினேன்,' என்று நொந்து கொள்வாள். அந்த அழுகை வராமலிருக்க வேண்டும் என்றால், தான் இந்த மாதிரி வாழக்கூடாது. தன் மனம் தன்னை மறந்திருக்க வேண்டும். அதனால், திருடியோ, வேலை செய்தோ, சீட்டாட்டம், ஆடியோ. என்ன செய்து என்ன வந்தாலும், ஊரில் கள்ளச் சாராயக் கடையில் ஊற்றிக்கொண்டு, அப்பாவை மறந்து கொண்டிருந்தான். மனைவி கூலி வேலை கிடைத்த வரைக்கும் செய்து, கிடைக்காத போது பெரிய விவசாயிகளின் வீடுகளில் கேட்டு வாங்கி, குழந்தைகளைக் காப்பாற்றி வந்தாள்.

* * *

ஒரு நாள் மாலை நேரத்தில், நீலி சமையல் முடிந்த பிறகு தெருத்திண்ணை மேல் பஞ்சைச் சரி செய்து கொண்டிருந்தாள். பாட்டி ஒரு இடத்தில் உட்காரவில்லை. ஏதோ வேலை செய்து

கொண்டிருந்தாள். கொஞ்சம் களைத்த உடனே, இரண்டாண்டு நாட்களுக்கு ஜுரம் வரும். அன்று ஜுரம் அதிகமாக இல்லாததால் பேத்தியுடன் விளையாடிக் கொண்டிருந்தாள். அருகில் நீலி உட்கார்ந்திருந்தாள். அப்போதுதான் வெங்க்கன்னாவுக்குக் கொஞ்சம் சாதம் போட்டு கஞ்சி ஊற்றினாள். வெங்க்கன்னா சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அப்போது பீஸ்யின் குரல் உரக்கக் கேட்டது. தெருவில் எதிரில் வந்தவர்களை நிறுத்தி, 'ஏம்'பா! சூத்ரனைப் பருப்பு சாப்பிடச் சொன்னா எப்படிப்பா? எல்லாரும பருப்புச் சாதம் சாப்பிட்டா, நாளைக்கி யுத்தம் வந்ததுன்னா, கத்தி, துப்பாக்கியைத் தூக்கிகிட்டுப் போவாங்களா? சூத்ரன் பொழப்போ மாம்சத்திலெதானே இருக்குது! அவன் துப்பாக்கியெப் பிடிக்கணும்னா கடவுளும் சாராயமும் இருக்கணும்'ங்கறியா, வேணாம்'கறியா?"

கேட்டுக் கொண்டிருந்தவர்கள் சிரித்தபடி ஒப்புக் கொண்டார்கள். பீஸ்யின் தொண்டை இன்னும் மேலெ போயிற்று. அபிநயத்தோடு, "அந்தக் கவர்ன்மெண்ட்காரன் நல்ல சரக்குக் கொடுப்பான் குறெஞ்ச விலெக்கு! இந்தத் திருட்டுப் பசங்கல்லாம் கெட்ட சரக்கெ ரொம்ப விலெக்கிக் கொடுத்து நம்பளெ ஒரேயடியாக் கொல்றாங்கடா! எனக்குத் தெரியும் . . . எனக்கெல்லாம் தெரியும் .. . இது என் கவர்ன்மெண்ட்காரன் வேலெயில்லேன்னு!" என்று சொன்னான்.

கும்பலில் ஒருவன், "வேறெ யார்துடா? பாத்தியா? அவன் பறக்கற குருவியெக் கூண்டுலெ வெக்கறேனுன்னா என்ன ஆகும்! என்னெக்கும் குடிக்காதவன் நீ குடிச்சியா? பத்துப் போரு நோயி வந்து செத்துகிட்டிருக்கறாங்க -- நாயுடு, கணக்கன், மேலெ இருக்கறவங்க, சாராயக் கடைக்காரன் இவங்கெல்லாம் சுகமா இருக்கறாங்க!"

பீஸ் 'அஹ்ஹஹ்ஹா' என்று சிரித்தவிட்டு, சட்டென்று நிறுத்திவிட்டு "என்னாய்யா சொன்னே! என் கவர்ன்மெண்ட்காரனெ, என்னெ மாதிரி ஆளுங்களெச் சொல்றியா? சேச்சே . . . மேலெ இருக்கற என் கவர்ன்மெண்ட்காரன், கீழெ இருக்கற நாம நல்லவங்கதான் -- இதுக்கு மத்தியிலெ இருக்கறவங்களே -- கடவுள் வரம் குடுத்தாலும், பூசாரி குடுக்கமாட்டாண்டா! அய்யா, ஆனெயெப் பூனெ ஆக்குவான். . . பூனெயெ ஆனெ யாக்குவாங்க! பாத்தியா! கணக்கன் திருட்டுக் கணக்கு எழுதிட்டானா! புல்லய்யாவெ ஜெயில்லெ வெச்சிட்டாங்களா. . . நேத்தைக்கும் இனைைக்கும் நீ மாறிப போயிட்டே – அதெ மாதிரி வராதா நல்ல நாளுங்க. "

அங்கே, நீலியின் வீட்டுப் பக்கத்திலிருந்த வெங்க்கன்னா உரதத குரலில் சலித்துக் கொள்ளவே, பீஸ் அந்தப் பக்கம் வந்தான். வெங்க்கன்னாவின் காய்ந்த வயிறு கொஞ்சம் நிறையவே, சக்தி வந்து, எழுந்து நின்று, " வருமு! ஊரெல்லாம் இந்தப் பெரிய நாயுடுங்க வெச்ச சட்டத்திலெ எரிஞ்சி ஆடுமாடுங்களாயிட்டாங்க! கடவுளு கண்ணெக் குடுக்கலே!" என்று சொன்னான்.

பீஸ் அருகில் வந்து நீலியைப் பார்த்தவுடனே, "என்னம்மா! இந்தக் குருட்டுபபய கொஞ்சமாப் பாவம் பண்ணான், என்னானான்ன? அந்த மாதிரியே ஒவ்வொர்த்தருக்கும் ஒரு நாளு வரும். நாம எல்லாரயும் எதுக்குப் புடுங்க்ணும்! அவங்க பாவமே அவங்களெப் புடுங்கித் தின்னும்!" என்றான்.

குருட்டு வெங்கன்னா, "வாறேன் தாயே! " என்று சொல்லித் தடியின் உதவியுடன், மெல்ல மெல்ல நடந்து, சற்று நின்று, "அவங்கவஙக பாவம் அவங்கவங்களையே தின்னுடும்னு சொல்லிவிட்டு, அந்தக் குழந்தைங்களுக்கு, அண்ணாக் கயத்திலெ தாயத்தெக் கட்டுங்க! அந்த நாயிங்களுக்கு அதிகாரத்தெக் குடுத்தா இந்த ஏழெங்க வீட்டுப் பானெங்க தானாவே கூழு காய்ச்சிக்குமா? ஊர்லெ காப்பாத்தெற கடவுளில்லாம் போய்க்கிட்டிருந்தா, கண்ணிருக்ற இந்த மனுஷங்கெல்லாம் ஆடுமாடுங்களாய்கிட்டிருக்றாங்க ! எல்லாரும் சேந்து இந்த நாலு பேரெப் பிடிச்சி பஞ்சாயத்தெக் கூட்டுங்க !" என்றான்.

மகன், பாட்டி கற்றுக் கொடுத்த பழமொழிகளைச் சொல்வதைக் கேட்டு, சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்த புல்லய்யா "என்னடா குருடா, அப்படிக் கரிச்சிக்கொட்றே !" என்று குரல் கொடுக்கவே வெங்க்கன்னா நின்று, "அப்பா புல்லய்யா! எனக்கப்புறம் நீதான் ஊர்ப்பேரெக் காப்பாத்தானே. நானு குருடானாயிட்டேன். உனக்குக் கணணிருக்குது. உசிரு போனாலும் நியாத்துக்காகப் போராடணும்'பா! ஊர்லெ இருக்கற ஏழெ பாழெங்க படுத்துட்டாங்க! அவங்களெ எழுப்பி, செத்தவங்களுக்கு உசரெக் குடுத்து, அவங்களுக்குக் கடவுளெக் காட்டு! அப்பொ அவங்க மனுஷங்களாவாங்க. என்னெக்கி அவங்க மனுஷங்களாகறாங்களோ, அன்னெக்கி பிணங்களெப் புடுங்கித் தின்னணும்னு இருக்கற இந்தப் பேயுங்க ஒழிஞ்சி போயிடும்!" என்று சொன்னான்.

வெங்க்கன்னாவுக்கு உணர்ச்சி பெருகி உடம்பெல்லாம் புல்லரித்தது. புல்லய்யா பதிலொன்றும சொல்லவில்லை. மல்லு மட்டும் அவனுடைய பாட்டி சொல்லும் பழமொழிகளில ஒன்றைச் சொன்னான் . "வாயெவாயெ அடக்கனியா . . . முதுகெ முதுகெக் காப்பாத்தினயா?" புல்லய்யா, "நாளெக்கிப் பாககலாம் ஆவட்டும்." எனறு சொல்லிக்கொண்டே வாசலுக்கு வந்தும் பீஸ ஒன்றும் பேசவில்லை. மல்லு பீஸ் தாத்தாவின் கழுத்தைச் சுற்றிப் பிடித்துக்கொண்டு, "வாயெ வாயெ அடக்கனியா . . . முதுகெ முதுகெக் காப்பாத்தினியா?" என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

"நல்லா இருக்குடா தாத்தா!" என்றான் பீஸ். அந்தப் புகழ்ச்சியில் குளிர்ந்து போன மல்லு தன் அறிவை மேலும் கொட்டத் தொடங்கினான் : "புத்தி புத்தி நல்லா'ருக்குதே -- சோறு நீ சாப்பட்றியே!"

பீஸ்வுக்கு மிகவும் பெருமையுண்டாகி, பேரனை அணைத்து முத்தமிட்டான். நீலி, தீடீரென்று, "அய்யா குடிச்சியா?" என்று கேட்டாள்.

பீஸ்யை இந்தக் கேள்வி உலுக்கி விட்டது. இதுவரையில் மௌனமாக இருந்த அந்த தொண்டையிலிருந்து வ்நத இந்தக் கேள்வி அவன் போதையை விரட்டி அடித்து விட்டது. உடனே பதில் சொல்ல முடியவில்லை. கொஞ்சநேரம் பொறுத்து, "அம்மா!" என்றான் மறுபடியும் வாயடைத்து விட்டது. எதார்த்த நிலைக்கு வந்த பீஸ்வுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது . "குழந்தெ குட்டிங்க துடிச்சி கிட்டிருந்தா பாக்கமுடியாம -- ஒண்ணும் பண்ண முடியாம . . . அந்த அம்பட்டப் பய வாங்கிக்கொடுத்தா . . . ஒரு நிமிஷமாவது இதையெல்லாம் மறந்திருந்தா . . . மனசுக்கு நிம்மதியா இருக்கும்னு . . ." என்று தடுமாறினான்.

சற்று நேரம் நிசப்தம் நிலவியது. புல்லய்யா, உன்னெ மாதிரி நிலமெ இனிமே எங்களுக்கும் வரப்போவுது போல என்று சொல்ல வாயெடுத்து, மனைவியைப் பார்த்துவிட்டுப் பேசாமலிருந்தான்.

## 22

ஒரு செண்ட் நிலம் கூடத் தனக்கென்று சொந்தமாக இல்லாத போது மாடுகளை வைத்துக் கொண்டு என்ன செய்வது? வாங்குபவர்கள் பார்க்க வந்தனர். ஐந்து ஆண்டுகளாகத் தொழுவத்திலிருந்த மாடுகளை அனுப்பிவிடுவது கஷ்டமாக இருந்ததால், விலையை அதிகமாகச் சொல்லிக் கொண்டிருந்தான். விலை அமையவில்லை. இப்படி வைத்திருப்பதால் என்ன லாபமென்று கேட்டாள் நீலி. இன்னும் கொஞ்சம் நாட்கள் போனால் அவையும் பட்டினி கிடக்க வேண்டியதுதானா?' விற்றுவிடச் சொல்லி வற்புறுத்தினாள். வேறு வழியில்லாமல் ஒப்புக்கொண்டான்.

அவற்றை வாங்கிய அயலூர் விவசாயி, தொழுவத்திலிருந்து அவிழ்ப்பதைப் பார்த்த மல்லு வழிமறிக்கத் தொடங்கினான். கையில் பிரம்பு இருந்தது. எஜமானைப் பார்த்துக்கொண்டே நகராமல் நின்றன மாடுகள். மேலெ சாட்டை அடிவிழவே தொழுவத்தை விட்டு வெளியே போக ஓட்டம் பிடித்தன. புதிய எஜமான் பின்னாலேயே போனான். மல்லு, மாடுகள் வேகமாக நடந்து தன் பக்கம் வந்தாலும் இடத்தைவிட்டு நகரவில்லை. "ஹேய்!" என்று கத்தினான். இந்தக் கத்தலைக் கேட்ட புல்லய்யா ஓடினான். மாடுகள் அவனை மிதித்து விடும் என்று பயந்தான். வழியிலிருந்து விலகச் சொல்லிக் கத்தினான். புதிய எஜமான் பயந்து கொண்டே, வேறொரு பக்கமாக மாடுகளை ஓட்ட முயற்சித்தான். ஆனால் மாடுகள் மல்லுவின் பேச்சைக் கேட்டு நின்று விட்டன. அப்படியே பீளை நிறைந்த கண்களோடு மல்லுவைப் பார்த்துக் கொண்டே தலைகளை ஆட்டின. "அப்பா! மாடுகளைக் கட்டு,"என்றான் மல்லு. அப்பா வந்து மகனைத் தூக்கிக் கொண்டு

வழியை விட்டு விலகினான். நின்றுவிட்ட மாடுகள் நகரவில்லை. மறுபடியும் சாட்டையடி சர்ரென்று விழவே முன்னோக்கி ஓட்டம் பிடித்தன அப்பாவின் கைகளிலிருந்த மல்லு, தன் கையிலிருந்த பிரம்பை ஆட்டிக்கொண்டு, முன்னால் ஓட வேண்டுமென்று திமிறினான். புல்லய்யா மகனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, வீட்டை நோக்கி ஒவ்வொரு அடியாக எடுத்து வைக்க, மகன் சத்தம் போட்டு அழத் தொடங்கினான்.

புழக்கடை வாசலில உட்கார்ந்து கொண்டான் புல்லய்யா. கீழே இறக்கி விடப்பட்ட மகன் கைகால்களை அடித்துக்கொண்டு அழலானான். புல்லய்யா அவனைச் சமாதானப் படுத்தாமல் தொழுவத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். கண்ணுக்கு மாடுகள் தென்படுவது போலிருநதன. ஆனால் நனறாக உற்றுப் பார்த்தால் தென்படவில்லை. தன் கைகளும் கால்களும் முறிந்து விட்டாற் போலிருந்தது. மிக மிக நெருக்கமான வீட்டு மக்கள், மீண்டும் திரும்பி வராத படிப் போய்விட்டது போல் தோன்றியது. இனி தான் விவசாயி அலல என்பது நினைவுக்கு வரவே துககம் ஒரேடியாக அழுத்திவிட்டது. தன் உடமபில் ஓடுவது ஒரு விவசாயின் ரத்தம் என்ற பெருமை அழிந்து அது வெறும் தண்ணீராகி விட்டது போல் தோன்றியது. வேதனையோடும் கனத்தோடும் நிறைந்த இதயத்தோடு எழுந்தான். மகனைத் தரையிலிருந்து எடுத்து, துணியால் உடல் முழுவதும் துடைத்தான். இருந்தாலும் இன்னும் மண ஒட்டிக் கொண்டிருந்தது. "ஏர் உழறதுக்காகக் கொண்டுபோயிருக்காங்க. நாளைக்கி நம்ம மாடுங்க நம்ம தொழுவத்துககு வந்துடும் பாரு," என்று சமாதானப் படுத்தினான்.

ஆற்றுக்குப் போய் இரண்டு பேரும் குளிததார்கள். அங்கே அருகில் மாடுகளைக் குளிப்பாட்டிக் கொண்டிருந்த ஒருவன "மாட்டெ எவ்வளவுக்கு வித்தெ புல்லய்யா?" என்று கேட்டான். "நூத்தி அஞ்சிடா," என்றான். அப்படிச் சொல்லும் போது, மகன் அப்பாவைப் பார்த்தான். வீட்டுக்குப் போகும் போது வழியில், பினனால் திரும்பி "அப்பா, மாடுங்க வரவே வராது . . . பொய் சொன்னா கண்ணு போயிடுமில்லே?" என்று கேட்டான்.

புல்லய்யா பதில் சொல்லவில்லை. ஆனால் நிமிர்ந்திருந்த தலை குனிந்துவிட்டது.

நாற்று நடும் வேலைகள் முடிந்தன. இந்த வருஷம் மற்றவர் வயல்களில் வேலைகளுக்குப் போனாலும் வயலிலிருக்கும் வரையில் மனம் வேதனைப் படும். மகன் உடனிருந்து எவ்வளவோ உதவி செய்து கொண்டு, இடைஇடையே நூதனமாக கேள்விகளைக் கேட்கும்போது, எங்கில்லாத துக்கம் அடைத்துக் கொண்டு வரும். ஒரு ஏக்கர் நிலமிருந்தால் வியர்வை சிந்திப் பயிர் செய்யலாமே என்ற நினைப்பு வரும். நாற்று நட்டு முடிந்த பிறகு வேலையொன்றும்

இல்லை. மாடுகளை விற்ற பணம் அரிசி வாங்குவதற்குச் சரியாய் விட்டது. மகன் தான் சாப்பிட்டாலொழிய சாப்பிடமாட்டான். தான இளைத்தாலும் பரவாயில்லை. தன் மகன் மட்டும் ஒரு சுற்று குறையக் கூடாது. இந்த முறை ராஜுவிடம கடனுக்குப் போனபோது, "இன்னும் என்ன வரும்?" என்று கேட்டான. விலை முடிவு செய்து, மீதி என்ன வருமோ அதை வாங்கிக்கொண்டு போகச் சொன்னான். புலலய்யாவுக்கு ஆத்திரம வந்தது. "அந்த வேலை மட்டும் நடக்காது," என்றான். அப்படியே விட்டாலும், வட்டிக்கு முழுகிப் போய்விடும் என்று மற்றொரு பக்கம் அடித்துக் கொண்டது. நீலி சென்று, பத்து ரூபாய், கெஞ்சிக் கேட்டு வாங்கி வந்து, நெல் வாங்கிக் குத்தி அரிசி வியாபாரம் செய்தாள. போகப் போக, ஒரு வேளை கஞ்சி, ஒரு வேளை சோற்றுக்கு வசதிப்படும் அளவு வியாபாரத்தைப் பெருக்கினாள். சிலருக்கு கடனுக்குக் கொடுப்பது தவிர்க்க முடியவில்லை. அந்தப் பணம் சரியாக வசூலாவதில்லை. நீலியைப் பார்த்து, பத்து வீட்டுக்காரர்கள் வரை இந்த வியாபாரத்திலிறங்கினார்கள். சிலர் வெளியூருக்குக் கொண்டு சென்றும் விற்றனர். நீலி கெஞ்சிக் கேட்டு, ராஜுவின் மனைவியிடமிருந்து இருபத்தைந்து ரூபாய் வாங்கி வந்து விறகு வியாபாரம் செய்யுமாறு கணவனை வேண்டினாள். தினம் ஒரு காவடி விறகு அயலூருக்குக் கொண்டு சென்று விற்றால் ஒரு ரூபாய் கிடைக்கும். புல்லய்யாவுக்கு மிகவும் கேவலமாகத் தோன்றியது. ஒரு காலத்தில் அந்த வட்டாரத்தில பேரும் புகழும சம்பாதித்த புல்லய்யா, ஒரு விறகு வெட்டி போல விறகுக் காவடியைச் சுமப்பதா! அவர்கள் முகத்தைப் பார்க்காமலே பேரம் பேசுவான்! ஏதோ சில வார்த்தைகளைக் கொட்டி விட்டனர் சிலர். ஒரு நாளிலேயே மனம் செத்து விட்டது. ஆனாலும், மனைவி குழந்தைகளைப் பார்த்து, அடுத்த நாள் வியாபாரத்திற்குப் போனான். அப்படிப் போகப்போக பழக்கப் பட்டுவிட்டான்.

வீட்டு நிலையைப் பார்த்து பீஸ்யின் நிலைமை தனக்கு வராதென்று புல்லய்யா சந்தோஷப்பட்டான். மனைவி சொன்ன வார்த்தைகளில் அவனுக்கு நம்பிக்கை வந்தது. தான் கஷ்டப்பட்டுச் சம்பாதித்து வாழ்க்கை நடத்தும் போது வேதனைப் படுவதில் அர்த்தமில்லை என்று எண்ணினான். விலைவாசி நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே போனாலும் அவனை அந்த உயர்வு பாதிக்கவில்லை. அவனும் இப்போது ரூபாயாக இருந்த காவடியை, ஒண்ணே கால் ரூபாய்க்கு விற்கலானான். மனைவி ரூபாய்க்கு ஒரு படி அரிசி விற்று வந்தாள். விறகைத் தான் ஏன் விலை குறைத்து விற்கக் கூடாது என்று நினைத்தான் -- தன் ஊரில் மட்டுமில்லாமல் எல்லா ஊர்களிலும் விலைவாசி இப்படி அதிகமாக இருக்கும் போது தான் ஏன் குறைந்த விலைக்கு விற்க வேண்டுமென்று தோன்றியது. போகப் போகக் காவடி ஒன்றரை ரூபாய்க்கு விற்கலானான். உண்மையில அவனுக்கு

முதலாளியிடம் முக்கால் ரூபாய்க்குக் கிடைத்தது. 'ஒரு வேளைக்கு முக்கால் ரூபாய் கூலியா -- எவ்வளவு அதிகம்' என்று நினைத்தான். இருந்தாலும் குறைநது விலைக்கு விற்பதற்கு மனம் வரவில்லை இப்போது, ராஜு, பேரய்யா முதலான கழுகுகள் நினைவுக்கு வந்தனர் இதற்கு முன்பெல்லாம தனக்கும் அவாகளுக்கும் வித்தியாசம் இருந்ததென்று -- அவர்கள் கழுகுகள், தான் மனிதன் எனறு நினைத்து வந்தான். ஆனால் அவர்களுக்கும் தனக்கிருப்பது போன்ற ஆசையே இருந்ததென்று நினைவுக்கு வநதது 'மனிதர்களெல்லாம் நல்லவர்களே,' என்று தாசன் சொன்ன வார்த்தைகள எவ்வளவு உண்மையானவை என்பதை ஊகித்துக் கொண்டான்.

இப்படி மூன்று மாதங்கள் வீட்டுக காரியங்கள் நடந்தேறின. இந்த விபரீதமான விலைவாசியில் பணத்தைக் கொள்ளையாக மூட்டை கட்டியவர்கள் அதை என்ன செய்வதென்று தெரியாமல் தடுமாறினார்கள். முக்கியமாகப் பெரிய விவசாயிகளே பணம் சமபாதிததவர்கள். சிறிய விவசாயிகள் அதோகதி ஆனார்கள். சிறியவர்களின் நிலங்களைப் பெரியவர்கள் வாங்கினார்கள். பணத்திற்குப் பதிலாக கறுப்பு மார்க்கெட் விலைக்கு நெல்லாகக் கொடுத்தார்கள். பெரிய விவசாயிகள், இன்னும் அதிக விலைகொடுத்து நிலத்தை வாஙகத தயாராக இருந்தார்கள். ஆனால் விறபவர்கள் இல்லாமற் போகவே, மேலும் சோந்திருக்கும் பணத்தை எதில் முதலீடு செய்வது என்று தெரியாமல் தவித்தார்கள். ஒருவன, ஊரில ரோட்டோரமாக அரிசி ஆலை ஒன்றைக் கட்டினான். மில்லை ஒட்டிச் சில்லறை அரிசிக் கடையும் வைத்தான். ஒரு மாததிற்குள் பததுக் குடும்பஙகளின் பிழைப்பில் மண் விழுந்தது அதுவரைக் குடித்து வந்த கஞ்சிக்குக் கூட வழியில்லாமற் போயவிட்டது. அரைக்கலம் நெல இருந்தால் கூட மில்லுக்குப் போய்விடும. மலிவு-பணம இல்லையென்றாலும் பரவாயில்லை, தவிட்டைக் கொடுத்துவிட்டால் போதும்! அதனால், பெரிய விவசாயிகளிலிருந்து குடிசையிலிருககும் கிழவி வரையில் எல்லாரும் நெல்லை மில்லுக்கே கொணடு போனார்கள். அதுவரையில் பெரிய விவசாயிகளின் வீடுகளில் நெல் குற்றிப் பிழைத்து வநத கூலி ஜனங்களின் பிழைப்பிலும் மண் விழுந்தது. இந்த மில அரிசிச் சோறு மல்லிப பூவைப் போனறு இருந்ததென்று ஊரெல்லாம் சநதோஷப்பட்டதே தவிர, அதனால் எத்தனை பேருடைய பிழைப்பு பாழாகிவிட்டதெனபதை யாரும் சிந்திக்க வில்லை. மில்லில் முதல் போட்ட அந்த ஒருவன் மேலும் பெரும் பணக்காரனாகி விட்டான். பெரிய விவசாயியின் மனைவி கூட முன்பெல்லாம் நெல் குற்றலில் பங்கெடுப்பாள். -- அத்தகைய பணக்காரப் பெணகளுக்கு இப்போது மென்மை மிகுந்து, வரவர சில நாட்களில் ஊரில வைத்தியனின் தேவை மிக அதிகமாகி விட்டது. அயலூர் வைத்தியனிடம்

அண்மையில் கற்றுக் கொண்ட ஒருவன் ஊரில் குடியேறினான். இந்த வைத்தியனுக்கு இன்ஜெக்ஷன் போடவரும் என்றாலும், அந்த இன்ஜெக்ஷன் என்ற வார்த்தையை அந்தக் கிராமத்தார் சொல்வது போலவே 'இன்டீஷனு' என்று தான் சொல்லத்தெரியும் ஊசி முனை உடம்பில் பட்டாலொழிய பணம்' பெயராது. ஆகவே சிரங்கிலிருந்து விஷ ஜுரம் வரை எல்லாவற்றுக்கும் ஊசி மருந்தே போடுவான். தேவையில்லாத போதும 'டிஸ்டில்ட் வாட்டர்' இன்ஜெக்ஷன் போட்டு மூன்று ரூபாய் வாங்கிக்கொண்டிருந்தான். அந்தக் கிராமத்து மக்களுக்கு வேண்டியது, அவன் சின்ன புட்டியை (ஆம்பயூல்) உடைக்கிறானா இல்லையா என்பதே தவிர அதில் இருக்கும் மருந்தைப் பற்றி அவர்களுக்கு அக்கறை இல்லை.

நீலியும் புல்லய்யாவும் கூட இதில் சிக்கிக்கொண்டார்கள். அரிசி வியாபாரம் அவ்வளவுதான். விறகு வியாபாரம் ஓரளவு நடந்து வநதது என்றாலும் அதற்குக் கூடப் போட்டி வந்தது. தனியாக மரங்களை விற்பதில்லை -- தோப்புக்குத் தோப்பையே கான்ட்ராக்ட் எடுத்து, பணக்கார மூன்று பேர் மேலும் பணம பண்ணிக் கொண்டிருந்தார்கள். புல்லய்யா போன்ற சில்லறை வியாபாரிகளுக்குக் கிடைத்த மரம் மணல் பிரதேசத்தில் இருந்ததால், மரத்தின் வேர்ப்பகுதியைச் சுற்றிப் பெரிய பள்ளம் தோண்டி, அந்தப் பள்ளத்தில் இறங்கி, கோடாலியால் வேரை வெட்டி மரத்தை வீழ்த்த வேண்டும். இது அவ்வளவு எளிதான வேலையல்ல -- இதனால் வரும்படியும் குறைவு சிரமம் அதிகமாகும். புல்லய்யா ஒரு வாரத்திலேயே மிகவும் இளைத்து விட்டான்.

ஒரு நாள் பகல் பத்து மணி சுமாருக்குக் கோடாலி, மண்வெட்டியைத் தோளில் போட்டுக்கொண்டு, ஊருக்குத் தெற்கிலிருந்த சவுக்குத் தோப்பிற்குச் சென்றான். அவன் புறப்படும் போது மல்லு வீட்டில் இல்லை. தெருவில் யாரோ சாயபு கழைத் கூத்தாட்டம் காட்டவே சிறுவர்களுடன் ஓடிவிட்டான்.

புல்லய்யா அந்த இடத்திற்குப் போனபிறகு, மண்வெட்டிக் கோடாலியை அங்கே போட்டு, வேட்டியை இழுத்து தார்ப் பாய்ச்சிக் கட்டினான். குடுமியை நான்றாகச் சேர்த்து முடிபோட்டான். மண்வெட்டியை எடுத்து, சவுக்கு மரத்தின் வேரைச் சுற்றிப் பள்ளம் தோண்டும் வேலையைத் தொடங்கினான். வேலையில் மெய்ம்மறந்து விட்டான். போகப் போக, வெய்யில் ஏற ஏற கொஞ்சம் வியர்வை வழிந்து நிலத்தில் விழுந்தது. சுற்றியிருந்த சவுக்குத் தோப்பில் 'கொய்ங்' என்ற சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. -- கிளிகள் கும்பல் கும்பலாக அந்த மரங்களில் வந்து உட்கார்ந்து, மறுபடியும் பறந்து போய்க்கொண்டிருந்தன. சற்று தூரத்தில் தீவிலிருந்த நெற்பயிர் பச்சைப் பசேலென்று கண்ணுக்கு விருந்தாகத் தலையாட்டிக் கொண்டிருந்தது. எங்கோ வெகு தூரத்தில் ஒரு ஆள் தென்பட்டான்.

புதரிலிருந்து ஒரு நரி இன்னொரு புதரை நோக்கி ஓட்டம் பிடித்தது.

புல்லய்யா இவற்றைப் பார்க்கவே இல்லை. இந்தச் சத்தங்களையும் கேட்கவில்லை. சற்றுத் தொலைவில் ஆறு பாய்ந்து கொண்டிருந்தது.

ஆள் உயரப் பள்ளம் தோண்டி முடிப்பதற்குள் பொழுது தலைக்கு மேல் வந்தது. பள்ளத்திற்குள் இறங்குவதற்கு முன் சுற்றிலும் பார்த்தான். ஆள் நடமாட்டமே இல்லை. கோடாலியைத் தோளில் போடடுக் கொண்டு பள்ளத்தில் இறங்கினான். அண்ணாந்து பார்த்தான். சூரியன் ஒளி கண்ணில விழுந்து பாாவையை மறைத்தது. கண்ணை மூடித்திறந்த போது ஏதோ ஒரு குரல் கேடடாற் போலிருந்தது. எங்கேயோ கிணற்றிலிருந்து கேட்பது போலிருந்தது. யாரோ என்று நினைத்தான் அந்த வினாடியே செத்துப்போன அப்பன்னா நினைவுக்கு வநதான்.

அப்பன்னாவின வாழ்க்கை முழவதும் கண் முன்னால் காட்சியளித்தது! அப்பனனாவின் வாழ்க்கையைத் தன் வாழ்க்கையோடு ஒப்பிட்டுப் பார்த்தான்.

அப்பன்னா தன்னைப் போலவே கஷ்டப்பட்டவன். குத்தகை எஜமான் நிலத்தைத் திருப்பி வாங்கிக் கொண்டான். இருந்த ஒரு ஏக்கர் நிலத்தை ஒரு பெரிய விவசாயி முழுங்கிவிட்டான். மூன்று பிள்ளைகள், மனைவி! பெரிய மகனுக்கு மல்லு வயது தான் இருக்கும்! தன்னைப் போலவே காவடியில் விறகைக் கொண்டு சென்று விற்று வந்தான். நல்ல கோடைக் காலததில் ஒர நாள், அந்த இடத்திறகு அருகில் அதோ அந்தத் தோப்பில் இது போலவே ஒரு பெரிய பள்ளம் தோண்டினான் . . . இதே அளவு பள்ளம் தான் -- இதே மாதிரி உச்சி நேரத்தில்தான் . . . 'என்னைப போலவே கோடாலியெப் பிடிச்சிகிட்டு வேரெ வெட்டி கிட்டிருந்தான். . . இதே போல மணல் கரையெல்லாம் இடிஞ்சி சரிஞ்சி அப்படியே உயிரொட பொதெச்சிட்டுது . . . அய்யா! . . . அய்யா!. . . ன்னு கத்தினானாம்! வெளியே எடுங்கய்யான்னு கூச்சல் போட்டானாம்! . . . உச்சி நேரத்திலெ தனியா இந்த வழியிலெ போனாக்கா அவன் கூப்பிடுகிற சத்தம் இப்பவும் கேக்குதாம் . . . ஆமாம். அவன் தான் கத்தறான் . . . தனியா இருக்கறேன். அவன் தான் . . . குரலு வரவர பெரிசாவுது . . . அப்பன்னா கத்திகிட்டே என் பக்கம் வர்ற மாதிரி இருக்குது . . . இந்த மணல் கரையெல்லாம் இடிஞ்சி என் மேலெ விழப்போவுது. பிசாசு! என் கழுத்தெ அமுக்கிடுவானோ என்னவோ? . . . என்னெப் போல ஒர்த்தன் -- அவன் என் கழுத்தெ ஏன் அமுக்கறான்? புல்லய்யாவா பேய் பிசாசுக் கெல்லாம் பயப்பட்றது? தைரியத்தை வரவழைத்துக கொண்டு, கோடாலியால் வேரின் மேல் பலமாக இரண்டு முறை வெட்டினான். மேலெ இரந்த கரை கொஞ்சம் இடிந்து விழுந்தது. தலையைத் தட்டிவிட்டு மேல் நோக்கிப்

பார்த்தான். 'அய்யா' 'என்ற கூப்பாடு கேட்டது! அந்தக் குரல் அலுத்துக் களைத்த குரல் போலிருந்தது. அப்பன்னா இன்னும் அருகில் வந்து விட்டான் போலிருந்தது. அப்பான்னாவைப் போல் தானும் இங்கேயே செத்துவிடுவோமோ என்ற பயம் பிடித்துக்கொண்டது. அச்சம் ஆடகொண்டது. தான் செத்துவிட்டால், தன் மனைவியும் பிள்ளைகளும் அப்பன்னாவின் மனைவி, 'பிள்ளைகளைப் போல் தெருத் தெருவாகச் சென்று பிச்சையெடுகக வேண்டியதுதான்!

* * *

இநத எண்ணம் வந்ததும் பள்ளத்தில் இருக்க முடியவில்லை. அன்றைக்கு அதை வெட்டிக் காவடியில் கொண்டுபோய் விற்றாலொழிய -- பட்டினி கிடக்க வேண்டியதுதான் என்ற நினைப்பு வந்தாலும் அஙகே ஒரு வினாடியும் இருக்க முடியாமல் போய்விட்டது. அந்தக் கூப்பாடு நேராகத் தன் இதயத்தில் சென்று தாக்கியது. மேலெ ஏறி வந்து சுற்றிலும் பார்த்தான். அந்தக் கூப்பாடு தவிர வேறு ஆள் ஒருவரும் தென்படவில்லை. தோளில் கோடாலி, மண்வெட்டியைப் போட்டுக்கொண்டு வீட்டை நோக்கித் நடக்கத் தொடங்கியதும் கூப்பாடு இன்னும் அருகில் கேட்டது. பத்து அடி எடுத்த வைத்ததும் தொண்டையை அடைத்தது. அநதக்கூப்பாட்டை இப்போது கேட்டால் எப்போதுமில்லாத உற்சாகம் கரைபுரண்டது. ஒரே ஓட்டமாக முன்னோக்கி ஓடினான். உயரமான மணல் மேடு. சூடேறிப்போன மணல் மேட்டில், பாதி ஏறிவிட்டு, மண்ணில் கால்கள் புதைந்து போகவே, மேலே ஏற முடியாமற்போன மல்லு, வெய்யிலில் கால்கள் வெந்து கொண்டிருக்க, அப்பாவுக்காக வேதனையோடு கத்திக் கொண்டிருந்தான். புல்லய்யா ஒரு குதி குதித்த மகனை மேலெ தூக்கி, மார்போடு இறுக அணைததுக் கொண்டான். தந்தை மகன் இருவருடைய வியர்வைகளும் கலந்துவிட்டன.

## 23

நாளுக்கு நாள் புல்லய்யா இளைத்துக்கொண்டிருந்தான். எப்போதும் முடிவில்லாத சிந்தனைகள் நிழல் போல் அவன் கூடவே தொடர்ந்து கொண்டிருந்தன. ஊரில் வேலைவெட்டி இல்லை. கஷ்டப் பட்டு விறகு விற்றாலும் வீட்டில் சாப்பாட்டு விவகாரத்தைக் கவனிப்பது கஷ்டமாக இருந்தது. அவனோடு கூடப் பிள்ளைகளும் இளைத்துக் கொண்டிருந்தனர். எதிர்காலத்தில் என்னசெய்வதென்ற கவலை அவனை ஓயாமல் தொல்லை செய்தது.

நீலி மட்டும் மனதில் எப்போதாவது தவறி இது போன்ற சிந்தனைகள் வந்தாலும் உடனே சமாதானப் படுத்திக் கொள்வாள். ஒரு வினாடியையும் வீணாக்காமல் இராட்டினம் சுற்றுவது, வீட்டு

வேலைகள் செய்வது முதலியவற்றில் ஈடுபட்டு வந்தாள்.

அவசரத் தேவைக்கு ஊரில் கடன் கிடைப்பது என்பது அரிதாகிவிட்டது. முன்பு இவர்களிடம் கடன் வாங்கிப் போனவர்கள் கூட, 'திருப்பிக் கொடுககறதுக்கு என்ன இருக்குதுன்னு கடன் குடுக்கறது?' என்று வெளியே சொல்லாவிட்டாலும், உள்ளே நினைத்துக்கொணடு, இல்லை என்றார்கள் பேரய்யா செட்டி கூட ஒரு முறை, இரண்டு படி அரிசி கடன் கேட்டதற்கு, வீட்டிலிருந்து வெளியே விறுவிறென்று வநது நின்று, ''வீட்லெ'ருந்துகிட்டு இல்லேன்னு சொன்னா என்னெப் பறையன்னு சொல்லு!'' எனறு சொல்லிவிட்டான்! இதனுடைய உள்ளர்த்தத்தைப் புரிந்துகொண்ட புல்லய்யா சட்டென்று உடம்பெரிந்து, "நீ தீவுப் பறையன தான், அதுலெ சந்தேகமில்லே," என்று சொன்னான். புலலய்யா அப்படிச் சொன்னதைப் பேரய்யா ஊரில் நாலு பெரிய மனிதர்களிடம் சொல்லி ஏகப்பட்ட ஆர்ப்பாட்டம் பண்ணினான். முக்கியமாக மல்லு இளைத்துக்கொண்டு போவதை அவனால் சகித்துக்கொள்ள முடியவில்லை. ஒவ்வொரு சமயம் சாப்பாட்டு நேரத்தில் மல்லு கலாட்டா செய்வதைப் பார்த்து, 'ஐயோ! என் மகன் நல்லா வளர்ந்து வர்ற நேரத்துலெ இந்த மாதிரி கதி வந்துட்டுதே! என்று அவன் மனம் மிகவும் வேதனைப்பட்டது.

ஊரில் முனபு தனக்கிருந்த மதிப்பில் நூற்றில் ஒரு பங்கு கூட இப்போதில்லை. வயதில் சிறியவனாக இருந்தாலும், முன்பெல்லாம் எந்தத் திருவிழா ஆனாலும், சிலம்பாட்டமானாலும் தானே முன்னிருந்து நடத்த வேண்டும். தனக்கு முன்பு மிஞ்சிய நெலலெயெல்லாம் இப்படி ஊர்ப் பணடிகை விருந்துகளுக்குச் செலவு செய்ததனால்தான் தன் கல்யாணத்திற்கு கடன் வாங்கவேண்டிய நிலை வந்தது. தான் இப்போது ஒரு கூலிக்காரன். நாலு வயல்களில் நிலச் சொந்தக்காரர்கள் இட்ட வேலைகளைச் செய்து சாயந்திரம் கூடையைத் தூக்கிக்கொண்டு கூலி நெல்லை வாங்குவதற்குப் போய் நிற்க வேண்டும்! தன்னுடைய நிலையே இதுவென்றால் தன் மகனும் கூலிக்காரன் ஆகவேண்டுமே தவிர, ஊருக்குப் பெருமை தேடித்தரும் பெரிய மனிதனாக எப்படி ஆக முடியும்? இந்தச் சிந்தனைகளெல்லாம் சேர்ந்து அவனை இரவில் தூங்கவிடாமல் தொல்லை கொடுத்தன. தான் என்ன செய்தால் தன் மகன் சிறப்பும் பெருமையும் உள்ளவனாக வளர்வான்? தன்னால் திருட முடியும் -- ஆனால் அந்தப் பணம் எவ்வளவு காலம் இருக்கும்? பட்டினியால் செத்துப் போகலாமே தவிர அந்த மாதிரி வேலை மட்டும் செய்வதில்லை என்று உறுதியெடுத்துக் கொண்டான்.

அவ்வப்போது மனம் ஏமாற்றத்தால் குலைந்து போகும். ஊர்ப் பெரியவர்களை ஏற்கனவே பல முறை உலுக்கிவிட்டு வந்தவன் தன் நிலத்தின் மேல் மேற்கொண்டு ஒன்றும் பெயராது என்று சொன்ன ராஜுவோடு ஒரு முறை சண்டைக்குப் போனான். அனால் இந்த

விஷயத்தில் சிறியவர்கள் யாரும் உதவிக்கு வரவில்லை. பெரியவர்கள், ஏற்கனவே இவன் சத்தத்திற்கு ஆளாகிவிட்ட காரணத்தால் உதவிக்கு வராமல் போனது மட்டுமில்லாமல், எப்போது இவன் கையில் ஓட்டைக் கொடுக்கலாம் என்று காத்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு நாள் பீஸ் வீட்டருகில் பெரிய வாக்கு வாதம் நடந்தது. குருட்டு வெங்க்கன்னா, "ஊர்லெ புரட்சி நடந்தாலொழிய நிலமெ மாறாது," என்று சொன்னதுடன், "நாலு கொலெ விழுந்தாலொழிய ஏழெங்க உருப்பட முடியாது," என்றான். அதைப் புல்லய்யா மறுத்துப் பேசவில்லை.

பீஸ் சிரித்துக் கொண்டே, "யாரோ வந்து நம்ம குழந்த குட்டிங்களெத் தூக்கிட்டுப் போயிட்லெ -- நாம தலெ குனிஞ்சிக்கறதுக்கு. ஊர்லெ பத்துப் பேருக்கு ஆகாசெத்தெ எட்டிப் பிடிக்கணும்னு ஆசெ பிடிச்சிருக்கு! ஆனா, ஆகாசத்தெ எட்ட முடியும்மா? ஒரு நாளெக்கி அந்த ஆசையெல்லாம் ஒரேயடியா இடிஞ்சி சின்னாபின்னா மாயிடாதா? பொறுத்திருங்கப்பா பொறுத்திருங்க -- பொறுமையா இருந்தா கோழி முட்டெ, ஒரு வீசெ மாமிச மிருக்கிற கோழி ஆவாதா? பொறுத்தாத்தான் மனுஷன்! அப்படிப் பொறுத்துக்கறதனாலே வர்ற சௌகர்யங்க ரொம்ப காலத்துக்கு இருக்கும்," என்று சொன்னான்.

இரண்டு பேருக்கும் இது பிடிக்கவில்லை. ஊர் உருப்பட வேண்டுமென்றால் இவர்களெல்லாம் பாதிக்குப் பாதி விலைகளை குறைக்க வேண்டும். நல்லதனமாகச் சொன்னால் செய்வார்களா? செய்யமாட்டார்கள் என்பது இவர்களுடைய வாதம்.

வெங்க்கன்னா வீடு வீடாகச் சென்று சொல்லிக் கொண்டிருந்தால், "அவங்க வீட்டு வாசலுக்குக் கஞ்சி ஊத்தச் சொல்லிப் போகலேன்னாலும் பொழப்பு நடக்காது. கண்ணு கூட இல்லே, உனக்கேண்டா இந்த வம்பு -- ஒர மூலையிலெ விழுந்து கிடக்காமெ," என்று சிலர் புத்திமதி சொன்னார்கள். வெங்க்கன்னா உள்ளுக்குள், 'ஆடுமாடுங்க! இவங்களுக்குள்ளே சூடான ரத்தமே இல்லே!' என்று சொல்லிக்கொண்டான்.

புல்லய்யா வீட்டிற்குப் போனான். அந்த வேளை வீட்டில் அடுப்பைப் பற்ற வைக்க வில்லை. அதைத் தெரிந்து கொண்ட அவன், முதலில் ராஜுவின், மேல், பிறகு கிராமத்துப் பெரியவர்கள் மேல், எரிந்துவிழுந்து கொண்டிருந்தான். அப்போது பாட்டி குறுக்கிட்டு, "எதுக்கப்பா, வாய்லெ வார்த்தையெ இப்படிக் கொட்றே? மகன் முன்னாடி இப்படிப் பேசி அந்தச் சின்ன மனசெப் பாழாக்கிடாதே. அவங்களுக்கு வுனக்குத் தெரிஞ்ச அளவு தெரியாதில்லியா -- தெரிஞ்சிருந்தா இல்லாதவங்களுக்குக் குடுக்கமாட்டாங்களா? 'அய்யோ! என் அண்ணன் தம்பிங்க என்னத்தெ எடுத்துகிட்டுப் போகப் போறாங்க'ன்னு -- அது மாதிரி எதாவது சொல்லி, அவங்களெப்பத்தி

நல்லத்தனமாப் பேசு- அப்பொ உன் வயத்துலெ ஒரு வாய்க்கஞ்சி இல்லேன்னாலும் நிறைஞ்சிருக்கறா மாதிரி சநதோஷமா இருக்கும்," என்று சொன்னான்.

புல்லய்யாக்குச் சுர்ரென்று கோபம் வந்தது. "ஒரு மூலையிலெ விழுந்து கிடக்காமெ வுனக்கேன் இந்தப் பேச்செல்லாம்!" எனறு சொன்னான்.

பாட்டி சாந்தமாக,, "மனசுலெ வெறியேறக் கூடாது'ப்பா அப்படி வெறியேறிச்சின்னா அவன் மனுஷனில்லே. நடக்க வேண்டியதெ நிறுத்ததுக்கு நீ யாரு? ஒர்த்தரு இநத ஜன்மத்துலெ பண்ணதுக்கு, நல்லது கெட்டது வரப்போற ஜன்மஙகள்ளெ அனுபவிச்சிட்டுப் போறாங்க. அப்படியிருக்கறப்போ நீ இப்படி ஆயிட்டேன்னா வீணாப் போறது யாரு? மனுஷனுக்கு அனபெக் காட்டிலும் பெரிசு ஒண்ணுமில்லெப்பா," என்றாள்.

புல்லய்யா இந்த வார்த்தைகளைக் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. வயிறு ஒரு பக்கம் எரிந்து கொண்டிருந்ததால், "வுனக் கென்ன? ஒவ்வொரு வேளெக்கும் கஞ்சியோ கூழோ எங்க வயித்தெக் காயவெச்சாவது ஊத்திட்றா இல்லியா. என்ன வேணும்னாலும் சொலலுவே ஆவட்டும்! எங்கழுத்தென தொண்ணு சுத்தி கிட்டிருக்குது," என்று சொல்லிக் கொண்டே வெளியே போய்விட்டான்

அங்கே நின்று கேட்டுக்கொண்டிருந்த நீலி ஸ்தம்பித்து போய்விடடாள். 'ஏதோ பிரளயம் வரப் போகிறது,' என்று நினைத்தாள். பாட்டியைப் பார்த்தால், அவள் பொக்கை வாய் திறந்து மெல்லச் சிரித்துக்கொண்டிருந்தாள். ஆனால் நீலிக்குத் தெரியும், அந்தக் கிழ இதயம் அந்த வாாதைகளால் எநத அளவு நொநது போயிருக்குமென்பது. உண்மையில் இரண்டு மாதங்களுக்கு மேலாகச் சரியான சாப்பாடே கிடையாது. இரண்டு நாடகளுக்கொருமுறை ஜுரம் வந்து கொணடிருந்ததால், பச்சைத் தண்ணீர் கூட வாயில் ஊற்றுவதிலலை. அப்படி இருக்கும் போது, கணவன் சொன்ன வார்த்தைகள் எவ்வளவு பொய்யானவை என்பது அவளுக்குத தெரியும். அவள் அந்த வயதான பாட்டியிடம், கணவனுக்குப் பதிலாக மன்னிப்புக் கேட்பதற்காக அருகில் சென்று உட்கார்ந்தாள். மெல்ல, மிகமிக மென்மையான குரலில, விசனத்தோடு, பயத்தோடு, பாட்டியிடம், " ஏதோ கோவத்துலெ அப்படிச் சொல்லிட்டாரு . . . மனசிலெ ஒண்ணும் வெச்சிக்காதே பாட்டி!" என்று சொன்னாள்.

பாடடி மெல்ல தலையைத் திருப்பிப் பார்க்கும் போது, பேத்தியின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது. அந்தக் கண்ணீரைப் பார்த்துவிட்டுப் பாட்டியின் கண்களும் நனைந்து விட்டன. பேத்தியின் தலையைத் தடவிக் கொண்டே, மெல்ல மெல்ல நிறுத்தி நிறுத்தி வார்த்தைகளைச் சொன்னாள். எண்பதாண்டு வாழ்க்கைச்

சாரமெல்லாம் அநத இதயத்திலிருந்து பிழிந்தெடுப்பது போலிருந்தது. "அம்மா! . . . எனக்கு மத்தவங்களை பத்தி குறையாச் சொல்லிக்கிறதுக்கு . . . நிறைய இருந்தது. உங்க தாத்தாவெப்பத்தியும் -- இன்னும் அந்தக் கெட்டவங்களெப் பத்தியும் நல்லதே சொல்லிகிட்டு வந்தேன் -- வாயிலே'ருந்தில்லேம்மா நெஞ்சுலெ'ருந்துதான்! அப்படி நான் சொல்லிக் கஷ்டப்பட்டுகிட்டேன்னு மத்தவங்க நினைச்சிக்கிடட்டும் -- ஆனா தாயே, அப்படி நான் நல்லதே சொல்லி கிட்டிருந்ததனாலே எனக்கு இப்பொ இருக்கற சந்தோஷம் சுகம யாருக்கு இருக்குது! உலகத்துலெ எல்லாரும் ஒர்த்தரெப் போல சத்தம் போட்டுச் சொல்றாங்க -- என்னெ மாதிரி கஷ்டம் யாருமே படலேன்னு -- ஆனா என்னெ மாதிரி சுகம் அனுபவிச்ச பொம்பளெ உலகத்துலெ இருக்கறாங்களா? மண்ணு குடத்துலே'ருந்து இந்தத் தோலு குடத்துலெ போட்டுகிட்டு இத்தனெ நாளு உயிரோட இருந்தேன்! இந்தக் குடம் உடைஞ்சி போகாம எத்தனெ நாளுக்கு இருக்கப் போவுது?" நீலிக்கு ஒவ்வொரு வார்த்தையும் இதயத்தில் புகுந்து நிலைத்துவிட்டது. ஒன்றும் பேசாமல் பாட்டியை இறுக அணைத்துக்கொண்டு, அப்படியே சாய்ந்து அவள் மடியில் முகத்தை மறைத்துக்கொண்டாள்.

கொஞ்ச நேரத்திற்குப் பிறகு, புல்லய்யா சோள மாவை எடுத்துக் கொண்டு வந்தான். நீலி சமையல் வேலையில் இறங்கினாள். புல்லய்யாவைப் பாாத்துச் சிரித்துக்கொண்டே, "அப்பா!" என்று பாடடி கூப்பிட்டு," நீ எவ்வளவு நல்லவன். என் பேத்தியெ எல்லாச் செலவும் நீயே பண்ணிக் கலியாணம் பண்ணிக்கிடடே என்னெயும் கூட வச்சிகிட்டுக் காப்பாத்தனே. செத்து பேத்தி வயத்திலெ பையனாப் பொறந்து உன் நனறியெத் தீத்துக்காமெ போவேனா!" என்று சொன்னாள். புல்லய்யா வெட்கப்பட்டு அறைக்கு வெளியே சென்று விட்டான் . . .

இருட்டிய பிறகு, விறகை விற்றுவிட்டு, புல்லய்யா அப்போது தான் வந்தான். பீஸ் ஏதோ பேசிக் கொண்டிருநதான். வீட்டிலிருந்த மோசமான நிலையைச் சொன்னானே தவிர, ஒரு மடக்கு கஞ்சி ஊற்றச்சொல்லி, நாக்கு நுனிவரை வந்தும், வாய் திறந்து கேட்க முடியவில்லை. இவர்கள் வீட்டிலும் நிலைமை அவ்வளவு நன்றாக இல்லை என்பது தெரியும் . புறப்படுவதற்கு முன், "அப்பா, புல்லய்யா! ஒரு ராத்ரி என் வீடு எரிஞ்சி போயிட்டுதுன்னாலும் நல்லா இருக்கும்! இல்லே பூகம்பம் வந்து வீட்டெ முழுங்கிட்டாலும் நல்லா'ருக்கும் -- எல்லாரும் நிம்மதியாகச் செத்துப் போயிடுவோம்!" என்று சொன்னான்.

இந்த வார்த்தைகளை நீலி கேட்டாள். புறப்பட்டுவிட்ட அவனைக் கூப்பிட்டு, "இந்தக் கால் ரூபாயெ வெச்சிகிட்டுக் கூழாவது இன்னைக்கு ராத்திரிக்குக் குடிங்கய்யா," என்று சொல்லிக் கொடுத்த போது, புல்லய்யா கோபமாகப் பார்த்தான். முகத்தில் பிரகாசத்தோடு பீஸ்

ஒட்டமாக ஓடினான். பீஸ் போனபிறகு, நீலி," நான் முன்னாடியே சொன்னேன் -- ரெண்டு செங்கல் சூளைல ரெண்டு பசங்களயும மாசக் கூலிக்கு வேலக்கி வெக்கச்சொல்லி. வயிறு காயிறப்ப வீட்டு அந்தஸ்தெப் பாத்துகிட்டிருந்த எப்படி நடக்கும்? கஷ்டப்படாமெ குடுக்கறவுங்க, சுமமாவே குடுப்பாங்களா? வளர்ந்த பசங்க இருக்கறப்பொ சுகப் படாமெயா போவான - என்று சொன்னாள்.

மனைவயின் பேச்சில் இரககம தொனித்ததால் புல்லய்யா ஒன்றும் பேசவில்லை. மிஞ்சிய பணத்தை எடுத்துக்கொண்டு நீலி பேரய்யாவின் கடைக்குப் போனாள். மறு நாள் காலையில் பாட்டி எழுந்து, கடவுள் மேல் கீர்த்தனைகள் பாடிக் கொண்டிருந்தாள் "ராமா! ராகவா! ரட்சிப்பாய் தேவா . . . ராமா ராகவா!" பேரன் அருகில் உட்கார்ந்து பாட்டிக்குப் பின்பாட்டுப் பாடிக் கொண்டிருந்தான். மூன்று நாட்களுக்குப் பிறகு ஒரு நாள், பொழுதேறுவதற்கு முன்பே, கூனிக் கொண்டே ஒவ்வொரு வீடாகப் போனாள். எல்லாரிடமும் விடைபெற்றுக் கொண்டிருந்தாள். 'மறுபடியும் உங்களெயெல்லாம் என் பேத்தி வயத்திலே பொறந்து பாக்காமயாப் போயிடுவேன் என்று சொன்னாள். ராஜுவின் வீட்டிற்குச் சென்று உட்கார்ந்த போது, கணவனும் மனைவியும் மிகவும் அன்போடு பேசினார்கள. ராஜு சொன்னான் "பாரு பாட்டி வாயெத்திறந்தா புல்லய்யா என் மெலே எறிஞ்சி விழறான். எங்கப்பா அந்தக் குருட்டுப் பயலாம் - எனக்கு மானம் மரியாதெ கிடையாதாம்! நான் அவனுக்கு என்ன கெடுதல் பண்ணேன்? அவனெ ஜெயில்லெ போட்டப்பொ உதவி பண்ணலியா! அவன் வயிறு காஞ்சி கிட்டிருந்தா அரிசி அளந்து கொட்டலியா! எனக்கு மட்டும் என்ன இருக்குது? இருக்க சொத்த இந்த நாலு பசங்களுக்கும் பாகம் பிரிச்சாக்கா ஒவ்வொர்த்தனுக்கும் என்ன வரப்போவுது? மைனர் பையனிருக்கறான்னு அநத நிலத்த வாங்க யாரும் கிட்டெ வராமெ போனப்ப நானே துணிஞ்சி எழுதிக்கலியா - நல்லத்தனமா வந்து கேட்டாக்கா குடுக்க வேண்டியதேதோ குடுத்துட மாட்டேனா?

"அபபா! யாருடைய நல்லதும் கெட்டதும் அவங்கவங்க கிட்டேயே இருக்கம்'பா! ஒருத்தன் வயத்திலெ நாம் அடிச்சாக்கா நம்ம வயத்திலெ இன்னொருத்தன் அடிப்பான். நாம இந்த உலகத்துலெ கூழுப் பானையிலெ விழுந்த எலி மாதிரி அடிச்சிக்கிறோம்! அகல் விளக்கிலே திரிக்குப் போதறா மாதிரி தான் எண்ணெ ஊத்தணும். அந்த எண்ணெ பணமில்லேப்பா -- அன்புதாம்'பா! என் கண்ணுக்கு நீயும் புல்லய்யாவும் ஒண்ணுதாம்'பா, ரெண்டு பேரும் நல்லவங்கதான்," என்றாள் பாட்டி.

புறப்பட்டுப் போகும்போது, கொஞ்ச தூரம் வழியனுப்ப உடன் வந்தபோது, பாட்டி "அப்பா! இன்னும் எத்தனெ நாளுக்கிருக்க போறேன்? என் பாடையெத் தூக்க நீ ஒரு கை குடுக்க மாட்டியா?"

என்று கேட்டபோது, ராஜு பாட்டியின் தோள் மேல் கையைப் போட்டு, "எலலா காரியமும் நானே பண்றேன் பாட்டி," என்றான் ராஜு. பாட்டி பொக்கை வாய்ச் சிரிப்பை உதிர்த்தாள்.

அதற்கு மறுநாள் நீலம்மன் கோயில் வாயிற்படியில் தலையை வைத்துக் கும்பிட்டாள். ஆற்றை, பாலத்தை -- கண்ணுக்குத் தெரியும் அந்த ஊரிலிருந்த எல்லாவற்றையும் பார்த்தாள். வீட்டுககு வெளிப் பக்கம், வராந்தாவில் உட்கார்ந்து கொண்டு, தெருவில் போவோர் வருவோா எல்லாரையும் கூப்பிடுவாள். சொல்ல நினைத்த நாலு நல்ல வார்த்தைகளைச் சொல்லுவாள். பெரியவர்களையும் சிறியவர்களையும் தொட்டு ஆசீர்வதித்தாள் -- முத்தமிட்டாள். அன்பு கரைபுரண்டு இப்படி ஒரு வாரம் ஓடியது. இரவுகளில் நீணட நேரம் வரையிலும், மறுபடியும் அதிகாலையிலேயே எழுந்தும், தெரிந்த பக்தி கீர்த்தனைகளைப் பாடிக் கொண்டிருந்தாள். "நான் பொறந்த நாளும் இருந்தே -- வளர்ந்த நாளும் இருந்தே -- சாகறண்ணைக்கும் இருப்பே உலகத்திலெ மனுஷியாப் பொறந்து நான் செய்ய வேண்டியதெ, நீ சொல்ற மாதிரி செய்றேம்' பா" என்று சொல்லிச்சூரிய பகவானைக் கும்பிட்டாள்.

அன்று வானமெல்லாம் மேகங்கள் சூழ்ந்தன. சாயந்தரம் வரையில் அவ்வப்போது தூறல் விழுந்தது. அன்றிரவு தூரத்தில் மின்னல்கள் வெட்டின. பாட்டி, ஜுரத்தோடு ஒரு மூலையில் முனகிக்கொண்டே படுத்திருந்தவள், திடீரென்று, நள்ளிரவில் எழுந்தாள். எல்லாம் நிசப்தமாக, இருந்தது. எல்லாரும படுத்திருந்தார்கள். எழுந்து கதவைத்திறந்து வெளியே வந்தாள். தூரத்தில், வானத்தில் நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டிருந்தன. அங்கங்கே சிறிய மேகத துண்டுகள் இப்படியும் அப்படியும் நகர்ந்து கொண்டிருந்தன. அந்த நட்சத்திரங்களைப் பார்க்க கூடிய பார்வை பாட்டிக்கு இருந்தது. அந்த நிசப்தத்தில் . . . தன்னந்தனியாக . . . தெருச் சுவரில் சாய்ந்தபடிக் காலை நீட்டி உட்கார்ந்தாள் . . . அந்தச் சில நிமிஷங்களிலேயே ஆழ்ந்த உறக்கம் வந்தாற் போலிருந்தது . . . ஏதோதோ கனவுகள் . . . யாராரோ பெரியவர்களெல்லாம் காட்சியளித்தார்கள் . . . யாராரோ வந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவளுடைய கணவன் . . . இறந்து போன குழந்தைகள். . . இன்னும் யாராரோ . . . தன்னை அழைத்தனர். ஏதோதோ பூச்சூடிய ரதங்கள் . . . குதிரைகள் . . . வானத்தில் தென்பட்டன . . . இவையெல்லாம் தனக்காகத் தான் . . . என்பது போல அவர்கள் காட்டி அழைத்தார்கள் . . .

மறுபடியும் நினைவு வந்தது. . . நினைவு வந்த போது விளக்கு . . . அந்த வெளிச்சத்தில் பல பேர் கும்பலாக இருந்தார்கள். . . . பேத்தி அழுகிறாள். . . பேரன் மல்லு ஓரேடியாக அழுது ஆர்ப்பாட்டம் பண்ணுகிறான் . . . "பாட்டி" என்று கூப்பிட்டு 'ஓ' வென்று அழுகிறான். கண்ணைத் திறந்த உடன் பேத்தி இன்னும் அருகில் வந்து தலையைப்

பிடித்துக் கொண்டாள். அந்த முகம் இன்னும் கறுத்துப் போகவில்லையென்று அந்தப்பொக்கைவாய்ச் சிரிப்புக் கூறியது. "அம்மா . . . தாயே . . . என் நீலமமா! . . ." -- ஒரு முறை பேத்தியின் தலையைத் தடவினாள் அந்த மெலிந்து போன கை, அனபுப் பெருக்கெடுத்து, பேத்தியின் உடம்பெல்லாம் தடவிவிட்டு, அநத மூடிய கணகளிலிருந்து கடைசியில் எஞ்சிய நீா ஆனந்தக் கண்ணீராக உதிர்ந்தது. "எனதாயே! --" நிறுத்தி மெதுவாக . . மிக மிக மெதுவாக . . . நிறுத்தி, மறுபடியும் நிறுத்தி . . . "கை சுடடாக்கா . . சட்டியெ எடுத்துப் போட்டுடுவான் . . . பொறுத்துக்கத் தெரியாதவன்' மா . . . புல்லய்யா! அந்தச் சட்டி . . . கீழெ விழுந்துடாமெ . . . காப்பாத்து தாயே! . . . இன்னும் என்ன குடுக்கப் போறேன்?" இந்த வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டே, கடைசி முறையாகக் கணணைத் திறந்து பேத்தியையும்,, புல்லய்யா, மல்லுவையும், சுற்றிக் குழுமியிருந்த எல்லாரையும் பார்த்தாள். அவர்களில் ராஜுவும் இருந்தான். புன்சிரிப்போடு அப்படியே பாாத்துக் கொண்டேயிருக்கையில் உயிர் உடம்பை விட்டு நீங்கியது.

## 24

நெற்பயிர் கதிா விட்டுக் கொண்டிருந்தது. மேகங்கள் சூழ்ந்து அவ்வபபோது மழை பெய்து கொண்டிருந்தது. குளிர்காலம இன்னும் வரவில்லையென்றாலும் சில நாள் இரவில் சற்றுக் குளிரத்தான் செய்தது

ஒரு நாள் இரவு, நள்ளிரவு நேரம், கும்மிருட்டு கவிழ்ந்திருந்தது. வானம் மேகங்களால் நிறைந்திருந்தது. சஞ்சீவியின் வீட்டுப் புழக்கடையில் பலத்த சத்தம் கேட்டது. அந்த இருட்டிலே சஞ்சீவி திருடனின் குடுமியைப் பிடித்துக் கொண்டு, நாலு விளாசு விளாசிக் கொண்டிருந்தான். திருடன் ஒன்றும் பேசாமல் முகத்தை தொங்கப் போட்டுக்கொண்டிருந்தான். சஞ்சீவியின் மனைவி சிம்னி விளக்கை ஏற்றப் போனால், அது காற்றில் அணைந்து விட்டது. சுற்றிலும ஜனங்கள் சூழந்து கொண்டார்கள். புல்லய்யா மல்லுவும் கூட ஓடி வந்தார்கள்.

சூழ்ந்து நின்றவர்களிடமிருந்து விளக்கங்களும் வசவுகளும் சரமாரியாக வந்தன. யார்ரா அந்தத் திருட்டுப்பயல் -- தாங்கடா' என்று ஆளுக்கொரு அடி போட்டார்கள். "முந்தா நாளு கட்டுலே'ருந்து பயரைத் திருடனது இவன் வேலைதான்!" — " எங்க கோழிக் குஞ்சுங்க காணமா போனது இவன் வேலை தான்! -- "திருட்டுக் கழுதெ! வேறெ வழியில்லென்னா பிச்சையெடுக்கக் கூடாது!' ஆளுக்கொன்று சொன்னார்கள். இந்த வசவுகள் பெண்கள் வாயிலிருந்தும் வந்து கொண்டிருந்தன! அந்தத் திருடன் மூன்று நாட்களாகப் பட்டினியால்

துடிதுடித்துக் கொண்டிருந்தான். தான் மட்டுமல்ல, மனைவி மக்களும் கூட! இதையெல்லாம பொறுக்க முடியாமல் பசி வெறியால் பாதி ராத்ரியில் திருடுவதற்குப் புறப்பட்டான்! சஞ்சீவி வீட்டுப் புழக்கடைப் பக்கம் சமையலறையில் நுழைவது சுலபம்! பழைய சோற்றுப் பானை நீரைக் குடித்துவிட்டு, பானையை விட்டுக்குக் கொண்டு போனால், பிள்ளைகள் இன்னும் இரண்டு நாளாவது இந்தப் பூமியில பிழைததிருப்பார்கள்!

ஆனால் திருடன் அகப்பட்டுககொணடான்! அவ்வளவு பேச்சும் அத்தனை உதைகளும் அவனுக்கு உறைக்கவேயிலலை, எல்லாம் கனவு போலிருந்தன. அறுந்த மாலையின் சரங்கள் சிதறிக் கொணடிருநதன. திடீரென்று கீழெ விழுந்து விட்டான் -- "பசி, பசி!" என்று ஆயாசத்தோடு சொன்னான். சஞ்சீவி கள்ளபபசியைத் தீர்ப்பதற்கு இன்னும் இரண்டு போட்டான். "வேஷம் போடறியா? -- இப்படி விழுந்திட்டா விட்டுடுவாங்கன்னு பாக்றியா திருட்டுக் கழுதை?" என்று சொல்லிக் கொண்டே இரண்டு முறை காலால் எட்டி உதைத்தான். திருடன், "அம்மா" என்று அலறினான். பக்கத்திலிருந்த ராஜுவின் வீட்டிலிருந்து அரிக்கேன் லாந்தா வந்தது. அந்த வெளிச்சத்தில் பீஸயின் முகத்தைப் பார்த்ததும் ஒரு நிமிஷம் எல்லாம் நிசபதம் ஆகிவிட்டது. போரில் அம்பு பட்டுக் கீழே விழுநத வீரனைப் போலிருந்தான் பீஸ. உண்மையில் இநதப் போராட்டத்தில் பசி ஜெயித்து, தயவு தாட்சண்யமில்லாமல் இந்தப் பீஸை நாலுபேர் முன்னால் இப்படி நிலை குலையச் செய்தது -- இருநதாலும அந்தப் பசி வேதனை தாங்க முடியாமல், கையால் சைகை செயதுகொணடே, அரை மயக்க நிலையில், "பசி . . பசி'ம்மா!" என்றான்

சஞ்சீவியின் மனைவி ஒரு கிண்ணத்தில் சோறு போட்டுத் தண்ணீர் விட்டுக் கரைத்துக் கொண்டு வந்தாள். அவசரத்தில உப்பு போட மறந்து விட்டாள். பீஸ மடமடவென்று குடித்துவிட்டான். இருந்த சோற்றுப் பருக்கைகளை மென்ற பிறகு, " அப்பாடா" எனறு சொல்லிக் கொண்டே, ஒரு முறை தலையெடுத்து, சுற்றி இருந்தவர்களைப் பார்த்தான். அருகில் மல்லு உட்கார்ந்திருந்தான. புல்லய்யா, சஞ்சீவி, ராஜு. . . ஊரெல்லாம் . . . ! 'ஓ! வென்று அழத்தொடங்கினான் தான் செய்த வேலை நினைவு வந்து, புரண்டு புரண்டு அழ வேண்டும் போலிருந்தது. அப்போது புதர் போலிருந்த தலையோடு, அழுக்கான கந்தைத்துணியோடு, 'குய்யோ முறையோ என்று கத்திக் கொண்டே வந்த மனைவியைப பார்த்தான்.

பார்த்த உடனே பிள்ளைகள் நினைவு வந்தனர். சாப்பிட்டதெல்லாம் வாந்தியெடுக்க வேண்டும போலிந்தது. இதெல்லாம் செய்தது தான்தானா என்று எண்ணிக் கொண்டே எழுந்திருக்கப் போனான். உடம்பில் கொஞ்சம் சக்தி வந்தாலும் இந்த எண்ணங்கள் அவனைச் சுரத்தில்லாதவனாக்கி விட்டன. பழுத்த கிழவனை விட மோசமான

நிலையிலிருந்தான். சுற்றிலும் சூழ்மி இருந்த ஜனங்களைப் பார்த்தான். தான் ஒரு திருடன்! திருடனை விட்டு விடுவது சரியான வேலையலல! திருடனைத் தண்டிக்காவிட்டால் நியாயம் மண்ணோடு மண்ணாகிப் போகும் என்று நினைத்தான

"அப்பா சஞ்சீவி!" என்று கூபபிட்டான்.

வேதனையில் குமைந்து கண்ணில் நீர வழிந்து கொண்டிருநத பீஸ்யை எலலோரும் பாரத்தார்கள. கண்ணைத் துடைத்துக்கொண்டே, "பஞ்சாயததைக் கூட்டப்பா! திருடனுக்குத் தண்டனெ குடுததாகணுமபா!" என்று சொன்னான்.

"வீட்டுக்குப போடா, இதென்ன பைத்தியக் காரத்தனம்!" என்றான சஞ்சீவி.

"வேணாம்பா! இப்பொ தண்டனெ கிடைக்கலேனனா -- அப்பறம் யமன் காய்ச்சன இரும்புக் கம்பியில் சொருகி வெச்சி விட்டுடுவான்"

அங்கிருந்தவர்கள் யாரும் ஒபபுக்கொள்ளவில்லை. அருகில் பசுவைக் கட்டியிருந்த கயிற்றைப் பீஸ் அவிழ்த்து அதைச் சஞ்சீவியின் கையில் கொடுத்தான். பசு, கட்டிய இடத்திலிருந்து நகராமல் இநத மனிதனை உற்றுப் பார்ததது. பீஸ் சஞ்சீவியைப் பார்த்து, " அப்பா! அந்தக் காயத்தாலெ பலமா நாலு முதுகு மேலெ போட்டுடுப்பா!" என்று சொன்னான.

சஞ்சீவி கயிற்றைக் கீழே போடப் போனால், "போடறியா இலலியா?" என்று கத்தினான். . . இனி வேறு வழியிலலையென்று மெதுவாக இரண்டு போட்டானோ இல்லையே, மலலு ஓடிப்போய், சஞ்சீவியின வலது காலைப் பிடித்துக்கொணடு, தொடையருகில் கடித்துவிடவே அவன் துடிதது விட்டான். பீஸ், அந்தக கயிற்றை வாங்கிக கொண்டு, தன்னைததானே பலமாக அடிததுக் கொண்டான். முதுகிலும வயிற்றிலும தழும்புகள் காட்சியளித்தன. பிறகு, அநதக் கயிற்றைக் கொண்டு பசுவைக கட்டிவிட்டு, எல்லாாக்கும் ஒரு கும்பிடு போட்டுவிட்டு, மெதுவாக வீட்டை நோககி நடந்தான்.

பொழுது விடிநது விட்டது. புல்லய்யாவுக்கு அன்றெல்லாம் மனது சரியாக இல்லை. விறகுக்குப் போகலாமென்றால் அதற்கும் வழியில்லாமற் போயவிட்டது. முதலில் பணத்தைக் கட்டிவிட்டு பிறகு மரத்தை வெடடிக் கொள்ளச் சொன்னான் தோப்புச் சொந்தக்காரன். ஏனென்றால், யாரோ ஒருவன பணம் கொடுக்காமல ஓடிப் போய் விட்டானாம். அதனால் நஷ்டம் வந்ததாம். ஆகவே, கடனுக்கு மரத்தை வெட்ட முடியாதென்று சொல்லி விட்டான் எனவே, ஒன்றும் செய்யத் தோன்றாமல் ஊருக்கு வெளியே வேப்ப மரத்தின் கீழே மகனுடன் உட்கார்ந்து விடடான் வீட்டுக்குப் போனால் பட்டினி. அங்கேயே இருந்தால், மகனைப் பார்க்கப பார்க்க மனதெல்லாம் வெறிச்சோடிக் கொண்டிருந்தது. அடிககடி, இரவு பீஸ்வுக்கு நடந்த அசிஙகமே நினைவுக்கு வந்து கொண்டிருநதது.

அன்றிரவு நீலி கேட்டாள் "கவலையோட தென்பட்றியே, மனசுலே என்ன இருக்குது?"

"ஒண்ணுமில்லே ஆவட்டும்," என்றான்.

அதற்கு மேல் வேறொன்றும் கேட்கவில்லை. 'பாட்டி இல்லாதது ஏதோ குறையிருக்கற மாதிரி இருக்குது,' என்று ஓரிரண்டு முறை ஏற்கனவே சொல்லியிருந்தான் புல்லய்யா அப்பா மேலெ கை போட்டுத் தட்டவில்லையென்றால் தூங்க மறுக்கும் மகனைப் பார்க்கப பார்க்க கடந்த தெல்லாம் நினைவு வந்தது புல்லயயாவுக்கு -- அன்றிரவு சிலம்பாட்டம்! கிழவனாகத தென்படாத கிழவன் சொன்னது என்ன? -- என் மகன் --? அழகா லட்சணமா இருக்கற என் மகன் என்னை மாதிரியே கிருதா குடுமி வைப்பான். நாலு பேருக்கு மத்தியிலே நல்ல பேரு எடுப்பான்! எதுக்கும் பயப்படமாட்டான்! என் மகன் . . . என் மகன் . . "

மெதுவாக மகனின் மார்பைக் கையால் தடவினான். மகனின் முகம் அந்த மங்கலான சிம்னி விளக்கு வெளிச்சத்தில் எவ்வளவு அழகாகத் தென்பட்டது! 'என் மகனெச் சிலம்பாட்டதுலெ கெட்டிக்காரனாப் பண்ணனும்னு நெனச்சேன். திருடனெப் பிடிக்கிற துரையாப் பண்ணனும்னு -- ரெண்டு கையாலியும் வாரிக் குடுப்பான்னு . . . மண்ணெ நம்பி வேர்வெ சிந்தி எங்க கௌரவத்தைக் காப்பாத்துவான்னு . . . அவ்வளவு மேலெ தாவனேன்! அந்த மகனுக்கு என்ன வச்சிருக்கறேன்? உடம்பு மேலெ கந்தத் துணி இல்லே -- வயித்து நெறையாக் கஞ்சி கூட இல்லே! சோறு சோறுன்னு அழுதுகிட்டே தூங்கிட்டானே . . . என் அப்பா . .'

இந்த எண்ணங்களோடு துக்கம் அடைத்துக்கொண்டு வரவே, பக்கத்திலேயே ஒட்டிப் படுத்திருந்த மகனை இன்னும் நெருக்கமாக் அணைத்துக் கொண்டான்.

நீண்ட நேரம் வரையில் கண்ணிலிருந்த ஈரத்தைத் துடைத்துக் கொள்ளவில்லை. அந்த நேரத்தில், நீலி மகளைத் தூங்க வைத்துவிட்டுஅவனருகில் வந்தாள்.

"ஏன் அப்படியிருக்கறே?"

பதிலில்லை.

"என்னை மாதிரி நீ எப்படி இருக்க முடியும்? என்னைக்கும் பசியன்னா என்னான்னு ஒனக்குத் தெரிஞ்சிருக்காது. கஷ்டம்ன்னா என்னான்னு வுனக்குத் தெரியாது. அதனாலதான் அவ்வளவு வேதனெப் பட்றே. கொஞ்ச நாளு கஷ்டப்பட்டா வுனக்கும் பொறுத்துக்கற சக்தி வரும். இப்போ நம்மளவிட யாரு அதிகமா சுகமாயிருக்கறவங்க ஆவட்டும்!"

அந்தக் கடைசி வாக்கியத்தைக் கேட்ட பொழுது மனைவியை வியப்போடு பார்த்தான். அவள் புன் சிரிப்புச் சிரித்துக் கணவனைப் பார்த்து, "அவங்களுக்குத் தகுந்த மாதிரி கஷ்டமிருக்குது. நமக்கு

*நிலமில்லாததனாலே ஒரு வேளைக்கிருந்தா ஒரு வேளைக்கில்லே. ஆனா ஆதெம்மாவுக்குச் சாப்பட்றதுக்கு என்ன குறைச்சல்? அந்த வயித்து வலியினாலெ ஒரு வாய் கஞ்சியாவது குடிக்க முடியுதா? எனன ஆனாலும் என்ன கஷ்ட்முன்னாலும் எவ்வளவு காலத்துக்கு இருக்கப் போவுது? இதொ கொஞ்ச நாளளே அறுப்பு வரப் போவுது உடம்பு திடமா இருக்கறப்பொ நாம ஏன பயப்படணும்?"*

*அப்போதும் புல்லய்யா பேசவில்லை நிலைமையை புரிந்து கொண்ட நீலி இனனும் அருகில் நகர்ந்து," பாட்டி சொன்னாங்க , 'கையி சுட்டுதுன்னா சட்டியெப் போட்டுடுவே'ன்னு! என் புருஷன் அவ்வளவு தைரியமில்லாதவனா? அந்தத் தைர்யம் வுனக்கு எபபொ வரும்னா, நாலு பேர் கிட்டே நீ நல்லதெப் பாத்தாதான்! எல்லார் கிடடேயும் நல்லது கெட்டது ரெண்டும் இருக்கும். நீ முன்னாடி அவங்ககிட்ட இருந்த நல்லதெத்தான் பாத்துகிட்டிருந்தே -- இப்பொ கெட்டதத்தான் பாக்கறே. அப்பொ எப்படி இருநதே? இபபொ ஒரு வேளெ இல்லேன்னா எவ்வளவு கஷ்டப் படறே! ஏன்? எனக்கெப்பவும் எப்படிப் பொழைககப் போறோஙகற பயமில்லே, தெரியுமா?"*

*புல்லய்யா நிதானமாக, கவலையே இலலாமல் பேசிக்கொண்டிருந்த மனைவியிடம், "பீஸ் மாதிரி ஆளே திருடனாயிடடா . . ." என்றான.*

*நீலி மெதுவாகச் சிரித்தாள. "ஆமாம். தப்பு யாருது? பீஸ்துதான்! பசங்க இருக்கறாங்க -- 'என் கவர்ன்மென்ட்காரன் பெரியவனானாக்கா பசங்களெக கவனிக்க மாட்டான்னு 'னனு சொலலிகிட்டு -- பெரியவனெப் பாதி படிக்க வெச்சி வேலெ வெட்டிக்கு வுதவாதபடிப் பண்ணிட்டான்! அவன எப்பொ கலெக்டர் ஆகப் போறான்? அதுக்குச் சின்னவங்களெ யாருகிட்டெயாவது வயல வேலெக்குப் பேசி விட்டிருந்தா, வருஷத்துக்குப் பத்துக்கூட நெலலு கொண்டு வந்திருப்பாங்க," என்றாள்.*

*"நீ அதையே தான் சொல்லிக் கிடடிருக்கறே? எப்படி வாழ்ந்தவன் அவன்? . . ."*

*'அப்படின்னா, அதுக்காக இப்பொ இப்படிச் சாவறது நல்லதுங்கறியா? அடுத்த வருஷம் மலலு நாலு பேரு மாட்டு மந்தையெ மேய்க்க அனுப்பக் கூடாதா? நீ பெரிய விவசாயிகிட்டே வயல் வெலேக்குச் சேந்தீன்னா வருஷத்துக்கு இருவது கூடெ நெல்லு அளந்து குடுக்கமாட்டாங்களா?"*

*புல்லய்யா உணர்ச்சி வேகத்துடன், "நானா! அசலூர்லே பிச்சையெடுத்தாலும் எடுப்பேனே தவிர ஜாதிக்காரன் கிட்டே வேலெக்குப் போவேனா!" என்றான்.*

*"அப்படிச் சொன்னா வேறென்ன வழி?"*

*படுத்திருந்தவன் சடடென்று எழுந்து, "நான் பெரிய வீட்டுக்காரன் -- பெரிய மனுஷனா வாழ்ந்தவன் -- ஊராலெ பெரிய மனுஷனாத்தான்*

இருப்பேன். சொல்லப்போனா உன்னாலெ தான் அந்த அன்றாடக் கூலி வேலெக்குப் போறென் . . . நான் வருஷக் கூலிக்காரன் ஆயிட்டேன்னா -- என் மகனுக்கும் அதே கதி தான்! மாடு மேய்க்கற பையனாக்கறியா என் மகனெ? அவன் திருடனெப் பிடிக்கற துரையாக்கப்போறான். என் பேரையும் ஊர்ப் பேரையும் காப்பாத்தப் போறான் பாரு!"

"ஆமாம். முதலலே சாப்பட்டு உயிரோட இருக்கவேணாமா? மரம் பூப்பூத்துக் காய் காய்க்கணும்னா, முதல்லெ நிலத்திலெ வேரெவிட்டு நிக்க வேணுமா, வேணாமா? என்ன ஆனாலும் வுனக்கு அவ்வளவு தற்பெருமை ஆகாதுன்னு சொலறேன்."

புல்லய்யா எழுந்து நின்று விட்டான். வயிற்று வேதனையை இந்த வார்த்தைகள் இன்னும் அதிகமாக் கிளறி விட்டன. ஆவேசததுடன் சொன்னான்" எங்க வம்சம் பெருமையோட வாழ்நத வம்சம். நான் பெருமையோடவே பொறந்தேன். பெருமையோடவே சாவேன். நீலி! பட்டினி கிடந்து செத்தாலும் சாவேனே தவிர . . . திருடமாட்டேன் . . . பிச்சையெடுககமாட்டேன். . .!"

உணர்ச்சி வேகத்தில் வார்த்தைகள் வேகமாகவும் சத்தமாகவும் வரவே மல்லு "சோறு!" என்று சொல்லிக்கொணடே விழித்தெழுந்து உடகார்ந்து கொண்டு அழத் தொடங்கினான். புலலயயா சட்டெனறு உட்கார்ந்து மகனைப் படுக்க வைக்கப்போனான்.

ஆனால் அவன். "அம்மா, சோறு!" என்று சொல்லிக் கொண்டே கண்ணைக் கசக்கிக் கொணடு அழுதான்.

நீலிக்கு இரக்கம் பொங்கியது. ஆனால மகனுக்கு இப்போது ஐந்து வயது . . . இரண்டு மூன்றாண்டுகளுக்கு முனபு இந்த நிலை வந்திருந்தால மகன் பசியைத் தீர்த்திருபபாள்! புல்லயயா மகனைப பககத்தில் படுகக வைத்துக் கொண்டான் நீண்ட நேரம் வரையிலும் இரண்டு பேருடைய கைகளும் அவன் முதுகில் மெல்லத் தட்டின பிறகு தான் மல்லுவுக்குத் தூக்கம் பிடித்தது. அதுவரையில் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள் புலலய்யா, கடைசியில் சொன்னான் 'இனி மிஞ்சுனது அந்தச் சாப்பாட்டுத் தட்டு ஒண்ணுதான . . . நாளைக்கிக் காலையிலெ அதெ எடுத்துக்குடு. "நீலி மௌனமாக இருந்தாள்.

## 25

நான்கு நாட்கள் கடந்தன. ஆதெம்மாக்கா வீட்டில் ஜனங்கள் குழுமி இருந்தார்கள். ஒவ்வொருவரும் ஒன்று சொல்லிக் கொண்டிருந்தனர். "சாவு வந்து தொலையலியே! என்று சொல்லி, தாங்க முடியாத வயிற்று வலியால வேதனைப பட்ட ஆதெம்மா அழுது கொண்டிருந்தாள். ஆளுக்கொரு ஆலோசனை சொல்லிக்

கொண்டிருந்தார்கள. மருமகன வெறுப்போடு பார்த்துக் கொண்டிருந்தான். பீஸ்யும் இடையில் வந்து நுழைந்தான். நோய் வந்த கோழிக் குஞசைப் போல் துடிதுடித்துக் கொண்டிருந்த ஆதெம்மாக்காவைப பார்த்து, "என்ன! மருமகனை வீட்டோட கொண்டு வந்து வச்சிகிட்டே! உனக்குக் கஷ்டம வந்தப்பொ, பணத்தெப் பாத்துகிடடிருந்தா எப்படி ஆகறது! உனக்கு வாயில்லே -- நீ ஒரு சரியான முண்டே!" என்றான்.

"சாப்ட்டா ஜீரண மாகறதில்லே, சொன்னா யாரும கேக்கறதிலலே -- அப்படி ஆயிட்டுது என் தலையெத்து," என்று சொல்லி, ஆதெம்மா தலையிலடித்து கொண்டாள்.

"தலையெழுத்துமில்லே, கிலையெழுத்துமில்லே. எடுத்துக்கோ நானூறு, பட்ணம் போ, மூணு நாள்ளே பழைய மாதிரி ஆயிட்றியா இல்லியா பாரு. ஒனககு யாரு துணெ வரணுமோ சொல்லு நான் அவனையே கூட அனுப்பறேன. அந்தப் புல்லய்யா இருக்கறானே -- அவன் முகத்தெப் பாத்ததுமே அந்த டாக்டருங்க உன்னெ ஆஸ்பத்திரிலே சேத்துடுவாங்க. இன்னும் தள்ளிப போட்டீன்னா சாவுதான். ஒரே அறுப்பிலே வலியெல்லாம் ஒழிஞ்சிடும்!"

"அய்யோ! அறுப்பாஙகளா!"

"பைததியக்காரி! அவங்க அறுக்கறது ஒனக்குத் தெரியுமா? நோவு இருக்குமா? டில்லிக்'கு மேலெ பேரு வாங்கியிருக்குது, பெரிய ஆஸ்பத்திரி! பணம் குடுததாலொழிய கதவு கூடத்தெறக்க மாடடாங்க அங்கே இருக்கற டாக்டருங்களா -- எலும்பு உடைஞ்சி போசசினனா ஒட்டி வச்சிட்றாங்க! மூளை சிதறிப போச்சின்னா, ஆட்டு மூளையே வெச்சிப் பழையபடி ஆககிட்றாங்க *இசாகபடணம் -- இசாகபபடணம்னா என்னான்னு நினெச்சிகிட்டே. அங்கே ஆாபரு -- சிந்தியா கம்பெனி -- பைத்தியககார ஆசுபத்ரி -- இன்னும் ஆகாசதெத் தொடுதாம் மாடி வீடுங்க! செத்தாக் கூட இந்தச் சொகுசெல்லாம் பாததுடடுச சாவேன்! நாளைக்கே புறப்படு -- நோவும் போயிடும், பட்ணத்தையும் பாத்துட்டு வருவே!"

ஆதெம்மா மருமகனைப் பார்த்தாள். மருமகன் வேறுபககம் முகத்தைத் திருப்பி கொண்டான். பீஸ் இன்னும் உரத்த குரலில் அபிநயத்தோடு சொன்னான் "அதோ, அந்தக் காராநாயுடு சுத்துப் பக்கத்துலெ உள்ள வைத்தியனுங்க எல்லார்கிட்டேயும் காட்டி ஏமாந்தானா? இசக்கபட்டணம்' போயி பதது நாள்ல உடம்பெ நல்லாத் தேத்திகிட்டு வந்தான. இப்பொ கிழ ஆட்டு மாம்சத்தெக் குடு. ஒரு வீசெ கறியெ ரெண்டே வேளெக்குச் சாப்ட்டாலும் வயித்திலெ நோவே கிடையாது. எதுக்கும் துணிச்சலில்லாத பொழப்பு என்ன பொழப்பு - பாத்துப் பாத்து, பணத்துக்கு ஆசப்பட்டு அந்த கென்னம்மா புருஷனெக் கொண்ண மாதிரி உன்னெக்

*தறபோதைய விசாகபபடடினம -- பதிபபாசிரியா குறிபபு

கொண்ணுடுவான் பாரு உன் மருமகன்!"

இந்தக் கடைசி வாககியத்தை அத்தனை பேர் முன்னால் சொல்லவே மருமகனுக்கு வேகம் வந்தது. "டேய் பீஸா, வாய மூடுடா! நானூறில்லே ஐந்நூறு எடுத்துக்கிட்டுப் போகச சொல்லு. இதுவரைக்கும் எத்தனை நூறு ஆகல்லே. போவட்டும்," என்று சொன்னான்.

"இதோ பாரு ஆதெமமா! மருமகன் ஒத்துகிட்டான். நாளைக்கே புறப்பட்றதுக்குத் தயார் பண்ணு. புல்லய்யா நீ கேட்டுக்கிட்டீன்னா முடியாதுன்னு சொல்ல மாட்டான். செலவெல்லாம் நீயே பாத்துக்கப் போறே, சாப்பாடு போடப்போறே. சத்ரத்துலே போயி தங்கப் போறீங்க. கல்யாணம் நீதானே பண்ணிவெச்செ. அப்படி இருக்கறப்பொ உனக்கு இந்த ஒத்தாசெ பண்ணமாட்டானா? சிம்உறாத்ரி அப்பன்னாவுக்கு வேண்டிகிட்டுப் போயிட்டு வாங்க"

பீஸ் இன்னும் கொஞ்சம் உற்சாகப் படுத்திப் பேசிவிட்டு, புல்லய்யாவின் வீட்டுக்கு வந்தான். பிரயாண விஷயத்தைச் சொன்னான். மல்லு எப்படிப் பிரிந்திருப்பான் என்பது தான்கவலை!

'மல்லுவையும் அங்கே அழைச்சிகிட்டுப் போறதுக்கு ஆதெம்மா மருமகன் ஒத்துக்க மாட்டானே.' "எப்படியும் போறது போறப்போ. பட்ணம் எல்லா மூலையும் சுத்திப்பாரு! சிந்தியா கும்பினி -- ஆருபரு --- இன்னும் எத்தனையோ கும்பினிங்க இருக்குதாம் -- மாசச் சம்பளம் வர்ற வேலையெப் பாத்துக்கிட்டு வா! நீ போயி அங்கே இருந்தீன்னா, உன் பக்கத்துலெ வந்திருந்து நானும் ஏதோ ஒரு சின்ன வேலெ பாத்துக்கறேன்."

"நல்லாச் சொன்னே," என்றான் புல்லய்யா. மனம் சற்று உல்லாசமாக இருந்தது. நீலி புழக்கடையிலிருந்து வந்து பேச்சுக் கொடுத்த உடனே பட்டினப பிரயாணத்தைப் பற்றிச் சொன்னான். ஒரு வினாடிக்குப் பிறகு பீஸ் சொன்னான் "உன் பேச்செக் கேக்காமெ போயிட்டேன்'மா. உன் பேச்செக் கேட்டிருந்தா அந்தப் பசிப்பேயி என்னெப் புடிச்சி ஆட்டி வெச்சிருக்குமா? அந்தக் காலத்துலெ தர்மராஜா பொய் சொன்னா மாதிரி இந்தக் காலத்துலே நானும் திருட்டு வேலெ செஞ்சேன்... இப்பொ சின்னவங்க ரெண்டு பேரையும் மாட்டு மந்தை மேய்க்கறதுக்கு ஏற்பாடு பண்ணிட்டேன். பெரியவனெப பட்ணம் ப்ளீடர்கிட்டே கெஞ்சிக் கேட்டு, அவங்க வீட்லியே வேலெக்கு வெச்சிட்டேன். அவன் அவங்க வீட்லெ வேலெ செஞ்சிகிட்டே படிச்சிகிட்டான்னா, என் கவர்னமென்ட்காரன் பெரியவனானப்பறம் மாசச்சம்பளம் வர்ற வேலெ குடுக்க மாட்டானா?"

நீலி, பீஸ் சொன்னதைக் கேட்டு, சந்தோஷத்தோடு, " நல்ல வேலெ செய்தேய்யா! கஷ்டப் பட்டு வேலெ செய்யவாங்க. கொண்டு வர்றாங்க. சாப்ட்றாங்க. அதுக்கெதுக்கு வெக்கப்படணும்? கௌரவமெல்லாம் பாத்தா நாம பொழய்க்க முடீயுமாய்யா! கௌரவத்தோட,

தண்ணியிலெ'ரந்து வெண்ணெ எடுக்கணும்னா முடியுமா? கவர்ன்மென்ட்காரன் உடம்பு வளையாதவங்களுக்கு என்ன குடுத்து என்ன லாபம் - வேலெ செஞ்சா உசிரு இருக்குதுன்னு சொல்வாங்களா? சும்மா உக்காநதிருந்தா உசிரு இருக்குதுன்னு சொல்லுவாங்களா? உசிரு இருக்கறவங்க பொழய்க்க முடியாதா। என்று சொன்னாள்.

புல்லய்யா இவ்வளவு நேரமும் வேண்டா வெறுபபாக நீலியைப் பார்த்துக் கொண்டிருந்தான். பீஸ் புன்சிரிப்போடு, "அந்தக் கிழவி ஒனக்கு நல்லாக் கத்துக் குடுத்திருக்கறாமமா। என்னானாலும் குதிரெ வயத்திலெ கழுதெக் குட்டி பொறக்குமா? வயிறு காஞ்சிதின்னா கௌரவமெல்லம் அந்த நெருப்புலே பொசுங்கிப் போகாதா। அனுபவத்தெ வெச்சிச் சொல்றேன்."

உன் நல்லெண்ணமே, நீ எங்கே போனாலும் உன்னக் காப்பாத்து'ம்மா। இந்தப் பத்து கிராமங்கள்ளே உன் பேரெச் சொன்னாலேயே கெட்டவனும் நல்லவனாயிடறான்'மா!" என்று சொல்லிவிட்டு எழுந்து போனான்.

புல்லய்யாவின் பிரயாணம் நிச்சயமாயிற்று. ஆனால் மல்லு தானும் வருவேன் என்று அடம்பிடித்து அழத் தொடங்கி விட்டான். அழைத்துக்கொண்டு போகலாமென்றால் பணத்தட்டுப்பாடு. "அவன் எதுக்கு? அங்கெ ராஷனு ரொம்ப தீவிரமா இருக்குதாமே," என்று ஆதெம்மாக்காவின் மருமகன் கண்டிப்பாச் சொல்லிவிட்டான். நீலி, பெரிய விவசாயி வீட்டிற்குச் சென்று கொடுத்த வேலைகளைச் செய்வதுடன், ஓய்வாக இருக்கும் போது நூல் நூற்று வந்தாள். ஒரு வேளைக்கு இருந்தால் இன்னொரு வேளைக்கு இல்லை என்ற நிலையில் பிழைப்பு நடந்து கொண்டிருந்தது. . . மல்லுவுக்கு மெல்லச் சொல்லி அவனைச் சமாதானப் படுத்தினான். அடுத்தவாரம் அதே நாள் வந்துவிடுவதாகச் சொன்னான். அங்கேயிருந்து பொம்மைகள், துணியெல்லாம் கொண்டு வருவதாகச் சொன்னான். கடைசியில், தாய் காதில் விழாதபடி, தான் திரும்பி வந்து எல்லாரையும் அங்கே அழைத்துப் போவதாகச் சொன்னான் எல்லாரும் பட்டினத்தில் வேலை செய்து சுகமாக இருக்கலாம் என்றான்.

அப்பா பட்டினம் போன பிறகு மல்லுவுக்கு நாளெல்லாம் அப்பா நினைப்புதான். வீட்டில் ஒரு மூலையில் உட்கார்ந்திருப்பான். சாப்பாட்டு நேரத்தில் கூட எழுந்திருக்க மாட்டான். பசியெடுத்தால், சமையலறைக்குச் சென்று இருந்த கஞ்சியை எவர்சில்வர் கிண்ணத்தில் ஊற்றி, மடமடவென்று குடித்துவிடுவான். ஒரு வாரம் கடந்து விட்டது. அப்பா வரவில்லை. ஒவ்வொரு நிமிஷமும் அப்பாவையே நினைத்துக் கொண்டு, சிலசமயம் 'அப்பா' என்று கத்தி அழுது விடுவான். இன்னொரு வாரமும் கடந்து பதினைந்து நாட்கள் ஆகிவிட்டன.

தூக்கத்திலும் அப்பாவைப் பற்றிய நினைப்பே. வரவர அழுகை அதிகமாகிவிட்டது. வெளியே போய் ரோடோரமாக உட்கார்ந்து காத்துக் கொண்டிருப்பான்! எவ்வளவு நேரம் பார்த்தாலும் அப்பாவின் உருவம் தென்படாது. இருட்டிய பிறகும் நகராமலிருக்கவே அம்மா சென்று அவனைத் தூக்கிக் கொண்டு வருவது வழக்கமாகி விட்டது. தாயின் தோள்மீது கண்ணைக் கசக்கிக் கொண்டே, 'அப்பா!' என்று கத்தி அழுவான். இப்படி ஏக்கத்தில மல்லு வெளக்கமாத்துக் குச்சி போலாகி விட்டான்.

ஒரு நாள் மாலை புல்லய்யாவும், ஆதெம்மாக்காவும் திரும்பி வந்தனர். ஆபரேஷனில்லாமல் ஏதோ மருந்து கொடுத்திருந்தாகள. பீஸ் மிகவும் நொந்து கொண்டான் "அறுத்திருந்தா மறுபடியும் அந்தத் தொந்தரவு இல்லாம இருந்திருக்கும். மறுபடியும் எப்பவாவது தலைகாட்டுமேப்பா! புல்லய்யா, உன் சொத்து என்ன வீணாப் போவுது? ஒரு பையெ அந்த டாக்டர்கிட்ட தள்ள வேண்டியது தானே. வெள்ளித்தடி அடி பட்டாலொழிய இந்தக் காலத்துலெ யாரு பாக்கறான் –"

புல்லய்யா வீட்டுக்கு வந்தான். மல்லு அப்பாவைப் பார்த்துவிட்டுப் புழக்கடைக்குப் போய்விட்டான். மகன் முகத்தைப் பார்ப்பதற்கு வெட்கமாக இருந்தது. அவனுக்கு வாங்கி வருவதாகச் சொன்னது எதுவும் வாங்காமல் வெறும் கையோடு வந்திருந்தான். அப்படியே சட்டென்று போய், தூக்கிக் கொண்ட உடனே, மகன் அப்பாவைக் கட்டிப் பிடித்துக் கொண்டு பலமாக அழுதான். கொஞ்ச நேரம் வார்த்தை வரவில்லை. அந்த அழுகையிலேயே, "அப்பா அங்கேயே இருந்திட்டே -- ஏ . . ." என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

" ஏன் அழறே? நாம எல்லாரும் அடுத்த வாரம் அங்கே போய் இருக்கலாம்!"

"ஹாம்," என்றான் ஒரு முறை.

"நம்ம ஊரு பட்டணம் -- நாம பட்டணத்துக்காரங்க. அங்கே ரைலு --"

"பட்ணம் . . . பட்ணம் . . . அப்பா ரைலு. . . ரைலு. . ." அழுகை நின்று அப்பாவை உற்றுப் பார்த்தான்.

"குப்பு குப்புங்குது -- நாம அந்தப் பெட்டியிலெ உக்காந்தா -- பட்ணம் போய்ச் சேந்தடுவோம்."

"அப்பா! பஸ்ஸைப் போல இருக்குமா ரைலு?"

"பஸ்ஸைவிட ரொம்ப ரொம்ப பெரிசு! நீ அழுதீனா தென்படாது!"

"ஓ ஓ -- அழ மாட்டேன் . . . "

அப்பாவிடமிருந்து இறங்கி, "நாம பட்ணம் போப் போறோம் . . . பட்ணம் பட்ணம் . . ." என்று சொல்லிக்கொண்டே, கட்டில் மேலிருந்த தங்கையிடம் வேகமாகக் குதித்துக் கொண்டே ஓடினான்.

அன்றிரவு பீஸ்யிடம் தான் செய்ய நினைத்ததெல்லாம் சொன்னான்

புல்லய்யா : "பட்ணத்துலெ அவ்வளவு ஜனங்க இருக்கறாங்க. அத்தெனக் கும்புனி இருக்குது. எங்கெயாவது மாச சம்பளத்துக்கு வேலெ கிடெக்காம போவாது. மகனும் சுகப்படுவான். இங்கே இன்னும் கொஞ்ச நாளு இருந்தா பட்டினியிலே சாகவேண்டியது தானே?"

பீஸ், "நல்லதுப்பா, போய்வா," என்றான். ஆள் கவலையில் மிகவும் இளைத்தாற் போலிருந்தது. அந்தக் காலத்துப் புல்லய்யாவுக்கும் இப்போதிருக்கும் புல்லய்யாவுக்கும் எவ்வளவு வித்தியாசம்! அந்தக் கிருதா குடுமியே இல்லையென்றால் புல்லய்யாவை அடையாளம் தெரிந்து கொள்வதே கஷ்டமா இருக்கும்!

விடிவதற்குள் ஊரெல்லாம் பரவிவிட்டது -- புல்லய்யா குடும்பத்தை அழைத்துக்கொண்டு பட்டினம் போய்விடப் போகிறான் என்ற செய்தி. நூாலு பேர் நாலு விதமான கருத்துக்களைச் சொன்னார்கள். 'எவ்வளவு தைர்யம் இருந்தா இப்படிப் போயிடுவான்?' என்று சிலர், 'உடம்பு வளையாதவங்களுக்கு ஊரு ஒத்துக்காது,' என்று சிலர் -- ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகச் சொன்னார்கள். சிலர் நீலியிடம் விசாரிக்க வந்தார்கள். நீலி வழக்கம் போல் அமைதியாக இருந்தாள், அவ்வளவுதான். ஒரு விளக்கமும் சொல்லவில்லை.

மத்தியானம் மகனோடு வீட்டுக்கு வந்தான். நீலி மெதுவான குரலில் கேட்டாள் "ஊரெல்லாம் தெரிஞ்சிருக்குதே தவிர எனக்கு மட்டும் சொல்லலியே!"

இதற்குப் பதிலொன்றும் சொல்லவில்லை. மறுபடியும அமைதியாக, "எந்த ஆதரவும் இல்லாம சொந்த ஊரைவிட்டுப் போறது நல்லதில்லே. பொறந்து வளர்ந்த ஊரு. எல்லாரும் தெரிஞ்சவங்க. ஆபத்துக் காலத்துலெ ஒர்ததர் வரலேன்னா, இன்னொர்த்தராவது வந்து உதவுவாங்க. பட்ணத்திலெ யாருக்கு யாா து... இருப்பாங்க. 'என்கிட்டெ காசிருந்தா போதும், மத்தவங்களெப் பத்தி என்ன கவலெ'ன்னுதானே இருப்பாங்க! என் பேச்செக் கேளு . . ."

சட்டென்று புல்லய்யா வெறுப்போடு, "அதனாலெதான் உன்கிட்டே சொல்லலே," என்று சொல்லிவிட்டு எழுந்து வெளியே போய்விட்டான்.

தெருவில், பீஸ் வீட்டருகில் பத்துப்பேர் கூடி, புல்லய்யாவிடம் கேள்விமாரி தொடுத்தார்கள். அவர்களெல்லார்க்கும் ஒரே பதில்," என் இஷ்டம்," என்று புல்லய்யா சொன்னதும், பீஸ் எழுந்து நின்று எல்லார்க்குமாகச் சொன்னான்· "நீங்கெல்லாம் நம்ம ஊர்லெ'ருந்து ஒர்த்தன், டில்லியெவிடப் பேர் வாங்கிய பெரிய பட்ணத்திலெ இருக்கப் போறானுன்னு சந்தோஷப்படாமெ, இதெல்லாம் எதுக்குக் கேக்கறீங்க! அமெரிக்காக்காரன் பெரிய விமானத்திலெ ஏறி, நட்சத்திரங்க மத்தியிலெ சந்திரன்கிட்டே போப்போறானாம்! அங்கெ நீயும் நானும் முன்னாடி போவோமா? பட்ணத்துலெ இருக்கற புல்லய்யா முன்னாடி போவானா? பிறகு புல்லய்யா பக்கம் திரும்பிப் பார்த்து, "அப்பா,

புல்லய்யா! அங்கே போறவங்கெல்லாம், இங்கெ இருக்கறவங்க மாதிரியே அவங்கவங்க சுகத்தை அவங்கவங்க பாத்துகிட்டிருக்கக் கூடாது, தெரியுமா! இப்பொ இளைச்சிப் போயிருந்தாலும் ஒரு காலத்துலெ நல்லாத் திடமா இருந்தே இல்லியா? அங்கே சந்திரன்லேயும் வீடுங்க ஊருங்க எலலாம் கட்டுவாஙக இல்லியா? அங்கே உன் கஷ்டம் எல்லாரோட கஷ்டம், உன் சுகம் எல்லாரோட சுகம் -- என் பசங்க, உன் பசங்க, அவன் பசங்க -- எல்லாரும எல்லாரோட பசஙக தான்! சொத்துன்னா, கொஞச பேருக்கு மட்டுமில்லே, எல்லார்தும்தான். மனுஷ ஜாதியெல்லாம் ஒரே ஜாதி! அந்த மாதிரி, கவர்ன்மெண்ட்காரன் அங்கெவர்றா மாதிரி பண்ணனும்," என்றான.

மல்லுவுக்கு எல்லாம் புரிந்து விட்டது போல், "தாத்தா! தாத்தா!" என்று சிரித்துக்கொண்டே குதித்தான் . . . "மாமா, பட்ணம் போறோம!" என்று யாரையோ பார்த்துச் சொன்னான்.

அன்று மாலை நீலம்மன் கோயிலருகில் சென்று தனியா உட்காரந்திருந்தான் புல்லய்யா. மகன் தெருவில் பிள்ளைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தான். "தாசன் இருநதால் என்ன சொல்லுவானோ! அம்மனோட ஆசிர்வாதத்தைக் கொடுத்தனுப்புவான். எங்கம்மாவக் கவனிக்கிறவங்க யாரும் இல்லியே! அய்யோ! கிராமம் முழுவதும் இப்படித் தெய்வம் கடவுளுங்கற பயம் இல்லாம போயிட்டுதே. யாரு கைக்குக் கிடைச்சிதோ அவனதுன்னு ஆயிட்டுது. பக்கத்துலெ ஒர்த்தன் வயிறு காஞ்சி சாகறானேங்கற கருணெ இல்லாம போயிட்டுதே. நீதி நியாயம் எல்லாம் எங்கெ பறந்து போயிட்டுதோ? நியாயத்தோட இருக்கறவன் பெரிய மனுஷனில்லே. பணமிருககறவன்தான் பெரிய மனுஷன். அவனுக்குத்தான் எல்லாரும அளந்து கொட்றாங்க. இந்த மாதிரி ஊரு என்ன தான் சொந்த ஊரா இருந்தாலும் தான் ஏன் அங்கே இருக்கணும்? இங்கெ எனக்குப பாயாஸம் கிடைச்சாலும் இருக்கமாட்டேன். நியாயம் இருக்கற இடத்துலெ ஒரு மடக்குத் தண்ணியெக் குடிச்சிட்டுப் பொழச்சிருந்தாலும் நல்லா'ருக்கும்!

'பட்ணம் போறேன். மறுபடியும் பழைய புல்லய்யா ஆவறேன் நீதி நியாயத்துக்குக் கட்டுப்பட்டு, மல்லு நாயுடு மகனாகவும் மல்லுவோட அப்பாவாகவும், கஞ்சி குடிச்சி, சுகமா வீட்லியும் வெளியிலியும் கௌரவமாப் பொழய்க்கப் போறேன்." பட்டணத்தில் தன் உத்யோகம், தன் வாழ்க்கை முதலியவற்றைப் பற்றி மிகவும் பெருமையாக நினைத்துக் கொண்டான். மனதில் சந்தோஷம் நிறைந்தது. நீலம்மனைக் குறித்தும், தாசனைக் குறித்தும் எண்ணினான். 'அம்மன் இங்கே மட்டுமா - பட்ணத்திலெ கூடப் பெரிய திருவிழா நடக்குமே! என் அம்மா நீ எவ்வளவு கருணெ உள்ளவ!' இப்படி யோசித்துக் கொண்டே இருக்கையில் இருட்டிவிட்டது.

நீலம்மனைக் கும்பிடலாமென்று எழுந்தான். கதவு இடுக்கு வழியாகப் பாாத்தான். விளக்கு எரிவது போலிருந்தது. தாசன் அந்த விளக்கொளியில் உடகார்ந்து மௌனமாக முன்னுக்கும் பின்னுக்கும் ஆடுவது போலிருந்தது' 'தாசய்யா இறந்தாலும் தாயை விடவில்லையா?' உடம்பு புல்லரித்தது மனதிற்குள்ளாக, 'அய்யா! தாசய்யா! படணம போறேன் ஆசிர்வாதம் பண்ணு!' என்று கேட்டான. உடனே பதிலாக, 'அப்பா!' என்ற குரல் தனக்குள் எதிரொலித்தது. அப்படியே உட்காாந்துவிட்டான் தன்னையே மறந்துவிட்டான் கண்ணுக்கு நீலம்மன . . தாசன் . . . விளககு எலலாம் தென்படடன. தாஸன் காலில் சாஷ்ட்டாங்கமாய விழுநதான் புல்லய்யா. 'போப்பா போ! பைத்தியக்காரா! நான் இந்த ஊர்லெ இந்தக் கோவில்லியே இருக்கறேனுன்னு நினைக்கிறியா? ஊருக்குள்ளே இல்லே? இப்பொ திட்றவங்கெல்லருக்குள்ளேயும் இலலே . . . எங்கே இலலெப்பா? போப்பா போ! -- குணப்படுத்தறதுதான் மருந்து. இருக்கற இடம் தான் ஊரு!'

அதற்கிடையில் "அப்பா!" என்ற கூக்குரல் கேட்கத் தொடங்கியது. கதவு இடுக்கு வழியாக மறுபடியும் பார்த்தான். எந்த விளக்கும் இல்லை. இருட்டாக இருந்தது. விக்ரகங்கள் கூடத் தென்படவில்லை. எல்லாம் ஒரு கனவு போலிருந்தது அந்த இருட்டில் பயம் பீதி இல்லாமல், தனியாக, "அப்பா" என்று கூபபிட்டுக் கொண்டே கோவிலருகில் வந்த மகனைப் பார்த்தான். சந்தோஷததோடும் பாசததோடும் உடம்பு புலலரித்தது. மகனை இறுக்கமாக அணைத்துக் கொஞ்சலானான

## 26

பட்டணத்தில வீடு வாசல், உத்தியோகம் வேலை எதுவும் பார்க்காமல் எலலாரும் கிளம்பிப் போவது நீலிக்குப் பிடிக்கவில்லை. முதலில் புல்லய்யா சென்று கொஞ்ச நாளிலிருந்து வேலைவெட்டி பார்த்துக்கொண்டு வந்த பிறகு எல்லாரும் போனால நன்றாக இருக்கும் என்று நீலி தன் கருததைச் சொனனாள். மல்லு அப்பாவை விட்டுவிட்டு இருக்கமாட்டான். புலலய்யா தனியாகப் போனால் வேளைக்குச சாப்பாடு கிடைக்காது. அத்துடன், பாட்டி கண்ணை மூடும்போது சொன்ன வார்த்தைகள் நினைவு வந்ததால் நீலியால் திட்டவட்டமாக எதுவும் சொல்ல முடியவில்லை.

இருட்டி நீண்ட நேரமாகிவிட்டது. தனியாகத் தெருத் திண்ணையில் நீலி உட்கார்ந்திருந்தாள். அவள் சிந்தனையில் ஆழ்ந்து விட்டிருப்பாள்.

ஆனால் அதற்குள் குருட்டு வெங்கன்னாவும் சென்னம்மாவும் சேர்ந்து வந்து வாயிலில் உட்கார்ந்து ஏதோ பேசசுக் கொடுத்தார்கள். அந்தச் சமயத்தில் புல்லய்யா மகனோடு வந்து சேர்ந்தான். மல்லு,

அப்பா செய்த பெரிய காரியத்தை அம்மாவிடம் அபிநயத்தோடு சொல்லத் தொடங்கினான. நீலி சட்டென்று, 'சிரிக்கிறியா?' அவங்களோட விரோதத்தை ஏன் சம்பாதிச்சிகிட்டு வந்தே?" என்று கேட்டாள்.

"சம்பாதிக்க மாட்டேன! அவன் ரத்தத்தெக் குடிக்கிறேனா இல்லியா பாரு."

"அதென்ன பேச்சு? ஏன புலி மாதிரி பாயறே? அந்த ராஜு நமக்கென்ன பெரிய அநியாயம பண்ணான்?"

"பண்ணலே? பாதிக்குப் பாதி குடுத்து நிலம முழுசா ஏப்பம் விட்டேன்னு சொல்றான். அவன் குடலெப் பிடுங்கி வாங்கிக்க மாட்டேன் என் நிலத்தெ!"

"சபாஷ்'பா!" குருட்டு வெங்கன்னா குறுக்கிட்டுச் சொன்னான். நீலி வருத்தத்தோடு, "அய்யா! நீயும் அப்படியே சொல்றியே! அவன் பெண்டாட்டி, கேக்காமலெ வந்து பணம் குடுத்து ஜெயில்லேருந்து கொண்டு வந்தா. பாட்டி செததப்பொ அந்த ராஜு வந்துதான் எல்லாக் கார்யமும் பண்ணான். அவன் எனன நெருங்கின சொந்தமா பண்றதுக்கு. அந்த அளவு நமக்கு நன்றி இல்லேன்னா மனுஷங்கன்னு எப்படிச் சொல்லிக்கிறது?" என்று கேட்டாள்.

"அம்மா! எல்லாரையும் நல்லவங்கன்னு சொல்றெ நீ. உலகத்திலெ எல்லாரும் உன்னெ மாதிரி அப்பாவியா இருக்க மாட்டாங்க. அவனா! பேராசெ புடிச்ச நரி . . . தெருவழியாப் போறவங்க குடலெப் புடுங்கிப் போட்டுக்குவான்.

நீலி திண்ணையிலிருந்து எழுந்து, "உன் அப்பா அம்மாவெக் கும்புட்றேன். நமக்கு எனனாத்துக்கு இந்தச் சண்டையெல்லாம்? வாய்தான் வலிக்கும். எல்லாம் என்கிட்டே விட்டுடு. கேக்க வேண்டிய முறைப்படிக் கேட்டா என்ன சொல்றான் பாக்கலாம்."

"மூஞ்சி மேலெ அடிப்பான்!" என்று புல்லய்யா சொன்னான். "உடம்பெலலாம் இருக்கறப்பொ மூஞ்சி மேலெதான் அடிப்பானா? இருந்தும் பொம்பளையே அடிக்கறதுக்கு அவன் கை வருதாக்கும்!" என்று சொல்லிக்கொண்டே நீலி புழக்கடைப் பக்கம் போய்விட்டாள்.

எல்லாரும் போசாமலிருந்தார்கள். வெங்கன்னா, கென்னம்மா நீண்ட நேரம் வரை அங்கேயே உட்கார்ந்திருந்தார்கள். இரவில், கிண்ணத்திலிருந்த சோற்றுக் கஞ்சியை வெங்கன்னா தொடவில்லை. கென்னம்மா எழுந்து வெங்கன்னாவைப் பிடித்துக்கொண்டு பஜனை மண்டபம் அருகில் அழைத்துச் சென்றுவிட்டாள். அதற்கு அருகில்தான் ராஜுவின் வீடு. வெங்கன்னாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. சுவரில் சாய்ந்தபடி ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான்.

இருட்டு! ஊரெல்லாம் இந்த இருட்டைப் போர்த்திக் கொண்டிருந்தது. கென்னம்மா வெங்கன்னாவின் கிண்ணத்திலிருந்த சோற்றைத் திருட்டுத்தனமாகத் தடவி எடுத்து கவளம் கவளமாக்

வாயில் அடைத்துக் கொண்டிருந்தாள். சோற்றை மென்றால் ஓசை கேட்குமென்று அப்படியே விழுங்கினாள் இருந்தாலும் கொஞ்சம் ஓசை வந்து கொண்டிருந்தது. இந்த மென்மையான ஓசையையும் கவனிக்கக கூடிய சக்தி பெற்ற வெஙக்கனனாவுக்கு இப்பொழுது அந்த ஓசை கேட்கவில்லை. மனமெல்லாம் புல்லய்யா ராஜுவின் தகராறு மீது இலயித்திருந்தது.

நள்ளிரவு. அதுவரையில் மனம பலபபல வகைகளில் யோசித்தது. தவறிக் கூடத் தூக்கம் பிடிக்கவில்லை. எத்தனையோ பேரைப்பற்றி நினைத்தான். என்ன என்னவோ நினைதகான். எவ்வளவோ விஷயங்கள் நினைவுக்கு வந்தன. நீலம்மனை நினைத்து மனதில் கும்பிட்டான். தாஸய்யனைப் பற்றி நினைத்தான் "எனக்கு ஒரு மாசம் கண் பார்வை குடு தாயே' என்று வேண்டிக் கொண்டான். போகப் போக அந்த வேண்டுதல் தீவிர மாகியது. உணர்ச்சி வேகத்தோடு, 'ஒரு மாசமில்லை தாயே! ஒரு வாரம தான் . . . வாரம் கூட வேணடாம் . . . ஒரு நாளைக்கிக் குடுககமாட்டியா தாயே! தூங்கிகிட்டிருக்கற ஊரெ எழுப்பிடுவேனே! இந்த ஆடுங்களெ புலிகள் ஆக்கறேன் தாயே! . . . ஒரு நாள வேணாம் . . . . ஒரு மணி நேரத்துக்குத் தாயே . . . ஒரு மணி நேரமாவது குடுக்க மாட்டியா? இந்த அநியாயத்தெத் தொடச்சிட்றேன் . . . ஒரு மணி'ம்மா . . ஒரு வினாடி தாயே!"

இல்லை. கண் பார்வை வரவில்லை. பொலவென்று கண்ணீர் வழிந்தது. உணர்ச்சி வசப்பட்ட வெங்கன்னாவின் கண்களில் நீர் நிறைந்து விட்டது. பொல பொல வென்று கணணீா வழிநதது. பெரு மூச்சு விட்டான். உடம்பிலிருந்த ஒரே துணியால் மெல்லக் கண்ணைத் துடைத்து, சிரித்துக்கொண்டான்.

இருட்டு -- கும்மிருட்டு -- இயற்கை ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருந்தது. மெதுவாகத் தடவினான். கைத்தடி தட்டுப்பட்டது. எழுந்தான். ஊகித்தபடி ராஜுவின் வீட்டை நோக்கி இரண்டடி எடுத்துவைத்தான். ஏதோ ஓசை கேட்டாற் போலிருந்தது. 'யாரது?" என்று கேட்கவேண்டுமென்று நினைத்தான். ஆனால் மெல்ல பின்னுக்குத் திரும்பி பஜனை மண்டபம் திண்ணை மீது வந்து உட்கார்ந்தான். ஒரு வினாடி உட்கார்ந்தான். ஓசை வரவில்லை. தடவியபடி கென்னம்மாவை எழுப்பினான். மிகவும் ஆழ்ந்த உறக்கத்திலிருந்து போல் கிழவி எழுந்தாள்.

"உஷ்! புல்லய்யா நீ எனக்கு ஒரு உதவி செய்யணும்," என்று மெதுவாக முணுமுணுத்தான்.

"என்ன பண்ணனும்?"

"ராஜிப்பய நெல்குதிர் திண்ணை மேலெ காவலுக்குப் படுத்திருப்பான். மெதுவாப் போயி தூங்கி கிட்டிருக்கறானா, இல்லையான்னு பாத்துட்டு வாம்மா தாயே, உன்னெக் கும்பட்றேன்."

'நான் போமாட்டேன்'பா! திருடறதுக்கு வந்தேன்னு சொன்னாக்கா!"

"முண்டெ! முதல்லெ அந்தக் கிண்ணத்திலே இருக்கற சாதத்தெ சாப்புடு. . . . இன்னைக்கி நான் சொல்ற மாதிரி கேட்டீன்னா, எனக்குக் கிடைக்கறதுலெ தினம் பாதி வுனக்குக் குடுததுட்றேன்,"

வெங்க்கன்னா ஒரு சொல் சொன்னானேயானால் அதன படியே செய்வான் என்பதை நன்கறிந்த கென்னம்மா, கிண்ணத்தில் மீதியிருந்த கஞ்சித் தண்ணீரை கடகடவென்று குடித்தாள்.

கூன் போட்டுக் கொண்டு, மெல்ல மெல்ல அடி எடுத்து வைத்துச் சென்று பார்த்தாள். ராஜு தனியாகக் குதிர்த்திண்மை மேல் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான் மாடுகள் தொழுவத்தில் படுத்திருந்தன.

வெங்கன்னாவுக்கு இதற்குள் எத்தனையோ யோசனைகள் வந்தன. வீட்டுக்கு நெருப்பு வைக்கலாம் என்று நினைத்தான். அவன் இரத்தத்தைக் குடிக்கலாமென்று எண்ணினான். கொலை செய்ய வேண்டுமென்று நினைத்தான்.

அதற்குள், தனக்குள்ளேயிருந்து கேள்விகள் எழுந்தன

'அவன் யாரு? ராஜிப்பய யாரு? உன் மகனில்லே? மகனைக் கொல்றியா? . . . அவன் ரத்தத்தைக் குடிக்கறியா? சூரம்மாவுக்கு அன்னைக்கி ராத்ரி என்ன சொன்னே? அவகிடடே எனன சத்தியம் பண்ணே? அவ உன்னெ மன்னிப்பாளா?

எழுந்து இப்படியும் அப்படியும் வேகமாகத் திரிந்தான். 'கெட்டவன் சொந்த மகனா இருந்தா என்ன? அந்த நல்ல மனசிருக்கற நீலம்மாவோட வீட்டுக்கு நெருப்பெ வச்சான். குத்தகைக்காரன் நிலத்தெ வாங்கிக்கொண்டான் -- சொந்த நிலத்தெ அடமானம் வச்சிக்கிட்டு அநியாயம் பண்ணான் -- குடுத்த பணத்துக்கு வீட்டையும் குடுத்தாலொழிய பத்த்ராதுன்னு . . அவங்களெ தெரு நாயிங்க மாதிரி பண்ணனும்னு பாக்கறான் . . . அவன் மனுஷன் தானா - . . . அவன் என் மகன்தானா? இல்லே -- இல்லே . . . !

கென்னம்மா வந்தாள். வெங்கன்னா அவள் உதவியுடன் குதிர் அருகில் சென்று விட்டான் -- கென்னம்மா விறுவிறென்று திரும்பி நடந்தாள். பஜனை மண்டபத் திண்ணை மேல் தூங்குவது போல் பாசாங்கு செய்யலானாள்.

குறட்டை ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. ராஜு ஆழ்ந்த உறக்கத்திலிருந்தான். கைகளை மெதுவாகத் தேய்த்துக் கொண்டான். வெங்க்கன்னா. கைகளால் ஒரு முறை முகத்தைத் துடைத்துக் கொண்டான். அன்பு, பாசமெல்லாம் வெறுப்பின் முன்னால் எரிந்து போயின. உடம்பு முழுவதும், காரியம் நிறைவேற்றும் வேகத்தில் உணர்ச்சி வசப்பட்டுத் துடித்தது. இருட்டு -- அந்த இருட்டில் கண்கள் உண்மையில் தெரிவது போலிருந்து. மானை எதிரில் பார்த்துவிட்ட சிங்கமானான். ஒரு துள்ளு துள்ளினான் . . .

'எழுப்பாமெயா பண்ணப் போறே -? " எழுந்திரு . . . எழுந்திரு . . எழுந்திருடா என் மவனே!'

ராஜு விழிப்பு வந்து வெறித்துப் பார்த்தான். எழுந்திருக்கப் போனான், வெங்க்கன்னா குடுமியைப் பிடித்துக்கொண்டு, அப்படியே கீழே அமுத்தினான். "வாங்கடா! ஓடி வாங்க!" என்று கத்தினான். ராஜு, திமிறிக்கொண்டிருந்த அவன் மூக்கின் மேல் பலமாகக் குத்தினான் வெங்க்கன்னா. இரத்தம் மளமளவென்று வழியத்தொடங்கியது. அந்த இரத்தத் துளியை எடுத்து நெறறியில் திலகமாக வைத்துக்கொண்டு, "என் மவனே! உன் அம்மா முகத்துக்குப் பாக்கறேண்டா! இல்லேண்ணா இந்த நிமிஷம் யமலோகத்திலே இருப்பேடா!"

விளக்குகளோடு நான்கைந்து பேர் வந்து சுற்றிக் கொண்டார்கள். வெங்க்கன்னாவை நாலு பேர் பிடித்துக்கொண்டாகள். கூண்டில் அடைக்கப்பட்ட சிங்கம் கர்ஜித்தது.

"புல்லய்யா மாதிரி எத்தனை பேர் வயித்திலே அடிக்கப் போறேடா? விடுங்கடா! இன்னொரு தடவெ அப்பொதான் புத்தி வரும் . . . என் மவனுக்குப் புத்தி வரும்!"

"உன் மவனா?" என்று சீறினான் ராஜு, இரத்தம் ஒழுகிக் கொண்டிருந்த மூக்கில் ஒரு துணியை அமுத்திப் பிடித்துக்கொண்டு, ஓடி வந்து வயிற்றில எட்டி உதைத்தான். 'அப்பா' என்று கத்திக் கொண்டே வெங்ககனனா கீழே விழுந்தான். அவ்வளவு பேரில் ஒருவனாவது 'குருடன் மேலெயா உன் கைவரிசையெக் காட்றே? என்று கேட்கவில்லை, ஆனால் அப்போது அங்கே வந்த புல்லய்யா கேட்டான். ஜனங்கள் கிசுகிசுவென்று தங்களுக்குள் பேசலானார்கள். ராஜு கோபாவேசத்துடன், "எனக்குத் தெரியும்டா புல்லய்யா! ஊருக்குத் தெரியும்டா இநத வேலையெச் செஞ்சது யாருன்னு! இது ஊருதானே தவிர காடில்லே! இங்க இருக்கறவங்கெல்லாம் சாட்சிக்கு வரமாட்டாங்களா? நாளக்கிக் காலையில் போலீஸ் வந்ததுன்னா யாரு ஜெயிலுக்குப் போறாங்களோ பாக்கறேன்."

பொழுது விடிந்தது. யார் உதவியாவது இல்லேன்னா குருடனுக்கு அவ்வளவு சாமர்த்தியம் வருமா? என்று ஊரில் பல பேர் சொன்னார்கள். 'அந்தப் புல்லய்யாவுக்கு போற காலம் வந்துட்டுது. அப்பொ, நிலத்திலெ ராஜி ஏர அவுத்துவிட்டதிலேருந்து எப்படி அவனைப் பழி வாங்கறதுன்னு பாத்துக்கிட்டிருக்கறான். அவன் தலையிலெ ஜெயிலுக்குப் போகணும்னு இருந்தா பட்ணத்துக்கு எப்படிப் போவான்?' 'ஜனங்க மததியிலெ கெட்டபேரு வாங்கிகிட்டான். அவளோட நல்லதனம் எவ்வளவு காலம் அவனைக் காப்பாத்தும்?' இப்படி ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகச் சொல்லிக் கொண்டார்கள். புல்லய்யா வீட்டை விட்டு நகரவில்லை. எல்லாவாற்றையும் கேட்டுத் தெரிந்து கொண்ட நீலியும் ஒன்றும் பேசவில்லை. பஜனை மண்டபத்

தருகில் சாப்பாடில்லாமல், வயிற்றில் இரவு விழுந்த உதையினால் வலியோடு துடித்துக் கொண்டிருந்தான் வெங்க்கன்னா என்று தெரிந்தது. நீலி உடனே, கிண்ணத்தில் தன் பங்கு சோற்றில் கொஞ்சம் போட்டுக் கொண்டு போனாள.

"அய்யா!" என்று கூப்பிட்டாள்.

நீலியின் குரலைக் கேட்டு வெட்கம் வந்தாலும், படுத்திருந்தவன் எழுந்து உட்கார்ந்தான். அருகில் உட்கார்ந்து, வயிற்றின மேல் கையை வைத்து, "பாவம்! நல்லா வீங்கியிருக்குதே" என்று சொல்லிக் கொண்டே தடவிக் கொடுத்தாள். குருட்டு வெங்க்கன்னாவின் கண்ணில் நீர் கசிந்தது. எதிரில் கிண்ணத்தை வைத்து, அவன் கையை எடுத்து அதில் வைத்தாள். பசியின் வேகத்தில், மடமடவென்று அந்தச் சோற்றை மென்று தின்று கஞ்சியைக் குடித்தான். வயிற்றில் நாலு பருக்கை விழுந்ததும் இன்னும் வேகமாக அழுகை வந்தது. அழுது கொண்டிருந்த அந்தச் சிங்கத்தைப் பார்த்து, கண்ணில நீர் கசிந்தாலும் அதை அடக்கிக்கொண்டு, "அழாதேய்யா! நேத்து மாதிரி இன்னைக்கி இருக்கிறியா? நேத்து மாதிரி இருக்கணும்னாலும் முடியுமா? அது மாதிரி தானே எல்லார் பொழப்பும் இருக்கும்! இன்னைக்கிக் கெட்டவன்னு ஒர்த்தனெக் கொண்ணுட்டா நாளைக்கி அவன் நல்லவன்னு தெரிஞ்சா என்ன பண்றது! கொண்ணுட்டு நாம இன்னும் கெட்டவனாவது எதுக்கு? உன்னெ மாதிரி ஆளுங்களுக்கு வாய் கை நல்லா'ருந்துன்னா ஊரு உருப்படும்'யா!"

வெங்க்கன்னாவுக்கு இன்னும் துக்கம் அடங்காததால் அவனால் கொஞ்ச நேரம் பேச முடியவில்லை. சற்று நேரத்திற்குப் பிறகு கென்னம்மா அங்கு வந்தாள். "பாட்டி! இங்கெதானே படுத்திருநதே! வேணாம்னு தடுக்க முடியலியா? கேக்கலேன்னா எனனெயாவது வந்து கூப்பிட்டிருககலாமே. பாரு வயிறு எப்படி ஆயிருக்குது? எண்ணெ மண்டி கொண்டு வர்றேன். தேய்ச்சா வீக்கம கொஞ்சம் குறையும்."

நீலி சொன்னதைக் கேட்டு, கென்னம்மாவுக்கு அதிர்ச்சியாக இருந்தாலும், "நல்லா இருக்கணும்னு ஆசை இருக்கறவங்களுக்கு ஒர்த்தர் சொல்லணுமா? கெட்டுப் போகணும்னு இருக்கறவங்களுக்கு ஒர்த்தர் சொன்னாக்கா தலையிலே ஏறுதா? நான் என்ன பண்றது? . . . தலையெழுத்துப் படிதான் நடக்கும தாயே!" என்று சொல்லிக்கொண்டே, இன்னும் ஏதோவது கேட்பாளோ என்று, கூனை வளைத்துக்கொண்டு அங்கிருந்து போய்விட்டாள்.

அப்போது அந்தப் பக்கம் வந்த சஞ்சீவி, "நீலம்மா! அந்தக் குருட்டுக் கழுதைக்கா இரக்கம் காட்டறே. அதோ ராஜி நாயுடு வீட்டுகிட்டே என்ன பண்ணிகிட்டிருக்கறானோ பாரு! போலீஸ்~ வரப்போறாங்க. புல்லய்யாவுக்கு நல்ல காலமில்லே," என்று

சொன்னான்.

குருட்டு வெங்க்கன்னா சட்டென்று "வரட்டும்'யா வரட்டும்! இங்கெ யாரும் திருட்டுத்தனம் பண்ணலே -- அயோக்கித்தனம் பண்ணலே. உண்மை என்னான்னு தெரியாமயா போவுது?" என்றான்.

"நீ அவனைக் கொல்லப்பாத்தே -- நிஜம் என்னாடா நிஜம், குருட்டுப் பயலே!" என்று சொலலிக்கொண்டே அவனை அடிப்பது போல் நெருங்கினான்.

வெங்க்கனனா மனம் எரிந்து உரக்கக் கத்தினான்· "எவன் அவன் புல்லய்யாவை ஜெயிலுக்கு அனுப்பறானோ பாக்கறேன்!"

"நீ என்னடா பண்ணுவே? ஊரைவிட்டே உன்னெ விரட்றதுக்குப பாத்து கிட்டிருந்தா!"

"நாலு பேரு குடலைப் பிடுங்கிட்டுதான் ஊரைவிட்டு நகருவேன".

நீலி மெதுவாகக் குறுக்கிட்டு, "ஏன்'யா இதுக்கெல்லாம் குடலைப் பிடுங்கணும்? கட்டையிலெ இருக்கறவளை அடுப்புதான் சரி பண்ணுமே தவிர உன் கையாலே என்ன முடியும்?"என்று கேட்டாள்.

வெங்க்கன்னா சட்டென்று, "நாம அந்தக் கட்டையெ அடுப்புலே வைக்க வேணாமா மகளே!" என்றான்.

"அதுக்கான காலம் வந்தாககா அந்தக் கட்டையே அடுப்புகிட்டெ வந்து சேருது. கடவுள் அதுகருத் தகுந்த ஆளு கையாலே வைககும் படியாப் பண்ணுவாரு."

"அந்தக் தகுந்த ஆளு நான் தான மகளே! அவனுக்கு அப்பா --" ஓடிககிடடே பாயஸம் குடிக்கறதுக்கு பதிலா உககாந்து பச்செத்தணணி குடிச்சா உடம்புலெ புடிக்கும்னு சொல்லுவாங்க. இப்படி அவசரப் பட்றதனாலே ஒண்ணும் வராது. அப்படி வந்தாலும் ரொம்ப காலம் நிக்காது எந்த வேலெ செஞ்சாலும் எதிராளியெப் பத்திக் கொஞ்சம் யோசிக்கணுமா வேணாமா? . . . போயிட்டு மறுபடியும் வாறேன். எணணெய தேசசா வீக்கம் குறையும்,' எனறு சொல்லி விட்டு, வெங்க்கன்னாவுககு மறுபடியும் பேச வாயப்புக் கொடுக்காமல் போய்விடடாள். சஞ்சீவி, "அந்தக் கண்ணு மட்டும் இருந்ததுன்னா . . ." என்று சொல்லிக்கொண்டே நகர்ந்து போனான்.

வீட்டில், "அந்தப் புல்லய்யாவை இப்படிப் பணணிட்றேன் அப்படிப் பண்ணிட்றேன்!" என்று கத்திக் கொண்டிருந்த ராஜுவிடம் அவன் மனைவி மெதுவாக, "உனக்குப் புத்தியில்லே," என்று சொன்னாள். "எனக்கா?" என்று கேட்டு நிறுத்தி உடனே, "ஏண்டி, அபபடிச சொல்றே?" என்று கேட்டான்.

மனைவி வெறுப்போடு சொன்னாள் "எனக்கு என்ன? மீசை இருக்கற ஆம்பளெ -- மாட்டோடு கூட ஆனாலும் சண்டெ போட்றேன்னு சொல்றே! வெங்க்கன்னாவை இந்த ஊரெ விட்டு விரட்றேன்னு சொல்றே! அந்தப் புல்லய்யாவெ ஜெயில்லெ

தள்றேங்கறே!"

"ஊரெல்லாம் என் பக்கத்திலே இருக்கறாங்க. நியாயம் என் பக்கம் இருக்குது." "கோர்ட்டு ஏறனவங்களும் கழுதெ ஏறனவங்களும் ஒண்ணுதான்னு சொல்றாங்க. பாரு, புலலய்யா ஜெயில்லெ'ரந்து வெளியே வந்தா உன்னெ உயிரோட விடுவானோ? அந்தக்குருடன் ஏதாவது பண்ணாமெ ஊரெ விட்டுப் போவானா? நான் சொல்றதெக் கேளு."

"என்னைக்கிக் கேக்கலே! உன் பேசசெக் கேட்டு அவன் கண்ணெக் குத்தலெ!"

மெதுவாகக் காதருகில் ஏதோ சொன்னாள். 'சரி' என்று சொன்னான். உடனே ஊரில் பெரிய நாயுடு, கணக்கன், மற்றப் பெரியவர்களைப் பஜனை மண்டபத்திற்கு வருமாறு ஏற்பாடு செய்தான். பெரிய மனிதர்கள் புல்லய்யாவை வரவழைத்தார்கள். அவர்கள் என்ன கேட்டாலும் புல்லய்யா பதிலொன்றும் சொல்லவில்லை. "நீதான் அவனெக் கொலெ பண்றதுக்கு ஏற்பாடு பண்ணே!" என்றார்கள்.

அப்போதும் புல்லய்யா ஒன்றும் பேசவில்லை. வெங்கன்னா, "ராம ராமா! . . . எல்லாம் நானே செஞ்சேண்டா!" என்று பின்னாலிருந்து கத்தினான்.

சஞ்சீவி முன்னால் வந்து, "ராஜு! அவன் எப்படியும் பட்டணம் போயிப் பொழைச்சிக்கலாம்னு பாக்கறான். இந்த மாதிரி நேரத்திலெ ஜெயில்லே வெச்சிடாதேடா! அவ முகத்தெயும் பசங்க முகத்தெயும் பாருடா!" என்றான்.

ராஜு சீறினான் "ராத்ரி எல்லாரும் வராம இருந்திருந்தா இந்த நேரத்துக்கு நான் சாமபலாயிருப்பேன். அவனுக்குப் போயா இரக்கம் காட்றது."

"அப்படிச் சொன்னா எப்படிடா? ஏதோ நீ பணம் குடுக்கலேன்னு ஆத்திரப்பட்டுச் செஞ்சிட்டான். பெரியவங்க இருக்கறாங்க, அது என்ன குடுக்கணுமோ அதெ முடிவு பண்ணி, அவனுக்கு என்ன சேரணுமோ அதெக் குடுத்துட்றது தானே!"

"எனக்கு அந்த நிலமும் வேணாம், வீடும் வேணாம். என்கிட்டே வேண்டியது இருக்குது. நான் குடுத்ததெக் குடுத்துடச் சொல்லு. ஒரு காலணா வட்டிவேணாம்."

"இப்பொ அவனெ நட்டாத்துலெ தள்ளிவிட்டா எப்படி? ஏதோ கஷ்டத்துலெ இருக்கறான். மைனரு சொத்து, விக்கறதுக்குப் புல்லய்யாவுக்கு என்ன உரிமெ இரக்குது ஆவட்டும் . . . யாரு வாங்கப் போறாங்க . . ."

கணக்கன் குறுக்கிட்டான்· "அதெல்லாம் எதுக்கு ராஜு! அந்த வீட்டெ எழுதிக் குடுக்கறான். கவர்ன்மெண்ட் சும்மாவே இடம் கிராமத்து நடுவுலே கொடுக்கறேன்னு சொல்றப்போ, அந்தப் பழைய வீடு யாருக்கு வேணும்? எப்படியும் பட்டணம் போறான். அந்த ரைல்

சார்ஜி, பத்து வேளை சாப்பாட்டுக்கு ஆகறா மாதிரி எதாவது குடுத்துடு!"

"நான் ஒரு தம்பிடி குடுக்க மாட்டேன். என் அசலெக் குடுக்கச் சொல்லுங்க. எனக்கு நஷ்டமே தவிர லாபமில்லெ," என்று உறுதியாகச் சொல்லவே, பெரிய நாயுடு இடைமறித்து," செத்த பாம்பெத் தடியாலெ அடிக்கிறேன்'ங்கிறியே -- என்னப்பா அது? ஊர் முழுசும், இந்த மாதிரி உன்னெக் கொல்றதுக்கு ஏற்பாடு பண்ணான்'ங்கறது தெரிஞ்சி போச்சேன்னு அவனே செத்துக்கிட்டிருக்கிறான். அவன் பெண்டாட்டி முகத்தெப் பாரு. பேசாம இருக்கறதனாலெ தானே ஏற்பாடு பண்ணதெ ஒத்துகிட்டா மாதிரிதான். ஏதோ இன்னொரு அம்பது ரூபாயெக் குடுத்துட்டு அந்த நிலத்தையும் வீட்டையும் எழுதி வாங்கிக்கோ. கெடுதல் பண்ணவங்களுக்கு நல்லது பண்ணச் சொல்லியிருக்கறாங்க பெரியவங்க. இதுக்கு மேலெ நாங்க ஒண்ணும் சொல்றதுக்கில்லே! என்ன புல்லய்யா, இஷ்டம்தானா? என்று கேட்டார். புல்லய்யா இஷ்டம் என்று சொல்வது போல் தலையாட்டினான்.

"நீங்கெல்லாம் பெரிய மனுஷங்க, முடியாதுன்னு சொல்லிவிட்டு ஊர்லெ பொழய்க்க முடியுமா? நஷ்டத்திலெதான் முடியுது," என்று சொல்லி ராஜு மிகவும் கசப்போடு ஒத்துக்கொள்வது போல் பாவனை செய்தான். எல்லாரும் எழுந்து போய்விட்டார்கள். புல்லய்யா பஜனை மண்டபத்தூணில் சாய்ந்து உட்கார்ந்தான். அருகிலேயே இருந்த வெங்கன்னா, "அய்யா! ஒனக்கு நியாமில்லே, அவங்களுக்கும் நியாமில்லே!" என்று சொல்லும் போது, மளமளவென்று கண்ணீர் வழியவே, அதைத் துடைத்துக் கொண்டான்.

"அழாதேடா!" என்றான் புல்லய்யா.

"அழாமெ எப்படி இருக்கறது'ப்பா! குத்தத்தெ உன் மேலெ போட்டுகிட்டே. ஊரெவிட்டு விரட்டி அடிக்கிறாங்க உன்னெ . . . நான் எவ்வளவு தப்பான வேலெ பண்ணிட்டேன்?"

"நீயா ஒண்ணும் பண்ணலே. என் மேலெ உள்ள பாசத்தினாலே அப்படிப் பண்ணே. அசலூர்க்குப் போயி எப்படிப் பொழைப்பே? இந்தக் குத்தம் உன் மேலெ இருந்தா ஊர்லெ யாராவது வுனக்கு கஞ்சி ஊத்துவாங்களா? நான் தான் சொல்றதுக்கு அனுப்பினேன்னு சொல்லு, பரவால்லே. மறுபடியும் இந்த ஊர்ப்பக்கம் நான் காலெ வெக்கப் போறேனா?"

"அப்பா, மறுபடியும் நீ வரமாட்டியா? பேரனெ நான் சாவறதுக்கு முன்னாடியாவது பாக்கும் படியாகப் பண்ணு. சாகறப்பெ எங்கம்மா நீலம்மா என் பக்கத்திலெ இருக்கட்டும்'பா. அந்தக் கடவுளெத்தான் திட்டணும்'பா. . . அவனுக்குக் கருணெயே இல்லேப்பா . . . அவனும் என்னெ மாதிரி குருடனாயிட்டாம்'பா . . . அவன் . . . அவன்." ஆத்திரத்தில் அதற்கு மேல் வார்த்தைகள் வரவில்லை. ஆனால் அந்தக் கண்களிலிருந்து நீர் மட்டும் மளமளவென்று கொட்டிக்

கொண்டிருந்தது.

இருவரும் மௌனமாக உட்கார்ந்திருந்தார்கள்.

## 27

புல்லய்யாவின் பிரயாண ஏற்பாடுகள் முடிவடைந்தன. ஊரில் சிலா, புலி வேஷம் போடுவதில் அந்த வட்டாரத்திலேயே மிகவும் பெயர் வாங்கிய புல்லய்யாவை, ஒரு முறை அந்த வேஷம் போட்டு ஆடிவிட்டுப் போகச் சொன்னார்கள். முடியாது என்று சொல்ல முடியவில்லை. உடம்புக்கு வண்ணம் தீட்டி, புலி முக மூடியை மாட்டிய பிறகும், மல்லு பார்த்துப் பயப்படவே இல்லை. 'நானும் பிலி!' என்று அழத்தொடங்கியதால், மல்லுவுக்கும் வண்ணம் தீட்டினான். ஒரு பச்சைத்துணி மீது புலித்தலையை வரைந்து கண், வாய், மூக்கு இருக்க வேண்டிய இடங்களில் கத்திரித்து, அவன் தலையில் கட்டினான். வாலையும் மாட்டினான். புலிக்குட்டியைப் போல் இருந்தான். மகனே முதலில் வீடேறி வாயிற்படியில் ஆடும்போது, பார்த்தவங்களெல்லாம் மிகவும் பாராட்டி, இன்னம் ஆடுமாறு கேட்டுக் கொண்டார்கள். அப்பாவைவிட மகனுடைய ஆட்டமே நன்றாக இருந்ததாக எல்லாரும் புகழ்ந்தார்கள். அந்தக்காலத்தில் புல்லய்யாவின் ஆட்டத்தைப் பார்த்தவர்கள் இன்று, 'இவன் புல்லய்யாதானா!' என்று ஆச்சரியப் பட்டார்கள். 'மனுஷன் ரொம்ப இறங்கிப் போயிட்டான். அந்தச் சாமர்த்தியம்! அப்பொ'ல்லாம் மேளக்காரங்க அலுத்துப் போய் நின்னுடுவாங்க இப்பொ என்ன இருக்குது -- எலும்பெத்தவிர . . .' என்று ஆளுக்கொரு கருத்தைச் சொன்னார்கள்.

ஆட்டத்தை ஆடி முடித்து, ஆற்றில் குளித்து வண்ணத்தையெல்லாம் துடைத்து முடிப்பதற்கு இரவாயிற்று. வீட்டுக்குப் பசியோடு வந்தபோது கஞ்சிதானிருந்தது. மகன் ஒரு மடக்கு தான் ஒரு மடக்கு பச்சை மிளகாயைக் கடித்துக்கொண்டு குடித்த பிறகு, எதிரில் நின்றிருந்த மனைவியிடம் சொன்னான் .

"அவ்வளவு பெரிய பட்டணம் -- எல்லாரும் ஒரு மூட்டெய சுமந்தாக்கா நான் ரெண்டு மூட்டையெ ஒண்ணாச் சும்பேன் . . . இந்த வயத்துப்பாடு அப்பொ இருக்காது . . ."

"நம்ம பெருமையெ நாமே ஏன் சொல்லிக்கணும்!"

"வந்து பாருடி! இனிமேயும் இந்தக் கஷ்டமெல்லாம் இருக்கப்போவுதா? கஷ்டப்பட்டு வேலெ செய்யவேன். நியாயத்துக்குக் கட்டுப் படுவேன் என் பசங்களுக்கு என்ன குறெயிருக்கப்போவுது?"

தலையைத் தூக்கி மனைவியைப் பார்த்தான். மறுபடியும் கஞ்சி குடிக்கவில்லை. மகன் குடித்த பிறகு மிஞ்சியதை நீலி தொண்டையில் ஊற்றிக்கொண்டாள்.

ஊரை விட்டுப் புறப்படும் வரையில் பல யோசனைகள் அவனை வாட்டிக் கொண்டிருந்தன. எல்லாரிடமும் சொல்லிக் கொண்டாகி விட்டது. நீலி குருட்டு வெங்க்கன்னா, கென்னம்மா, குஷ்ட்ரோகி ஆகியோருக்கு, புறப்படுவதற்கு முந்திய நாள இரவு சாப்பாடு போட்டாள். சாமான்களை எடுத்து மூட்டை கட்டும்போது வெங்க்கன்னா மலலுவுக்குக் கொடுத்த மண் உருண்டை தட்டுப்பட்டது. அந்த உருண்டையைக் கையில் வைத்துக் கொண்டு சற்று நேரம் மௌனமாக அப்படியே நின்று கொண்டிருந்தாள். அந்த உருண்டையைத் தூக்கி எறிவதற்குக கை வரவில்லை. மறுபடியும் என்றாவது ஒரு நாள் மகன் 'மணணை நம்பிப் பொழைக்கும் நிலை வராதா!' என்ற நினைப்பில் அந்த மண்ணுருண்டையை அந்த மூட்டையில் அடியில் செருகினாள்.

பொழுது விடிநதது. இலேசாகக் குளிரடித்தது. கிழக்கில் மேகங்களிடையே கதிரவன் ஒளிந்திருந்தான். ஆறு இரண்டு கரைகளையும் அணைத்துக் கொண்டு பாய்ந்து கொண்டிருந்தது. சாமான் மூட்டையைப் புல்லய்யா தன் தோள் மேல் தூக்கிக் கொண்டான். நீலி மகளைத் தூக்கிக் கொண்டாள். அவர்களுடன் பீஸ், ஆதெம்மாக்கா, வெங்ககன்னா முதலாக எல்லாரும் இருந்தனர். வீட்டுப் பக்கம் திருமபி ஒரு முறை பார்த்துவிடடு முன்னோக்கி நடந்தாள். மீண்டும் பினபக்கம திரும்பிப் பார்க்கவில்லை. போகும்போது வழியில் பெண்கள் நின்று கொண்டு ஏதேதோ சொன்னார்கள். நீலி தலையைத் தூக்காமல் மெல்லிய குரலில் பதில் கொடுத்தாள். ஆதெம்மாக்கா புல்லய்யாவுக்குப் புத்திமதி சொன்னாள். "தம்பி! புத்தியோட இருந்தா சுகப்படுவே. துடுக்குததனம், கோவம் இதெலலாம் விடடுடு! அவ சொல்றதெக் கேட்டீன்னா நல்லா இருப்பே. நாலு காசு சம்பாதிச்சிகிட்டு மறுபடியும் இந்த ஊருக்கு வந்தென்னா உன்னெ வேணாமுன்னு யாரு சொல்லுவாங்க!"

பீஸ் சொன்னான்· புல்லய்யா! அவ்வளவு பெரிய பட்டணம் எங்கெயாவது பொழச்சிக்கிவே, ஆகட்டும். என் கவர்னமெண்ட்காரன பெரியவனாக ஆக உன்னெக் காப்பாத்த மாட்டானா? லட்சுமி எல்லாச் சம்பளத்தையும் கொண்டுவருவா. பட்ணம் போயி மாறிடாதே!"

நீலம்மன் கோவிலருகில் வந்தார்கள். நின்று, தம்பதியா கும்பிட்டனா. மல்லுவும் அப்பாவைப் பார்த்து, கைகளைச் கூப்பினான். ரோட்டில் ஏறினார்கள். புல்லய்யா நின்று சுற்றிலும் பார்த்தான். நெல்வயல்கள் அறுவடைக்குத் தயாராக இருந்தன எல்லாம் மஞ்சளும் பச்சையுமாக, கண்ணுக்குக் குளிர்ச்சியாக -- ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் -- ஒரு பெரிய மைதானம் போலிருந்தது. இந்தப் பக்கம் ஊர் -- அங்கங்கே புகை சூழ்ந்து கொண்டிருந்தது. . கறுப்பேறிய நீலம்மன் கோவில் கிழக்குப் பக்கம் உயரமாக வளர்ந்து சவுக்கு மரங்கள். மேற்குப் பக்கம் ஆறு. ஆற்றின் மீது பாலம்!

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்ததில் அவனுக்கு இதுவரையிலிருந்த தைர்யம் நழுவத்தொடங்கியது. வழி அனுப்ப வந்தவர்கள் திரும்பிப் போகும்போது கண்ணீர் விட்டார்கள். வெளிக்கு அழாமலிருநத குஷ்டரோகி, வெங்க்கன்னா ஆகியோரின் கண்களிலிருந்து நீர் ஆறாக ஒழுகிக் கொண்டிருந்தது. வாயில் துணியை அடைத்துக் கொண்டார்கள்.

புல்லய்யாவின் கால்கள் முன்னோக்கிப் போகவில்லை. ரயில்வெ ஸ்டேஷன் ஏழு மைல் தூரத்திலிருந்தது. நடக்க வேண்டும். கால்கள் வலித்தன. பின்னாலிருந்து ஊர் மேலிருந்த பாசம் மனதைக் கட்டிப் போட்டது. 'எப்படியிருந்தாலும் என்னூர் தங்கமான ஊர்! இந்தத் தங்கத்தை விட்டுவிட்டு எங்கேயோ போறேன். மறுபடியும் வராமெ . . . பாக்காமெ . . . பட்டினியிலே செத்தா இங்கேயே சாம்பலாயிட்டு போறேன் . . . பட்டணம் போகமாட்டேன் . . . என்னூரு! என் தாய்! இருந்ததுட்றே'ம்மா . . .' இப்படி நினைத்துக்கொண்டே ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்தான். கண்களில் நீர் பொங்கிக் கொண்டிருந்தது. இதயத்தில் கனம் ஏறிக் கொண்டிருந்தது. கால்கள் இழுத்தன. பாலத்தின் மேல் கால் வைத்து, பின்னால் திரும்பித் திரும்பிப் பார்த்தான் . . . மௌனமாகத் தலை குனிந்து கொண்டு நீலி பக்கத்தில் வந்து கொண்டிருந்தாள். அவளைப் பார்த்த பிறகு, ஏனோ முதலில் வெட்கம் வந்தது -- பிறகு இரக்கம் பிறந்தது. அன்பு கரைபுரண்டு பாய்ந்தது.

ஏதோ சொல்ல வேண்டுமென்று நினைத்தான் -- வார்த்தை வரவில்லை. நீலி மௌனமாக, அமைதியாக, ஒரு முறை தலை தூக்கிப் பார்த்துவிட்டு வேகமாக நடக்கவே புல்லய்யாவுக்குச் சற்றுச் சலனம் பிறந்தது. மல்லு பாலத்தின் மேல் தூர அடிவைத்துச் சிப்பாய் போல முன்னால் நடந்து கொண்டிருந்தான். எதிர்ப் பக்கத்திலிருந்து ஆட்டு மந்தை வந்தது. மந்தை மேய்ப்பவன், "எங்கே'யா . . .? 'என்று கேட்ட போது, மல்லுவே உரக்க, சந்தோஷத்தோடு, "பட்டணம் போறோம்!" என்றான்.

ஆடுகள் ஊரை நோக்கித் தலைகளை ஆட்டிக் கொண்டு நடந்தன. கனத்தோடு நம்பிக்கையோடு அவர்கள் கால்கள் முன்னோக்கி நகர்ந்தன.

## 28

வியர்வை கொட்டக் கொட்ட ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்த இந்தக் குடும்பம் ஒரு மூலையில் சோர்ந்து விழுந்த கொஞ்ச நேரத்திற்குப் பிறகு புல்லய்யா எழுந்தான். மல்லு சென்றான். ஒரு ரூபாய் மாற்றினால் ஒன்றும் மீறவில்லை. வாழைப்பழமும் ஏதோ பட்சணங்களும் தின்று தண்ணீர் குடித்தார்கள். அப்போது ஒரு கூட்ஸ் வண்டி வந்தது. மல்லுவுக்குத் தலைகால் தெரியவில்லை.

அப்பாவைக் கேள்விகளால துளைத் தெடுத்தான். முகம் பிரகாசமாக இருந்தது. மத்தியானம் மூன்று மணி பத்து நிமிஷத்திற்கு ரயில் வந்தது. ஜன நெரிசல் சொல்ல முடியாது. எங்கேயும் இடமில்லை. இந்தக் கடைசியிலிருந்து அந்தக் கடைசிவரை ஓடினார்கள். ஒரு பெட்டியில் கீழே தள்ளி விட்டார்கள். இன்னொரு பெட்டி காலியாக இருந்தது என்றாலும், உள்ளே யிருந்த பெரிய மனிதர் ஒருவா, "இது படுக்கற பெட்டி . . . ஏறினா ஜெயில்தான்," என்றார். எப்படியோ ரயில் நகரும்போது, கடைசிப் பெட்டியில் ஏறிவிட்டார்கள். டிக்கட் இல்லாத இருவர், ரயில் புறப்பட்ட பின்னர் அந்தப் பெட்டியில் ஏறினார்கள். பெட்டி நிறைந்து வழிந்தது. கீழே உட்காருவதற்குக் கூட இடமில்லை. மூட்டையின் மேல் மல்லு உட்கார்ந்தான். புல்லய்யாவும், கையில் குழந்தையுடன் நீலியும் நின்று கொண்டிருந்தார்கள். ரயில் வேகமாகப் போகத் தொடங்கியது.

மல்லுவின் சந்தோஷத்திற்கு எல்லையில்லை. மூட்டையை மிருதங்கமாக்கி கொண்டு குஷியாக அடித்துக் கொண்டிருந்தான். நான்கு ஸ்டேஷன்கள் கடந்து ஐந்தாவது ஸ்டேஷனுக்குப் போன பிறகு தான் பெட்டியில் கூட்டம் கொஞ்சம் குறைந்தது. ரயில் விசில் அடிக்கும் போது மல்லுவும், நாக்கை மடித்து, இரண்டு விரல்களை வாயில் வைத்து விசிலடித்தான். ரயில் மெதுவாக நகரத் தொடங்கியது „ . . அப்பாவும் அம்மாவும் மெல்ல இடம உண்டாக்கிக் கொண்டு, இரண்டு பக்கங்களில் கீழே உட்கார்ந்தார்கள். புல்லய்யாவுக்குத் கடந்ததெல்லாம் நினைவுக்கு வந்தது. வீடுவாசல், வயல், தான் . . . மனைவி, குழந்தைகள். . . வெங்க்கன்னா . . . ராஜு. . . ஆதெம்மாக்கா . . . எல்லாரும் மனதில் வட்டமிட்டனர். இறந்து போன பாட்டி, தாசன், நீலம்மன் எல்லாரும் மனதில் தோன்றி மறைந்தனர். மறுபடியும் எப்போதாவது தன் ஊரிலேயே சாம்பலாக வேண்டும் என்று எண்ணினான். ஜன்னல் வழியாக ஓடிக் கொண்டிருந்த இயற்கைக் காட்சிகளைப் பார்த்து மல்லு உற்சாகத்தோடு, "அப்பா!" என்று கூச்சல் போட்டு," பாரு, பாரு . . மரம் மலை எல்லாம் நம்ம ஊர்ப்பக்கம் ஓடி கிட்டிருக்குது!" என்று கத்தினான்.

அப்போது, புல்லய்யாவுக்குத் தான் ரயிலில் பண்டம் போவது நினைவுக்கு வந்தது. ஒன்றும் பேசாமல் பட்டணத்தைப் பற்றி நினைக்கலானான். நன்றாகக் கஷ்டப்பட்டு வேலை செய்து சுகமாக வாழலாம் என்று எண்ணினான்.

வால்ட்பேர் சேரும்போது இரவு எட்டரை மணி ஆயிற்று. ஒவ்வொரு பெட்டிக்கும் அருகில் தணிக்கைக்காக, கையில் தடியை வைத்துக்கொண்டு, செக்கிங் இன்ஸ்பெக்டர்கள் வந்தார்கள். கேட் அருகில் டிக்கட் கலெக்டர் இவர்களை நிறுத்தி, "மூட்டையில அரிசி இருக்குதா?" என்று கேட்டான். புல்லய்யா ஒன்றும் பேசவில்லை.

ஆனால் நீலி, "கொஞ்சம் அரிசி சமையலுக்காக எடுத்துகிட்டு வந்தோம் துரெ!" என்றாள். "போலீஸ் வருவாங்க, இருங்க," என்றான். நீலிக்குப் பயமாக இருந்தது. அவர்கள் பெட்டியிலே வந்த, கோட்டுப் போட்ட ஒரு ஆள், டிரங்க் பெட்டி நிறைய அரிசி கொண்டு வந்திருந்தான். அவனை யாரும் ஒன்றும் கேட்கவில்லை. ஸ்டைலாக நடந்து வெளியே போய்விட்டான். பட்டணம் என்றால் என்ன என்பது முதன் முறையாகத் தெரிந்தது. நான்கு ரூபாய் வாங்கிக்கொண்டு வெளியே போகவிட்ட டிக்கட் கலெக்டரிடம் புல்லய்யா ஏதோ சொல்ல வாயெடுக்கும் போது நீலி தடுத்து, "ஜெயில்லே'ருந்து தப்பிக்க வெச்சாரு அந்தத் துரெ. அதாவது வாங்கிக்க மாட்டாரா?" என்று சொன்னாள்.

மல்லு, பிரகாசமாக எரிந்த விளக்குகள், ஓடிக்கொண்டிருக்கும் கார்கள், ரிக்ஷாக்கள், பஸ்கள் ஆகியவற்றை விநோதமாகப் பார்த்தான். மாடி வீடுகள், பங்களாக்கள் தென்பட்டதும் அங்கேயே நின்று விட்டான். ஓரிடத்தில் லௌட் ஸ்பீக்கரிலிருந்து நல்ல சினிமாப் பாட்டு, சத்தமாக வந்து கொண்டிருந்தால், மல்லு கையைப் பிடித்து இழுத்தாலொழிய நகரவில்லை. நடந்து கொண்டே, "அப்பா! அவ்வளவு சத்தமா . . . பாட்றானே . . . அவன் பெரிய ஆளா?" என்று கேட்டான்.

புல்லய்யா, "போனக்ராபு பாடுதாக்கும், மனுஷனில்லே," என்றான்.

"அப்பா, போனகாபா -- அதெப்பிடி இருக்கும்?"

"பெட்டி"

"பெட்டி பாடுதா? எனக்கொண்ணு வாங்கித் தரியா!"

"காசு கிடைச்சுன்னா வாங்கலாம். ஆவட்டும்!"

முன்னால் நடந்து கொண்டிருந்தான். அந்த வழியில் மணி அடித்துக் கொண்டு, மிட்டாய் வண்டி ஒன்று வந்தது. "அப்பா, அப்பா!" என்று கூப்பிட்டுக் கொண்டே நினறுவிட்டான். கையில் பொட்டலம் விழுந்த பிறகு தான் நகர்ந்தான். மென்று கொண்டே போகும் போது அங்கங்கே சிறுவர்கள் தென்பட்டனர். அவர்களெல்லாம் கால் சட்டை, சட்டைகள் போட்டிருந்தனர். பெண் பிள்ளைகள் கௌன்கள் போட்டிருந்தனர். தனக்குக் கால் சட்டை இருந்தால் நன்றாக இருக்கும் என்று நினைத்தான். "அப்பா எனக்கும் அந்த மாதிரி ஒண்ணு, தங்கச்சிக்கு இந்த மாதிரி ஒண்ணு," என்று வழியில் போன இரண்டு சிறு பிள்ளைகளைக் காட்டினான்.

"எல்லாம் இன்னைக்கேவா, நாளக்கி வாங்கலா மாவட்டும்!" என்றான் புல்லய்யா.

டர்னர் சத்திரத்தில் கால் வைத்த உடனே ஒரு நாய்க்குட்டி தென்பட்டது. 'ச்சூ, ச்சூ!' என்று கூப்பிட்டான். பக்கோடா துண்டு ஒன்று தனக்கு, மற்றொரு துண்டு நாய்க்குட்டிக்கு . . . இந்த நாய்க்குட்டி விஷயத்தில் இறங்கியதால், அப்பாவிடம் வேறொன்றும்

கேள்வி கேட்கவில்லை.

சத்திரத்தில் பணக்காரர்க்கு, மத்திய வர்க்கத்தினர்க்கென்று வெவ்வேறு அறைகள் இருந்தன. பணம் கொடுக்க முடியாத ஜனங்களுக்குப் பெரிய பந்தலைப் போன்ற பனையோலைக் கூரை போட்ட வீடு ஒரு மூலையில் இருந்தது. அதில் ஒரு மூலையில் மூட்டையை இறக்கினான் புல்லய்யா. சிம்ஹாச்சலம் புண்ணிய ஸ்தலத்தில் தரிசனம் முடித்துக்கொண்டு, அருகிலிருந்த இந்தப் பட்டணத்தைப் பார்ப்பதறகென்று வந்த கிராமத்து ஜனங்கள் அங்கு நிறைந்து வழிந்தனர். ஒரு மூலையில் சமையல் நடந்து கொண்டிருந்தது. நான்கு சிறிய குழந்தைகள் ஒரே சத்தமாக அழுது கொண்டிருந்தனர். தலையை மொட்டை அடித்துக் கொண்ட பெண்கள் இருவர், யாரோ நாலு ஆண்களிடம் வாய்ச் சண்டையிலிறங்கி இருந்தனர். வயதான ஒரு ஆள், கையில் தடியுடன் நாய்களை விரட்டிக் கொண்டிருந்தார். அங்கஙகே எச்சில், சளிகளுடன் சுற்றுப்புறம் அசிங்கமாக இருந்தது. புல்லய்யா விறகுக் குச்சி, எண்ணெய் முதலியன வாங்கி வந்தான். நீலி சமையல் முயற்சியில் இறங்கினாள். மல்லு ஒரு பக்கம் நாய்க்குட்டியுடனும், இன்னொரு பக்கம் தரையில் புரண்டு கொண்டிருந்த தங்கையுடனும் கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தான். அங்கங்கே எச்சில், சளிகளுடன் சுற்றுப்புறம் அசிங்கமாக இருந்தது.

புல்லய்யா விறகுக் குச்சி, எண்ணெய் முதலியன வாங்கி வந்தான். நீலி சமையல் முயற்சியில் இறங்கினாள். மல்லு ஒரு பக்கம் நாய்க்குட்டியுடனும், இன்னொரு பக்கம் தரையில் புரண்டு கொண்டிருந்த தங்கையுடனும் கொஞ்சி விளையாடிக் கொண்டிருந்தான்.

இவர்களுடைய சாப்பாடு முடியும் போது அந்தப் பந்தலில் கலாட்டா ஓயவில்லை. யாரோ இரண்டு பெண்கள் சண்டையில் பழையவற்றையெல்லாம் சொல்லிக் குத்திக் கொண்டிருந்தனர். இருவருக்கும் கணவனான ஆள், பெரிய குரலில் கத்திக் கொண்டிருந்த இரண்டாவது மனைவியிடம் நாலு பேரிடையே மானத்தை வாங்க வேண்டாமென்று கெஞ்சிக் கொண்டிருந்தான். இன்னொரு பக்கத்தில் ஒரு கிழவன் இன்னும் கொஞ்சம் போடச் சொல்லி மருமகளிடம் கேட்கப் போக, அவள் முகத்தில் இடித்து விட்டாளென்று, செத்துப் போன் மகளை நினைத்து அழுது கொண்டிருந்தான். மற்றொரு பக்கத்தில் அடுப்புகள் இன்னும் எரிந்து கொண்டிருந்தன. ஒரு பெண் மீனை அறுத்து, வாயூறும் படியாகக் குழம்பு வைத்துக் கொண்டிருந்தாள். இன்னொரு மூலையில் ஆஸ்பத்திரிக்காக வந்த நோயாளி ஒருவன் வயிற்றுவலியில் அழுது கொண்டே, அப்போதே செத்துப் போகும் நிலையிலிருந்தான். ஒரு பையன் தனக்குத் தெரிந்த பாடல் வரிகளைப் பாடிக் கொண்டிருந்தான். ஓர் இளைஞன், முன்பின்

தெரியாத, தலைக்கனம் பிடித்த ஒரு பெண்ணிடம் காதல் விளையாட்டைத் தொடங்க முயற்சித்துக் கொண்டிருந்தான். இவர்கள் இருவரும் பேசினால் கைகலப்பில் இறங்கலாம் என்று, அந்தப் பெண்ணிடம் அதற்கு முன் பேசிய அவளூர்க்காரன், கோபத்தோடும் பொறாமையோடும், ஒரு மூலையில் உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். அப்பாவியைப் போல இருந்த ஒரு திருடன், எதிரிலிருந்த ஒரு குழாயருகில் உட்கார்ந்து, அந்தப்பக்கம் வரும் பெண்களின் கழுத்தை நோட்டம் விட்டுக் கொண்டிருந்தான். ஒரு நாய் இன்னொரு நாயைப் பார்த்துச் சீறிப் பாயத் தொடங்கியது. இந்தச் சிறிய உலகத்திலிருந்த நீலி, புல்லய்யா முதலியோர்க்குக் களைப்பினால் தூக்கம் சொக்கிக் கொண்டு வந்தது. நடுவில் மல்லுவையும் குழந்தையையும் போட்டுக் கொண்டு இருவரும் படுத்துக்கொண்டனர். புல்லய்யா மூட்டையைத் தலைமாட்டில் வைத்ததுக் கொண்டான். சாதம் தின்ற நாய்க் குட்டி மல்லுவின் காலருகில் வந்து படுத்தது. பின்னோரத்தில் குளிரெடுத்தது. புல்லய்யா போர்த்திக் கொள்வதற்கு மூட்டையிலிருந்து வேட்டி எடுக்க எழுந்தான். மனைவியும் பிள்ளைகளும் முடங்கிக் கொண்டு படுத்திருந்தனர்.

எல்லாரும் தூங்குவது போலிருந்தது. ரோட்டிலிருந்த மெர்க்குரி விளக்கொளி பந்தலில் ஒரு மூலையில் விழுந்த வண்ணமிருந்தது. அந்த வெளிச்சத்தில் மற்றப் பகுதி மங்கலாகத் தென்பட்டது. "தம்பி!" என்று யாரோ தன்னருகில் கூப்பிட்டது போல் கேட்டது. மறுபடியும் அந்தக் குரல் கேட்டது. ஒரு கிழவன். அவனை அந்த அரைகுறை வெளிச்சத்தில் பார்த்தால் தாசனைப் பார்ப்பது போலிருந்தது. தாசனே இந்த உருவத்தில் தனக்கு ஏதோ வழி காட்டுவதற்காக வந்தானோ என்ற நம்பிக்கை பிறந்தது. அந்த நினைப்பில் உடம்பெல்லாம் புல்லரித்து மயிர்க் கூச்செரிந்தது. மரியாதையுடனும், பக்தியுடனும் அருகில் சென்றான். பக்கத்தில் உட்கார்ந்தான். கிழவன் காதில் ஏதோ முணுமுணுத்தான். "நீ படுத்துக்கோ தாத்தா! நான் பாக்கறேன் ஆவட்டும்," என்று உறுதி கூறிவிட்டு, புல்லய்யா திரும்பி வந்தான். வேட்டி எடுத்து மகன், மகள் மீது போர்த்தினான். மறுபடியும் படுத்து தூங்குவது போல் பாசாங்கு செய்து, கண்களைத் தீட்டிக் கொண்டு பந்தல் முழுவதையும் கவனிக்கலானான்.

நள்ளிரவு. நிசப்தமாக இருந்தது. கிழவன் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான். அத்தனை ஆட்களும் விழித்திருந்தவன் புல்லய்யா ஒருவன் தான்! தூக்கம் பறந்துவிட்டது. எதிரில் குழாய்க்குப் பின்னால் ஒளித்திருந்த இருவர் மெல்லப் பந்தலுக்குள் வருவதைப் பார்த்தான். கொஞ்சம் கூடச் சத்தமில்லை. கைகளைத் தேய்த்துக்கொண்டான். உற்சாகம் உடல் முழுவதும் பரவியது.

அதோ, தலை குனிந்து மெள்ள ஒரு பெண்ணின் கழுத்தருகில்

கைகள் சென்றன! புல்லய்யா சட்டென்று எழுந்து அவர்கள் மேல் சிங்கம் போல் பாய்ந்தான்! கைகலப்பு! பந்தல் முழுவதும் எழுந்து விட்டது. 'திருடன், திருடன்!' என்று ஒரே ஆரவாரம். 'பிடியுங்கோ! கொல்லுங்கோ!' என்று ஒரே கூப்பாடு. புல்லய்யாவின் நெற்றியில், கையிலிருந்த கத்தரியால் குத்தினான் ஒரு திருடன்.

இரண்டாவது திருடன், புல்லய்யாவின் பனியனைப் பிடித்துக்கொண்டு "இவன் தான் திருடன், இதோ இந்த அம்மாக் கழுத்திலெ இருக்கறதெக் கத்திரிக்க வந்தான் . . . இதோ கத்திரி!" என்று சொன்னான்.

"நாங்க சமயத்துக்கு எழுந்திருக்கலேன்னா . . . பாத்தீங்களா இங்கே தங்கறவன் மாதிரி வந்து எவ்வளவு வேலெ செஞ்சிட்டான்!" என்றான் முதலாமவன்.

இப்படி விளக்கங்கள் வந்து விழும்போது, நெற்றியில் பலமாக அடிபட்டதால் சற்றே பிரமித்துப்போன புல்லய்யாவால் உடனே ஒன்றும் பேச முடியவில்லை. இதுதான் சாக்கென்று நாலு பேர் ஆளுக்கொன்று வைத்தார்கள். நீலி, 'இல்லே! இல்லே . . .' என்று வேண்டிக் கொண்டது யார் காதிலும் விழவில்லை. 'போலீஸ்கிட்டே பிடிச்சி குடுங்கோ,' என்று யாரோ ஒருவன் சொன்னான். அப்போது குறட்டை விட்டுக் கொண்டிருந்த கிழவன் எழுந்து மெல்ல நடந்து வந்தான். திருடர்கள் தப்பிக்க முயற்சிப்பதைக் பார்த்த புல்லய்யா எஞ்சியிருந்த சக்தியோடு, "இவங்கதான் திருடங்க, பிடியுங்க!" என்று கத்தி முடிப்பதற்குள் . . . அவர்கள் மாயமாய் மறைந்து விட்டார்கள். கிழவன் அந்தக் கும்பலை விலக்கிக் கொண்டு வந்து, புல்லய்யாவின் முகத்தினருகில் உற்றுப் பார்த்து, "தம்பி! திருடங்களப் பிடிச்சிட்டேபபா . . . அய்யோ பாரம்! அடி பட்டுதா? . . . எங்கே திருடங்க?" என்று கேட்டான்.

புல்லய்யா, "'நான் ஒர்த்தன், ரெண்டு பேரு காலையும் முறிக்கலாம்னு பாத்தேன் . . . பலே வேஷம் போட்டுத் தப்பிச்சிட்டாங்க!" என்றான் களைப்போடு.

கொஞ்ச நேரத்தில் உண்மை எல்லார்க்கும் தெரிந்தது. கணவன் தலையில துணியைச் சுற்றிக் காட்டிய நீலி, கூட்டத்திலிருந்து அவனை அழைத்துச் சென்று, தரையில் படுக்க வைத்தாள். ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகச் சொன்னது காதில் வந்து விழுந்தது. "நேத்து நீ எழுந்த நேரம் சரியில்லே தம்பி! அவங்க ரெண்டு பேரா இருந்தாங்களே . . . பக்கத்திலெயிருந்த யாரையாவது எழுப்பியிருக்கக் கூடாது? . . ." என்று கிழவன் சொன்னான்.

மல்லுவுக்கு அழுகை போய் சிரிப்பு வந்தது. நாய்க்குட்டியிடம் சொல்லிக் கொண்டிருந்தான் "எங்கப்பா திருடங்க மேலெ விழுந்து அடிஅடின்னு அடிச்சிட்டாரு . . . திருடங்க ஓடியே . . ."

புல்லய்யா இந்த வார்த்தைகளைக் கேட்டு சிரித்துக் கொண்டான்.

நெற்றியில் பட்ட காயத்திலிருந்து இரத்தம் வருவது நின்றது. கொஞ்ச நேரத்தில் தூங்கிவிட்டான். விடிந்த உடனே நீலி, "இன்னெக்கிப் பொழுது போறதுக்குள்ளே ஏதோ ஒரு வீடு வாசல் பாத்துக்கணும் . . . இங்கே இருக்றது நல்லதில்லே," என்றாள்.

"இங்கேயே இருக்கலாம் -- இன்னைக்கி மறுபடியும் வருவாங்க வட்டியோட சேத்து நல்லாக் குடுக்கறேன்," என்றான் புல்லய்யா.

"இந்த யாத்தரைக்கு வந்தவங்கெல்லாம் போயிடுவாங்க. திருடங்க பத்துப்பேரு சேந்து வந்தா என்ன பண்ணுவே? . . . அவங்க மூக்கெ ஒடச்சி இரத்தகாயம் பண்ணி அனுப்பிச்சியே -- அவங்க சும்மா விடுவாங்களா -- இருந்தாலும் அந்த ரெண்டு பேரும் நல்லவங்க -- வயத்திலெ கத்தியாலெ குத்திட்டிருந்தா என்ன பண்றது? நம்ம சாமாத்தியெத்தெ எல்லா இடத்திலேயும் காட்டக் கூடாது. அது தெரிஞ்சிக்கவேன்னா எப்படி!" என்று சொன்னாள் நீலி. புல்லய்யா ஒன்றும் பேசவில்லை. பழையது சாப்பிட்ட பிறகு, வெய்யிலில் வீடு தேடுவதற்காகப் புறப்பட்டான். மகன் நாய்க் குட்டியெத் தூக்கிக் கொண்டு கூடப் புறப்பட்டான். பனை ஓலைக் குடிசைகள் இருந்த தெருக்களில் சென்றான். உயரமான, கோரைப்புல் வேய்ந்த கூரையுடன், நல்ல காற்றோட்டமான வீட்டிலிருந்து பழக்கப்பட்டவன். சிறியதாக தரையோடு தரையா இருந்த இந்தக் குடிசைகளைப் பார்க்கவே பிடிக்கவில்லை. இவையும் கிடைப்பது கஷ்டமாக இருந்தது. சுற்றிலும் சாக்கடை நாற்றம் -- குப்பை கூளம். எங்கே பார்த்தாலும் அழுக்கு -- அங்கேயெல்லாம் மொய்க்கும் கொசுக்கள், ஈக்கள் -- எல்லாம் பார்க்கப் பார்க்க வயிற்றைக் குமட்டியது. மனிதர்கள் எப்படி அங்கே வாழ்கிறார்கள் என்பது ஆச்சரியமாக இருந்தது. ஒன்றையொட்டி மற்றொன்று — ஒரு வீட்டில் நெருப்புப் பிடித்தால் சரி, அந்தப் பேட்டை முழுவதும் நாசம் தான்! தன் ஊரில் உயரமாக இருந்த அந்த வீடுகளில் நெருப்பால் ஆபத்து இல்லை -- ஒவ்வொரு சமயம் யாராவது விரோதத்தால் நெருப்பு வைத்தாலும் அணைப்பது எவ்வளவோ சுலபம்! இங்கே கால் வைப்பதற்குக் கூட இடம் இல்லை. எப்படியானாலும் தான் ஒரு வீடு பார்த்தாக வேண்டும். அங்கங்கே காலியாக இருந்த குடிசைகளுக்கு வாடகை மாதத்திற்கு ஐந்திலிருந்து பத்துவரை இருந்தது. ஒரு மாச வாடகை அட்வான்ஸ் கொடுக்க வேண்டும். அட்வான்ஸ் கொடுத்து விட்டால் தன் கையில் மிச்சம் என்ன இருக்கும்? அலைந்து திரிந்து பொழுது உச்சிக்கு வந்த நேரம் கடற்கரை வந்து சேர்ந்தான். மல்லு கடலைப் பார்த்த உடனே, பயப்படாமல் குதித்துக்கொண்டே, சந்தோஷத்தோடு, "அப்பா, அப்பா! எவ்வளவு பெரிய ஏரி . . .!" என்று கத்தினான். முதல் முறையாகக் கடலைப் பார்த்தவன். புல்லய்யா சிரித்துக்கொண்டே, "ஏரியில்லேப்பா, சமுத்ரம் -- சமுத்ரம்!" என்றான்.

"சமுதரம்னா என்னாப்பா?"

"தண்ணி உப்பா இருக்கும் -- அந்தத் தண்ணியி'லேருந்தது உப்பு வெளெயும்."

"ஏருவெச்சி உழுவாங்களா வெளையறதுக்கு?"

"அந்தத்தண்ணியெப் பாத்தி கட்டி விடுவாங்க. அது வெயில்லே காய்ஞ்சி உப்பாவும்."

"அப்பா! இந்தத் தண்ணியெக் கஞ்சி'லே ஊத்திகிட்டா -- உப்பு வேணுமா?"

"தண்ணிய ஊத்திக்க மாட்டாங்க. . ." என்று சொல்லி, கையைப் பிடித்துக்கொண்டு, கடலோரமாக அழைத்துச் சென்றான். அப்போது ஹார்பரிலிருந்து ஒரு ஸ்டீமர் புறப்படுவதைப் பார்த்து, "அப்பா, அப்பா! . . . பாரு பாரு . . . அம்மா! . . . எவ்வளவு பெரிசு!"

"கப்பலு'ப்பா அது. அதுலெ ஏர்னா ரங்கூன் போலாம்."

"அப்பா, ஏறலாமா?"

"இப்பொ முடியாதாவட்டும் . . . போலாம் வா! வீடு பாக்கணும் . . . வேலெ பாக்கணும் . . . அப்புறம் எங்கெ வேணும்னாலும் போலாம்."

பேசிக் கொண்டே, திரும்பி சத்திரத்திற்கு வந்தான். பையனுடைய கால் நன்றாக வலித்தது. சாப்பிட்ட பிறகு அப்பா படுத்துக்கொண்டார். மகன் தன் காலைத்தானே பிடித்துவிட்டுக்கொண்டு, நாய்க் குட்டியிடம், "கால் வலிக்குது," என்று சொன்னான். அந்த நாய்க்குட்டி, காலை ஒரு முறை நக்கியது.

புல்லய்யா தூங்கி எழுந்ததிருப்பதற்குள் பந்தலிலிருந்து பல பேர் போய்விட்டார்கள். இரவு வரும்போது, பெரும்பாலும் தனியாக இருக்க வேணடி இருக்குமோ என்று தோன்றியது. நீலியிடம் வீடு கிடைப்பது கஷ்டம் என்றும், தான் அலைந்ததைப் பற்றியும் சொன்னான். அடி பட்டதால், புல்லய்யாவின் நெற்றி கிளம்பும் போது, "வழி தெரியாம எங்கேயாவது போயிடப்போறே," என்று கணவன் சொல்ல, "வாயிருந்தா நம்ம நிலமய்க்கு மாடி வீடா கெடய்க்கும்? கெடய்ச்சாலும் அதுலெ இருக்க முடியுமா? முகத்துக்குத் தகுந்த பொட்டு வெச்சாத்தான் களையா இருக்கும்!" என்று சமாதானம் சொல்லிவிட்டுப் புறப்பட்டாள். சாயந்திர நேரத்திற்கு நீலி திரும்பி வந்த போது புல்லய்யாவின் மனம் நிம்மதி அடைந்தது. "தேட்றதுக்குப் புறப்படலாம்னு நெனச்சேன். அதுக்குள்ளே நீயே வந்துட்டே," என்று சொன்னான்.

"பெரிய சத்தரம் எங்கேன்னு, வழியிலெ போற பெரிய மனுஷங்களெக் கேட்டாக்கா, வழி சொன்னாங்க," என்றாள் நீலி.

"வீடு கிடைச்சிதா?"

"ஏதோ தலைவெச்சி படுக்கறதுக்கு ஒரு இடம் -- சின்னக் குடிசெதான். இங்கெ நாலு பருக்கெ தின்னுட்டு ராத்ரிக்கே அங்கே போயிட்லாம்," என்றாள்.

"வழி தெரியுமா?" என்று கேட்டான்.

"ரொம்ப தூரமில்லே. ஆர்பருக்குப் போற வழியிலே -- அந்த ரோட்டு பக்கத்திலேதான் -- காவா இருக்குது. ரோட்டு மேலெ ஆல மரம் இருக்குது. அதுக்குப் பக்கத்துலே."

."சாப்பாட்டைக் சீக்கிரமாகவே முடித்துக்கொண்டு, புது வீட்டிற்குப் பயணமாயிற்று குடும்பம். மல்லு நாய்க்குட்டியைத் தூக்கிக் கொண்டு முன்னால் நடந்தான். மகன் தோளின் மேல் ஒரு கையும், தலை மேல் மூட்டையில் ஒரு கையுமாக நடந்தான் புல்லய்யா. 'அதோ ஆலமரம், அங்கேதான் . . . ' அதற்குள்ளாக மல்லு மூக்கை மூடிக்கொண்டு, "அப்பா, அப்பா! நாத்தம், நாத்தம்!" என்று சொல்லலானான். அந்த வழி நெடுக ஒரே துர்நாற்றம். வீடு சேரும் போது, பக்கத்து வீட்டுப் பெண் சத்தம் போட்டு அழுது கொண்டிருந்தாள். கணவன் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தான்.

"வர்றப்பொவே அழுகையா!" என்று சொல்லிக்கொண்டே. புல்லய்யா வெளியே மூட்டையை இறக்கி வைத்துச் சுற்றுமுற்றும் பார்த்தான்.

உப்பங்கழிக்கால்வாய். அந்தக் கால்வாயில், ஊர்ச் சாக்கடை நீரைப் பெரிய கால்வாய் இரண்டு கொண்டு வந்து ஓயாமல் சேர்த்துக் கொண்டிருந்தன. எதிரில் முனிசிபல் குப்பை வண்டிகள் நிறுத்தி வைக்கப் பட்டிருந்தன. அதற்குப் பக்கத்தில் ரோடு. அந்த ரோட்டை ஒட்டியே இந்த உப்பங்கழிக் கால்வாய் சென்றது. அந்தக் கால்வாய் ஓரத்தில் இந்த இருபத்திரண்டு வீடுகள் வரிசையாக இருந்தன. மும்மூன்று அல்லது நன்னான்கு அறைகள் சேர்ந்து ஒரு குடிசை. அறைகளுக்கிடையே ஓலைத்தடுப்பு -- ஓர் அறையின் இரகசியப் பேச்சு அடுத்த அறையில் நன்றாகக் கேட்கும் -- அங்கங்கே சல்லடை போலிருந்த அந்தத் தடுப்பின் மூலமாக அடுத்த அறையில் நடப்பதைப் பார்க்கலாம். ஒவ்வொரு அறைக்கு முன்னால் ஒரு சிறிய வாசல் -- படுப்பதற்கு. புழக்கடை வாயிற்படியில் சிறிய அடுப்பில் சமையல். கால்வாய்கள் சாக்கடை நீரை அதிகமாகச் சுமந்து வரும் நாட்களில், தண்ணீர் புழக்கடைச் சுவரில் முட்டு வீட்டுக்குள் ஊத்தடிக்கும் . . . ஒவ்வொரு முறை மேகங்களுக்கு இவர்கள் மேல் கோபம் வந்தால் அந்தச் சாக்கடை நீர் வீட்டுக்குள்ளேயே வந்துவிடும்.

"வாடகை எவ்வளவு?" என்று கேட்டான் புல்லய்யா அருவருப்போடு.

"ரெண்டு ரூபாய் . . ." என்று சொல்லிக் கொண்டே, நீலி, அழுது கொண்டிருந்த அடுத்த வீட்டம்மாவைச் சமாதானப் படுத்தச் சென்றாள். அவள் சமாதானப் படுத்தப் படுத்த, அழுகை பீறிட்டுப் புரண்டு புரண்டு அழுதாள். இதற்குள் மல்லு அப்பாவின் மேல் கேள்விமாரி பொழிந்தான். அங்கேயிருந்து போய்விடலாம் என்று சொன்னான். அந்த நாற்றத்தை அவனால் சகிக்க முடியவில்லை. இவர்களெல்லாம் எப்படி இங்கே இருக்கிறார்கள் என்று ஆச்சரியப் பட்டான் புல்லய்யா.

ரோட்டில் கார்களில் மேக்கப் அலங்காரங்களோடு பெரிய

மனிதர்களெல்லாம் மூக்கை மூடிக்கொண்டு போவதைப் புல்லய்யா பார்த்தான் . . . எதிரில், நாகரிகத்தின் அடையாளங்களான மாடி வீடுகளில் வசிக்கும் வசதி படைததவர்கள் . . . அவர்கள் கண்ணுக்குத் தெரியாத வகையில இந்தக் குடிசைகள் நிலத்தோடு நிலமாக ஒட்டிக் கிடந்தன. புல்லய்யாவுக்குத் தன் ஊரும் வீடும் நினைவுக்கு வந்தன. புழக்கடையில் அரச மரத்துக் கிளைகளில் பறவைகளின் கீச்சுக் கீச்சுச் சத்தங்கள் -- மாடுகள் அசைபோடும் போது பேட்கும் ஒலி . . . குளிர்ச்சியாக, அமைதியாக இருக்கும் அந்த வீடு, வாசல் . . . அந்த ஆறு . . . அந்த வயல்கள் . . . அந்த அழகு . . . எல்லாம் இந்த நரகச் சேரியில் நினைவு, வந்தன! இல்லாத பொல்லாத யோசனைகளில் ஆழ்ந்து உட்கார்ந்திருந்த போது, மல்லு, அந்தப் பக்கத்து வீட்டு அம்மாவின் அழுகைச் சத்தத்தைத் தாங்க முடியாமல்,' அப்பா' என்று காதுகளைப் பொத்திக் கொண்டான்.

புல்லய்யா அப்போது தான் அந்த அழுகைச் சத்தத்தை உற்றுக் கேட்டான். கேட்டு ஆச்சர்யத்தில் மூழ்கினான். வீட்டில் யாரோ இறந்து விட்டார்களென்று நினைத்தால், அவள வளர்த்த பூனை செத்து விட்டதென்று இவ்வளவு ஆர்ப்பாட்டம் பண்ணிக் கொண்டிருக்கிறாள் என்று அறிந்து சிரித்துக்கொணடான். அவள் கணவன் கெஞ்சிக் கெஞ்சி சமாதானம் சொல்வது கூடக் கேட்டது. பெண் குரல்களில் நீலியின் குரல் ஒன்றே கேட்டது. அக்கம்பக்கத்தில் இருந்த பெண்களுக்கு மனிதத் தன்மை இல்லையோ என்று நினைத்தான். இந்தப் பக்கத்து வீட்டு ஆள் ஒருவன் வாயிற்படியிலிருந்த படியே, "எந்த ஊர்'யா நீங்க?" என்று கேட்டான்.

"வடக்குப் பக்கம் -- எங்க ஊரு நவிரி."

"எத்தனெ நாளாச்சி வந்து?"

"நேத்துதான். . . "

"எங்கெயாவது வேலெ கெடச்சிதா?"

"அதுக்குத்தான் வந்தேன்---"

"என்ன பட்ணம் இது! பேருதானே தவிர . . . அந்தக் கிராமத்துப் பக்கம் பைசா கையிலெ இல்லாமெ பொழச்சிக்கலாம்! இந்தப் பட்ணத்துலெ என்ன இருக்குது? இந்த நாத்தம்-- அந்தப் படங்க . . ."

"படங்களா?"

"ஆமாய்'யா . . . அந்தச் சினிமாவுங்களெ பாத்தாலாவது . . . நம்ம மாதிரி ஆளுங்க சந்தோஷப் படலாம் . . ." பிறகு ஒரு நிமிஷம் பேசாமலிருந்துவிட்டு ஏளனமாக, " இந்தச் சுத்துப் பக்கத்து ஊர்லே'ருந்து காட்டு ஜனங்க வந்து விழுந்து கிட்டிருந்தா எங்களெ மாதிரி ஆளுங்களுக்கு வேலெ எங்கெ கெடைக்கிது!" என்று சொன்னான்.

புல்லய்யாவுக்குக் கொஞ்சம் மனம் புண் பட்டதால், "வார்த்தை

சரியா வரட்டும் தம்பி!" என்றான்.

"சரியாத்தான் வருது. காலையிலெ இந்த வீட்லெ'ரநது பொணம் போச்சி -- அதுக்குள்ளே நீ வந்து இறங்கிட்டே --"

புல்லய்யாவுக்கு இதைக் கேட்டவுடன், இது மாதிரியான வீட்டை நல்லது கெட்டது பார்க்காமல் நீலி எடுத்தாளே என்று கோபம வந்தது.

நீலி வந்து சிம்னி விளக்கை எடுத்துப் பற்றவைத்து, வலது காலை முதலில் வைத்து அறைக்குள்ளே சென்றாள். அந்த மூட்டையை நீலியே சுமந்து செனறாள் புல்லய்யா இருந்த இடத்தை விட்டு எழுந்திருக்க வில்லை. அப்பாவின் பக்கத்திலேயே மகன் உட்கார்ந்திருந்தான். வாயிற்படியை ஒட்டிப் படுக்கையைப் போட்டு, மல்லுவைப் படுக்க வைப்பதற்காகக் கையைப் பிடித்து இழுத்தால், "நாத்தம், வரமாட்டேன் போ," என்று கத்தினான். பக்கத்திலிருந்த இளந்தம்பதிகள் கொல்லென்று சிரித்தார்கள். இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறதென்று நீலி எண்ணிக்கொண்டு, வீட்டிற்குள் போய் நீலம்மனையும் பாட்டியையும் நினைத்தபடித் தரையில் சாய்ந்தாள் பக்கத்திலேயே மகள் படுத்திருந்தாள். ஒரு பக்கத்தில் துர் நாற்றம் சகிக்காமல் மூக்கைத் தேய்த்து விட்டாலும், என்று மில்லாத திருப்தியும் சந்தோஷமும் அவள் மனதில் பரவி, சற்று நேரத்தில் அவள் தூங்கிவிடடாள். புல்லய்யா வாயிற்படியில் நீண்ட நேரம் அண்ணாந்து படுத்திருக்கவே, மல்லு வந்து மார்பின் மேல் படுத்துக் கொண்டான். மகன் முதுகில் மெதுவாகத் தட்டிக் கொடுத்து, தூங்கிய பிறகு பக்கத்தில் படுக்க வைத்துக்கொண்டான். பக்கத்து வீட்டம்மா முனகல் சத்தம் வரவரக் குறைந்து நின்று விட்டது. இந்தப் பக்கத்து அறையிலிருநது கிசுகிசுப் பேச்சு கேட்டுக்கொண்டிருந்தது.

ஆண்குரல்: "இன்னும் கிட்டே வாடி . . . சினிமாவுலே பாரு எப்படி இருக்கறாங்க. . ."

பெண் குரல "பூவும் மணமும் மாதிரி இருக்கறோமில்லே மாமா!"

ஆண் "வாடி, உன்னெ மாதிரி அழகு ராணி எங்கே இருக்கறா?"

பெண் "அப்படீன்னா மாமா நீ . . . நேத்து பான்ட்டு போட்டுகிட்டு சிகரெட் புடிச்சிகிட்டிருந்த .. . நிஜமா . . . நாகேஸ்வரராவுன்னு நினைச்சேன் ."

கொஞ்ச நேரம் வரையில் இந்தக் காதல் கட்டம் கடந்த பிறகு, 'கிக்கிக்கீ ' என்று சிரிப்புச் சத்தம் கேட்டது. பிறகு நிசப்தம்! புல்லய்யாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. அன்றிரவு. . . நிலா வெளிச்சம் . . . அழகான கிராமத்து இளம் பெண்கள் -- நீலி . . . அந்த அழகு . . . நளினம் . . . சிலம்பாட்டத்தில் கெட்டிக்காரன் . . . திடமான உடம்பு . . . அந்தக் கிருதாக் குடுமியில் கைவைத்து அந்த முதலிரவில் -- நீலி அந்த இரகசியச் சிரிப்பு . . . வெட்கம் . . . உண்மையில். புல்லய்யாவுக்கு இப்போதுதான் அவற்றையெல்லாம் அனுபவிப்பது போல் . . . ஆனந்தக் கண்ணீர் சிந்தியது!

அந்த மகிழ்ச்சியில் ஏதோ ஒரு கவலை . . . அந்தக் கவலையிலே ஏதோ ஒரு திருப்தி . . . 'அந்த மாதிரியான என் நீலி . . . இந்த நாத்தத்தெ . . . வாசனையாக்கிகிட்டு . . . எவ்வளவு சுகமாத் தூங்கி கிட்டிருக்கறா? . . . என்னாலெ ஏன் அப்படி முடியலே? என்று யோசித்தான். மனம் இன்னும எங்கெங்கோ தாவியது -- நீலி சொன்ன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன · 'சந்தோஷம் வந்தாப் பிடிக்க முடியாது -- துக்கம் வந்தாத் தாங்கிக்க முடியாது'

பக்கத்திலிருந்து மறுபடியும் கிசுகிசுப் பேச்சு -- அந்தப் பூனைக்காக அழுதவளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள் . . . பெண்· அவன் செத்தான் இல்லியா? அதுக்குத்தான் . . . உலகத்துக்கண்ணுலே மண்ணைத் தூவலாமனு . . .

ஆண். இன்னொர்த்தன வந்தான் இல்லியா?

பெண் ஒத்துப் போமாட்டாங்களா?

ஆண் இவன் செத்தா எதெக் கொண்ணுட்டு அழுவாளோ?

சிரிப்பு . . . புல்லய்யாவின் உடலெல்லாம் நடுங்கியது.

வீட்டை மாற்ற வேண்டும் என்ற யோசனையில் இறங்கி விட்டான். . . அந்த யோசனைகளை யெல்லாம -- தூக்கம் விழுங்கி விட்டது.

## 29

இலேசாக வலித்த நெற்றிக் காயம், காலை எழுந்திருக்கும் போது மிகவும் மோசமாகி விட்டது, எதிரில் கண்ணுக்குத் தென்பட்ட பெரிய பெரிய பங்களாக்களையும் கிடங்குகளையும் கார்களிலும் சைகிள்களிலும் போகும் மனிதர்களையும் நம்பிககையோடு பார்த்தான் ஹார்பர் மற்றும் கப்பல் கட்டும் கம்பெனிகளின் சைரன்கள் 'பொய்ங்!' என்று சத்தம போட்டால், அவை தன்னைத்தான் கூப்பிடுவதாக நினைத்து ஆசையோடு, அந்த வலியையும் பொருட்படுத்தாமல் வெளியே போக வேண்டுமென்று முயற்சித்தான. ஆனால் வலியில் நொநது போய, ஜுரம் வந்தவன் போல நடுங்கிக் கொணடிருந்தான், மகனும் மனைவியும் பக்கத்திலிருந்து நகர விடவில்லை,

ஒரு நாள கடந்தது, ஓய்வு எடுத்ததால் வலி சற்றுக் குறைந்தது, இரண்டு நாட்களுக்குப் பிறகு, குடும்ப பாரத்தை எப்படிச் சுமப்பது என்ற யோசனை இதயத்தை அழுத்தியது. அனறு இரவு அறையில் சிம்னி விளக்கு எரிந்து கொண்டிருந்தது. மல்லு, நாய்க்குட்டி தென்படவில்லையென்று அழுது கொண்டே, தூங்கிவிட்டான். புல்லய்யா வலியோடு முனகியபடி, அருகில் உட்கார்ந்திருந்த நீலியிடம் சொன்னான்· "நமக்கு நேரம் சரியில்லே!"

"அப்படி நெனக்கறதனாலே சரியில்லாத நேரம் சரியாயிடுமா?"

புல்லய்யா வலியுடனே அவள் கையைத் தொட்ட படி, 'பாரு!' அங்கெ நிலமெல்லாம போயிட்டுது. இங்கெ காலு வெச்சவுடனே

திருடனுங்களாலே தொல்லெ. இந்த வீடு . . . இந்த . . ." நிறுத்திவிட்டு, பெரு மூச்சு விட்டான், நீலி மௌனமாகச் சிரித்தபடி, "கஷ்டம் வந்ததுன்னா, பயந்தாங்கொள்ளியாயிட்றதா? வரட்டும் வரட்டும்! எப்பவுமே சுகமா இருக்கணும்னு எப்படி ஆசெப்படலாம?" என்று கேட்டாள். பிறகு மௌனமாக இருந்து தூங்குவதற்கு முயற்சித்தான். வானமெல்லாம மேக மயமாய் இருந்தது, மின்னல் . . . இடியோசை கேட்டது, அந்த ஓசையில் வீட்டு தடுப்புகள் ஆடத் தொடங்கின. நள்ளிரவுக்குப் பிறகு மழை பெய்தது. வீடு முழுவதும் ஒழுகத் தொடங்கியது. சின்னவள் அழுது கொண்டே எழுந்தாள். மல்லுவை ஒரு மூலையில் படுக்க வைத்தாள். புல்லய்யாவுக்குக் குளிரெடுத்தது, சற்று உயரமாக இருந்தா ஒரு மூலையில் அவன் உட்கார்ந்து, நடுநடுங்கிக்கொண்டே, "இது கெட்ட காலமில்லாமெ வேறென்னவாம்?" என்று கேட்டான். புல்லய்யாவுக்கு இந்தக் கஷ்டங்களிடையே ஒரு காலத்துச் சுகங்களும் நினைவுக்கு வந்ததால் வேதனை மேலும் அதிகமாகிக் கண்கள் ஈரமாயின. வீட்டில் ஒழுகிய நீர் தன் பாதங்களின் அருகில் வந்தது.

நீலி. தண்ணீரை ஒரு கிண்ணத்தில் நிரப்பி நிரப்பிப் புழக்கடை உப்பங்கழியில் ஊற்றினாள்.

"கட்டில் கூட இல்லையே" என்று அலுத்துக் கொண்டான் புல்லய்யா.

விடியும் வரையில் யாருக்கும் சரியாகத் தூக்கம் இல்லை. விடிந்த பிறகு பார்த்தால் சுற்றுப் புறமெல்லாம் ஒரே சேறு மயமாக இருந்தது. காலை எங்கே வைத்தாலும் சேறு ஒட்டிக் கொண்டது. மழையின் தர்மமாக நாற்றத்தையெல்லாம் அடித்துக்கொண்டு போனதற்குப் புல்லய்யா சந்தோஷப்பட்டான். காலையில் வெய்யில் காய்ந்தது. இரவு தூக்கமில்லாமலிருந்தும், அடிபட்ட வலி இல்லாமலிருந்தால் வேலை தேடுவதற்குப் புறப்பட்டான். வழக்கம் போல் மகன் கூடச் சென்றான். இரவு சற்று நேரத்திற்கு ஏன் அப்படி ஆய்விட்டோமென்று வெட்கப் பட்டான். பொழுது விடிவதற்குள் வலி குறைந்தது -- சுற்றுப்புறம் சேற்று மயமானாலும் நாற்றமில்லாமலிருந்தது. அந்த அளவு பொறுமை தனக்கு ஏன் இல்லாமற் போய்விட்டது என்று நினைத்தான். பொறுமையோடு ஒரு வேலை தேடிக்கொண்டு வியர்வை சிந்தி உழைக்க வேண்டுமென்று மனதைத் திடப்படுத்திக் கொண்டான்.

பொழுது உச்சிக்கு வரும் வரையில் திரிந்தான். ஹார்பர் அருகில் சென்றான். எத்தனையோ பேர் வேலை செய்வதைப் பார்த்தான். அவர்களில் தானும் ஒருவன் ஆனால் எவ்வளவு நன்றாக இருக்கும்! கூலியாட்கள் கப்பலிருந்து மூட்டைகளை இறக்கிக் கொண்டிருந்தனர் -- "பாருப்பா! அவன் ஒரு சின்ன மூட்டையெக் கஷ்டப்பட்டுத் தூக்கறான் - நானாயிருந்தா? என்றான்.

மகன் சிரித்துக்கொண்டே, "ரெண்டு . . . ரெண்டுப்பா," என்றான்.

அங்கிருந்தது வந்த தொழிலாளி ஒருவனிடம் வேலை கிடைக்குமா

என்று மரியாதையோடு கேட்டான். வேலை காலியில்லையென்று கையை ஆட்டிக்கொண்டே போய்விட்டான் அந்த ஆள். திரும்பி வந்த பிறகு, அப்பா இரண்டு மூட்டைகளைத் தூக்குவோர் என்று மல்லு மிகவும் அட்டகாசமாகச் சிரித்துக் கொண்டே அம்மாவிடம் சொன்னான்.

புல்லய்யா, சாப்பிட உட்கார்ந்த உடனே இதயம் திக்கென்றது. நாளைககுள் வேலை கிடைக்க வில்லையென்றால் இந்தச் சாப்பாடு இருக்குமா? . . . நான் பெரிய ஆள், ஒரு வேளை, ஒரு வேளை இல்லேன்னாலும் இன்னொரு வேளெ -- சமாளிப்பேன் -- ஆனா மகனுக்கு . . . மகளுக்கு . . .'

விறுவிறெனறு சோற்றை மென்று விட்டு, கால் வலியையும் பொருட்படுத்தாமல், தனியாகச் சிந்தியா கம்பெனி (கப்பல் கட்டும் கம்பெனி)க்குப் புறப்பட்டான். மகன் அப்பாவை விடவில்லை. ஓடிப் போய்த் தொற்றிக் கொண்டான். அங்கே புல்லயயாவின் ஏக்கத்திற்குத் தகுந்தாற் போல்தான் ஜனங்கள் பதில் தந்தார்கள். ஆயிரக் கணக்கான தொழிலாளிகள் சைரன் ,'ரய்ங்' என்று சத்தம் போட்டதுமே வெளியே வந்தனர். அவர்களில் யாராவது ஒருவனைச் சிநேகம் செய்து கொண்டால் அடுத்த நாளைக்கு கூடவே வேலைக்கு அழைத்துப் போவான் என்ற எண்ணத்தில் ஒருவனை நெருங்கிக் கேட்டபோது அவன் பகபகவென்று சிரித்தான்.

"ஏன் அய்யா சிரிக்கிறே?"

"இந்தக் கம்பனிலே வேலென்னா என்னா நினெச்சிகிட்டே -- மாசசம்பளம் எண்பது ரூபாய்க்குக் குறைச்சலே இல்லே . . .!"

'அவ்வளவு ரூபாயா?' ஜேபியில் விழுந்து விட்டாற்போலவே முகத்தை வைத்துக்கொண்டு, " அய்யா கிராமத்துக்காரன் . . . வாழ்ந்து கெட்டவன்! ஒனக்குப் புண்ணியமாயிருக்கும், குழந்தைங்க இரக்கறாங்க . . . வுன்னோட என்னையும் நாளெக்கிக் கூட்டிகிட்டுப் போனீன்னா . . ."

அவன் சிரித்துக்கொண்டே, "வேலெ கிடைக்கறதுன்னா என்னான்னு நெனச்சுக்கிட்டே - சரியான பட்டிக் காட்டான் மாதிரி இருக்கறியே!" என்று சொன்னான்.

"அய்யா! கஷ்டப்பட்டு வேலெ செய்வேன் . . . திருடமாட்டேன். மத்தவங்க பண்ற வேலைக்கு ரெண்டு பங்கு செய்யலேன்னா நீ என்ன தண்டனெ குடுத்தாலும் ஏத்துக்கறேன்!"

"பைத்தியக்காரா!" என்று பெரு மூச்சு விட்டு, "இப்பொதான் நாலு நாளுக்கு முன்னாடி ஐந்நூறு பேரெ வேலெ இல்லேன்னு நிறுத்திட்டாங்க! இந்தக் காலத்துலெ பெட்டிங்க சுமக்கறதுக்குக் கூடப் படிப்பு வேணுமாம்! ஏதோ கூலி வெலே செஞ்சீனா பொழைச்சிக்குவே. எதுக்கு வீணா இந்த மாதிரி திரியறே?"

அவன் அதற்கு மேல் பேசாமல் விடுவிடென்று அங்கிருந்து நகர்ந்து போய்விட்டான்.

வீட்டுகக்குத் திரும்பி வரும்போது பொழுது போயிருந்தது அன்று காய்ந்த வெய்யிலினால் வீட்டுச் சுற்றுப்புறம் அவ்வளவு மோசமாக இருக்கவில்லை. மகனும் தானும் வாயிற்படியில் உட்கார்ந்தார்கள். மல்லு கொஞ்ச நேரத்தில் பத்து முறை நாய்க் குட்டியைப் பற்றிக் கேட்டான். புல்லய்யாவின சிந்தனை இன்னமும அந்தச் சிநதியா கம்பெனியிலேயே இருநதது அங்கு வேலை கிடைத்துவிட்டால் தானும் சாப்பிட்டு இனனும் நாலு பேருக்குப் போடலாம் எனறு எண்ணினான். 'கூலிவேலெ செஞ்சிககோன்னு சொன்னான். அதுககா நான் பட்ணம் வந்தேன் . . . ஏதோ மாச சம்பள வேலெ கெடச்சிதுன்னா . . . மகனெப் படிக்க வய்ப்பேன்? என் மகன் . . . ' சிந்தனைகளுக்கு எல்லை இல்லாமற் போய்விட்டது -- மறுபடியும் இரவு . . .

வாயிற்படியிலேயே படுக்கை போட்டான். மல்லு அலுப்பாக இருந்ததனால் போலும் அப்பாவின் கையைப பிடித்துக்கொண்டு தூங்கிவிட்டான். . . பத்து மணி ஆகியது. வானத்தில் நட்சத்திரங்கள் 'மினுக் மினுக்' என்றன. எதிரில் சற்று வடக்கே தளளி மின் கம்பத்திலிருந்து தெருவிளக்கின் ஒளி எதிரிலிருந்த மரத்தின் கீழே விழுந்து கொண்டிருந்தது. மரத்தின் கீழ் பிள்ளைகள் விளையாடுவது வழக்கமாதலால் அங்குச் சற்று சமதளமாக இருந்தது கொஞ்சம் தள்ளி மாடி வீடுகள், பங்களாககள் தென்பட்டனவ தவிர, அங்கு அலறிக் கொண்டிருந்த ரேடியோச் சத்தம் இவ்வளவு தூரம் கேட்கவில்லை. வாயிற்படியில் புல்லய்யா இப்படியும் அப்படியும் புரணடு கொண்டிருநததால், நீலி கொஞ்ச நேரம் காலை அமுக்கிவிட்டு, குழந்தை அழுததால் அறைக்குள் சென்று சமாதானப் படுத்தித் தூங்க வைததுத் தானும பக்கத்தில் படுத்துக்கொண்டாள். சிந்தனைகளிடையில் புல்லய்யாவுக்குத் தூக்கம் வரவில்லை. நாய்க்குட்டி குரைக்கும் சத்தம் கேட்டதும், சட்டென்று ரோடடு பக்கம் பார்த்தான் -- மரத்தின் கீழே நாய்க்குட்டி . . . மல்லுவின் குட்டி போலவே இருந்தது . . அதை வைத்திருந்த ஆள் யார்? அங்கேயே உட்கார்ந்திருந்தான் . . . உற்றுப் பார்த்தான் . . . அவன கையிலிருந்து தப்பிக்க நாய்க் குட்டி துடித்துக்கொண்டிருந்தது. . . ஆனால் அவன் விடவில்லை.

புல்லய்யா எழுந்து உட்கார்ந்தான் . . . நாய்க்குட்டிக்குத் தின்பதற்கு ஏதோ கொடுத்தாற் போலிருந்தது. . . நாய்க்குட்டியைக் கேட்டு வாங்கிக்கொள்ளலாமென்று, மெல்ல எழுந்து புல்லய்யா சென்றான். அந்த ஆள் நாய்க் குட்டியையே பார்த்துக் கொண்டிருந்தான். புல்லய்யா அருகில் வந்ததததையே கவனித்தாற் போல் தெரியவிலலை -- எல்லாம் நிசப்தமாக இருந்தது . . .

அந்த மரத்தடியில் உட்கார்ந்திருந்த ஆள் அந்த நாய்க்குட்டியிடம் பேசத் தொடங்கினான் . . ."உங்க இனத்துக்கு எவ்வளவு நன்றி இருக்குது?" நன்றியோடயே பொறக்கறீங்க . . . அத்தோடயே

வாழறீங்க . . . எநத நிலையிலேயும் நன்றியே மறக்கறதிலலே . . . இந்த மனுஷ இனமிருக்குதே?? .- ஹா, ஹா . . எல்லாம் நடிப்புதான். அந்த இனத்துக்கு அழகு, பணம் இதுதான் பெரிசு . . என் கிட்டே ரொம்ப அன்பு வெச்சிருக்கறே'ல்லே?" என்று சொலலி, அதை மறுபடியும் மடியில வைததுக்கொண்டு ஒரு முத்தம் கொடுத்தான்

அதன் தலையைத தடவிக் கொண்டே, "கேக்கறியா? என பரிதாபத்தெ நீயாவது கேக்கறியா? ரெண்டு நாளா என் கூட இருநத என் கஷ்டத்தெப் பகிர்ந்துக்கிறயே . . . எனக்குக் கிடைககறதெக் குடுத்து உன் வயிதத்தெ நிறப்பலேன்னா . . அப்புறம் எனக்கு நன்றி எபபடி இருக்கும்? . . . . . . ரெண்டு நாளா எனக்குச் சாப்பாடில்லே . . . ஆனா .. . என் கிட்டே . . பணமில்லேன்னா? . . . எவ்வளவு இருந்தது. . என் பொண்டாட்டி . . . எனக்குத் துரோகம் பண்ணான்னு சந்தேகம் வந்தா -- நான் எங்கெ தங்கத்தெ ஒளிச்சி வெச்சிருக்கறேன தெரியுமா? அதெல்லாம் உன்கிட்டெ சொல்றேன் ஆவட்டும் - ." என்று சொல்லிக்கொண்டே, அந்த நாயக்குட்டியைத் தூக்கிக் கொண்டான். ஒரேடியாகக் கரைபுரண்டு வரும் துக்கத்தோடு," என் உடம்புலே பாதின்னு நினைச்ச என் பெண்டாட்டி, நம்பன சிநேகிதன் ரெண்டு பேரும் சேந்து துரோகம் . . . பண்ணிட்டாங்க -- நன்றி எங்கே இருக்குது அந்த இனத்துக்கு? பொல பொலவென்று கண்ணீர் விட்டழுதான். புல்லய்யா ஸ்தம்பித்துப் போய் அப்படியே பாாத்துக கொண்டிருந்தான் -- அந்த அழுகை அப்படியே நீண்ட நேரம் வரையில் தனக்குக் கேட்டுக் கொணடே இருந்தது. . .

காலையில் எழுந்திருக்கும் போது மரத்தின் கீழ் ஆளும இல்லை, நாயககுட்டியும் இல்லை.

அன்று மல்லு உடன் வரும்போது எவ்வளவு தடுத்தாலும் தடுக்க முடியவில்லை. மேலே ஏறி அப்பாவின் கழுத்தைச் சுற்றிக் கொண்டு விடவேயில்லை. எங்கெங்கே போக வேண்டுமோ அங்கேயெல்லாம் போனான். எங்கேயும் வேலை என்ற வார்த்தையைச் சொன்னாலே முகத்தைத் திருபபிக் கொண்டார்கள். 'உனனெ மாதிரி ஆளுக்கு எங்கே கிடைக்கும்?' என்று சிலர் சொன்னார்கள். தான் முன்பிருந்தது போல் திடகாத்திரமாக, வாட்டசாட்டமாக இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று நினைத்தான். பழைய மார்க்கெட்டுக்குப் போனான். கூலிககுச் சாமான்களைச் சுமந்து செல்ல அங்கே கிழவிகளும் சிறுவர்களும் கூடைகளை வைத்துக்கொண்டு நின்றார்கள். அவர்களே ஒருவருக்கொருவர் போட்டி போட்டுக் கொண்டு, சண்டை பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

'சே! அவங்க கூடப் போயி போட்டி போட்றதா? இந்தக் கூலி வேலெ எங்கே கிடைக்காது? இருந்தாலும் என்னெ மாதிரி ஆளு

செய்யற வேலையா இது? மல்லு நாயுடு மகன். பத்து ஊர்லே சூரப்புலின்னு பேரெடுத்தான், இந்தப் பஜார்ல வந்து வேலெ தேடித்திரியற நிலெமெ வந்துதே!' என்று தன்னைத்தானே நொந்து கொண்டான்.

மத்தியானமாகியும் ஏதாவது வேலை கிடைத்தாலொழிய வீட்டுக்குப் போவதில்லை என்ற வைராக்கியத்துடன் போகவில்லை. மல்லுவுக்கு வேகவைத்த மரவள்ளிக் கிழங்கு ஒன்றை ஒரு கிழவியிடம் வாங்கி, அங்கேயே பக்கத்தில் உட்கார வைத்துத் தின்னக் கொடுத்தான். அந்தக் கிழவியின் தலை நன்கு பழுத்திருந்தது. பற்கள் எல்லாம் விழுந்திருந்தன.

"எந்த ஊரு தம்பி?" என்று கேட்டாள்.

"வடக்குப் பக்கம்--எங்க ஊரு நவிரி"

"எங்கே வந்தே தம்பி?-"

"வேலெக்காக--"

"எங்கே பார்த்தாலும் பஞ்சம்தான் தம்பி--இவ்வளவு பெரிய பட்ணம்! எங்கேயும் பொழைக்க வழியில்லே. "

"பாட்டி! வுனக்கு யாரு மில்லியா?" என்று கேட்டான்.

"இருக்காறாங்க'ய்யா . . . ரெண்டு புள்ளெங்க--பொண்ணுங்க இல்லே--பெரிய பையனுக்குச் சிந்தியா கம்பெனிலே மாசச் சம்பளம்தான். . . எனக்கு மருமவ சாப்பாடு போடமாட்டா. ரெண்டாவது பையனுக்கு எங்கேயும் வேலையில்லெ--ஒரு காலத்துலெ கௌரவமாப் பொழெச்சோம்--கூலி வேலெ பண்றதுக்கு மனசு வராது. நான் இதெ வித்து ரெண்டு காசு சம்பாதிச்சிக் கொண்டு போனா வீட்லே கஞ்சி . . . அவனுக்குப் பொண்டாட்டி, ரெண்டு பசங்க . . ஒவ்வொரு வேளெ பசங்க சாப்பாட்டுக்குத் திண்டாடிப் போறாங்க . . . என்ன பண்றது! அந்த அப்பன் என்னெக்கிக் கருண வெக்கறாரோ அன்னைக்கி . . ."

புல்லய்யாவுக்கு, இதைக் கேட்டுக் கொண்டிருந்தால் தன் பிள்ளைகளே பசியோடு திண்டாடுவது போல் தோன்றியது. இந்த உலகத்தில் கஷ்டமெல்லாம் தான் ஒருவனுக்கு மட்டுமல்ல, அவரவர்க்கு ஏற்ற அளவு இருந்து கொண்டுதானிருக்கிறது. இந்தக் கிழவியால் இந்தக் கஷ்டங்களிடையிலும் இவ்வளவு தைர்யமாக எப்படி இருக்க முடிகிறது? அவளுக்கு எதன் மீதோ நிறைய நம்பிக்கை இருக்கிறது. அந்த நம்பிக்கையினால் தான் அவள் இவ்வளவு கஷ்டத்திற்கிடையில் சுகமாக வாழ்ந்து கொண்டிருக்கிறாள் -- தன்னாலே ஏன் அப்படி இருக்க முடியவில்லை என்று எண்ணினான்.

தன்னுடைய அவநம்பிக்கைகள் மறைந்து நம்பிக்கை தன்னுள் தலை தூக்கியதால் மறுபடியும் முன்னோக்கி நடக்கலானான்.

ஒரு கடையருகில் பத்துப்பேர் குழுமியிருந்தார்கள். எட்டிப் பார்த்தான். இரண்டு புதிய சைக்கிள் ரிக்ஷாக்கள் இருந்தன.

ஒன்று தனக்குக் கொடுத்தால், ஒரு நாளைக்குக் கிடைப்பதில் பாதியை அவர்களுக்குக் கொடுத்து விட்டு, மிஞ்சிய பாதியில் தான் பிழைத்துக் கொள்ளலாம். மறுபடியும் சந்தேகம் தலையெடுத்தது. ஒரு காலத்தில் நாலு பேரை வைத்து வேலை வாங்கியவன்-- மனிதர்களைக் கொண்டு செல்லும் குதிரையாக மாறுவதா--அந்த வேலை செய்தால். . . தன் ஊரில் தெரிந்துவிட்டால். . . அந்தச் சுற்றுப் புறத்திலிருந்து யாராவது ஆஸ்பத்திரி வேலையாக வந்து பார்த்துவிட்டால். . . தன்னைக் குலத்திலிருந்து தள்ளிவிட்டால். . . மறுபடியும் அந்த ஊர் முகத்தில் எப்படி விழிப்பது? இதென்ன வேலை என்ற எண்ணம் வந்தது.

மறுபடியும் சற்று நேரம் இவர்களையும் அவர்களையும் வேலைக்காகக் கேட்டுவிட்டு, வேறு வழியில்லாமல் திரும்பி அங்கேயே வந்தான். அந்தக் கடைக்காரனிடம் பேசினான்.

"தினத்துக்கு ரெண்டு ரூபாய் வாடகை!" என்றான் அவன்.

"ரெண்டு ரூபாயா?. . ."

"என்னைக்காவது பத்து ரூபாக் கிடைச்சா, அதிகமா வந்ததெ எனக்குக் கொடுக்கப்போறியா? . . . ரெண்டு ரூபாயான்னு கேக்கறியே!"

"கிராமத்து ஆளு துரெ! எனக்குத்தெரியாது--அவ்வளவு பணம் வருமா?"

"கப்பல்லே'ரந்து துரெங்க இறங்கினாங்கன்னா, அதுலயும் குடிச்சி இருந்தாங்கன்னா--ஸோபுதாரி சந்துக்கு அழைச்சி கிட்டுப் போனீன்னா ஒண்ணுக்கு--ரெண்டு ரூபாக் காயதெத்த விசிறிப் போடுவாங்க!"

"ஸோபுதாரி சந்துன்னா என்னா துரெ?"

"அது தெரியாதவன், நீ இன்னா ரிக்ஷா ஓட்டப்போறெ? அங்கேயிருக்கற பொமபளங்களெப் பாத்தீன்னா கண்ணு அப்படியே சுத்தும்!"

புல்லய்யாவுக்கு இந்தப் பேச்சு ஒன்றும் பிடிக்கவில்லை. ஒரு வேளை யாராவது தன் கஷ்டத்துக்கு மீறிக் கொடுத்தால் தான் எதற்கு வாங்க வேண்டும்? அந்தச் சந்துக்குப் போகவே கூடாது என்று நினைத்தான். அப்போதே மிதித்துப் பணம் சம்பாதித்துக் கொள்ளலாம் என்ற எண்ணத்தில் கடைக்காரனிடம்--

"சரி; வண்டியெக் குடுங்க. தினத்துக்கு ரெண்டு ரூபாய்க்கு ஒத்துக்கறேன்," என்றான்.

இந்த வார்த்தைகளைத் துணிந்து சொல்லிவிட்டான் -- ஏதோ கொலை செய்வதற்கு ஒத்துக்கொண்டவன் போல! அந்தக்கடைக்காரன் அப்படீன்னா, டிபாசிட்டு இருவத்தஞ்சி ரூபாக் கொண்டுவா," என்றான்.

"டிபாசிட்டுன்னா என்னது?"

"கிராமத்து ஆளுங்களுக்கு ஒண்ணும் தெரியாது. சரியான பட்டிக்காட்டாங்க--திருட்டு வேலெ பண்ணிட்டு ஓடிப்போயிடுவாங்க--"

"இந்தக் குத்தல் பேச்சு புல்லய்யாவுக்குக் கஷ்டமாக இருந்தாலும்

சகித்துக்கொண்டு, "இருவத்தஞ்சி ரூபாவா?" என்று கேட்டான்.

"பாத்தியா? ரிக்ஷா எங்கேயும் கிடைக்கறதில்லே. ஒண்ணுக்குப் பத்துப்பேர் போட்டி போட்டு கிட்டு வந்தாக்கா நாங்க என்ன பண்றது? நீ எப்பொ வேண்டாம்னு சொல்றியோ அப்பொ அந்த இருவத்தஞ்சி திருப்பிக் குடுத்துட்றோம்."

புல்லய்யா, தன்னிடம் பணமில்லையென்றாலும், எப்படியாவது கருணை காட்ட வேண்டுமென்று கெஞ்சினான். ஆனால் பயனில்லாமல் போய்விட்டது. யோசிக்காமல், எப்படியாவது கொண்டு வருவதாகவும், வண்டியை வேறு யாருக்கும் கொடுக்க வேண்டாமென்றும் சொன்னான்.

"உன்னெ மாதிரி பத்துப்பேரு வந்தாங்க. நாளெக்கி விடியறெவரெய்க்கும் காத்திருப்பேன். அதுக்குள்ளே வரலேன்னா வெறெ யாருக்காவது குடுத்துடுவேன்."

"சரி", யென்று சொல்லிவிட்டு, வீட்டை நோக்கிப் புறப்பட்டான். 'ஒரேடியா இருவத்தஞ்சி ரூபாயா-எங்கே'ரந்து கொண்டு வர்றது? வீட்லே ஒரு காலணா இல்லே, ராத்ரிக்குச் சாப்பாட்டுக்கே வழியில்லாத போது இருவத்தஞ்சி ரூபா எங்கே'ருந்து வரும்? யார்கிட்டெ கடன் கேக்கறது? அங்கேயாவது நிலம்கிலம் இருந்தது. அதெ அந்த ராஜிப் பயலுக்கு அடமானம் வெச்சிட்டேன். இங்கே என்ன இருக்குது? என்னெ யாரு அடமானம் வெச்சிக்குவான்?'

நடந்து கொண்டிருந்தானே தவிர மனது அவன் வசமில்லை. நீலியிடம் சொன்னபோது அவள் பேசாமலிருந்தாள். மத்தியானம் மீதியான கஞ்சியைக் குடித்தபிறகு வாயிலில் உட்கார்ந்து ரோட்டுப் பக்கம் பார்த்துக் கொண்டிருந்தான். சிலருடைய பைகள் பருத்திருந்தன. அவற்றில் பணமிருக்கும் -- ஒரு இருபத்தைந்து கடன் கொடுத்தால் --அந்த அம்மா கழுத்து நிறைய தங்கம், அந்தக் கனத்தைத் தாங்க முடியாமல் நடந்து கொண்டிருந்தாள். தனக்கு வட்டிக்கு இருபத்தைந்து ரூபாய் கொடுத்தால்--உணர்ச்சி வேகத்தில் உடனே எழுந்து போய்க் கேட்க வேண்டுமென்று நினைத்தான். ஆனால் பதிலையும் தானே ஊகித்துக்கொண்டு, வாயைத்திறக்க முடியாமல் நின்றுவிட்டான். இரவு அந்த மரத்தடியிலிருந்த மனிதன்--தங்கத்தை எங்கேயோ ஒளித்து வைத்ததாகச் சொன்னான்--அதில் இருபத்தைந்து ரூபாய்க்குப் போதுமானதை எடுத்துக் கொள்ளலாம்--மறுபடியும் அவனுக்குக் கொடுத்து விடலாம். நிமிஷங்கள் ஆக ஆக ஆத்திரம் அதிகமாகிக் கொண்டிருந்தது. ஆத்திரம் அதிகமாக ஆக சிந்தனைகள் பல பாதைகளில் செல்லலாயின. ஒரு வழியும் புலனாகாமலே பொழுது போய்விட்டது. ஏனோ தெரு விளக்குகள் எரியவில்லை. ரிப்பேரா என்னவோ!

முழங்காலின் மீது தலை வைத்துக் கவலையோடு உட்கார்ந்திருந்தான். வீட்டிற்குள் குழந்தை அழுததால் நீலி அதைச் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தாள். சற்று நேரத்தில் அழுகை

நின்ற பிறகு, இந்தப் பக்கத்திலிருந்த இளம்பெண், கணவன் வீட்டில இல்லாததால், ஏதோ ஒரு சினிமாப் பாட்டை மெல்லப்பாடுவது கேட்டது. குழந்தைகள், ஏதோ இருந்ததது சமைத்ததைச் சாப்பிட்டார்கள். நீலி கணவனைக் கஞ்சி குடிப்பதற்குக கூப்பிடடாள்.

பாதியைக் குடித்து, ஒரு முறை மனைவி முகத்தைப பார்ததுவிட்டு, மீதிப்பாதியை, பசியிருந்தாலும் அபபடியே வைத்து விடடான்.

இருட்டு இரவு--இலேசாகக் குளிரெடுத்தது. ஆனாலும் அப்பாவும் மகனும் வாயிற்படியிலேயே இருந்தார்கள். நீலி அறைக்குள குழந்தையைப் போட்டுக்கொண்டு படுத்தாள. பத்து மணி கடந்து பதினொன்றை நெருங்கிக் கொண்டிருந்தது. மல்லு அப்பாவின் மார்பில் படுத்திருநதான். புல்லய்யாவுக்கு ஆததிரமாகவும் வேதனையாகவும இருந்ததால் தூககம் பிடிக்கவில்லை. தலை நிறைய யோசனைகளே--இன்று இரவு எப்படியாவது இருபத்தைந்து ரூபாய் சம்பாதிக்கவேண்டும். அதிலிருந்து தனக்குப் பிழைக்க வழி உண்டாகும். கேட்டால் கிடைக்காது. திருடுவதற்குப் போனால்? 'சேச்சே!' என்று சொல்லிக் கொணடான்.

நீலம்மனையும் தாஸ்னையும் பக்தியோடு நினைத்துக் கொண்டான். இந்த மாதிரி ஆபததுக காலத்தில் உதவுமாறு வேண்டினான். சற்று நகாந்தால் மல்லு விழித்துக் கொண்டான். அப்போது அந்த இருட்டில் யாரோ வரும் ஓசை கேடடது. தாஸன்தான் இந்த உருவத்தில் வருகிறானோ என்ற சந்தேகம் வந்தது. இல்லை, வேறு யாரது? நேற்றிரவு வந்த அந்த ஆளா? இவர்கள் யாருமலல --பக்கத்து வீட்டு இளைஞன், வீட்டிற்குள் போய்விட்டான். ஒரு நிமிஷம் கழித்துக் கிசுகிசுப்பேச்சு கேட்டது.

"பாருடி!"

"ஹா . . .!"

"உன்னெ இப்படியே விட்டுவெப்பேனா? பணக்காரன் பொண்டாட்டி மாதிரி சில்க் புடவைங்க கட்டவெய்க்கறேன் பாரு!"

"எங்கே கிடெச்சிது?"

"கிடெய்க்குமா? வால்டேரு ஸ்டேஷன்கிட்டே ஜேப்படி அடிச்சேன்.

"பிடிச்சிட்லியா அவங்க?"

"டிக்கட் வாங்கறதுக்கு--ஒரே கூட்டம்--அந்தக் கும்பல்லே எவ்வளவு சுலபம் தெரியுமா--?"

புல்லய்யாவின் மனதில் ஏதோ ஒரு விதமான ஆவேசம் வந்தது. தன் பிழைப்புக்காகத் தானும் ஒரு முறை அந்த வேலை ஏன் செய்யக்கூடாது? --'மறுபடி இந்த ஜன்மத்திலெ அந்த வேலையெச் செய்ய மாட்டேன். அப்பறமா அந்தப் பணத்துக்குப் பத்து பங்கு ஏழைங்களுக்கு அந்தத்தெரியாத ஆளோட பேராலே தர்மம் பண்ணிட்றேன். " . . . பேசுவதற்காக எழுந்திருக்கப் போனான் . . . மல்லுவைத் தூக்கிப் பக்கத்தில் படுக்கவைத்தால் கண்ணைக்

கசக்கிக் கொண்டே எழுந்து உட்கார்ந்து கொண்டான். . 'இவன் ஒரு சரியான பிடுங்கல். . .' என்று எண்ணி அவனை மறுபடியும் மார்பின் மேல் போட்டுக்கொண்டு முதுகில் தட்டலானான்.

அதோ விசில் சத்தம் கேட்டது -- 'ரயில் வர்ற நேரம் . . டிக்கட் வாங்கறதுக்கு எல்லாரும் தயாரா நிப்பாங்க . . .' ஒரே கூட்டம் . . . அந்தக் கும்பல்லே . . . தான் முந்திக்கொண்டு போனதாகவும் பையிலிருந்து பர்ஸை அடித்ததாகவும் . . . கற்பனை செய்தான்.

மறுபடியும் மெதுவாக மல்லுவைத் தூக்கிப் படுக்கை மேல் கிடத்தி, எழுந்து நாலு அடிகள் தைர்யமாக எடுத்து வைத்தான். மகன் அழுது கொண்டே எழுந்து, வேகமாக வந்து உடன் சேர்ந்து கொண்டான். புல்லய்யாவுக்கு என்று மில்லாத ஆத்திரமும் கோபமும் வந்தது. மறுபடியும் படுக்கை மேல் கிடத்தி, பலமாகத் தட்டலானான். கொஞ்ச நேரத்தில் மல்லு தூங்குவது போல் பாசாங்கு செய்யவே மெதுவாகச் சத்தம் வராமல் நடக்கத் தொடங்கினான். அப்பாவின் கை முதுகின் மேல் இல்லை என்று தெரிந்தும் மல்லு தலை தூக்கிப் பார்த்தான். அப்பா மெதுவாக ரோட்டில் போய்க் கொண்டிருந்தார். அந்தச் சின்ன மனதில் ஒரு நிமிஷம் யோசனை தட்டியது. கூடப்போனால் அப்பா வரவிடமாட்டார். அடித்தாலும் அடிப்பார் . . . அப்பாவுக்குத் தெரியாமல் கொஞ்ச தூரத்தில் . . ஒழிந்து ஒழிந்து . . . மெல்ல மெல்ல பின்னாடியே சென்றான்।

இரவு பன்னிரண்டு மணி . . . ஊர் தூங்கிவிட்டது . . . அங்கங்கே ஓரிரு ரிக்ஷாக்கள் தென்பட்டன. புல்லய்யா தூரதூரமாக அடியெடுத்து வைத்து, வால்ட்டேர் ஸ்டேஷனை நோக்கி நடந்தான். சற்று தூரத்தில், ரோட்டோரமாக மல்லு அப்பாவைப் பின்பற்றினான். . .

ஸ்டேஷன் போய்ச் சேரும் போது, உண்மையில் மூன்றாவது வகுப்பு டிக்கட் ஆபீஸருகில் கும்பல் ஏராளமாக இருந்தது. புல்லய்யாவின் மனதில் சந்தோஷம், பயம் இரண்டும் பரவின। உடம்பெல்லாம் ஏதோன புல்லரிக்கத் தொடங்கியது. இருந்தாலும் தான் பிழைக்கும் வழிக்காக இந்த வேலையைச் செய்தாக வேண்டும் என்ற ஒரு முரட்டுப் பிடிவாதம். அந்தப் பக்கம் வந்த ஓர் ஆளைப் பார்த்ததும் துணிவு அதிகமாயிற்று. 'இந்தப் பெரியவர் கிட்டெ பணமிருக்குது -- ஊரைக் கேட்டுக்கறேன் -- பேரையும் கேட்டுக்கறேன். இருபத்தஞ்சி ரூபாய் மட்டும் எடுத்துகிட்டு, இன்னொரு நாள் அதோட இன்னொரு இருபத்தஞ்சி சேத்து . . . அந்தப் பெரியவர்கிட்டே செஞ்சேன்னு சொல்லி மன்னிப்புக் கேட்டுக்கறேன் . . கடவுள் பாத்துக்க மாட்டாரா?"

"எந்த ஊருக்குப் போறீங்க துரெ?"

"பொந்தூரு"

பதில் சொன்னார். நல்ல மனிதராகத்தான் இருக்க வேண்டும் . "அந்த ஊர்தான் உங்க ஊரா?"

"ஆமாம் . . ."

"அய்யா பேரு . . ."

"நாக பூஷணம். . ."

"சரி, போய்வாங்க . . ."

மனதில், தான் கேட்டுக் கொண்டது மறந்து போகாமலிருக்க, திரும்பத் திரும்பிச் சொல்லிக்கொண்டான் . . .

மல்லு, ஒரு தூண் மறைவில நின்ற படி அப்பாவையே வைத்த கண் எடுக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான் . . .

அதோ நாகபூஷணம் டிக்கட் வாங்குவதற்காகக் கும்பலுக்குள் நுழைந்தார். 'வேறெ யார் கிடைச்சாலும் தொடக் கூடாது. அந்தக் கதர் ஜிப்பா சைட் பையில் பர்ஸ் தென்படுது . . .' புல்லய்யா அந்தப்பக்க கையில் டிக்கட் வாங்கப் பணம் இருப்பது போல் புக்கிங் ஆபீஸ் நோக்கி நடந்தான். . . அந்தக் கும்பலில் தானும் நுழைந்தான் -- கால்கள் கிடுகிடுவென்று நடுங்கிக் கொண்டிருந்தன. . . . உடம்பு தலை கனக்கத் தொடங்கியது . . . மனதெல்லாம் மகா சமுத்திரமாகி ஒரே குழப்பம் -- பசி . . . விறுவிறென்று அந்தக்கை பைக்குள் தானாகவே நுழைந்தது. . . பர்ஸ் அகப்பட்டது. . . . அய்யோ! தெரிந்து கொண்டு விட்டார். 'திருடன் -- திருடன்!' ஒரே கூக்குரல். . . ஓடத்தொடங்கிய திருடன் அகப்பட்டுக்கொண்டான். அநதக் கும்பலெல்லாம் இந்தப் பக்கம் திரும்பி விட்டது. . . ஆளுக்கொன்று சொல்லத் தொடங்கினர். ஒருவன், ஒரு காலத்தில் தான் மிகவும் பெருமைப்பட்டுக்கொண்டிருநத கிருதாக் குடுமியைக் கெட்டியாகப் பிடித்து, குனிந்த தலையை நிமிர்த்தினான். . . கும்பலில் அவரவர் நினைத்தபடி படபடவென்று போடத்தொடங்கினர். புல்லயயா, வெட்கம் . . பலவீனத்தால் சுருண்டு கீழே உட்காரப் போனால், யாரோ காலால் எட்டி உதைத்தான். . . போலீஸைக் கூப்பிடச் சொல்லி நாகபூஷணத்துக்கு யாரோ ஆலோசனை சொன்னார்கள்.

இந்த ஆர்ப்பாட்டத்தைப் பார்த்த மகனால் நீண்ட நேரம் மறைந்திருக்க முடியவில்லை. அப்பாவை எல்லாரும் அடித்துக் கொண்டிருந்ததால், கும்பலாக நின்றவர்கள் காலிடையில் புகுந்து, உள்ளே நுழைந்து, அடித்துக் கொண்டிருந்த ஒரு பெரிய ஆளின் காலை இரண்டு கையாலும் பிடித்துக்கொண்டு நன்றாகக் கடித்துவிட்டான். ஆத்திரத்தோடு புல்லய்யாவை அடித்துக் கொண்டிருந்த அந்த ஆள், 'அம்மா!' என்று கத்தினான். உடனே பின்னால் திரும்பி, அந்தப் பையனை அந்தக் காலாலேயே எட்டி உதைத்தான். பையன் கீழே விழுந்து புரண்டான். . . சொர சொரப்பாக இரந்த தரை அந்த இளம் தோலைக் கருணையில்லாமல் தேய்த்து, இரத்தம் கசிய வைத்தது.

கையாலாகாத நிலையிலிருந்த புல்லய்யா மகன் நிலையைப் பார்த்தான் -- கண்ணிலிருந்து நீர் மளமளவென்று வழிய

தொடங்கியது.

அப்போது நாகபூஷணம் சொன்னார் "அவனை விட்டுடுங்க!"

"பைத்தியம் புடிச்சிருக்குதா'யா உங்களுக்கு--இன்னக்கி உங்களெ, நாளெக்கி இன்னொர்த்தனெ--இவங்க பொழப்பே இவவளவுதான். ஜேப்படி செய்ய முடியலியா, கொலையே பண்ணுவாங்க . . . போலீஸ்கிட்டே புடிச்சி குடுக்க வேண்டியதுதான். . "

"என்னாலே அந்தக் கேஸுக்கெல்லாம் அலைய முடியாது. என் பணம் என்கிட்டேதானே இருக்குது--விட்டுடுங்க," என்று சொல்லி, தானே முன்னால் வந்து, புல்லய்யாவை விடுவித்து, கையைப் பிடித்து மேலெ தூக்கினார். தலையைக் குனிந்து கொண்ட புல்லய்யா, போகச் சொன்னவுடனே, மகனருகில் சென்று அவனைத் தூக்கிக் கொண்டு, ஒன்றும் பேசாமல் வீட்டை நோக்கி நடந்தான்.

வழியில் தன் மகன் தன் பிரதாபத்தைச் சொல்லும்போது இன்னும் அதிகமாக அழுகை வந்தது. இருந்தாலும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. வீடு போய்ச் சேர்ந்த போது, அழுது கொண்டிருந்த குழந்தையைச் சமாதானப் படுத்திய நீலி, "எங்கே போனே?" என்று கேட்டாள். புல்லய்யா ஒன்றும் பேசாமல் வாயிற்படியில் படுத்துவிட்டான். மல்லு, தன் பிரதாபத்தை அம்மா தெரிந்து கொள்ள வேண்டுமென்று, அதுவரையிலிருந்த தோரணையிலேயே, "அம்மா, அம்மா! -- அவங்கெல்லாம் சேந்து அப்பாவெ அடி அடின்னு அடிச்சிகிட்டிருந்தா . . . போயி கடிச்சிட்டேன் . . ."என்று சொன்னான.

சொல்லி முடிப்பதற்குள், புல்லய்யா, "மல்லு!" என்ற கத்தினான். எல்லாவற்றையும புரிந்து கொண்ட நீலி, "அதுக்குப் போனியா?. . " என்று சொல்லிப் பெருமூச்சு விட்டாள். புல்லய்யாவுக்கு அளவுக்கு மீறித் தன்னிரக்கமும் கோபமும் வரவே, மகன் முதுகில் பலமாக அடித்தான். ஐந்து விரலும் பதித்து விட்டன. அழுது கொண்டே, அம்மாவிடம் போகாமல், "அப்பா!" என்று சொல்லிக் கொண்டு அப்பாவிடமே வந்துவிட்டான். நீலி ஒன்றும் பேசவில்லை. விளக்கை அணைத்துவிட்டு, குழந்தையைப் பக்கத்தில் போட்டுக்கொண்டு, தானும் படுத்தாள். அவளுக்கு, யோசிக்க, யோசிக்க . . . திகில் நிறைந்து தூக்கம் பிடிக்கவில்லை.

புல்லய்யா அண்ணாந்து படுத்திருந்தான். மல்லு, வழக்கம் போல் மார்பின் மேல் படுத்துக் கொண்டான். இருட்டு! எல்லாம் நிசப்தமாக இருந்தது. வானத்திலிருந்து நட்சத்திரங்கள் தன்னைப பார்த்துக்கொண்டிருந்தன.

இடைஇடையே மகன் விம்மிக் கொண்டிருந்தான்.

மெதுவாகத் தன் கைகள் மகன் முதுகின் மேல் சென்றன . . . பரிவோடு, தலையிலிருந்து உடம்பு முழுவதும் தடவினான் . . . மகன் உதிர்ந்த கண்ணீர் மார்பில் விழுந்து சில்லென்றிருந்தது. . . ஒரேடியாகப் புல்லய்யாவுக்குத் துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது.

மகனைக் கெட்டியாக அழுத்திப் பிடித்துக் கொண்டு, "என் மல்லு! . என் மகனே! -" என்று சொல்லித் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான்.

## 30

புல்லய்யா காலையில் நேரம் கழிதது எழுந்த போது, மல்லு நாய்க்குட்டியைப் பிடித்துக்கொணடு குதித்துக் கொண்டிருந்தான். அவனுடைய சந்தோஷத்துக்கு எலலையில்லை. அப்பாவிடம் அந்த நாய்க்குட்டி எப்படிக் கிடைததென்பதைச் சொன்னான். யாரோ அந்த ஆள் பூச்சாண்டி மாதிரி இருந்தானாம்! அவன் பின்னால் நாய்க்குட்டி நடந்து கொண்டிருந்ததாம், பின்னால் போய் எடுத்துக்கொண்டு ஓடிவந்து விட்டானாம்!

அதற்கு ஒரு கயிற்றைக் கட்டி, அந்த ஆள் வருவானோ என்று, புழக்கடையில் தடுக்கில் கட்டிவிட்டான். அதனுடன் பேச்சிலும் விளையாட்டிலும் இறங்கிவிட்டான. அது 'கொய்ங் கொய்ங்' என்று கத்திக கொண்டிருந்தது. இந்த நிலைமையைப் பார்த்துவிட்டு, புல்லய்யா சந்தடியில்லாமல், மறைவாகத் தனியாக வேலை தேடுவதற்குச் சென்றான்.

எங்கே போனால் கிடைக்கும்? பாக்க வேண்டிய பெரிய 'கம்பெனி'களை முன்னாலேயே பார்த்தாகி விட்டது. மெயின ரோடில் ஏதோ ஒரு மாடிவீடு கட்டிக் கொணடிருந்தார்கள். அங்கே சிற்றாள்களும் கொல்லத்துக்காரருமாக நிறையபேர் வேலை செய்வதைப் பார்த்தான. "வேலை இருக்குதா?" என்று ஒரு மேஸ்திரியிடம் கேட்டான். 'இல்லை' என்ற பதில உடனே வந்துவிட்டது. "கிராமத்துககாரன், குழந்தை குட்டிக்காரன், உங்கள்ளெ ஒர்த்தனாக்கிக்கோங்கய்யா"

"நாங்களே இததனை பேரிருக்கிறோம்!"

அங்கே, பக்கத்திலிருந்தவன் ஒருவன், "பாவம், இன்னக்கி ஒரு நாளெக்கி வெச்சிக்கோடா," என்றான்.

"பாரு, அப்படி இருக்கறானே? இவன் என்ன வேலெ செய்யப் போறான்?"

புல்லய்யா தன்னைத்தானே பார்த்துக்கொண்டான். கிழிந்து போன பழைய காடாத் துணி பனியன். அந்தக் கிழிசல்கள் வழியாகப் பார்த்தால் எலும்புகளே தென்பட்டன. வேட்டி முழங்காலுக்குக் கீழே இறங்கவில்லை. அழுக்கேறியிருந்தது. தனக்கு நோய் ஒன்றுமில்லையே? ஒரே நோய் பிடித்தவன் மாதிரி--ஒரே கவலை --'சே! இந்தச் சாண் வயிற்றுக்குத்தானா இவ்வளவு அலைச்சல் --இவ்வளவு குத்தல் பேச்சு எல்லாம்?" எவ்வளவு முயற்சித்தாலும், 'கூலிக்கு வர்றேன்,' என்ற வார்த்தைகள் வாயிலிருந்து வரவில்லை.

அந்தக கூட்டத்தில பெண்களும் இருந்தார்கள. அந்தப்பெண்களில் நல்ல பருவ அழகுடனும் இளமை மவுசுடனும் பலர் இருந்தார்கள். கொஞ்ச நேரம் நின்று பார்த்துக்கொண்டிருந்தான். மீசை கறுப்பாக இருந்த ஒரு மேஸ்திரி," என்னாடி மச்சினி! எங்க தம்பி ரொம்ப தளந்து போயிட்டானா, இல்லே இன்னொருத்தி வலையிலெ விழுந்து உன்னெப் பத்திக் கவலெப் பட்றதில்லியா?" என்று கேட்டான்.

அந்த இளம் பெண் புன் சிரிப்பு சிரித்துக் கொண்டே, "பொம்பளெயெப் பாத்தாக்கா உடனே ஏன் இப்பிடி பல்லிளிக்கிறே?" என்று கேட்டாள். அதோடு வாயை மூடிக்கொண்டான். வேறு இரண்டு பேர் வீட்டைக் கட்டுபவனைப் பற்றி, வேலை செய்து கொண்டே, பேசிக் கொண்டிருந்தனர். அந்த எஜமான் மீது ஒரு பெண் காதல் கொண்டதால் இவ்வளவு பணம் வந்ததாம். "அதிர்ஷ்டம்னா அப்படி இருக்கணும்," என்று ஒருவன் சொல்ல -- "அது ஒரு அதிர்ஷ்டம் -- வேர்வெ சிந்தி சம்பாதிச்சதே நிக்காம போயிடுது, இந்த மாதிரி வர்றது எத்தனெ நாளைக்கிருக்கும்!" என்று அடுத்தவன் சொன்னான்.

பக்கத்திலிருந்த இன்னொருவன், எரிந்து கொண்டிருந்த சுருட்டைப் பக்கத்தில் வைத்துவிட்டு, "அந்த லச்சுமி தேவிக்கு நியாயமில்லேடா -- இருக்கறவங்க வீட்டுக்கே போறா. முந்தா நாள் இவன் மச்சானுக்கு சீட்டாட்டத்துலெ அம்பதாயிரம் ரூபாய் வந்துதாம்! இத்தனெ பேரு காசில்லாம சாவறாஙக. அந்தச் சீட்டாடடத்துலெ விழுந்து என் மருமகன் கடைசிலே என்ன பண்ணான் தெரியுமா? ரயில்ல தலையக் கொடுத்துச் செத்தான். பெண்டாட்டி,, நாலு பசங்க எல்லாரும என் வீட்டுக்கு வ்ந்துட்டாங்க—காலம் பாத்தியா எப்படி இருக்குன்னு!" என்று சொன்னான்.

இந்தப் பேச்சையெல்லாம் கேட்டுக் கொண்டு, புல்லய்யா அங்கேயே நின்று கொண்டிருக்கவே, அந்த மேஸ்திரியே சொன்னான்: "போவட்டும், இன்னெக்கி ஒரு நாளு வேலெ செய்யி--நாங்களே நெறைய பேரிருக்கறோம்!" மற்றவர்களும் வேண்டாம் என்று சொல்லவில்லை. புல்லய்யா சுண்ணாம்பு கலந்தான்--கொஞ்ச நேரம் சுமந்து சென்றான்--ஆனால் சுறுசுறுப்பாக இல்லை. மத்தியான நேரத்துக்கு அந்தப் பெரிய மேஸ்திரி, "பாத்தியா! அவன் வேலையெ --பொம்பளையக் காட்லியும் மோசம்--இந்த மாதிரி ஆளெ வெச்சிக்கிட்டா எனக்கென்ன லாபம்? இந்தா, இந்த அரெ ரூபா வாங்கிக்கிட்டுபோ!" என்று சொல்லி அனுப்பிவிட்டான்.

புல்லய்யாவுக்கு அந்தப் பெண்கள் எதிரில் இப்படிச் சொன்னது மிகவும் அவமானமாகிவிட்டது. அந்த அரை ரூபாயை அவன் முகத்திலேயே அடித்து விடலாம் என்ற எண்ணம் வந்தும், கை போவில்லை. வீட்டில் மல்லுவும் குழந்தையும் நினைவுக்கு வந்தனர். அவர்கள் பசியோடு இன்னேரம் அழுது கொண்டிருப்பார்கள். இது ஒரு வேளைக்காவது உதவும் என்று வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

வழியில் ஒரு மூன்று மாடிக் கட்டடம் தென்பட்டது. நின்று அண்ணாந்து பார்த்தான். 'அது மேலெ ஏறிப்பாத்தா பட்டணம் முழுக்கத் தெரியுமில்லே! ஏறினா நல்லா இருக்கும்--" ஆனால் தான் இந்த ஜன்மத்தில் ஏற முடியுமா?

அதற்குள், 'அப்பா!' என்று கூப்பிட்டது கேட்டது. மல்லு அங்கே எப்படி வந்தான் -- எதாவது பஸ் அல்லது காருக்கடியில் மாட்டிக் கொண்டிருந்தால் -- வந்து கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, உடனே மகன் கஷ்டத்தோடு பேசினான். மகனைத் தூக்கிக் கொண்டதும் எங்கு மில்லாத சக்தியும் ஆனந்தமும் வந்தது. நாலடி எடுத்து வைத்ததும்," அப்பா, அப்பா --

அதோ பூச்சாண்டி என்று காட்டினான்.

அவன், அன்றிரவு மரத்தின் கீழ் உட்கார்ந்திருந்த அதே ஆள்தான். ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தான். புல்லய்யா அவன் அருகில் சற்று நின்றான் -- அவன் பேசுவது கேட்டது. 'உலகமெல்லாம் மோசம் தான் -- எல்லாரும் சேந்து என்னெ மோசம் பண்ணிட்டாங்க. அதோ அவன் என் பணத்தெ வெச்சி மூணு மாடி வீடு கட்டிட்டான். என் நாய்க்குட்டிய எவனோ தூக்கிட்டுப் போயிட்டான் -- அது தான் மிஞ்சியிருந்தது. அதுதான் எனக்குச் சொந்தமாயிருந்தது -- அது தான் என் கஷ்டத்தெக் கேட்டுக்கிட்டு, என்மேலெ இரக்கம் காட்டி, என் கூடவே சுத்திகிட்டிருந்தது -- அதுவும் என்கிட்டே இல்லே -- நான் ஏன் தனியா உயிரோட இருக்கணும்? -- அய்யோ! நான் எவ்வளவு பெரிய பயந்தாங்கொள்ளி -- பயந்தாங்கொள்ளி தினமும் சாவறேன் -- எப்பவோ ஒரு நாளு நாதியில்லாமெ ரோட்டுலெ நாயி மாதிரி செத்துப்போறேன் -- இது நிஜம் -- ஆனா என் வேதனையெக் கேக்கறதுக்கு இன்னும் யாரிருக்காங்க?' --

அந்தப் பரிதாபமான அழுகை புல்லய்யாவுக்குப் புரியலாயிற்று. தான் தினம் தினம் செத்துக் கொண்டிருக்கிறோம். தனக்கேன் பிழைக்க முடியாதென்ற பயம்? அந்தப் பல்லில்லாத கிழவி மரவள்ளிக் கிழங்கை விற்று மகனையும் அவன் குழந்தைகளையும் காப்பாற்றவில்லையா? அந்தக் கொல்லத்துக்கார மேஸ்திரி எப்படியோ தன் குடும்பத்தோடு மகள் குடும்பத்தையும் பாதுகாக்கவில்லையா? தன் இடத்தில ஏதோ குறை இருப்பதாகத் தோன்றியது. தனக்கு மட்டும ஏன் அந்தக் கவலை? சட்டென்று மனைவி சொன்ன வார்த்தைகள் புரியலாயின: 'இந்த உலகத்துலே எல்லாரும் ராஜா ஆக முடியாது. எல்லோரும் பிச்சை கேக்கவும் மாட்டாங்க -- ராஜாவுக்குத் தக்க வாழ்க்கை ராஜாவுக்கு. பிச்சைக்காரனுக்குத் தகுந்தது பிச்சைக்காரனுக்கு. ராஜாவெக் காட்லியும் பிச்சைக்காரனே சுகமாய் இருப்பான். ராஜாவுக்கு மகராஜா ஆகணுங்கற ஆசெ இருக்கும். அந்த ஆசையினாலெ அவனுக்கு நிம்மதி இருக்காது. பிச்சைச் காரனுக்கு வயிறு நிறைஞ்ச நாளு

சுகம் -- இல்லாத நாளு கஷ்டம் -- அவ்வளவு தான்! தனக்கு மாசச் சம்பள வேலெ கிடைக்கணும்னு ஏன் அவ்வளவு ஆத்திரம்? இபபடியே போகட்டும -- நல்ல நேரமிருந்தா ஏழெ பணக்காரனாக் ஆகமாட்டான்! அவன் ஒருத்தன் எபபடியோ மாடிவீடு கட்டிகிட்டு இருக்கறானில்லே!

இந்த யோசனைகளிடையில் புல்லய்யா வீடு சேர்ந்து விட்டான். பட்டணததில் முதல் முறையாகக் கிடைத்த சம்பாத்தியத்தை மனைவி கையில் வைத்த் உடனே, சின்ன விஷயத்துக்கும் சந்தோஷமடையும் அவள் முகம் ஒரு வினாடி பிரகாச மடைந்தாலும், உடனே, "எப்படி வந்தது?" எனறு கேட்டாள். எல்லாவற்றையும் விவரமாகச் சொன்ன பிறகு," இந்த மாதிரி இருந்தா பொழைக்காமெ ஏன் கெட்டுப்போறோம்," எனறு சொன்னாள்.

சாயந்திரம மகனை அழைத்துக்கொண்டு, கடைகடையாக வேலை கேட்டு அலைந்தான். திரும்பி வரும் போது, வீட்டருகில் சச்சரவு நடந்து கொண்டிருந்தது. பூனைக்காக அழுத பககத்து வீட்டம்மா, துக்கம் சற்றுத் தூரமாகப் போனதால், தன் வழக்கமான் சுயரூபத்தைக் காட்டிக கொண்டிருந்தாள. அந்தத் தெருவுக்கெல்லாம் அவளைக் கண்டால் பயம். ஆண்கள் கூட அவள் வாயைத்திறந்தால வீட்டை விட்டு வெளியே போய்விடுவார்கள். புல்லய்யா அப்போது தான் அவளைச் சரியாப் பார்த்தான். வயது முப்பத்தைந்து நாற்பதுக்கிடையில் இருக்கும் குழந்தைகள் கிடையாது. அதனால் ஆள் பார்வைக்கு முப்பதுக்குள் இருப்பது போல் தெரியும். தொண்டை பலம் இருந்தது அவளுக்கு. அவளிடம் பெண்ணுக்குண்டான நளினம் ஒரு பாகமிருந்தால், மீதி மூன்று பாகம் புருஷத்தன்மைதான்! கணவன் பெயருக்குத்தான்! அவனே மனைவி, இவள் தான் கணவன் என்று அந்தத் தெருவிலுள்ளவர்கள் சொல்லிக் கொள்வார்கள், அவள் எதிரில் இல்லாத போது!

புல்லய்யா போய்ச் சேர்ந்த பிறகும் அந்தம்மாவின் சத்தம் குறையவில்லை. நீலி மெல்லிய குரலில் கொடுத்த பதிலை அவள் காதில் வாங்கவே இல்லை. கணவனைப் பார்த்ததும் நீலி வீட்டுக்குள் போய் விட்டாள். கேட்ட போது புரிநதது : வீட்டைக் கணவன் தெரியாமல் இரண்டு ரூபாய் வாடகைக்கு- கொடுத்துவிட்டானாம , இன்னும ஒரு ரூபாய் சேர்த்துக் கொடுக்கவில்லையென்றால் காலி செய்தாக வேண்டுமாம் --

"அவளுககு இவ்வளவு வாய் வந்துவிட்டதா?" என்று கேட்டான். புஸ்ஸுன்னு சொல்லிக்கிட்டிருந்தாங்க. அந்தக் கோவம் இந்தக் கோவம் எல்லாம் சேந்தது!"

"குழந்தைங்க சத்தம் போடாமெ -- பெரியவங்களா போடுவாங்க? வரட்டும், சண்டை எப்படித் தொடங்கறாளோ பாக்கறேன். வாயெக் குடுத்தாச் சும்மா வுடாதே!"

நீலி சிரித்தாள். "அவங்க வாயெக்குடுத்தா, நானும் குடுத்தா என்னா இருக்ககுது? என தப்பு ஒண்ணும் இலலே --- நான் எதுக்கு அவங்களே மாதிரி கத்தணும்? கோவத்தெயெல்லாம கொட்டிக்கிடட்டும் . ."

"எலலாததெயும் கொட்டிக்குவானா -- சுடுகாட்டுப் போறவரெக்கும் இருக்குமா?"

"உடம்புலே புண்ணு எவ்வளவு நாளு இருக்கும்? அது சரியாகலேனனா மனுஷன் என்னா ஆவான்? அதே மாதிரி கெட்டது மனுஷனுக்குள்ளே எவ்வளவு காலம் இருக்கும்னு எங்க பாட்டி சொல்லுவா. நல்லதுக்கு முன்னாடி கெடடது தாழ்ந்து போகலேன்னா இந்த உலகமே இருக்காது."

புல்லய்யா இவ்வளவு கேட்டதற்குப் பிறகு பேசவில்லை. அன்று இரவு தூங்குவதற்கு முன்னால் நீலி முந்திய இரவு நடந்த விஷயத்தை எடுத்தாள். புல்லய்யா திகிலோடு ஒன்றும் பேசவில்லை. அவளே மௌனமாக இருந்த கணவனிடம் மெல்லச்சொன்னாள் "பாரு! இப்படியே பறவைங்க மாதிரி இருந்து செத்துப்போலாமே தவிர, திருட்றதுக்கு மட்டும் போகவே போவாதே!"

புல்லய்யா, தான் இனிமேல் திருடுவதற்குப் போவதில்லை என்று தன் முடிவைச் சொன்னான். சற்று நேரததிற்குப் பிறகு, " ஏதோ தவறிப் போயிட்டேன். ஏதோ பொழெய்க்கிற வழி தேடலாம்னு நினைச்சிகிட்டேன். மறுபடியும் என்தலை போனாலும் அந்த மாதிரி வேலைக்குப் போவேனா!" என்று சொன்னான்.

"நானும் யாா வீட்லியாவது வேலெ பாததாக்கா ரெண்டு பேரும சம்பாதிககறது சரியாயிருக்குமில்லே?" என்று கேட்டாள்.

புல்லயயாவுக்கு அந்த நிமிஷத்தில் தன கடந்த கால வாழ்க்கை முழுவதும நினைவு வந்தது. மெய்ன் ரோட்டில் கட்டிக் கொண்டிருந்த வீட்டருகில் பெண்கள் மேல் ஆண்கள் வீசும் சொற்களை நினைவு படுத்திக் கொண்டான்.

"என்னத்துககு, வேண்டாம்" என்று சொல்லிவிட்டான்.

அதற்கடுத்த நாள் இவர்களையும அவர்களையும் வேலைக்காகக் கேட்டான். மறுபடியும் சிந்தியா கம்பெனி, நேவல் பேஸ், ஹார்பர் ஆகிய இடங்களுக்குப் போனான். பிடிக்காதவங்க காலெல்லாம் பிடித்தான். ஆனாலும் உபயோகமில்லை. மத்தியானம் ஒரு தெற்கத்திய வியாபாரியின் மூட்டைகளைச் சுமந்தான. சாயந்திரம் வரைச் சுமந்தததறகு முக்கால் ரூபாய் கொடுத்தான்,. தனக்குச் சந்தோஷமில்லையென்றாலும், நீலிக்கு அதுவே போதுமென்றிருந்தது. அந்த இரவெல்லாம் வேதனைதான். மத்தியானம் குழந்தைகள் பசியோடு அழுது கொண்டிருந்ததால் இந்தப் பக்கத்துவீட்டு இளம் பெண் அவர்களுக்குச் சாப்பாடு போட்டாளாம். -- அவள என்ன ஜாதியோ -- வயிறு காயும் போது ஜாதியைப் பற்றி என்ன கவலை

என்று நினைத்தான். சிந்தனைச் சுழலில் அன்றிரவு தூக்கம் இன்னும் தூரமாகிவிட்டது. எதிரில் மரத்தடியில் பூச்சாண்டி படுத்திருந்தான். இலேசாகக் குளிரெடுத்தது. உப்பங்கழிப் பக்கத்தில் ரயில்வே லைன் இருந்தது. போயக்கொண்டிருந்த ரயில் விசிலடித்தது --பயங்கரமாக! சிந்தனைகள் எல்லை கடந்து மனிதனைக் கையாலாகாதவனாக்கின -- ரயிலடியில் விழுந்து விட்டால் -- நினைப்பு வந்தது! சேச்சே! -- ஆம்பளையாப் பொறந்தேன் -- கால் ரூபாய் சம்பாதிக்க முடியாதா? மனைவியும் பிள்ளைகளும் என்ன ஆவாங்க?' அவர்கள் அழுது கொண்டிருப்பது போல் காட்சி அப்போதே கண்ணெதிரில் தென்பட்டது. 'என் மகனே! என் மல்லு!' என்று அழுதுவிட்டான் -- 'என் பொழப்பு அழும்படியா ஆயிட்டுதே' என்று சொல்லி மேலும் அழுதான். அந்தத் தூக்கத்தில் ஏதோதோ யோசித்தான் -- 'வேலை இல்லேன்னா எப்படிப்பொழய்க்கறது? ஊர் முழுக்கத் திரிஞ்சாலும் காலணா பேற மாட்டேங்குது. ஏழெங்களுக்கு ஆதரவு எதுவும் கிடையாது -- பணக்காரங்களுக்கோ -- எப்படி வாழ்ந்தேன். எனக்கு இந்த 'மாதிரி கதியெக் கொண்டு வந்தியே கடவுளே!' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

அப்படி யோசனைகளில் ஆழ்திருக்கும்போது தன்னையறியாமல் தூங்கிவிட்டான். ஏதோதோ கனவுகள் வந்தன. காலையிலெழுந்த போது மறுபடியும் இதயத்தில் கனமேறத் தொடங்கியது. பாதங்கள் தேயும் அளவு திரிந்தான். தென்பட்டவர்களையெல்லாம் எதிர்பார்ப்போடு நம்பிக்கையோடு கும்பிட்டான். ரயில்வே ஸ்டேஷனுக்குப் போனால், லைசன்ஸ் பெற்ற கூலிககாரர்கள் அவனை அங்கே நிற்க விடவில்லை. ஒரு கிழவி சுமக்க முடியாமல் சிறிய மூட்டை ஒன்றைத் தூக்கிக் கொண்டுவந்தாள். போகட்டும் பாவம் என்று மூட்டையை வாங்கிக் கொள்ளப் போனால், கூலிக்காரன் என்று நினைத்து, 'வேணாம் வேணாம்' என்றாள். வண்டியில் உட்கார வைத்தபிறகு, "தம்பி, நீ நல்லா இருப்பே!" என்று ஆசீர்வதித்தாள். ஒரணா காசு கூடக் கொடுக்கவில்லை.

நலம் ஏது? -- நாள் முழுவதும் எப்படித் தள்ளுவதென்ற கவலையே வரவர இதற்குப் பயம் -- அதற்குப் பயம் -- பசி வேறு பிடுங்கத் தொடங்கியது. கடமையுணர்ச்சி வேறு கொன்று கொண்டிருந்தது. 'எதெ வெச்சி இந்தக் குடும்பத்தெக் காப்பாத்தறது கடவுளே!' என்று பட்டணம் முழுவதும் காக்காய் போல் திரிந்தான். யாரோ 'தன்னைப் போல ஒருவன். ஆனால் தன்னைவிடத் திடமான ஆசாமி. பட்டணத்தில் நன்றாக அனுபவப்பட்டவன் -- சொன்னான். "அண்ணே! கவர்ன்மென்ட்காரன் நம்ம துணையாலே அந்த வெள்ளெக்காரனெத் தொரத்தினான் -- நம்மாலேதான் அவன் ஆட்சி நடத்தறான் பாரு, நம்மள மாதிரி ஏழைங்க செத்துச் சுண்ணாம்பாய்கிட்டிரக்கறாங்க. எங்கெ பாத்தாலும் பஞ்சம்தான்

-- தேசத்துலெ ஜனங்க எப்படி பட்டினியிலெ செத்துகிட்டிருக்கறாங்க தெரியுமா . . ."

"ஆமாண்ணே! நம்ம கவர்ன்மெண்ட்காரன் சின்னவன் பெரியவன் ஆனாக்கா நம்ம நிலமெ நல்லா'ருக்காதா?" என்றான் புல்லய்யா.

"நீ ஒரு சரியான பட்டிக் காட்டானா இருக்கறே. கவர்ன்மெண்ட்காரங்க பெரியவங்கதான். அவங்க சரியா வேலெ செஞ்சாக்கா நம்ளெ மாதிரி ஆளுங்களுக்கு வேலைக்கா பஞ்சம்?"

"அதேன் செய்யமாட்டாங்க?"

"செஞ்சா இந்தப் பஞ்சமேன் இருக்குது? ஏழைங்க பட்ற கஷ்டத்தெ என்னான்னு சொல்றது? அதுக்கு ஆரம்பமும முடிவுமில்லே. இந்த ஜனங்க எதுக்கும் உபயோகமில்லாதவங்களாயிட்டாங்க. லஞ்சம் கொடுக்கறவங்களுக்கு வேலெ குடுக்கறாங்க. என்னெமாதிரி குடுக்க முடியாதவங்களெ வேலையிலே'ருந்து எடுத்துட்டாங்க. இவங்கெல்லாம் இந்து தர்மத்தெ எப்பொ அனுசரிச்சுப் போறாங்களோ அப்பொ நாமெல்லாம் சுகப்படலாம -- இந்து தர்மத்துலெ, நியாயமா நடந்து கிட்டு, அவங்களுக்கு முடிஞ்சவரெக்கும் பக்கத்திலெ இருக்கறவனெக் கவனிக்கச் சொல்லி - சொல்லி இருக்கறாங்க!"

சொல்லிவிட்டுப் புல்லய்யாவும் மல்லுவையும், அந்த ஆள் உடன் அழைத்துச் சென்றான். சிறிய காஃபி ஹோட்டல்--சிறிய பெஞ்ச்! எல்லா இடமும் ஈக்கள், கொசுக்கள் மயம்.

"இதையாவது குடி . ."

பசியோடிருந்தால் மறுப்புச் சொல்லவில்லை. குடித்தபிறகு ஏதோ குற்றம் செய்தது போலிருந்தது. மல்லுவும் குடித்தான்.

வெல்லம் போட்ட டீ அவனுக்கு மிகவும் ருசியாக இருந்தது. மாலையாகிக் கொண்டிருந்தது -- வீட்டில் மனைவியும் மகளும் நினைவுக்கு வந்தார்கள். தானாவது யாரோ ஊற்றிய டீயை ஊற்றிக் கொண்டான். அவர்கள் கதி?

அந்தப் புதிய சிநேகிதன், "மீட்டிங்குக்கு வரல்லியா?' என்று கேட்டான். "மீட்டிங்கின்னா என்னா? " என்று கேட்டான் புல்லய்யா.

"தெரியாதா? சீக்கிரததிலெ எலக்ஷன் வரப்போவுது. யாருக்கு ஓட்டுப்போட்டா என் தொல்லை தீருமோ அவனுக்குப் போடப் போறேன். பெரிய மனுஷங்க இந்தப் பஞ்சத்திலெ நல்லாப் பணம் பண்ணிகிட்டாங்க. எங்கெ பாத்தாலும் அநியாயம் தான் -- எங்கெயும் லஞ்சம் தான் -- என்னெ மாதிரி ஆளுங்க பொழப்பு என்னாச்சி? என்னாலே வாழ முடியலே -- என் கஷ்ட்த்தெ என் தங்கச்சியாலெ பாக்க முடியலே . . ."

புல்லய்யா அவ்சரமாகக் குறுக்கிட்டு, " என்ன பண்ணிட்டா?"என்று கேட்டாள்.

அந்த மனிதனுடைய கண்கள் ஈரமாயின. அதற்குள் ஆண்மை தலையெடுத்தது. "என் த்ங்கச்சி மானத்தெ வித்துகிட்டா. கத்தியாலெ

வெட்டணும்னு நினைச்சேன்! கத்தி சம்பாதிச்சேன். அன்னைக்கி ஒரு போடு போட்டிருப்பேன். ஆனா ரெண்டு நாளாக் கஞ்சியில்லே -- நான் எப்படியோ இருந்துட்டேன். ஆனா என்னோட தாயில்லாத மூணு பிள்ளைங்க . .? அவளோட சம்பாத்யம் தான் அவங்களெ உயிரோட வெசசிருந்தது. அன்னைக்கி ராத்ரி அவ கஞ்சி ஊத்தலேன்னா எல்லாம் முடிஞ்சி போயிருக்கும்! என்ன பண்ணச் சொல்றே'ண்ணா?"

புல்லய்யாவின் மனம் திடுக்கிட்டது. 'அய்யோ பாவம்! என்று நினைத்தான்.

"இதெல்லாம் பொய்யில்லே'ண்ணா! நாலு நிமிஷம் இந்த உலகத்துலெ இருந்தாலும் நியாயமா இருந்தவனுக்குத்தான் பேரு -- எனக்குப் பசிக்குதுன்னு ஊர்லே இருக்கறவங்களெப் பத்தியெல்லாம் பொய் சொன்னாக்கா கடவுள் சும்மா இருக்க மாட்டார். இந்தப் பெரிய மனுஷங்களெக் கொல்லச் சொல்லி நான் சொல்ல மாட்டேன். அவங்களுக்கு நம்ம மாதிரி ஆளுங்களோட கஷ்டம் தெரியாது. காவடி சுமக்கறவனுக்குத்தான் அதோட கனம் தெரியுமே தவிர மத்தவங்களுக்கு என்ன தெரியும்? ஈச்சங்காயெக் குடுத்துப் பனங்காயெ வாங்கணும்னு பாக்கறாங்களே தவிர, பனங்காயெ நம்ம மாதிரி ஏழெங்களுக்குக் குடுத்து, நம்மகிட்டெயிருந்து ஈச்சங்காயளவு பக்தியெ வாங்கிட்டா எவ்வளவு நல்லா'ருக்கும்?"

புல்லய்யாவுக்கு இந்தப் பேச்சு மிகவும் பிடித்திருந்தது. தன்னைவிட மோசமான நிலையில் அவதிப்படுபவர்கள் இந்த உலகத்திலிருக்கும் போது தான் எதற்கு இவ்வளவு வெறி பிடித்து அலைய வேண்டுமென்று தோன்றியது. தான் படும் வேதனைகள் அவ்வளவு மோசமில்லை என்று நினைத்தான்.

மீட்டிங் நடக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்றான் அந்த ஆள். அங்கு தன்னைப் போன்றவர்கள் ஏராளமாக இருந்தார்கள். அவர்களில் பலபேர் தொழிலாளர்கள் -- மத்திய வாக்கத்தினர்! அவர்களைப் பார்க்கப் பார்க்கப் புல்லய்யாவுக்கு என்றுமில்லாத ஆனந்தம் பிறந்தது. அநேகமாக இந்த ஆயிரக்கணக்கான மக்கள் தன்னைப் போலவே கஷ்டப்படுபவர்தான் போலும்? இல்லையென்றால் மீட்டிங்குக்கு எதற்கு வரவேண்டும்? -- அதோ தன் பக்கத்து வீட்டிலிருந்த ஜேப்படித் திருடன் இவனால்தான் தானும் திருடப் போனான்! எவ்வளவு சத்தமாகக் கத்துகிறான்! மக்களிடையே இவ்வளவு ஆரவாரம் -- தான் எப்போதும் இது மாதிரி பார்த்த தில்லை. ஜனங்களிடையே இவ்வளவு உற்சாகம் இருந்தது. தனக்கேன் இல்லாமல போகவேண்டும்? . . . ஒரு மனிதர் ஒல்லியாக பலவீனமாக இருந்தார். காற்றடித்தால் பறந்து விடுவாரோ என்னவோ? மேடையில் ஏறிய உடனே 'வாழ்க, வாழ்க!' என்ன கோஷங்கள் முழங்கின! புல்லய்யாவும் 'வாழ்க!' என்று கத்தினான். அப்பாவைப் பார்த்து, மகனும் தொண்டை

கிழிவது போல் கத்தினான்.

தன் பக்கத்திலிருந்த நண்பன் சொனனான் · "அண்ணே! சத்யம் என்னைக்குமே ஜெயிக்கும். ஊர்ப்பெரிய மனுஷங்கெல்லாம் அந்த வெள்ளெக்காரங்க காலத்திலெயே நல்லா முழுங்கக் கத்துகிட்டாங்க. நல்லாப் பழக்கமாயிட்டுது -- விட்டுப் போகுமா? நாளுக்கொரு விலெ நாளுக்கொரு புது வரியிலெ உலகத்தையே கொள்ளை அடிக்கிறாங்க -- இவங்க ஆசையிலெ மண்ணு விழாதா? எல்லாரும் மாயையிலெ மயங்கிட்டாங்க -- இந்தப் பசங்கெல்லாம் இன்னும் எத்தன நாளுக்குப் பொழய்யக்கப் போறாங்க! அரிச்சிந்திர மகாராஜா -- படாத கஷ்ட்மெல்லாம் பட்டாரு. சுடுகாட்ல வெட்டியான் வேலெ செஞ்சாரு -- ஆன்ா மகாராஜா செத்துப போயிட்டாரா? வாழ்க்கைன்னா அது வாழ்க்கே -- பாத்தியா அந்த மனுஷன் எப்படி இருக்கறாரோ?"

புல்லய்யா ஆச்சரியத்தோடு பார்த்தான். அந்த ஆள் மறுபடியும் பேச்சைத் தொடர்ந்து, "நியாயம் எங்கே போவும்? இந்த ஏமாத்தறவங்கெல்லாம் கடைசியிலெ தெரு நாயிங்க மாதிரி செத்துப் போவாங்க! இந்தச் சின்னவங்கெல்லாம் மேலெ எழுந்திருக்கப் போறாங்க. இவங்ககிட்டெ தர்மம், நியாயம் இருக்குது -- கெட்டதை எல்லாம் ஒழிச்சிடுவாங்க. இனிமே அவங்க ஆட்டமெல்லாம நடக்க விடமாட்டாங்க ஆவட்டும -- அவர் பேசப் போறாரு -- அதெக் கேளு . !"

சொற்பொழிலாளா ஏர்க்குச்சி ` போல இருநதாரே ஒழிய, சொற்பொழிவைக் கங்கைவெள்ளம் போல் ஒரு மணி நேரத்துக்கு மேலாகவே முழககினார். எத்தனையோ முறை மக்கள உற்சாகத்தோடு, 'வாழ்க, வாழ்க!' என்று கோஷங்களையோ முறை மக்கள் உற்சாகத்தோடு, 'வாழ்க, வாழ்க!' என்று கோஷஙகள போட்டார்கள். உணாச்சி வேகத்தோடு கத்தினார்கள். உட்கார்ந்திருந்தவர்கள் உணர்ச்சி பொங்கி எழுந்து முன்னாலே போய விழுந்தார்கள். 'மக்களாட்சி வராமல் எப்படிப் போகும்?' என்று சவால் விட்டார். சொற்பொழிவாளர் தன் பேச்சொலியில் தானே மெய்ம்மறந்து போய்விட்டார். மீட்டிங் முடியும் கட்டத்தில சுமக்க முடியாமல் தடுமாறிக் கொண்டு, உயிர்மேல், எதிர்காலத்தின் மேல் ஆசையோடு நம்பிக்கையோடு வாழும் அந்த மக்களிடையே அந்தச் சொற்பொழிவு சறறு நேரம் அமுதமாக இருந்து அந்தக் கஷ்டங்களை இலேசாக்கியது.

இந்தக் கடைசியில் நின்று கொண்டு, கலைந்து போய்க் கொண்டிருந்த மக்களை நோக்கி, யாரோ ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான். யாரது? "அப்பா! அதோ பூச்சாண்டி, என்று மல்லு காட்டினான். அந்தப் பூசசாண்டிதான் பேசிக் கொண்டிருந்தான். "அப்பாவிகளே!" ஒரு சிரிப்பு சிரித்தான். "அவனுக்கு வசம்பை ஊற்றி விட்டுவிட்டார்கள். அதான் இப்படிப் பேசுகிறான். ஆனால் மூளை

இல்லே! அவனுக்கு ஒன்றுதான் தெரியும் -- பேசுவது! திட்டும் நாக்கு நல்லதுக்கும் திட்டும், கெட்டதுக்கும் திட்டும். அவனுக்கு ஆட்களின் பெயர்கள் தெரியும். ஆனால் வரலாற்றின் போக்கே தெரியாது ! அப்பாவிகளாகிய உங்கள் கண்களில், அவன் அரைகுறை அறிவோடு மண்ணைத் தூவுகிறான். "'ஹஹ்ஹா' என்று சிரித்துவிட்டு," உங்களால் எத்தனைபேர் க்ராஸ்வோர்ட், ஜாக் பாட்டுக்காக மண்டையை உடைத்துக் கொள்ளாதவர்கள் -- எத்தனை பேர் கை தூக்குங்கள்! உங்களில் எத்தனைபேர் பெரும் பணத்தை வரதட்சணையாக வாங்காமல் கல்யாணம் பண்ணிக் கொண்டவர்கள்-- எத்தனைபேர் கை தூக்குங்கள்! எங்கிருந்தோ சுலபமாக சில ஆயிரங்கள் வந்து வாழ வேண்டும் என்ற பேராசை இல்லாதவர்கள் எத்தனைபேர் -- சொல்லுங்கள்! நீங்களெல்லாம் பேராசை எனும் மாயையில் விழுந்து அவனுடைய ஏமாற்றுப் பேச்சில் சிக்கிக் கொண்டு விட்டீர்கள்! அவன் எல்லாம் மந்திரம் போல ஆக வேண்டும் என்கிறான். நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக இருந்து வருவதை ஒரே நாளில் மாற்ற வேண்டுமென்று சொல்கிறான். செக்கு மாடு ஒரே நிமிஷத்தில் ஏர் மாடாக மாறிவிடுமா? அப்படிப் பேசுபவன் பைத்தியக்காரனடா பசங்களா"

அந்தப்பக்கம் போனவர்கள் பூச்சாண்டியைப் பார்த்து ஏளனமாக, உரக்கச் சிரித்தார்கள். பூச்சாண்டி மறுபடியும் பேசத் தொடங்கினான்· "பைத்தியக்காரன் இல்லையென்றால் -- மக்கள் மேலும் சம்பாதிக்க வேண்டுமென்று நடத்தும் போராட்டத்தில், இதுவரை மேற்கொண்டவற்றையெல்லாம் பாழாக்கிடச் சொல்லும் அவனை வேறென்ன சொல்வது? இருப்பதை அழிப்பதையே வேலையாக வைத்துக் கொள்ளும் சுபாவமுடையவன், எதையாவது வருங்காலத்தில் சாதிப்பானா என்பது எனக்குப் புரியவில்லை -- அதிருப்தியுற்ற மக்களிடையே அது போன்ற அர்த்தமற்ற ஆசைகளைக் கிளறி விடுகிறான். அப்படியென்றால் அவர்களுடைய ஆசைகளை ஆகாயத்திற்கு அனுப்பி விட்டு -- அதிருப்தியை மறக்கும்படியாகச் செய்கிறான்! அப்படிப் பட்டவர்களுக்கு இவன் ஆட்சிக்கு வந்து எவ்வளவு கொடுத்தாலும் திருப்தி இருக்காது -- உண்மையில் அத்தகையவர்களை இவன் ஒரு போதும் சுகப்படவைக்க முடியாது உன்னுடைய தவறான பிரச்சாரத்தால் அவர்களுக்கு இருக்கும் இன்பத்தையும் ஏன் கொடுக்கிறாய்? சுவரைக் கட்டும்போது, செங்கல் மேல் செங்கல்லை அடுக்குவது போல் இன்பம் தரும் வேலைகளைச் செய்தல் மட்டுமே அதிருப்தி இருக்கும். மனிதன் வாணிக்க முடியாத இன்பத்தை, ஆனந்தத்தை அடைவான். அத்தகைய மனிதர்கள் அதிகமாக இருக்கும் தேசம் தான் அமைதி, சுகம் ஆகியவை நிறைந்து காலாகாலத்துக்கும் நிலைபெற்றிருக்கும். உங்களுக்கெல்லாம் கஷ்டமாக இருக்கும் -- நான் என்ன சொன்னாலும்! தம்பி மாரே! நான்

கஷ்டப்பட்டிருக்கிறேன். மற்றொருவருடைய கஷ்டத்தைப் பகிர்ந்து கொள்ள முயற்சித்தவனப்பா நான்। ஏதாவது எனக்குச் சொல்வதற்கு உரிமையில்லை யென்றால் வேறு யாருக்கு இருக்கிறது? கேட்டா கேளுங்கள் -- கேட்காவிட்டால் போங்கள்। பாருங்கள், இப்போது எத்தனை குலங்கள், எத்தனை கட்சிகள் -- எததனை சங்கங்கள்। இத்தனைச் சங்கங்களிலிருந்தும் இவர்களெல்லாம் முன்னேற வில்லையே। ஒருவர் மேல மற்றொருவர்க்கு வெறுப்பு வளருமபடியாகச் செய்கிறார்கள். மனிதத்தன்மை மீது வெறுப்பை வளர்ப்பதற்குச் சங்கங்கள் வேண்டாம் தம்பி। என் தேசம் -- நினைத்துப் பார்தால், இந்த யுக சந்தியில் இவ்வளவு மோசமான நிலை வந்து விட்டதா என்று அழுகை வருகின்றது.

இன்னும் கேட்பவர்கள் யாருமில்லை என்றாலும், அப்படியே பேசிக்கொண்டே, கண்களில் நீர் வழிய முன்னால் நடந்து போனான்.

புல்லய்யா வீட்டை நோக்கி, உற்சாகத்தோடு நடைபோட்டாலும், வீடு அருகில் வரவர, மறுபடியும மனதில் இந்த வேளை எப்படியோ என்ற வேதனை கிளம்பியது. அன்றிரவு நீலி, பக்கத்து வீட்டம்மாவிடமிருந்தது சோளமாவைக் கடன்வாங்கி, கூழ் காய்ச்சி இருநததைக் குடித்தாள். அன்று இரவு யோசித்ததில், மறு நாள் கடைத்தெருவில், கூடை எடுத்துக்கொணடு, கூலி வேலைக்குப் போனால் நல்லதென்று தோன்றியது. பிறகு தூங்கிப் போனான்.

## 31

ஒவ்வொரு நாளும் எப்படிக் கடத்துவது என்ற கவலையில புல்லய்யா குச்சி போல் மெலிந்து விட்டான். ஒரு நாள் கூலி கிடைக்கும். அடுத்த நாள் ஒன்றும் இருக்காது. ஒரு நாள் கப்பலில் சரக்கு இறக்குவதற்குப் போனான். இரண்டு மூட்டைகளை ஒரே மூச்சில் சுமக்க வேண்டுமென்று ஆசைப்பட்டானே தவிர, ஒரு மூட்டையை இறக்குவதற்கே பெருங்க கஷ்டமாக இருந்தது. அடுத்தநாள் வேலையில்லை. தன் பலமெல்லாம் எங்கே போய்விட்டது என்ற சந்தேகம் வந்தது.

எங்கோ ஓரிடத்தில் வேலை கிடைக்கும, காகிதத்தில் எழுதி ரிஜிஸ்டர் பண்ணச்சொல்லி எவனோ சொன்னான். ஒரு நாளெல்லாம கஷ்டப்பட்டு , வாயைக் கட்டி காகிதத்தில் எழுத வைத்து, ரிஜிஸ்டர் பண்ணி அனுப்பினால் பதிலே வரவில்லை. 'இன்னைக்கு வரும். . . நாளைக்கு வரும்,' என்று பார்த்துப் பார்த்து அலுத்துவிட்டான்.' என்ன பட்டணம் இது காலையிலே எழுந்தா, பைசா இலலேன்னா நடக்காது. எங்க ஊரே பரவால்லே -- போயிட்டா நல்லா இருக்கும் எந்த விறகெ வித்தோ -- எந்தக் காயெவித்தொ பொழச்சிக்குவேன் -- ஆனா இந்த மாதிரி போனா, எல்லாரும் சிரிக்க மாட்டாங்க? இருக்கற ஊர்லியே பொழய்க்க மாட்டாதவன் அசலூர்லே போயி

எப்படிப் பொழச்சி உருப்படுவான்னு முன்னாடியே சொல்லிட்டாங்க. அந்த மாதிரி ஆளுங்க இப்பொ குச்சி மாதிரி இருக்கற புல்லய்யாவெப் பாத்து கேலி பண்ணமாட்டாங்களா? ஏதோ சம்பாதிச்சி மூட்டெ கட்டிகிட்டுப்போய் ஏக்கரா நிலம் எனக்குன்னு வாங்கிகிட்டேன்னா . . . கால் மேலெ கால் போட்டுகிட்டுப் பொழச்சிக்குவேன் . . . எப்படி வரும்? அன்றாடக் கஞ்சிக்கே தகராற்லே இருக்குதே -- வயிறே சமுத்ரம் ஆயிட்டுதே -- இந்த பாழப் போன வயித்துக்கு காலையிலெ எழுந்தாக்கா எதாவது போட்டாவணுமே!

இவ்வாறு தன்னிரக்கத்தில் அவதிப்பட்டான் புல்லய்யா. இந்தக் கவலை ஒரு நோய் போல ஒட்டிக்கொண்டது. ஒரு நாள் கூடை எடுத்துக்கொண்டு கடைத் தெருவுக்குப் போனான். அங்கே எல்லாரும் சிறுவர்கள் கிழவிகள் இருந்தார்கள். அவர்கள் மத்தியில் கூலிக்குப் போய் நிற்பதற்கு வெட்கமாக இருந்தது. இருந்தும் துணிந்து போய் நின்றான். சிறுவர்களெல்லாம், "வெக்கமாயில்லே! மாடு மாதிரி இருக்கிறியே!" என்று கேட்டார்கள். ஆனால், பசியில் துடிதுடித்துப் போவதற்குப் பதிலாக ஏதோ ஒரு வேலை -- என்ன செய்வது? தன் மகனை விட இரண்டு வயது மூத்த பையன்கள் கூட அங்குக் கூலி வேலை செய்யக் காத்திருந்தார்கள். 'அய்யோ! என் மகனெ இந்த வேலெ செய்ய விடுவேனா? முடியாது, முடியாது!' என்று சொல்லிக் கொண்டான். இப்படி நான்கைந்து நாட்கள் கூலிக்குப் போனான். சாயந்திரத்திறகுள்ளாக, ஒரு நாள் பத்தணா ஒரு நாள் அரை ரூபாய் கிடைத்தது -- ஒவ்வொரு நாள் ஒரு ரூபாய்க்கு அதிகமாகவும் கிடைத்தது --அன்றைக்கு கூடத் தனக்குச் சந்தோஷம் இல்லை. கூலிப் பணம், என்ன பணம் -- ஒரு காலத்திலெ எத்தனெ பேருக்கு என் கையாலெ கூலி குடுத்தேன்,' என்று நினைத்துக் கொண்டான்.

நீலி இந்த இல்லாத நிலையில் கூடக் கையைக் கட்டவில்லை. ஒரு நாள் பூச்சாண்டி கஞ்சி ஊற்றினாள். அவன் சாதாரணமாக யாரையும் கேட்கமாட்டான் -- யார் கொடுத்தாலும் வாங்கமாட்டான் -- இரண்டு மூன்று நாட்களுக்கொரு முறை யார் வீட்டருகிலாவது சென்று நிற்பான் -- பல பேருக்கு இவனிடத்தில் ஏதோ மகத்துவம் இருந்ததென்ற நம்பிக்கைஇருந்தது -- இவனுக்கு நிறைய வேதாந்தம் தெரியும் என்று சிலர் சொன்னார்கள். பூச்சாண்டி ஒரு நாள் வீட்டெதிரில் வந்து கேட்டான். நீலி, தனக்காக வைத்திருந்த நாலு சோற்றுப் பருக்கையையும், கஞ்சியையும் அவனுக்கு ஊற்றினாள். குடித்தான், சிரித்தான் -- அவன் என்ன சொல்லிக் கொண்டானோ நீலிக்குப் புரியவில்லை.

கடைசியில், புல்லய்யாவுக்குக் கடை வீதியில் கூலிக்காரனாக இருப்பது கஷ்டம் என்று தோன்றியது,. சிறுவர்கள் அவனைச் சுற்றிக்கொண்டு ஏதேதோ சொல்லலானார்கள். புல்லய்யாவின் தாடி,

குடுமியெப்பார்த்துப் பைத்தியக்காரன் என்று பரிகசித்தனர் சிலர். தான் பைத்தியக்காரானா? 'என் கிருதாக் குடுமி . . . அந்தக் காலத்துலே, சுற்றுப் பக்கத்துலெ எத்தனையோ ஊர்கள்ளே பேரு வாங்கிச்சி . . .!'

ஒரு நாள் ஒரு கிழவன் கூலிக்குக் கூப்பிட்டான். அந்தக் கழுதைச் சுமையைச் சிறுவர் யாரும் சுமக்க முடியாதென்று புல்லய்யாவைக் கூப்பிட்டான். கூலி பேசவில்லை. நீண்ட தூரம். பின்னாலேயே நடந்து போனான். கிழவன் ஏதோ தன் வீட்டுப் பிரச்சினைகளைப் பற்றிச் சொல்லிக்கொண்டு வந்தான். புல்லய்யாவுக்கு ஆச்சரியமாக இருந்தது — இவ்வளவு சொத்து சுகங்களோடு இருக்கும் மனிதனுக்கும் கவலை இருக்கிறதா என்று. உரல் போய் மிருதங்கத்திடம் தன் கஷ்டத்தைச் சொல்லிக் கொண்டதைப் போல், போயும் போயும் தன்னிடம் தானா சொல்லிக் கொள்ள வேண்டும்? 'நான் யார்கிட்டே சொல்லிக்கிறது? -- வீட்டு ரகசியம் வெளியே சொன்னா ஊருக்குக் கெடுதல்ன்னு சொல்ற மாதிரி, இவ்வளவு பெரிய மனுஷன் என்னெ மாதிரி கூலிக்காரன் கிட்டெ சொல்றாரே -- நல்ல மனுஷன் மாதிரி இருக்கறாரு. பணத்துக்குத் திண்டாடிகிட்டிருக்கறதா சொல்றாரு -- சொந்த மாடி வீடு இருக்குதாம் -- மகன் சம்பாதிக்கிறானாம் -- இதெல்லாம் பொய்யில்லேன்னா இவங்களுக்குப் பணக்கஷ்டம் எப்படி வரும்? ஒவ்வொரு பொண்ணுக்கும் பத்தாயிரமில்லேன்னா கரையேத்த முடியாதாம் -- பத்தாயிரமா? -- எனக்கு ரெண்டாயிரமிருந்தா பொழச்சிக்குவேன்! என்னமோ மரதுக்குத் தகுந்த காத்துன்.னு சொல்லுவாங்க! --'

'ஊம்' கொட்டியபடி, இப்படி யோசித்துக்கொண்டே போனான். ஒரு மாடி வீட்டருகில் நிறைய ஜனம் இருப்பதைப் பார்த்து, "அங்கெ எதுக்கு அவ்வளவு பேர் கூட்டமாயிருக்கறாங்க துரெ?" என்று கேட்டான். மகன் அவர்களைக் காட்டி, "அப்பா, அப்பா!" என்றான்.

"எம்ப்ளாய்மெண்ட் ஆபீஸ் -- அங்கெ வேலெ குடுப்பாங்க!"

"அப்படியா துரெ -- இந்த ஊர்லெ இந்த மாதிரி ஒரு இடம் இருக்குதுன்னு யாருமே சொல்லலே .. . நேரம் நல்லா இல்லாததனாலே இதுவரைக்கும் தெரியாம போச்சி!" அங்கெ போனாக்கா நேரம் நல்லா ஆனாலும் ஆகும்!" என்றான் அந்த ஆள் சற்றுப் பரிகாசமாக. புல்லய்யா அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. 'எவ்வளவு சீக்கிரம் திரும்பி வர முடியுமோ!' என்று ஓட்டமும் நடையுமாகச் சென்றான். கிழவன் வீட்டில் சாமான்களைப் போட்டுவிட்டு, கொடுத்ததைப் பதில் பேசாமல் வாங்கிக்கொண்டு, மடமடவென்று, திரும்பி வேலை கொடுக்கும் ஆபீஸ¬க்கு வந்தான்!

'எவ்வளவு பேர்!' என்று நினைத்தான். கூடையை வெளியே வைத்துவிட்டு, கை கட்டி நின்று, யாரைக் கேட்பது என்று பார்த்துக்

கொண்டிருந்தான். பலபேர் வெள்ளை வெளேரென்று உடுப்புகள், விலையுயர்ந்த ஆடைகள் போட்டிருந்தார்கள். தன்னைப் போன்றவர்களிருந்தாலும், தான் தான் எல்லாரிலும் அசிங்கமாக இருந்தான்.

"எனக்கு வேலெ வாங்கித் தரமாட்டீங்களா?" என்று கேட்டான் ஒருவரைப்பார்த்து.

அந்த ஆள் சிறு சிரிப்பு சிரித்துவிட்டு, "உள்ளே போய்ப் பார்டா" என்றான்.

அறைக்குள் கால் வைத்ததும், பியூன், "வெளியே போய்யா" என்றான்.

புல்லய்யா திடுக்கிட்டு அடிகளை மரியாதையுடன் பின்னுக்கு எடுத்து வைத்தால், மகனும் அதே போல் வைத்தான்.

அதற்குள் அவன் வெளியே வந்து, "போ, போ! இப்படி இருக்கிறியே, வுனக்கென்ன வேலெ குடுப்பாங்க? " என்றான்.

"ஒனக்குப் புண்யமா இருக்கும்'யா! கிராமத்துக்காரன், குழந்தெ குட்டிக்காரன். ஒரு காலத்திலெ நல்லா இருந்தவன் -- துரெகிட்டெ சொல்லி நீ ஏதாவது மாச சம்பள வேலெ வாங்கிக் கொடுத்தீன்னா -- உன் நன்றியெ மறக்கமாட்டேன்! ஏதோ என்னாலெ முடிஞ்சதெக் குடுத்துட்றேன்."

புல்லய்யா அபிநயத்தோடு கெஞ்சி முறையிட்டுக் கொண்டிருந்தான். சுற்று முற்றும் இருந்தவர்கள் சிரிக்கலானார்கள். பியூன் கோபத்தோடு, "அந்த மாதிரி லஞ்சம் குடுக்கறதெப் பத்திப் பேசாதே. பாரு, சுத்திப் பாரு, எத்தனெ போர்டு இருக்குதோ! ஒனக்குப் படிக்கத்தெரியாதுன்னா யாரையாவது கேட்டுக்கோ!" என்று சொன்னான்.

"தெரியாது'! என் பேச்சாலெ ஒனக்குக் கஷ்டம் கொடுத்துட்டேன். எனக்கேதாவது வேலெ கிடெக்கும் படியாப் பண்ணீன்னா உன் காலுக்குச் செருப்பா இருக்கறேன்!"

பியூன் ஆஃபீஸர் போலவே முகத்தைக் வைத்துக் கொண்டு, "போயா! வுனக்கென்ன வேலெ கிடெக்கும்? பெரிய பெரிய எம். ஏ, பி. ஏ படிச்சவங்களுக்கே இல்லேன்னா . . . போ, போ " என்று சொல்லிவிட்டு உள்ளே போய் விட்டான்.

புல்லய்யா நீண்ட நேரம் பார்த்தான். தன்னை யாரும் கூப்பிட வில்லை. அப்படியே அந்த வெராண்டாவில், கூடையைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான். மல்லு அப்பாவின் பக்கத்தில் நின்று கொண்டு இல்லாத பொல்லாத கேள்விகளெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தான். மத்தியானம் நெருங்கிக் கொண்டிருந்தது. கூட்டம் பெருமளவுக்குக் குறைந்தது. மல்லுவுக்கு எரிச்சல் வந்ததோ, அல்லது அந்தப் பிஞ்சு இதயத்தில் அப்பாவின் வேதனை தைத்ததோ -- மடமடவென்று போய் அறைக்குள்ளே எட்டிப் பார்த்தான். யாரோ ஒரு மனிதர் நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். 'அவர்தான் அப்பாக்கு வேலெ கொடுப்பாரு. எங்கப்பா மாதிரி நல்ல மனுஷனில்லே.

எங்கப்பாவுக்கு ஏன் வேலெ கிடைக்காது?' என்று நினைத்து, விறுவிறென்று அறைக்குள்ளே போனான். அநத ஆபீஸர் எதிரில நின்று, "எங்கப்பாவுக்கு வேலெ குடுக்கிறியா இல்லியா?" எனறு கேட்டான் பியூன் மடமடவென்று வந்து, வெளியே இழுத்துக்கொண்டு போகும் போது, இன்னும் உரக்கச் சொன்னான் "எங்கப்பாவுக்கு வேலெ குடுக்கலேன்னா பாருங்க - நாய்க்குட்டியெக் கொணடுவந்து கட்டிக்க வெக்கறேன்!"

அங்கே இருந்தவர்கள் வாய்விட்டுச சிரிக்கலானார்கள். பியூன் சத்தமாக, "போறியா, இல்லெ கழுத்தெப் புடிச்சித் தள்ளணுமா?" என்று புல்லய்யாவை அதட்டினான். மல்லு கோபத்தோடு அந்தப் பியூனை முறைக்கவே "வெங்காயம் மாதிரி இருக்கறான், எவ்வளவு கலாட்டா பண்றான் பாரு!" என்று பியூன் பரிகாசமாகச் சொன்னான்.

புல்லய்யா இன்றைக்கு இரண்டில் ஒன்று பார்க்காமல நகர்வதில்லை என்ற முடிவுடன், சற்று வெளியே தள்ளி நின்று கொண்டான். மகன் கூடையில் உட்கார்ந்தபடி ஆபீஸையே பார்த்துக்கொண்டிருந்தான். அப்போது ஒருவர் மிகவும் நல்ல மனிதராகத் தென்பட்டார் -- வெளியே போய்க் கொண்டே, ' எந்த ஊர்ய்யா நீ "என்று கேட்டார். புல்லய்யா மடமடவென்று அவர் பின்னாலேயே போய்க் கொண்டு, "துரெ எங்களுக்குத் தெற்குப்பக்கம் நவிரி. அங்கெ முடியாமெ பட்ணம வநதேன் துரெ!" என்றான்.

"அப்படியா பாவம்!" என்று சொல்லிக் கொண்டே முன்னால் போகலானார்.

'பாவம்னு இரக்கம் காட்றார் இந்தத் துரெ -- இவருக்கு இந்த ஆபீஸ்லியே வேலெ -- என்கு வேலெ வாங்கிக் குடுப்பார்,' என்ற ஆசையோடு அவர் பின்னாலேயே போனான்.

அவருடைய வீடு அங்கு அருகிலேயே இருந்தது. வீட்டுக்குள் காலை வைத்துக் கொண்டே, "உபயோகமில்லே -- போயிடு,' என்று சொல்லிக் கதவை மூடித் தாள் போட்டார். ஆனால் புல்லய்யா அந்த வாயிற்படியை விட்டு நகரவில்லை. சாப்பாடு சாப்பிட்டு விட்டுக் கதவைத்திறந்த போது, புல்லய்யா அங்கேயே இருப்பதைப் பாரத்து, "என்னய்யா! உன்னெ மாதிரி ஆளுங்களுக்கு வேலெ கிடைக்கறது கஷ்டம்," என்று சொன்னார்.

"துரெ, உங்களெ மாதிரி கருணெ இருக்கறவங்களே வெறும் கையைக் காட்னா, எங்கள மாதிரி ஆளுங்க எப்படிப் பொழெய்க்கறது? எனக்கு உங்களெத் தவிர இங்கெ யாரும் கதியில்லே -- கருணை காட்டலேன்னா செத்துப் போவேன் --"

இவ்வளவு கெஞ்சும் குரலைக்க கேட்டு, அவர் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, உள்ளே வரச் சொன்னார். மிக மரியாதையோடு வந்து தரையில் உட்கார்ந்து, மகன் கையாலும் கும்பிட வைத்தான்.

"ஏதோ என்னா செய்ய முடியும்னு நீ கடவுளெ நம்பறா மாதிரி

நம்பறே. ஆனா என் கையிலெ ஒண்ணுமில்லே. உன் பேரெ அந்த ரிஜஸ்டெர்லெ எழுத முடியுமோ என்னவோ? -- "

"அது போதும் துரெ. இன்னெக்கி இல்லேன்னா நாளக்கிக் குடுக்க மாட்டாங்களா!"

"அதுலெ எழுதிட்டதுனாலே வுனக்கு வேலெ வந்துடாது. அதெ வெச்சி உன்னெ எங்கெயாவது அனுப்பறதுக்கு உபயோகப் படும். அங்கே நீ இதுவரெக்கும் கவர்னமெண்ட்லியோ இல்லெ வேறெ எங்கேயாவது வேலெ செஞ்சியான்னு பாப்பாங்க. அதுல பேரு இருக்கறதனாலெ மட்டும் வுனக்கு வேலெ கிடெசசிடும்னு நினெக்காதே"

புல்லய்யாவின் பிரகாசமடைந்த முகத்தில் மறுபடியும் கொஞ்சம் கவலை படர்ந்தது --ஆனாலும் மனதில் ,. இந்தத் துரை தப்பாமல் தனக்கு வேலை வாங்கித் தருவார் என்ற நம்பிக்கையோடு, துரெ! நீங்க என்ன சொன்னாலும் உங்கக் காலெ விட மாட்டேன். இவன் முகத்தெப் பாருங்க. நல்ல நாளுலெ இந்தத் தலெச்சன் மகன் புறந்தான் துரெ! இவன் பொறந்த நாளு நல்லா தூறல் விழுந்துது. எனக்கு ஏதோ ஒர வேலெக்கு நீங்க ஏற்பாடு பண்ணீங்கன்னா, என் மகன் நல்ல நிலெக்கு வரமாட்டானா? நியாயத்தெ காப்பாத்த மாட்டானா? திருடன்களெப் பிடிக்கற துரெ ஆகமாட்டானா? உங்களெ மாதிரி நல்ல மனுஷங்க கேப்பீங்கன்னு தானோ எங்களே மாதிரி ஏழெங்க எங்கக் கஷ்டத்தெச் சொல்லிக்கிறோம். பாருங்க -- இந்தக் கந்தத் துணி தவிர வேறெ கட்றதுக்கு ஒண்ணுமில்லே.

சாப்பாட்டுக்கே இல்லாதப்பொ துணிக்கு எங்கே போறது? வாயெக் கட்டி வேலெக்கிக் காயிதம் அனுப்பிச்சேன் -- ஒண்ணும் பதிலே வரலே . . சாப்பாடு ஒரு வேளெக் கிருந்தா அடுத்த வேளெக்கில்லே. என் விஷயம் அப்படியிருக்கட்டும். குழந்தைங்க பட்டினியிலே செத்துகிட்டிருந்தா எப்படிப் பாத்து கிட்டிருக்கறது? இந்த வேளெ குடிச்சாக்கா நாளெக்கி இதே வேளக்கி ஏதாவது இருந்தா உண்டு! எல்லாரும் என்னெப் பாத்து நோயாளின்னு நினெக்கிறாங்க -- வயித்துக் கில்லாதபோதுதான் நோயி! நல்ல மனசுள்ள உங்களெ மாதிரி இளம் வயசுக்காரங்க சில பேரு வந்திருக்கிறீங்க!' என்று சொன்னான்.

"என்னாலே ஒண்ணும் செய்ய முடியாது'யா," பாவம், அவர் தன் உண்மை நிலையை இந்த அப்பாவி தெரிந்து கொள்ள வேண்டுமெனறு அழுத்திச் சொன்னாலும் புல்லய்யா விடவில்லை. வினாடிக்கு வினாடி தன்னுள் நம்பிக்கை பெருகிக் கொண்டிருந்தது. மறுபடியும் சற்றுத் தீனமான குரலில், ' செய்றவங்க எப்பவும் அப்படியே சொல்றாங்க துரெ! ஓர்த்தருக்கும் நான் கெடுதல் நினெச்ச தில்லே. என் பொண்டாட்டி விஷயம் உங்களுக்குத் தெரியாது. அவ கிட்டெ தர்மம், நியாயம் இருக்குது. அவளெக் கண்டா எனக்குப் பயம்! அவளோட

நல்ல குணத்தாலெ வர்ற பலன் இப்பொ இல்லேன்னாலும் பின்னாடியாவது எனக்கு வரும். அந்தக் கடவுளு என்னெ மாதிரி ஆளுங்களுக்குக் கஷ்டத்தெக் குடுத்துட்றாரு -- கடைசியிலே அவரே கருணெயோட உங்கள மாதிரி நல்ல மனுஷங்களெ எங்களுக்கு காட்றாரு. சாப்பட்றதுக்குச் சோறில்லே -- மாடி வீடும் பங்களாவும கேக்கலே -- ஒரு முழம் துணி, ஒரு பிடி சோறு கிடெச்சாப் போதும் துரெ! -- வேலெ செய்ய முடியாதவனில்லே -- திருட்டு வேலெக்குப் போனவனில்லே -- இந்தக் கஷ்டதசையிலெ உங்களெ அந்தக் கடவுள் காட்னாரு. உங்களுக்கு ஆயிரம் கும்புடு போட்றேன துரெ! எனக்கு ஒரு வழி காட்டுங்க," என்று சொல்லிக்கொண்டே புல்லய்யா சாஷ்டாங்கமாக அவர் காலில் விழுந்து விட்டான். மகன் தந்தையை அப்படியே பின்பற்றினான். எதிரில் நாற்காலியில் உட்கார்ந்திருந்த அவர் கண்கள் ஈரமாயின. சமையலறையிலிருந்து கேட்டுக் கொண்டிருந்த அவருடைய மனைவியின் கண்களிலிருந்தும் சில துளிகள் சிந்திவிட்டன.

அவர் அவனைத் தூக்கி விட்டார். என்ன சொல்வதென்று தோன்றவில்லை. அந்த நிமிஷம் தாம் ஏதாவது சொன்னால் புல்லய்யாவின் இதயம் வெடித்துவிடுமோ என்ற சந்தேகம் வந்தது. "நாளக்கிப் பத்துமணிக்கு ஆபீஸுக்கு வா, நானிருப்பேன்," என்று சொல்லி அனுப்பினார். புறப்பட்டவனைக் கூப்பிட்டு, "உன பேரு என்னய்யா? என்று கேட்டார்.

"புல்லய்யா, துரெ!"

"இந்தா, இந்த அரெ ரூபாயெக் கொண்டுபோயி உன் மகனுக்கேதாவது வாங்கிக் குடு."

சந்தோஷமாக வாங்கிக் கொண்டு, "உங்க நன்றியெ என்ன செய்தாலும் என்னாலெ தீத்துக்க முடியாது துரெ! . . . ஏதாவது வேலெ இருந்தாச் சொல்லுங்க -- விறகிருந்தா, பொளந்து குடுக்கறேன். இங்கெ சுத்தி இரக்கற களெ, முள்ளு, செடி எல்லாம் எடுத்துப் போட்டுட்றேன்!" என்று சொன்னான் புல்லய்யா.

"இப்பொ வேண்டாம் -- மத்தியானம் ஆயிட்டுது. இன்னொரு தடவெ பண்ணலாம்," என்று சொல்லி அனுப்பிவிட்டார். "பாவம்! அந்த மாதிரி கஷ்டப்பட்றவங்களுக்கு ஏதாவது முடிஞ்ச உதவி பண்ணுங்க," என்று அவர் மனைவி சிபாரிசு செய்தாள். உடனே ஒன்றும் சொல்லவில்லை. சற்று நேரம் பொறுத்து அவர் சொன்னார்: "ஏதாவது பண்ணனும்னு நினைக்கிவங்களுக்கு பண்றதுக்கு அதிகாரம் இருக்காது. நான் ஒரு குமாஸ்தா. முன்னாடியே எங்க ஆஃபீஸப் பத்தி ஜனங்க ஒரு மாதிரி பேசிக்கிறாங்க. எப்படியோ கஷ்டப்பட்டு அவனெ வேலெக்காப் பத்துப் பேரு கூட அனுப்பி வெக்கறேன்--ஆனா எடுததுக்றது என் கையிலெ இல்லெயே!"

'புல்லய்யாவிடம் சொல்ல நினைத்ததை மனைவியிடம் சொல்லி

விட்டார். அடுத்தநாள் மிகவும் பிரச்சினைக்கிடையில் பெயர் ரிஜிஸ்டராயிற்று. அன்று மாலை, வீட்டில் புல்லய்யாவுக்கு நிலைமையைப் புரிய வைத்தார் : "எங்கெயாவது வெலே காலின்னு வந்துதுன்னா ஒரு தடவெ அனுப்பற கடமெ என்னுது. அதுக்கப்புறம் உன் அதிரஷ்டம்". எல்லாவற்றையும் கேட்டபிறகு, புல்லய்யா நன்றி தொனிக்க, "அந்த அளவுக்குப் பண்றதுக்கு நல்ல மனுஷருங்க இல்லே துரெ! இந்தக் காலத்திலெ பசின்னா சோறு யாரு போட்றாங்க? அதுக்காக ஆர்ப்பாட்டம் பண்ணாக்கா யாரு சும்மா இருப்பாங்க? அங்கங்கே பெரிய மனுஷங்களும், கஷ்டம் புரிஞ்சிகிட்ட நல்லங்களும் இருக்கறதனாலெதான் உலகம் இன்னும் முழுகிப்போகலே. இல்லேன்னா இந்த சமுத்ரம் பொங்கி உலகம் முழுகிடாதா துரெ!" என்று சொன்னான்.

ஒரு வாரம், பத்து நாள் வரையில் அவ்வப்போது வந்து பார்த்துவிட்டுப் போனான். ஒரு நாள் அவர் சொன்னார் . "இதோ காயிதம்--சரியா அடுத்தவாரம் இதே நாளு பத்துமணிக்கு ஆபீஸுக்கு வா! இப்படி வந்தீன்னா பிரயோஜனமில்லே. ஒரு அரெக்கால் சட்டெ, நல்ல சட்டெ போட்டுக்கோ பாரு -- அந்தத் தாடி ஒண்ணும் நல்லால்லே--அந்தக்குடுமி எதுக்கு?-- அசிங்கமா இருக்குது. அதெ எடுத்துட்டு சாதாரண கிராப் வெச்சிக்கோ! பாக்கறதுக்கு அசிங்கமா இருந்தா வேலெ யாரு குடுப்பாங்க சொல்லு? நான் சொன்னா மாதிரி பண்ணிகிட்டு அந்த இடத்துக்குப் போ. அவங்க எதெச் சுமக்கச் சொன்னாலும சுமக்கணும்-- பயப்படாமெ பதில் சொல்லணும். உள்ளே போன உடனே இந்த மாதிரி சல்யூட் அடிக்கணும்!" என்று நன்றாக விளக்கிச் சொன்னார்.

அந்த நாள் வந்தது. கிருதாக் குடுமியை எடுத்து விட்டான். பக்கத்து வீட்டு ஜேப்படித் திருடனிடம் கடன் கேட்டதற்கு, அவன் போடும் உடுப்பு எதுவும் அவனுடைய தல்ல என்று சொல்லிவிட்டான். தன்னைப் போல் புல்லய்யாவையும் செய்யச் சொல்லி ஆலோசனை கூறினான். அந்த ஆலோசனையின் படி வண்ணானிடம் ஒரு காக்கிக் கால்சட்டையும், சட்டையும் வாடகைக்கு வாங்கிக் கொண்டான். எவ்வளவு தயார்ப படுத்தினாலும் ஆள் மட்டும் ஒல்லயாக குச்சி போலவே காட்சியளித்தான். குடுமியை எடுத்ததால் இருந்த மிடுக்கும் குறைந்துவிட்டது. அதை எடுக்கும் போது மிகவும் கஷ்டமாக இருந்தாலும் வேறு வழியில்லாமல், கண்ணை மூடிக்கொண்டு, கத்தரிப்பதற்கு மனமொப்பினான். அந்த வேலை நடக்கும் போது, மல்லுவுக்கு அம்பட்டன் மேல் கோவம் வரவே, அப்பா அவனைக் கண்டித்து வைத்தான். தன் நிலம் போன போது கூடத் தனக்கு அவ்வளவு கஷ்டமாக இல்லை. இருந்தாலும் வயிறு முக்கியமா குடுமி முக்கியமா என்று நினைத்துக்கொண்டான்.

இன்டர்வியூவிற்கு இன்னும் இருபத்தைந்து பேருடன் சேர்ந்து தானும்

போனான். அந்த இடம் ஊரிலிருந்து ஐந்து மைல தூரத்தில் இருந்தது. வெய்யிலில் நடந்து போய்ச் சேரும் போது களைத்து விட்டான். அங்கே இரண்டு ஆஃபீஸர்கள் வந்தவர்கள் தகுதியைச் சோதித்துக் கொண்டிருந்தார்கள். புல்லய்யாவுக்குப் பசியெடுத்தது. கையில் காசில்லை. இருந்தது துணி வாடகைக்குப் போயவிட்டது. வீட்டுக்குப் போனாலும் வயிறு நிறையும் என்றில்லை. காத்திருந்து காத்திருந்து, கடைசியில் தன் பெயரைக் கூபபிட்டார்கள். பசி -- நடபபதற்குச் சக்தி யில்லாதது போலிருந்தது. இருந்தாலும் சுறுசுறுப்பை வரவழைத்துக்கொண்டான். அந்த அறையில் கால் வைத்ததும் வெடவெடவென்று நடுங்கத்தொடங்கியது. அவர்களைப் போன்ற பெரிய மனிதர்களை அவன் இதுவரைப் பார்த்ததில்லை. ஒருவர் சிவப்பாக நெட்டையாக இருந்தார். இரண்டாமவர் வங்காளத்தைச் சேர்ந்தவர். கறுப்பான அகன்ற முகம். மூக்குக் கண்ணாடியுடன் கம்பீரமாக இருந்தார்.

"உன் பேரு? . . . "வங்காள ஆஃபீஸர் இந்தியில் கேட்டதற்குப் புல்லய்யா ஓரேடியாகப் பயந்து விட்டான். பக்கத்திலிருந்த தமிழ்நாட்டு ஆஃபீஸர், 'உன் பேரின்னாப்பா?" என்று கேட்டதும், அந்தக் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டான் புல்லய்யா . . ."புல்லய்யா" என்று முணுமுணுத்துவிட்டு, தீனமான குரலில், "துரெ! நீங்க கருணெ காட்டுங்க! கிராமத்துக்காரன் -- குழந்தெ குட்டிக்காரன் -- ஒரு காலத்துலெ நல்லா வாழ்ந்தவன் . . . சோறில்லாமெ நானும் பசங்களும் செத்துகிட்டிருக்கறோம்." என்று சொன்னான்.

வங்காள ஆஃபீஸர், "அவன் என்ன சொல்கிறான்?" என்று மற்றொரு ஆஃபீஸரிடம் ஆங்கிலத்தில் கேட்டார். ஓரளவு தெலுங்கு தெரிந்த அந்த ஆஃபீஸர், தனக்கு முழுவதும் புரியவில்லை என்று சொல்வதற்குப் பதிலாக, அவன் ஏதோ நன்றாக வாழ்ந்த பழைய வாழ்க்கையைப் பற்றிச் சொல்லிவிட்டு, புல்லய்யாவைப் பார்த்து, "அதெல்லாம் யாருக்கு வேணும்'பா! பேரின்னா, உன் பேரின்னா? " என்று கேட்டார்.

"புல்லய்யா!"

வங்களா ஆஃபீஸர், "ஏதோவது சுற்றுப் பக்கத்தில் இருக்கும் தெய்வத்தின் பெயரா?" என்று கேட்டார்.

உடனே, தனக்குத் தெலுங்கு தெரியும் என்று முன்பு சொன்னதை நிலை நிறுத்துவதற்காக -- "இல்லை, 'புல்ல' என்றால் புளிப்பு -- 'புளிப்பு -- 'புளிப்பு மனிதன்," என்று கூறினார்.

அதற்கு வங்காள ஆஃபீஸர், "அப்படித்தான் தென்படுகிறான்!" என்று ஆங்கிலத்தில் சொல்லிவிட்டு,அங்கிருந்த பெட்டியைத் தூக்கச் சொல்லி சொன்னார் கைகை காட்டி! புல்லய்யா முதலிலேயே பசியோடிருந்தால், அந்தப் பெட்டியைத் தூக்குவதற்குக் கொஞ்சம் சிரமப்பட்டான். ஆஃபீஸர் ஆங்கிலத்தில், "அவன் அவ்வளவு

சுகமில்லை," என்று சொன்னார். அந்தப் பெட்டியை மீண்டும் கீழே வைத்த பிறகு, கொஞ்சம் களைப்போடு, நடுங்கிக் கொண்டே, கும்பிட்டு மிகமிக மென்மையான குரலில்," ரொம்பக் கஷ்டப்பட்றேன். இந்தத்துணியெக்கூட வாடகெக்கி வாங்கிட்டு வந்தேன் துரெ! சாப்பாடில்லாமெ நானும் என் பசங்களும் ஈர்க்குச்சி மாதிரி ஆயிட்டோம். நாலு வேளெ வயிறு நிறையச் சாப்ட்டா இந்த மாதிரி ரெண்டு பெட்டியெ ஒண்ணாத் தூக்கிடுவேன் துரெ!" என்று சொல்லும்போது கண்களில் நீர் கசிந்து விட்டது.

தமிழ் ஆஃபீஸர், "போ! எக்சேன்ஜ்காரங்க சொல்லுவாங்க!" என்று சொல்லவும், புல்லய்யாவுக்கு எப்போதுமில்லாத தைரியம் வந்தது. வேலை கிடைத்துவிட்டதென்றே நினைத்தான். வழியில் இளைப்பாறி இளைப்பாறி வீட்டுக்கு நடந்து போய்ச் சேர்வதற்குள் இருட்டி விட்டது. அங்கே வாயிற்படியில் மயக்கம் வந்தது போல் அப்படியே பொத்தென்று விழுந்தான். நீலி அரையணாவுக்குப் புளிச்சக் கீரை வாங்கி, தண்ணீரில் வேக வைத்தாள். அந்தத் தெருவிலேயே ஓரம்மாவிடம், ரூபாய்க்கு மாதத்திற்குக் கால் ரூபாய் வட்டிக்கு ஒரு ரூபாய் கடன் வாங்கி வந்தாள். . . வயிறு நிறைந்ததும் புல்லய்யாவுக்குத் தெம்பு வந்தது.

அதற்கடுத்த நாள் அந்தத் துரையெப் பார்க்கச் சென்றான். நடந்ததெல்லாம் சொன்னான். "எப்பொ வேலெக்கு வரணும்னு உங்ககிட்டே சொல்றேன்னு சொன்னாங்க துரெ!" என்று சொன்னான். அந்த் உற்சாகத்தில் நான்கு நாட்கள் சுறுசுறுப்பாக இங்கும் அங்கும் வேலெ தேடிச் சென்றான். ஏதோ கொஞ்சமோ நிறையவோ வயிறு நிறைவதற்கு உதவியாக இருந்தது.

ஒரு நாள் அவர் சொன்னார் "அவங்க உன்னெ வேலெக்கு எடுத்துக்கலே, நான் என்ன பண்றது?" புல்லய்யாவின் முதுகெலும்பு உடைந்து விட்டது அப்போதே இடிந்து போய்விட்டான். அழுகை கூட வந்தது. உரக்க வாய்விட்டு அழுது விடலாமென்று நினைத்தான் -- ஆனால், சற்று நேரம் வரையில் வாயில் வார்த்தை வெளி வரவில்லை . . . கடைசியில், சோகமயமான குரலில் -- "துரெ அந்தக் கிருதாக் குடுமியெப் பாத்து, எங்க ஊர்ச் சுத்துப் பக்கத்து கிராமங்கள்ளெ -- பாத்தவங்கெல்லம் மயங்கிப் போய்க் கிட்டிருந்தாங்க . . . எனக்கு அது உசிரெவிடப் பெரிசா இருந்தது . . . . வயத்துக்குச் சோறு கிடைக்கும்னு . . . மனசெக் கட்டிப்போட்டு, கத்திரிக்குக் குடுத்துட்டேன் -- வாய்கிட்டெ வந்த சோத்துருண்டெ தவறி விழுந்துட்டுது! என்னைச் சனீஸ்வரன் புடிச்சி ஆட்டிக்கிட்டிருந்தா நீங்க என்ன பண்ணுவீங்க துரெ!" என்று சொல்லிக்கொண்டே, மெல்ல மெல்ல அடி யெடுத்து வைத்து, கால்போன வழியில் போய்விட்டான்.

# 32

உலகம் குளிருக்குப் போத்திக் கொள்ளத் தொடங்கியது. இங்கும் அங்கும் கூலி வேலை செய்து, ஒரு வேளை இருந்தால், மற்றொரு வேளை இல்லை என்ற நிலையில், காலம் கடத்திக் கொண்டிருந்த புல்லய்யாவுக்கு, ஒரு நாள் -- பழைய மீட்டிங் நண்பன் வழியில் தென்பட்டு ஒரு முறை வந்துதான் ஆக வேண்டும் என்று சொல்லி, அழைத்துச் சென்றான்.

"பார'ண்ணா! இவர்கிட்டெ ஒரு காலணா இல்லெ. ஒரு ரூபாய் மதிப்பு ஆஸ்தி இல்லெ. அந்தப் பணக்காரன் மாதிரி ஓட்டுக்குச் செலவு பண்ணனும்னா பணம் எங்கே'ருந்து வரும்? நம்மெ மாதிரி ஆளுங்களுக்குத்தானே அவர் சேவெ பண்றாரு. சமயம் வந்தது. நாமெல்லாம் சேந்து அவருக்கு ஒத்தாசெ பண்ணனும்!" என்று சொன்னான்.

இந்தப் போதனையோடு தன் சாப்பாட்டையும் இலட்சியம் செய்யாமல் ஓட்டுக்காகத் திரிந்தான். விதவிதமான மனிதர்களைச் சந்தித்தான். இவர்களில் மாதச்சம்பளம் வாங்கியவர்கள் சிலபேர் இருந்தார்கள் , சம்பளம் வாங்கி வந்து குடித்துவிட்டு, மனைவி மக்களை அடித்துச் சாப்பாடில்லாமல் கஷ்டப் படுத்தியவர்களும், சம்பளத்தையெல்லாம் சூதாட்டம், ரேஸ் முதலியவற்றில் போடுபவர்களும் இருந்தார்கள். பஞ்சத்தை உண்டாக்கி விட்டதற்காகப் பணக்காரர்களை விளாசிக்கொண்டும், பணத்தை இழந்து கொண்டிருந்த ஏழைகளை இன்னும் முன்னேற்றாமல் வைத்திருந்ததற்காக அரசாங்கத்தைக் கண்டித்தும் வந்தவர்கள் அவர்கள். எத்தனையோ நூற்றுக் கணக்கான நிகழ்ச்சிகளை, அவர்களை தாம் செய்வதெல்லாம் நியாயம்தான் என்று நிரூபிப்பதற்காகச் சொல்லி வந்தார்கள். அரசாங்கம் ஏழைகளுக்காக இல்லை யென்றும், முதலாளிகளுக்காகவே இருபபதாகவும், சொந்தக்காரர் நண்பர்கள் முதலியவர்களின் நலனைக் கவனிப்பவர்களே மந்திரிகளாக இருக்கிறாங்களென்றும் பலவிதமாக இவர்கள் ஒரே குரலில் சொல்லி வந்தனர். புல்லய்யா, இவர்களோடு சேர்ந்து, 'வாழ்க!' கோஷம் போட்டுக் கொண்டிருந்தாலும் மனதில் ஏதேதோ எண்ணங்கள் வரலாயின. அந்த மீட்டிங்குகளில் அதையெல்லாம் கேட்கக் கேட்க, 'இதெல்லாம் உண்மையாத்தான் இருக்கணும், இல்லேன்னா என்னெ மாதிரி ஆளு ஏன் பொழைக்க முடியாமெ இருக்கறான்?' என்று எண்ணினான். மூன்று நாட்கள் போன பிறகு தன் வாயிலிருந்து தாமாகவே அந்த வார்த்தைகள் முழங்கத் தொடங்கின. நீலி, அதைக் கேட்டுவிட்டு, "இதுக்கா போய்கிட்டிருககறே?" என்று கேட்டாள்.

"வுனக்குத் தெரியாதாவட்டும் -- இந்ததெலை முறைக்காரங்க எழுந்துட்டாங்க. இனிமே அநியாயத்த தொடர்நது பண்ண முடியாது.

எல்லாரும் மகாராஜாவிலே'ருந்து , பறையன் வரைக்கும் எல்லாரும் ஒண்ணுதான் --"என்று பதில் சொன்னான்.

நீலி, சிரித்துவிட்டு, "அப்படீன்னு கத்திச் சொல்லிட்டா வந்துடுமா?" என்று கேட்டாள்.

"வராம . . . இந்தப் பெரியவர் கவர்ன்மெண்ட் காரானானாக்கா கொண்டு வரமாட்டாரா . . . உழறவனுக்கே நிலம் -- கூலிக்காரங்களுக்கு ஒரு நாளக்கி மூணு ரூபாய்க்குக் குறைச்சலிருக்காது கூலி -- பிச்சை கேக்கறவன் அப்பொ ஒர்த்தன் கூட இருக்க மாட்டான்!"

"பண்றவன் எப்பவும் சொல்ல மாட்டான்!"

"அப்படியா! இரு, இரு பணக்காரங்க பணத்தெ ஏழெங்களுக்குப் பங்கிட்டு வெக்கிறாரா இல்லெயா பாரு."

"வெச்சாக்கா -- அதெச் செலவு பண்ணிட்டா, அப்புறம் -- ஏழெ மறுபடியும் ஏழெ தான் -- பாரு, எதுக்குக் கூலிக்குப் போகாமெ அதுலெ போயி விழறே? உன் அஞ்சி விரலும் ஒரே மாதிரி இருக்குதா? எந்த விரல் இல்லேன்னாலும் கஷ்டம்தான். நாலு பேரு நல்லவங்கன்னு சொன்னதுக்காக நாக்கெ வெட்டி ரெண்டு நாக்காப் பண்ணிடாதே -- நடக்க வேண்டியதெ நிறுத்தறதுக்கு நீ யாரு? நான் யாரு? அதுக்காக உன்னெ மாதிரி காதும் மூக்கும் இரக்கறவனெ ஏன் கொண்ணுட்றே? பிலி மாதிரி இன்னெக்கி எதிராளியெக் கொண்ணீன்னா, நாளெக்கி உன் வயத்திலெ பொறந்தவனெக் கொல்ல மாட்டியா? உன் போக்கு எனக் கொண்ணும் பிடிக்கலே -- "

நீலி பாட்டியை நினைத்துக் கொண்டாள். கஷ்டத்தலேயும் அந்தக் கிழவி அரைத்து ஊற்றியதே அவளுக்கு நினைவு வந்தது. புல்லய்யா ஒன்றும் பேசவில்லை. அந்த இரவு குளிரெடுத்தாலும் வாயிற் படியிலேயே படுத்துக்கொண்டான். அன்று இரவும், வெகு தூரத்திலிருந்து ஓட்டுக்காக நடந்த பிரச்சாரம் கேட்டுக் கொண்டிருந்தது . . . எங்கே பார்த்தாலும் ஒரே கோலாகாலம்தான். மீட்டிங்குகளுக்கு மக்கள் கூட்டம் கூட்டமாகச் சென்றனர். மக்களிடையே உற்சாகம் எல்லையில்லாமலிருந்தது. ஒவ்வொரு வீட்டிலும், ஒவ்வொரு நாளும் ஏதோ வாக்குவாதங்கள்தாம். பக்கத்து வீட்டு ஜேப்படிக்காரனும் அவன் மனைவிக்கும் கூட வாதங்கள் நடந்தன.

இவ்வாறு, நாலா பக்கங்களிலும் உற்சாகம். ஓட்டுப்போடும் நாள் அருகில் நெருங்க நெருங்க இன்னும் அதிகமாயிற்று. பூச்சாண்டி ஓரிரவு மரத்தடியில் உட்கார்ந்து சற்று நேரம் நாய்க்குட்டியைப் பற்றிப் புலம்பினான். அதைக்கேட்ட புல்லய்யா, மல்லு தூங்குகிறானா என்று பார்த்துவிட்டு, அவன் காலருகில் இருந்த நாய்க் குட்டியைக் கொடுத்துவிடலாமென்று எழுந்தான். அப்போது பூச்சாண்டி ஏதோ முணுமுணுக்கலானான். அவன் வாயிலும் ஓட்டுப் பிரச்சினைதான்!

"ஓட்டு! -- ஓட்டு! -- எவ்வளவு பணத்தெ வீணாக்கராங்க பாரு. இதெல்லாம் பாத்தாக்கா, பணத்தாலே சீட்டெ வாங்கிக்கிட்டு, கையெத்தூக்கறதுதான் டெமாக்ரஸினாலே என்ன லாபம்? எலக்ஷன் மும்முரத்துலெ கட்சிங்களா பிரிஞ்சி போயிட்ட ஜனங்க அப்படியே பிரிஞ்சி இருக்கறதுதான் -- சொல்லப்போனா, அரசாங்கம் சரீங்கறதெ எதிர்க்கட்சி சரி'லலேங்கறதுதான் டெமாக்ரஸியோட உண்மெயான உருவம்!"

புல்லய்யா எழுந்து அருகில் சென்று, சொறபொழிவு செய்யும தோரணையில் நின்றிருந்த பூச்சாண்டி, "யார்கிட்டே சொல்லிகிட்டிருக்கறே?" என்று கேட்டான். பூச்சிக்காரன் புல்லய்யாவைத் திரும்பிப் பார்க்காமலே, "யார்கிட்டெயா? இங்கே இருக்கற ஒரே மரத்துகிட்டே -- இந்தக் கல்லுங்ககிட்டெ -- இதுங்ககூட இன்னும் நாலு நாள் போச்சின்னா அரசியல்லெ இறங்கிடும்! அதுங்களும் உயிரிருக்குதுன்னு சொல்றாங்கில்லே!"

"அந்த மீட்டிங்கிலெ சொல்லக்கூடாதா?"

"மீட்டிங்கு! ஹா! பார்லமெண்டு! இங்கிலாந்துலே, மக்காளாட்சி உசந்த நிலையிலே இருக்குதுன்னா பார்லமென்ட் பிரசங்கத்தானாலே இல்லெ -- " என்று சொல்லிச் சிரித்தான்.

அந்த சிரிப்பைச் சற்று நேரம் நீட்டித்துவிட்டு உட்கார்ந்தான். குளிரெடுத்தது. இருந்தாலும் பூச்சிக்காரன் சிரித்துக் கொண்டிருந்த போது, புல்லய்யாவுக்கு அங்கிருந்து நகர்வதற்கு மனம் வரவில்லை. எதிரிலிருந்த உப்பங்கழிக் கால்வாயிலிருந்து நாற்றம் மிக அதிகமாக அடித்தது. அப்படி அங்கே இருக்க, இருக்க, புல்லய்யாவின் மனதில் இல்லாத பொல்லாத ஆசைகளெல்லாம் தலையெடுத்தன. பூச்சிக்காரனை இந்தக் குளிர்ந்த நேரத்தில் மெல்லக் கேட்டால், ஒரு வேளை அந்தத் தங்கத்தை எங்கே ஒளித்து வைத்தானோ, அதைச் சொல்லமாட்டானா? -- 'அதெ மெதுவாத் தோண்டி எடுத்துகிட்டு நான் நவிரிக்குப்போய் நிலம் வாங்கிகிட்டுப் பொழெச்சிக்குவேன் -- இவனையும அழெச்சிகிட்டுப் போய் காப்பாத்தறேன்,' என்று நினைத்தான். மறுபடியும் அதே நிமிஷம், அந்த மாதிரி வந்த பணம் எவ்வளவு காலம் நிற்கும் என்ற சந்தேகமும் வந்தது. தன் ஊரில் பெரிய விவசாயிக்குப் பணம் எப்படி வந்தது? -- 'அவங்கப்பா ரங்கூன் போனார். வீட்டுக்கு அஸ்திவாரம் போடத் தொண்டும் போது பெட்டி நிறையத் தங்கம் கிடைச்சதனாலே தானே அவங்க பெரிய விவசாயிங்களாயிட்டாங்க! அந்த மாதிரி நான் ஏன் ஆகக்கூடாது? -- இந்தக் கஷ்டமெல்லாம் பறந்து போயிடும் -- மல்லுவெப் பெரிய படிப்பு படிக்க வெச்சிப் பெரிய துரெ ஆக்கிட மாட்டேனா?'. . . இப்படிச் சிந்தனைகள் ஓடிக்கொண்டிருந்த போது பூச்சாண்டி மறுபடியும் பேசத் தொடங்கினான்.

"அவன் ஊர்லெ பெரிய மனுஷன்! அந்தப் பெரிய மனுஷனுக்கு

ஊர்லெ நாலு பக்கத்திலெ நாலு வைப்பாட்டிங்க। அவன் தேசத்துக்குச் சேவெ பண்றவன்। சுத்தியிருக்கற அப்பாவி ஜனங்க, பாவம் அவனைப் பெரிய மனுஷன்னு நினெச்சி கௌரவிக்காரங்க. அவன் பணம் கௌவரத்தைக் கொண்டு வருது. தான தாமம் பண்றதாவும் பெரிய வள்ளலுன்னும் பிரச்சாரம் பண்ணிக்கிறான். இன்னாரோட தர்மம்னு எல்லாத்து மேலேயும் முத்திரெ போட்டுக்கறான். அவனுக்குச் சமூகத்திலெ கௌரவமான இடத்தெக் குடுக்கற இந்த அப்பாவி ஜனங்களெப் பாத்தாக்கா எனக்குப் பரிதாபம் வருது. நியாயத்துக்கு ஒரு விஷயத்திலெ கட்டுப் படாதவன் வேறெ எந்த விஷயத்திலியும் அதுக்குக் கட்டுப்படமாட்டான். அந்தப் பெரிய மனுஷன்கிட்டெ இவங்களோட நல்லது கெட்டதெப் பாக்கச் சொன்னா ஜனங்களுக்கு சௌக்யம் எப்படி வரும்? அவனுக்குத் தெரிஞ்சது, எப்படி வேஷம் போட்டு இந்த ஜனங்களே ஏமாத்தல்'ங்கறதுதான் । இந்தப் படிச்ச முண்டங்களெக் காட்டியும் அந்த அபபாவி ஜனங்ககிட்டெ பண்பாடு இருக்குது . . . அதுக்காக அவனெக் கொண்ணுடச் சொல்லி நான் சொல்லலே. இரத்த வெறி பிடிச்சவன் மனுஷனில்லே -- மிருகம் -- மிருகத்துக்கு மனுஷ சமூகத்துலெ இடமில்லே. அப்படீன்னா இந்த மாதிரி ஆளுங்களெ என்ன பண்ணனும்? மனசாலெ மரியாதெ குடுக்கறதெ நிறுத்துங்க, தம்பிமாரே நிறுத்துங்க। ஒரு எறும்பு உண்மையாப் பாடுபட்டுதுன்னா அதெச் சிம்மாசனத்துலே ஏத்துங்க. உண்மைதான் ஜனங்களெ வளக்கறது. காப்பாத்தறது। உண்மைதான் அழியாமெ இருககறது -- உண்மையிலெ உருவான அரசாங்கம் -- அதுக்கு எனன வேரு வேணும்னாலும் வெய்யுங்க -- அது தான் காலாகாலத்துக்கு நிக்கும்। உண்மெக்குக் கட்டுப்பட்ட தலைவருங்க சிறநத தலைவருங்க'ங்கறதெ உணரும்படியாப் பண்ணுங்க. அவங்க வாழ்க்கையிலே எபபவாவது ஒரு நிமிஷமாவது மத்தவங்க மேலெ பச்சாதாபப் படலேன்னா அவங்க தலைவருங்களே இல்லே -- மனுஷங்களே இல்லே -- அந்த மாதிரி மிருகங்களுக்கு அழிவுதான் முடிவு! ஏன்னா சத்யம் தான் கடவுள். தெய்வத்தன்மெ கொஞ்சம் கூட இல்லாத வெறும் மனுஷன் எந்தப் பெரிய கார்யத்தையும் செய்ய முடியாது."

பூச்சிகாரன் சற்று நேரம் தனக்குத்தானே சிரித்துக் கொண்டான். குளிர் கொஞ்சம் நடுக்கம் கொடுத்தது -- பனி விழுந்து கொண்டிருந்தது. புல்லய்யாவுக்கு நிமிஷத்துக்கு நிமிஷம் மனத்துடிப்பு அதிகமாகிக் கொண்டே இருந்தது . . . அந்த அமைதியிடையில் மெதுவாக--

"தங்கத்தெ எங்கே பொதெச்சி வெச்சே?" என்று புல்லய்யா கேட்டான்.

"எங்கே?"

"பொதெச்ச இல்லெ?"

"ஆமாம் . . ."

"எங்கே?"

"தென்ன மரத்துக்குக் கீழே . . ."

"வீட்டுக்குப் பின்னாடியா? . . . "

"ஆமாம் . . . "

"தென்ன மரத்துக்கு எந்தப்பக்கம?"

"முன்னாடிதான். "

"எத்தனெ தோலா? . . . ஒனக்குள்ளேது தானா?

பூச்சாண்டி கோபமாக, அவளுக்குள்ளது என்னெக் கொலெ பண்ணினா அவளுக்குள்ளது ஒனக்கென்த்துக்கு, போ, போ!" என்று கத்தினான். அதற்கு மேல் என்ன கேட்டாலும் பதில் சொல்லவில்லை. எழுந்து போய்விட்டான்.

"என்ன உலகம்? -- என்ன உலகம்! -- எல்லாம் மாயை! பொம்பளெ மாயை -- ஆம்பளெ மோசம்! எல்லாரும் திருடனுங்க -- என் நாயெ என்கிட்டே'ருந்து எடுத்துகிட்டு போயிட்டாங்க." -- சொல்லிக் கொண்டே போனான்.

புல்லய்யாவுக்குப் பாவமாக இருந்தது. மடமடவென்று வீட்டு வாசலுக்குப் போய் நாய்க்குட்டியைத் தூக்கிக் கொண்டு வந்தான். "இந்தா உன் நாய்க்குட்டி! மறுபடியும் இங்கே வந்தீன்னா காணாம போயிடும் . . ."

பூச்சாண்டி ஒரு துள்ளு துள்ளினான். "வந்தேடா தம்பி -- என் துரெ -- உன்கிட்டெ சொல்றதுக்குன்னு எத்தெனெ விஷயம் வச்சிருக்கறேன்," என்று சொல்லிக் கொண்டே முததம் கொடுத்தான். அது மெல்லக் குரைத்தது.

"நீ என்ன சொலறேன்னு எனக்குத் தெரியாதா? அழாதே துரெ அழாதே. அதான் ஒண்ணாச் சேந்துட்டோமே!" என்று சொல்லிக் கொண்டே அங்கிருந்து போய்விட்டான.

அதற்கடுத்த நாள காலையில், "வேலெக்கு வர்றீங்களா?" என்று கேட்டு ஒருவன் வீட்டருகில் வந்தான. புல்லயயாவுக்கு ஒரே ஆச்சரியமாக் இருந்தது -- 'இப்படி வீட்டுக்குத்தேடி வர்ற நிலெ வந்துதே -- உலகம் இவ்வளவு மாறிப் போயிட்டுதா' என்று கேட்டான்.

"தினத்துக்கு ரெண்டு ரூபா. கல்லு சொமக்கச் சொல்லலே, முள்ளெடுக்கச் சொல்லலே -- வர்றியா - இந்தா ரெண்டு ரூபா!"

புல்லய்யா வாங்கி, நீலி கையில் கொடுத்துவிட்டு, அவன் பின்னால் போனான். மல்லு அப்பாவைப் பின் தொடர்ந்தான். ஓர்அரைமைல் தூரம் நடந்தார்கள். பெரிய பங்களா. அந்தப் பங்களா எதிரில் நிறைய பேர் நின்றிருந்தார்கள். எல்லாரும் தன்னைப் போன்றவர்களே. அவர்களுக்குள்ளே ஏதோ கிசுகிசுத்துக் கொண்டிருந்தார்கள். ஓட்டு விஷயம் தான்!

அதற்குள் யாரோ கூப்பிட்டார்கள். எல்லாரும் உள்ளே போனார்கள்.

எதிரே நாற்காலியில், பெரிய மீசையோடு ஒரு மனிதர் உட்கார்ந்திருந்தார். வயது ஐம்பது பக்கமிருக்கும். கைக்கு நாலு மோதிரம் போட்டிருந்தார். முகம் பிரகாசமாக, கறுப்பாக இருந்தது. வேட்டியும் சில்க் சட்டையும் போட்டிருந்தார். கையில் தவளை போல் ஒரு வாட்ச் இருந்தது.

"கேளுங்க, நல்லாக் கேளுங்க!" நிசப்தமாக, கைகட்டிக் கொண்டு நின்றிருந்த அந்த ஐம்பது பேரும் ஒரு முறை நடுங்கும்படியாக அந்த வார்த்தைகள் அழுத்தமாக வந்து விழுந்தன.

"நான் சொல்ற வார்த்தைகள்ளே ஒண்ணெ கூட மறந்துடக் கூடாது. சொல்றவேலையெ ஒழுங்காச் செய்துட்டு வர்றவங்களுக்கு நாளைக்கி மூணு ரூபாய்!"

"அப்படியே துரெ! . . . அப்படியே செய்யறோம்!"

அந்த மனிதர் நாற்காலியிலிருந்து எழுந்து நின்று கொண்டு, சொற்பொழிவு கொடுக்கும் தோரணையில் சொன்னார்.

"படிச்சவங்ககிட்டே போக வேணாம் -- நம்ம நாட்லெ படிச்சவனைவிட பட்டிக்காட்டான் மேல். அந்தப் படிச்சவன்னு சொல்லிக்கிறவன் ஒரு அரெ வேக்காடு. அதனாலே நீங்கெல்லாம் இந்தப் பெரிய பட்டணத்துலெ ஏழைங்க வீட்டுக்கே போகணும். அவங்க கஷ்டம் உங்களுக்குத் தெரியும். எனக்குத் தெரியும் . . . கேட்டீங்களா?"

'கேட்டோம் துரெ!. . . கேட்டோம்!'

"நான் இங்கே எப்படிப் பேசறனோ, நீங்களும் அதே மாதிரிப் பேசணும்! எனக்கு இங்கிலீஷ் வராதுன்னா அதனாலெ தெலுங்கும் பேசவராதா? நான் உங்ககிட்டெ எப்படிப் பேசறனோ அந்த அசெம்பிளியிலிலும் நம்ம மொழியிலே பேசுவேன். இங்கிலீஷ் வந்தாக்கா எல்லாம் தெரியும், வரலேன்னா ஒண்ணுமே தெரியாதா? என்னெச் சுத்தி இருப்பவங்களுக்கு இங்கிலிஷ் வராதே! அந்த இங்கிலீஷ் தெரிஞ்சவங்களும் என்னெ மாதிரியே வேட்டி கட்டி, சட்டெ போட்றாங்க. அதனாலெ நான் அவங்க எல்லாரெவிட மேல்தான்!"

"அப்படியே துரெ! . . . அப்படியே!"

சற்று மீசையை முறுக்கிவிட்டு, இப்படியும் அப்படியும் நடந்து கொண்டே சொன்னார். "இந்தக் கவர்ன்மென்ட்காரங்க போக்கு ஒண்ணும் சரியில்லே. பாத்தீங்களா, திருட்டுச் சாராயம் காய்ச்சறது எவ்வளவு அதிகமாயிட்டுது! எவ்வளவு நல்ல ஆபீஸரா இருந்தாலும் வெள்ளிச் செருப்பால் அடிச்சா பணிஞ்சிட்றான். ஆயிரக் கணக்காலே சம்பாதிக்கறவனுக்கு வரியில்லெ,, நான் அசெம்ப்ளிக்குப் போய் இதைத்தான் கேக்கப் போறேன். கவர்ன்மெனட்காரங்களே சாராயம் காய்ச்சி, புளிச்ச பழையறது மாதிரி சாராயம் கொடுக்கணும். அப்பொ நம்ம ஜனங்க சுகப்படுவாங்க. அந்தப் பணத்தெ வெச்சி இந்த அழுக்குக் குளங்க எல்லாத்தையும் சீராக்கச் சொல்லப் போறேன். இதைச் சொல்றதுக்கு இங்கிலீஷ் வேணுமா? எங்கப்பாவுக்கு,

தாத்தாவுக்கு என்ன இங்கிலீஷ் வந்தது? கிராமத்துச் சாவடியிலெ உக்காந்து பஞ்சாயத்துத் தீர்ப்பு சொன்னாக்கா, லண்டன் போனாலும் அதெ மாத்த முடியாது. இதையெல்லாம் நல்லாக் கேட்டீங்களா! சொல்லுங்க -- உரக்கச சொல்லுங்க -- கத்துங்க, சத்தமாக் கத்துங்க! உங்கள் ஓட்டு! --"

யாரும் தொண்டையைத் திறக்க வில்லை. "கத்துங்கடா, 'பங்காரய்யாவுக்கு'ன்னு!"

"உங்கள் ஓட்டு!"

"பங்காரய்யாவுக்கு!" என்று குரல்கள் கலநது ஒலித்தன. புல்லய்யா தெருவில் கத்துவது போலவே கத்தினான். இந்தப் பெரிய மனிதர் சொன்னதிலும் ஏதோ உண்மை இருப்பதாகத் தோன்றியது. எதற்கும் கூலி வாங்கியாகிவிட்டது. சுற்றி வருவதற்குப் புறப்பட்டார்கள்.

குளிர் அதிகமாக அதிகமாக, ஓட்டு ஆர்ப்பாட்டமும் பெருகிக் கொண்டிருந்தது. எங்கேயும் இந்த ஆரவாரமே! இந்த ஸீட்டுக்கு மூன்று கட்சி நபர்களும், ஒரே சுயேச்சை வேட்பாளரும் போட்டியிடடார்கள். சுயேச்சை வேட்பாளர் பங்காரய்யா. முன்னோர்கள் சம்பாதித்த சொத்தை வீணாக்காமல், ஏதோ கான்ட்ராக்ட் வேலைகள் செய்து பெருக்கிக் கொண்டார். உலகப்போர்க் காலத்தில் கான்ட்ராக்ட் வேலைகள் செய்து நன்றாகச் சம்பாதித்தார். சற்று முன்புதான் பதினான்காயிரம் கொடுத்து, கார் வாங்கினார். இந்த எலக்ஷனில் ஓர் அரை லகரமாவது செலவு செய்து, தன் ஜாதியாரிடையே கௌரவம், புகழ் சம்பாதிக்கலாமென்ற ஆசையினால் இரவு பகல் தூக்கமில்லாமல் போயிற்று. "நான் மெம்பர் ஆனால், நல்ல கள், சாராயம் முன்பு போல் கிடைக்கும் படியாகச் செய்வேன்! அந்தந்த ஊர் வருமானத்தை அந்தந்த ஊரிலேயெ செலவு செய்யும் படியாகச் செய்வேன். பஞ்சம், பட்டினி -- இதையெல்லாம் நான்கு மாதங்களில் இல்லாமல் பண்ணிவிடுவேன்," என்று அந்தச் சுற்றுப் பக்கத்துக் கிராமங்களில் நன்றாகப் பிரசாரம் செய்தார். மற்றவர்கள் என்ன நினைத்தாலும் அந்த வட்டாரத்து ஓட்டுகள், சாதாரணமாக அந்த ஊர்ப் பெரிய மனிதர்களிடம்தான் இருக்கின்றன என்பது அவர் நம்பிக்கை. அவர்களைப் பிடித்துச் சரிக்கட்டி விட்டால் போதும், தேவையான பிரச்சாரத்தை அவர்களே செய்து விடுவார்கள். பங்காரய்யா அந்த வேலையைத்தான் செய்யலானார். அநத் அப்பாவிக் கிராமவாசிகளில் முக்கால் வாசி ஓட்டர்கள் தனக்கே ஓட்டுப் போடுவார்கள் -- தவற மாட்டார்கள் என்று அவர் நம்பினார்.

இப்படியிருக்க, பங்காரய்யா மீது எதிர்கட்சிக்காரர்கள் பெரிய பெரிய புகார்களைப் பரப்பலானார்கள். நடுத்தர வகுப்பினரிடையே அவரென்றால் ஏளனமாக இருந்தது. மேல் மட்டத்தினர், 'அவனுக்கேன் இந்தத் தலைவலி,' என்று நகைத்துக் கொண்டனர். பங்காரய்யா மீது பரப்பப்பட்ட புகார்களில் சில அவரைக் கேலிசெய்யும்

பாணியிலிருந்தன. கார் வாங்கினாரல்லவா -- பின் ஸீட்டில் தனியா உட்காருவாராம். ட்ரைவர் ஓட்டும்போது, ஓரிடத்தில 'கிர்' என்று சத்தம் வந்ததாம்! பின் ஸீட்டிலிருந்து, "அதென்னா? அதென்னா? என்று கேட்டாராம். "கீர் போட்டேன் எஜமான்!" என்று ட்ரைவர் சொன்னதற்குப் பங்காரய்யா உடனே, "இங்கே ஏன் போட்டே? வீட்டுகிட்டெயே போட்றதுக்கென்ன!" என்று ட்ரைவரைக் கண்டித்தாராம். ஒரு முறை ட்ரைவர் நடு ரோட்டில் காரை நிறுத்தினால், "ஏன் நிறுத்தினே?" என்று கேட்டாராம். "பெரிய கல்லு குறுக்கே இருக்குது எஜமான்!" என்றானாம். "ஹார்ன் அடிச்சா அதுவே நகந்துட்டுப் போவுது?" என்று சொன்னாராம் பங்காரய்யா! பட்டணத்தில் ஒரு சேரியில் சென்று அவர்களிடையே சொன்னாராம் "அசெம்பிளி மெம்பரானாக் குழாயிலெ நல்ல சாராயம் வரும்படியாப் பண்ணுவேன்!" அசெம்பிளியில் தன்னால் சரியாகப் பேச முடியாமல் போனால், "அங்கே ஒரு வக்கீலுக்குக் காசு குடுத்து எனக்குப் பதிலாப் பேசச் சொல்லுவேன்," என்றும் சொன்னாராம்!

இந்த மாதிரியான கட்டுக் கதைகளை எதிர்க்கட்சிக்காரர்கள் பிரச்சாரம் செய்து கொண்டிருந்தார்கள். பங்காரய்யா இதற்கெல்லாம் அஞ்சவோ சஞ்சலப்படவோ இல்லை. "ஏழைங்க என் பக்கமிருக்கறாங்க. நான் ஜெயிக்கலேன்னா வேறெ யாரு ஜெயிக்கறாங்கன்னு பாக்கறேன்!" என்று சவால் விட்டார் -- பணத்தை வாரி இறைத்தார். ஒரு நாள் சாய்ந்திரம் ஓட்டுக்காகக் கத்திவிட்டுத் திரும்பி வந்தவர்களுக்கு வயிறு நிறைய சாப்பாடு போட்டார்.

"சாப்பிடுங்கடா! உங்கக் கஷ்டம் எனக்குத்தெரியும்!" என்றார் அவர்.

அவர்கள் சாப்பிட்டு முடித்த பிறகு, "நீங்க இப்பொ போவ முடியாது இன்னக்கி ராத்ரி அந்தக் காங்கிரஸ்காரன் பெரிய ஊர்வலம் போறதுக்கு ஏற்பாடு செய்திருக்கறான். நாமும் போவணும். நாம போடற சத்தத்துலே அவங்க சத்தம் அடங்கிப் போவணும் -- நல்லா வேலெ செஞ்சிட்டு வந்தீங்கன்னா ஆளுக்கு ரெண்டு ரெண்டு ரூபாய் தர்றேன்!" என்று சொன்னார்.

இதைக்கேட்டு எல்லாரும் 'சரி!' என்றார்கள். புல்லய்யாவிற்கு வயிறு நிறையச் சாப்பாடு எத்தனையோ நாட்களுக்குப்பிறகு கிடைத்தது. 'இந்தத் துரெ கஷ்டம் தெரிஞ்ச துரெயா இரக்கறாரு. இந்த மாதிரி துரெ கவர்ன்மென்ட்காரனா கஷ்டங்க போகும் போல இருக்குது. அந்த லாயர் துரெக்கா நாலு நாளு கூலியில்லாமெ திரிஞ்சேன். ஒரு மடக்குக் கஞ்சி கூட ஊத்தலெ! என்று எண்ணினான்.

அன்று இரவு, பெரிய ஊர்வலம், பெட்ரோமாகஸ் லைட்டுகளோடு பேண்ட் வாத்தியங்களோடு புறப்பட்டது. கோஷங்கள் வானைப் பிளந்தன. வழியில் இன்னொரு கட்சி கொடிகளோடு எதிரில் வந்தது. அதற்கு முன்னால் நான்கு நாட்கள் அந்தக் கட்சியோடு திரிந்திருந்தான் புல்லய்யா. அவர்களெல்லாம் தன்னையே பார்ப்பது போல் தோன்றியது!

தன் சிநேகிதன், பக்கத்து வீட்டு ஜேப்படிக்காரன் அவர்களெல்லாம் அதில் இருந்தார்கள். வெட்கம் வந்தது முதலில். ஆனால் பிறகு, 'என் வயத்துக்கு மிஞ்சியா?' என்று நினைத்துக் கொண்டான். 'நாளெக்கிக் காலையிலே நான் பசியோட அவஸ்தெப் பட்டாக்கா இவங்க ஒரு பைசாவாவது கொடுப்பாங்களா?' என்று எண்ணிக்கொண்டு, தைரியமாகவே அடிகளை எடுத்து வைத்தான். இனனொரு பக்கத்திலிருந்து இன்னொரு ஊர்வலம் -- முன்னால் நுகத்தடி பூட்டிய மாடுகள்! அந்த வட்டாரத்தில் ஆரவாரம் வானைப் பிளந்தது. எல்லார் தொண்டைகளும் சோந்து ஒரே குரலாகக் கத்தினாலும் அந்த லௌட் ஸ்பீக்கர்கள் குரல்கள் விழுங்கிக் கொண்டிருந்தன. நேரம் ஆக ஆக ஒரு கும்பலின் மேல் இன்னொரு கும்பல் வார்த்தைகளை வீசிற்று -- கோபாவேசம் பெருகிவிட்டது! அந்த ஆவேசத்தைத் தணிப்பதற்கு முயற்சிக்கும நல்ல இதயம் படைத்தவர்களும் சிலர் அங்கு இருந்தார்கள. ஆனாலும் நிமிஷங்களாக ஆக நிலைமை முற்றிவிட -- வார்த்தைகள் கடந்து கைகலப்பு வரை வந்து விட்டது. ரோடு போடுவதற்காக இருந்த கருங்கற் குவியல்கள் மேல் கைகள் சென்றன. . . . புல்லய்யாவின் பக்கமும் கற்கள் வந்து விழுந்தன -- புல்லய்யாவும் ஆத்திரத்தோடு கற்களை எடுத்துக்கொண்டான். வீசலாமென்றால் ஏதோ ஒரு கை தன் கையைப் பிடித்துக்கொண்டது போலிருந்தது. மனைவியின் நினைவு வந்தது. போலும் கற்களைக் கீழே போட்டுவிட்டான்.

அதற்குள் யாரோ போலீஸ் வருவதாகக் கத்தினார்கள் . . . சிலர் ஓடிவிட்டார்கள். ஒரு கும்பல் ஒரு பக்கமாகப போய்விட்டது. இன்னொரு கும்பல் இன்னொரு பக்கம் . . . பங்காரய்யா ஆதரவு கும்பல் முன்னோக்கி நகர்ந்தது. . . .நகரும்போது கோஷங்கள் திட்டுக்களோடு சேர்ந்து விண்ணை முட்டின.

அங்கு அருகிலேயே பூச்சாண்டி கண்ணை அகல விரித்து, எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தான். பூச்சாண்டி நாய்க்குட்டியோடு அந்த ரோட்டுப் பக்கத்தில் உட்கார்ந்து விட்டான். சில நிமிஷங்கள், 'ஹஹ்ஹா' என்று சிரித்துக்கொண்டான். பிறகு, கொஞ்சலாக சொல்லும் தோரணையில், "பாத்தியா தம்பி, இந்த வெறிபிடிச்ச தம்பிங்க எப்படிச் சண்டெ போட்டுக்கறாங்க? எதுக்கு -- ஜனங்களுக்குச் சுகத்தெக் கொடுக்கற அரசாங்கத்துக்காக! ஒர்த்தருக்கொர்த்தர் மரியாதெ குடுத்து வாங்க முடியாம இருக்கறாங்க. பொறாமெ, நாக்குப் பூச்சி மாதிரி மனுஷங்ககிட்டெயிருந்த மனிதத்தன்மையெச் சக்கையாக்கிப் போடுது. இந்த மாதிரி மனுஷங்க இருக்கற நாடு சீக்கிரமா நாசமாப் போகாதா?"

அந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டு, எழுந்து நின்று கொண்டான் . . .

"அய்யா! நான் எதுக்கு நாசமாப் போயிட்டேன்னு நினெக்கிறெ

எதிராளிங்க கெடுதல்லெ நல்லதெப் பாக்க முடியாம போயிட்டேன். விபசாரிங்ககிட்டே அன்பு செலுத்த முடியிலே என்னாலே! எல்லாம் என்னோடது தான் என்கிற அகங்காரத்துனாலெ அழிஞ்சி போயிட்டேன்.

இந்த உலகத்துலெ அதிகமாய்க் கிட்டிருக்கற கஷ்டங்களுக்குக் காரணம் என்னன்னு நினெக்கிற? மனுஷன் எல்லாம் எனதுதானு'ங்கற மாயையிலே மாட்டிக்கிட்டான். இந்த மாயையெ எந்த அரசாங்கம் குறைக்க முடியுதோ அதுதான் ராம ராஜ்யத்தெக் கொண்டு வரமுடியும். அந்த மாயை, மனுஷங்கிட்டே பேராசை'ங்கற உருவத்திலெ இடம் பிடிச்சிகிட்டிருக்குது. குதிரெக்குக் கடிவாளம் மாதிரி அந்தப் பேராசெக்கு கடிவாளம் போடலேன்னா அதுக் கிஷ்டம் வந்தா மாதிரி குதிச்சி நாசம் பண்ணாதா? ஆட்சி பண்றவனே கடிவாளம் இல்லாத குதிரையா ஆயிட்டான்னா எல்லாம் அதோ கதிதான். அவன் வண்டி யோடற்வனா இருக்கணும்னா, அவன் மூளையிலெ ஒரு நியாய உணர்வு மட்டும் இருந்தாப் போதாது -- அறிவு மிருக்கணும். பழைய காலத்துலெ ராஜாக்களோட நியாயம், மந்திரிகளோட அறிவு -- ரெண்டும் கலந்ததனாலெ தான் தேசங்க எல்லாம் நல்லா இருந்தது -- ஜனங்க சுகப்பட்டாங்க! அதனாலெ மனுஷங்க மத்தியிலெ எல்லாரும் சமம்தானுங்கற வெறித்தனமான அகம்பாவத்தெக் கிளப்பிவிட்டுட்டு, அவங்களுக்கு ஆசையெக் காட்டிட்டு, அவங்களெ நாசமாக்கறது, என்னெப் பொறுத்த வரையிலெ ரொம்பரொம்பக் கொடுமையான விஷயம்னு நினைக்கிறேன்! துரெ! நீ ரொம்ப நன்றியுள்ள ஜாதியெச் சேந்தவன். அதனாலெ உன் கிட்டெ இவ்வளவு சொல்றேன் -- புரியுதா?"

நாய் மெல்லக் குரைத்தது. பூசசாண்டி சிரித்துக் கொண்டான். அதற்குள் ஏதோ அழுகைச் சத்தம் கேட்டது. மெல்ல மெல்ல அடி எடுத்து வைத்து, நாய் சற்று வளர்ந்திருந்தாலும், கீழேவிட்டால் யாராவது கொண்டுபோய் விடுவார்களோ என்ற பயத்தால், தூக்கிக் கொண்டே அங்கே போனான். வீட்டு வாசலில் பிணம்! அந்தப் பிணத்தின் மேல் விழுந்து பிள்ளைகளும் மனைவியும் அழுது கொண்டிருந்தார்கள். அவர்களுடைய அவலத்தைப் பார்த்து அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் கண்களில் நீர் வழிந்து கொண்டிருந்தது.

பூச்சாண்டி அங்கே நின்று பார்த்தான். "தம்பி! செத்துப் போயிட்டியா?" என்றான். அங்கே குழுமியிருந்தவர்கள் பூச்சிக் காரனைப் பயபக்தியோடு பார்த்தார்கள். அவனுடைய தாடி, தாறுமாறாகப் பறக்கும் தலை முடி, அந்த வெளுத்த முகத்தின் தோற்றம் — பார்த்தவர் மனங்களில் ஏதோ ஒர மரியாதை தோன்றியது. பூச்சாண்டி இன்னும் சற்று அருகே சென்று :

"எதுக்கப்பா ஒரேயடியா அழுது ஆர்ப்பாட்டம் பண்றீங்க? இதோ!" என்று சொல்லிவிட்டு, ஒர சமபக்க முக்கோணத்தையும், அதன் பக்கங்களின் மீது சதுரங்களையும் ஒரு செங்கல் துண்டால் தார்

ரோட்டின் மீது வரைந்தான். பிறகு, அந்தச் சதுரங்களைக் காட்டியபடி, "இது மனசு, அது ஆத்மா. இநத ரெண்டும் கலந்தாலொழிய பரமாத்மாவுக்கு -- மனசையும் ஆத்மாவையும ஒண்ணு சேக்க முடியாம போயிட்டான். -- செத்துப் போயிட்டான்" -- பிறகு கொஞ்ச நேரத்தில் எழுந்து மௌனமாகக் குறுக்கும் நெடுக்கும் நடந்தான். எல்லாரும் பூச்சாண்டிக்காரன் என்ன மகத்துவத்தைக் காட்டப போகிறானோ என்று ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் சற்று நேரத்தில் பேசாமலேயே தன் வழியில் தான் போய்விட்டான்।

## 33

ஒட்டு விவகாரம் முடிந்துவிட்டது. புல்லய்யாவின் சில நாள் சௌக்கியத்துக்கு முடிவு வந்துவிட்டது. பங்காரய்யா தோறறுவிட்டார். இருந்தும், தன்னைப் போன்றவர்களிடம் அவருக்குக் 'கருணெ இருக்குதே, உதவி செய்யமாட்டாரா?' என்ற எண்ணத்தில் இரண்டு முறை சென்று அவர் வீட்டு வாயிலை விடாமல் காவல் காத்தான். ஓட்டுக்காகப் பணம் வாங்கிக்கொண்டவாகளே, மோசம் செய்துவிட்டார்கள் என்று வெந்து கொண்டிருந்த பங்காரய்யா, தேவை முடிந்து போனாதால், புல்லய்யாவை மனிதனாகப் பார்க்காமல், ஆளை விட்டுத் தள்ளிவிடச் சொன்னார। மிகவும் கஷ்டமாக இருந்தாலும், 'கஞ்சியா இல்லை" என்று எண்ணிக்கொண்டு வீடு திரும்பி விட்டான்.

இடைக்காலத்தில் கிடைத்த பணம், வட்டியோடு கடன் தீர்ததது போக எஞ்சியது சாப்பாட்டுக்குச் சரியாகப் போயவிட்டது. ஏதோ கொஞ்சம் மிஞ்சியதில் பெண்ணுக்கு இரண்டு கௌன்கள், மல்லுவுகக்கு இரண்டு அரைக்கால் சட்டைகள், சட்டைகள் வாங்கினாள். இதுபோல வேலையிருந்தால், ஏதோ கொஞ்சம் மிச்சப் படுத்தி, ஒரு ராட்டினம் வாங்கிக் கொள்ளலாமென்றிருந்தாள். அந்த ராட்டினம் மூலம் பணம் சம்பாதித்து ஒரு எருமை வாங்கிக் கொண்டால், நியாயமான பால் வியாபாரம் செய்து பிழைத்துக் கொள்ளலாம் எனறு நினைத்தாள். அவளுடைய ஆசைகளில் மண் விழுந்தது।

புல்லய்யாவுக்குக் கூடை தூக்கிக் கொண்டு, மறுபடியும் கடைத்தெருவுக்குப் போவதற்கு வெட்கமாக இருந்தது. இந்த இடைக்காலத்தில், சில நாட்கள் சாப்பாடு கிடைத்து வந்ததால் கொஞ்சம் சத்துப் பிடித்திருந்தது. தன்னைப் போன்றவன் கடைத்தெருவில் கூலி வேலைக்குப் போவது அசிங்கமாக இருந்தது. இரண்டு நாட்கள் வேலைக்காக ஊர் முழுவதும் அலசிப் பார்த்தான். ஒரு முறை ஸ்டேஷனிலிருந்து மூட்டைகள் சுமந்ததற்கு அரை ரூபாய் கூலி கிடைத்தது. அவ்வளவுதான்। மறுபடியும் தன் நிலைமை பழைய நிலைக்கு வரத் தொடங்கியது. சில நாட்களாகக் கவலைகள்

மறந்திருந்த அவனுக்கு மீண்டும் கவலைகளும் வேதனைகளும் படர்ந்து அலைக் கழித்தன.

ஒரு முறை கடைத் தெருவுக்குத் துணிந்து போனான். மறுபடியும் வந்துவிட்டான் என்று அந்தச் சிறு பையன்களெல்லாம் ஒன்று சேர்ந்தார்கள். பரிகாசம் செய்ததுடன் நில்லாமல் -- பின்னாலிருந்து பைத்தியக்கரான் என்று கத்தியுதுடன், வேட்டியைப் பிடித்து இழுத்து, குடுமியைப் பிடுத்திழுத்து கலாட்டா செய்தார்கள். வாய்க்கு வந்தபடி வேறு திட்டினார்கள். இதையெல்லாம் தாங்க முடியவில்லை புல்லய்யாவால்.

மறுபடியும் பட்டினி கிடக்க வேண்டிய நாட்கள் வந்தன! பிள்ளைகள் வாடிப் போனார்கள். ஒரு நாள் இரவு வெளியில் வாயிலில் படுத்திருந்தான். எல்லாம் நிசப்தமாக இருந்ததது. பக்கத்தில், மல்லு பசி தாங்க முடியாமல் அழுது அழுது தூங்கிப் போனான். ரயில் வண்டி ஒனறு பாலத்தின் மேல் தடதடவென்ற சத்தத்துடன் கடந்து போயிற்று. ஒரு முறை உடம்பு முழுவதும் நடுங்கியது. 'இப்படியே செத்துவிடுவோமா?' என்ற பயம் தோன்றியது. 'என் பொழப்பு இவ்வளவு தரித்திர நிலெமெக்கு வந்துட்டுதே! எங்கப்பா எவ்வளவு கௌரவமா, சக்ரவர்த்தி மாதிரி, நாலு பேரு மத்தியிலெ மதிப்போட வாழ்ந்துட்டுப் போனாரு. என் பொண்டாட்டியோட நல்ல குணம் கூட எனக்கு வயிறு நிறையச் சாப்பாடு போடலே. இந்த உலகத்துலெ வயிறுமுக்கியமா? வயிறு நிறையலேன்னா என்ன பண்ணாலும் அது நியாயம்தான்! -- நான் ஏன் அந்தப் பூச்சிக்காரன் வீட்டெக் கண்டுபிடிச்சி . . . அந்தத் தென்ன மரத்துக்குக் கீழே தோண்டி அந்தத்தங்கத்தெ எடுத்துக்கக் கூடாது?' என்று நினைத்தபடி, எதிரிலிருந்த மரத்தின் பக்கம் பார்த்தான். பூச்சிக்காரன் அன்றைக்கு நாயை வாங்கிக் கொண்டு போனதிலிருந்து அங்கு வருவதையே நிறுத்திவிட்டான். மரத்தின் கிளைகள் காற்றில் அசைந்தபடி இலேசான சத்தத்தை உண்டாக்கின. இப்படிப் பல யோசனைகளுக்கிடையே தூங்கிப்போனான். நள்ளிரவில் குளிரெடுத்தது. வீட்டுக்குள் போய்ப் படுத்துக் கொண்டான்.

அன்றிரவு குருட்டு வெங்க்கன்னா இறந்துவிட்டது போல் கனவு கண்டான். விழிப்பு வந்த பிறகு, ஊர் ஞாபகம் வந்து, மறுபடியும் தூக்கம் பிடிக்கவில்லை. பஜனை மண்டபத்தின் அருகில் வெங்க்கன்னாவின் பிணம், அழுகையெல்லாம் கண்ணெதிரில் வந்து நின்று அப்போதே தன் ஊர் போகவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று.

பொழுது விடிந்தது. காலை முழுவதும் திரிந்தும் வேலை எங்கேயும் கிடைக்கவில்லை. பூச்சிக்காரன் ஒரு மூன்று மாடிக் கட்டடத்தின் எதிரில், பாழடைந்த ஒரு வீட்டுத்திண்ணை மீது தென்பட்டான். அந்த மாடி வீட்டின் புழக்கடையில் தென்னை மரம் இருக்கிறதோ என்று

பார்த்தான் -- இல்லை. எந்த வீட்டுப் புழக்கடையிலாவது தென்னை மரம் இருக்குமோ என்று திரிந்து பார்த்தால், அது போன்ற வீடுகள் பல தென்பட்டன. அதற்குள் பல சந்தேகங்கள் வந்தன. பூச்சாண்டிக்காரனுக்கு ஒரு வேளை அது சொந்த ஊரில்லையோ என்று எண்ணினான். மத்தியானம் வீட்டுக்குப் போன போது, நீலி கஞ்சி ஊற்றினாள -- குடிததான். பசியில் எல்லாவற்றையும் குடித்துவிட்டபிறகு நினைவு வந்தது. மனைவி அந்த வேளையும் பட்டினி இருக்க வேண்டுமே என்ற நினைப்பு வயிற்றிலிருந்த கஞ்சியையும் வெளியே கொண்டு வர முயற்சித்தது।

கால் மிகவும் வலித்தால மத்தியானம் படுத்துவிட்டு, மாலை எழுந்தான். இருட்டும் நேரத்தில் மகனோடு சேர்ந்து வெளியே போனான். ரோடு நிறைய ஜன நெரிசல். ஏதேதோ வேலையாக வந்தவர்கள் கடைத்தெருவில் அது இது என்று வாங்கிக் கொண்டிருந்தார்கள். அவற்றையெல்லாம் பார்க்கும் போது தலை சுற்றியது. தன் மல்லுவுக்கு விளையாடுவதற்கு ரப்பர் பந்து வாங்கினால் . . . அதோ, அங்கே யாரோ ஒரு பையன் ரோட்டில் பந்து விளையாடிக் கொண்டிருந்தான் -- பார்ததுவிட்ட மகன், "அபபா, அப்பா!" எனறு அந்தப் பக்கம் கையைக காட்டினான். இன்னொரு சிறு பெண் வாயில் பலூனை வைத்து ஊதிக் கொண்டே போனாள் . மல்லுவுக்கு அதுவும் வேண்டும். அதோ, அநதச் சின்னக் குழந்தையின் கையில் ரப்பர் நாய்க்குட்டி -- மல்லுவுக்கு அதுவும் தேவைதான்।

'நீ பெரிய இடத்திலெதான் பொறந்தே -- ஆனா உனக்கு நேரம் சரியாயில்லேப்பா!' என்று நினைததுககொண்டான். அப்படிக் கொஞ்ச தூரம் சென்றபோது, ரோட்டு ஓரத்தில், விளக்கின் கீழே கைரேகை பார்க்கும் ஜோஸ்யன் ஒருவன் உட்கார்ந்திருந்தான். 'ஆனால் கையில் காசில்லையே. என்ன சொல்வானோ! எனக்கு எப்பொ நல்ல காலம் வரும்னு சொல்லமாட்டானா!'

"அய்யா! எவ்வளவு வாங்குவே?" என்று கேட்டான்.

"மொதமொதல்ல அம்மன் பேரெச்சொல்லி உன்னாலெ முடிஞ்சதெக் குடு, வாங்கிக்கிறேன் தம்பி!" என்றான் அந்தக் கோய இனத்து ஜோஸ்யன். காலணாக் கூட இல்லாத புல்லய்யா ஏக்கத்தோடு நகர்ந்து போய்விட்டான். கால் வலித்ததால், ஒரு உயரமான கால்வாய்க் கரைமேல் உட்கார்ந்து விட்டான். வயிறு பசியில் எரிந்து கொண்டிருந்தது. தனக்கே இப்படி இருந்தால் தன் மகனுக்கெப்படி இருக்கும்? எழுந்து நிற்பதற்குச் சக்தி இல்லை என்று தோன்றியது. அப்படியே போகும்பழி தெரியாதது போல உட்கார்ந்திருந்தான். பெரிய புலியைப் போல் பசி விழுங்கத் தொடங்கியது. வரவர ஜனங்கள் குறைந்து விட்டார்கள். அக்கம் பக்கத்திலிருந்த கடைகள் சிலவற்றை மூடிவிட்டார்கள். அவ்வப்போது காற்று வீசி, தார் ரோட்டைச்

சுத்தப்படுத்திக் கொண்டிருந்தது . . . மல்லு, அப்படியே அப்பாவின் மடியில் தலை வைத்து, களைப்போடு படுத்திருந்ததால கேள்வி ஒன்றும் இல்லை. மகன் தலையைத் தடவிவிட்டு அவன் மேல் ஒரு கையை வைத்திருந்தான். எங்குமில்லாத பரிவு, பாசம் கரைபுரண்டு கொண்டிருந்தன. நரம்பெல்லாம் வேதனையால் புடைக்கலாயின! அந்த நிமிஷம் மகன் பிறந்த நேரத்துக் காட்சி கண் முன்னால் தோன்றியது . . . 'என் ஊர்லெ இந்த மாதிரி ஒர்த்தன் பிறக்கலே . . . அவ்வளவு கெட்டிக்காரன் இப்படிப் பட்டணத்திலே சாக்கடைக் கால்வாப் பக்கத்திலே பசியிலே அவஸ்தைப் பட்டுகிட்டிருக்கிறான்!' . . . இப்படியே யோசிக்க யோசிக்கத் தன் பசியை மறந்து மகனின் பசி வேதனையை தானே அனுபவிக்கலானான். . . அங்கே எதிரிலிருந்த ரொட்டிக்கடையை மூடிக்கொண்டிருந்தான். போய் ஒரு ரொட்டி கொண்டுவரலாமென்ற நினைப்பு வந்தது - சட்டென்று எழுந்தவுடன் -- திருடுவதா? தான் அகப்பட்டுக்கொண்டால்? தன்னைப் போலீஸிடம் பிடித்துக் கொடுக்க மாட்டார்களா! . . .

மறுபடியும் வீட்டுக்கு ஏன் போகவேண்டுமென்று எணணினான். . . . ஆனால் தானும், மகனும் அப்படியே பனியிலிருந்தால் என்ன ஆகும்? இரவில் யாராவது திருடனென்று நினைத்துவிட்டால்! தான் வீட்டுக்குப் போகவில்லையென்றால் நீலி என்னென்ன நினைப்பாளோ! கடைசியில் எழுந்தான். மகனும் எழுந்து மெதுவாக நடககலானான். குறுக்கு வழியில் வீட்டுக்கு போகலாமென்று பீர்லு ஆற்றங்கரை ரோடு வழியாக நடந்து கொண்டிருந்தான். அந்த ரோட்டில் ஜனநடமாட்டம் இல்லை. இவர்கள் இரண்டு பேர் மட்டும் தான் போய்க் கொண்டிருந்தார்கள். நாலுஅடி எடுத்து வைத்தபிறகு மிகவும் களைப்பாக இருந்தது. அங்கே முனிசிபல் விளக்குக்குக் கீழே ஒரு குருட்டுக் கிழவி துணியை விரித்துப்போட்டு பிச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள். சற்று தூரத்திலிருந்தே பார்த்தான். நிஜமாகவே குருடி தான் போலும் . . . அழுக்கான கந்தை துணிகள் . . . மெலிந்த உடம்பில் எலும்புகள் அந்த கிழிசல்கள் மூலம் தென்பட்டன. முகாம்போட்டு அந்த ரோடு ஓரத்தில் உட்கார்ந்து, யாரும் நடமாடாத போதும், ஓயாமல் மிகவும் தீனமான குரலில் . . . "அம்மா! . . . கஷ்டப்பட்டு வேளை செய்ய முடியாத ஜென்மம் அப்பா! . . எந்த ஜென்மத்திலே என்ன பாவம் பண்ணேனோ கஷ்டப்பட்டு வயித்தெக் கழுவிக்க முடியாம இருக்கறேன். நீங்க தான் அம்மா, அப்பா எல்லாம் -- கை நீட்டிக் கேக்கறேன் . எஜமானே! . . . இந்தக் குருடியெப் பாத்து கருணெ காட்டுங்க அப்பா!"என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

புல்லய்யா அவளைப் பார்த்தபோது, "அய்யோ! எவ்வளவு பாவம் செஞ்சி இப்படிப் பொறந்தாளோ!" என்று நினைத்தான். 'இந்த மாதிரி இருக்கறவங்களுக்கும் பொழச்சிருக்கணுங்கிற ஆசை இருக்குமா?"

-- ஒரு சந்தேகம் தலை தூக்கியது. அங்கே அவளுக்குச் சற்று அருகில் உட்கார்ந்துவிட்டான் அவள் இனனும் அப்படியே கத்திக்கொண்டிருந்தாள். வலது கையால் துணியைத் தடவிக் கொண்டே இருந்தாள் -- ஒரு மூலையில் ஓரணா இருந்தது. . . அது அவள் கைக்குத் தட்டுப்படவில்லை -- புல்லய்யா அந்த வெளிச்சத்தில் உற்றுப்பார்த்தான் . . . அதோ. . அவள் முழுக் குருடிதான் . . . பிச்சை கேட்பதற்காகக் குருடி வேஷம் போடவில்லை. அங்கேயிருந்து சற்றுத்தூரத்தில் ஒரு சினிமா தியேட்டர் இருந்தது. காட்சி முடிந்த பிறகு பல பேர் இந்த வழியாகப் போவார்கள். அவர்களை எதிர்பார்த்தே அவள் அப்படிக் கத்திக் கொண்டிருந்தாள். . . காட்சி இன்னும் முடியவில்லை -- புல்லய்யா உட்கார்ந்திருந்த அவ்வளவு நேரத்தில் ஓரிருவர் அந்த வழியே சென்றார்கள்.

மறுபடியும் தானும் மல்லுவும் மட்டும் தான் . . . அவள் ஒர நிமிஷம் கத்தாமல் சும்மா இருந்தாள். புல்லய்யாவின் மனதில் அந்த ஒரு நிமிஷம் ஏதேதோ யோசனைகள் --'அதோ, அந்தக்காசு ஒரு அணாவா, ஒரு ரூபாயா? என்று சந்தேகம் வந்தது. அவள் மறுபடியும் தொண்டையைத் திறந்தாள். அந்தக் குரல் உயரஉயர புல்லயயாவின் மனதில் ஏதோ ஒரு விதமான வேகம் பிறந்தது. பசி வேகத்தை வளர்த்தது. எல்லாம் செத்துவிட்டதைப்போன்ற ஓர் உணர்வு. அந்த அணாவை எடுத்துக்கொண்டால் . . . எனக்கு வர்றப்போ வட்டியோட குடுத்துட்றேன்.'' என்று சொல்லிக கொண்டான் -- மறு வினாடியே, என் மகன் முன்னாலேயா? இதுக்கு முன்னாடியே ஒரு தடவெ பட்டிருககறேன். நான் திருடன் ஆனா என் மகனும் திருடன் ஆக மாட்டானா?'' என்று நினைத்தான்.

மறுபடியும் தடுமாற்றம் -- ஏதோ மேளச்சத்தம் கேட்டது. தீவட்டிகளைப் பிடித்துக்கொண்டு அந்த ரோட்டில் ஏதோ ஒரு கும்பல் ஊர்வலமாக வந்தது. ஜால்ராக்கள் -- பெரிய தாள வாத்தியங்கள் முழங்கின. பின்னால் அலங்காரம் செய்யப்பட்ட மாடு நடந்து வந்தது. அவர்கள் குரல்களைக் கேட்டதும் புல்லய்யாவுக்கு உயிர் வந்தது போல் இருந்தது. அவர்கள் பாட்டு, தன் ஊரில் பாடுவது போல் இருந்தது. தானும் மகனும் அவர்களைவிட நன்றாக ஆட முடியும் என்று தோன்றியது. ஆனால் . . .

இவ்வளவு ஆரவாரத்துக்கும் மகன் உற்சாகம் காட்டவேஇல்லை. அதிலிருந்து அந்தச் சின்ன உயிர் பசியில் எவ்வளவு நொந்து போயிருக்கும் என்பது அவனுக்குப் புரிந்தது. அது இன்னும் அதிகமான களைப்பைக் கொடுத்தது!

அதோ. . . மிட்டாய் வண்டி. . . இந்த ஊரில் கால் வைத்த இரவு தென்பட்டது. இதே நேரத்தில். . . இன்று இந்தப் பக்கம் வந்தது. மணி அடித்தது. மல்லு தலையைத் தூக்கிப்பார்த்தான். இதோ இந்தப்பக்கமாகவே வந்தது. . . அவர்கள் எதிரிலேயே, 'இனிப்பு,

இனிப்பு மிட்டாய்! சூடான, சூடான பக்கோடா!' என்று கத்திக் கொண்டிருந்தான். அந்தக கததல் எவ்வளவு இனிமையாக இருந்தது! எவ்வளவு சூடாக இருந்தது!

இதோ எதிரிலேயே வந்துவிட்டது. . . மல்லு உற்சாகத்தோடு எழுந்து நின்று, "அப்பா. . . அப்பா. . !" என்று சொல்லி, கையைத்தூக்கி விரலை இறக்காமல் காட்டிக் கொண்டிருநதான். வண்டிப் போகப் போக கையும் அந்தப் பககமாகவே திரும்பிக் கொண்டிருந்தது. . . . புல்லய்யாவுக்கு என்றும் இல்லாத துக்கம் அடைத்துக்கொண்டு வந்தது. . . 'என் மல்லுவுக்குப் பசி. . . எனக்கும் பசி. . . என் மகன் பசியிலெ செத்துப்போயிட்டா அப்புறம் இதெலலாம் என்னைக் காப்பாத்துமா'. . . "போப்பா, ஓடிப்போய் நிறுத்து, வாங்கலாம்," என்று மகனை அந்தப் பக்கம் அனுப்பிவிட்டு, இப்படியும் அப்படியும் பார்த்துவிட்டு மெல்ல எடுத்துக் கொண்டான். ஓரணா! கையில் ஓரணா!!! ஓடிப்போய். . . வாங்கினான் ஒரு பக்கோடாப் பொட்டலம், பிரித்தான். மகன் நறுக்நறுக்கென்று மெல்லலானான். தன் பற்களும் நடுங்கிக்கொண்டே மெல்லத்தொடங்கின . . . பொட்டலம் காலியாகிவிட்டது. மகன் முகம் சற்றுத் தேறினாற் போலிருந்தது. அதோ வழக்கமான சிரிப்பு . . . "என் மகனே!" . . . அணைத்தபடி கொஞ்சிக் கொண்டிருந்தான், அவ்வளவு தூரத்திலிருந்து அந்த நாதியற்றவளின் குரல் கேட்கத் தொடங்கியது . . . வரவர, குரல் இன்னும் உரகக . . . காதுகள் பிளக்கும் படியாக . . . உடம்பை என்னவோ செயதது . . . தன்னால் கேட்டுக்கொண்டிருக்க முடியவில்லை. "அய்யோ! நான் என்ன செஞ்சிட்டேன்? அதோ அந்தப் பிச்சையெடுக்கற ஏழைகிட்டே . . . திருட்டு! அம்மா திருடிட்டேனே! நான் நேர்மையாகச் செத்துப்போறேன -- ஆனா திருடக்கூடாதுன்னு நெனெச்சேனே! திருடனா நான்? நான் திருடனா . . .?"கண்ணில் நீர் கசிந்து விட்டது! வயிறு புரட்டியது. சுட்டு விரலை வாயில் வைத்து, அந்த ஜன நடமாட்டமில்லாத இடத்தில் வாந்தியெடுத்துக் கொண்டிருந்தான், மகனும் அப்பாவைப் பின்பறறினான்.

"அப்பா, அப்பா -- நல்லால்லே . . !" என்று சொல்லிக் கொண்டே வாந்தியெடுத்தான் மகன். சில நிமிஷங்களுக்கு முனனே அவ்வளவு ஆசையோடு தின்ற மகன், இப்படிச் சொல்லிக்கொண்டு, வாந்தியெடுக்க முயறசி செய்வதைப் பார்த்து, புல்லய்யா சோகத்தைத் தாங்க முடியாமல் போனான். சக்தியில்லை என்றாலும் மகனைத் தூக்கிக் கொணடான். போட்டிருந்த கிழிசல் பனியன் மேலும் கிழிவதை மகன் பார்த்தான். "அப்பா, கிழிஞ்சி போச்சி . . . " என்று சொல்லிக்கொண்டே கீழே இறங்கி விட்டான். மலலு முன்னால் மெதுவாக நடந்தான். பின்னால் மௌனமாக, தள்ளாடிய படி புல்லய்யா செல்லலானான்.

"அப்பா, பனியனு கிழிஞ்சி போச்சி . . . நல்லது போட்டுககோ!"
"இல்லே," என்றான் விசனத்தோடு.
"அப்பா! நான் பெரியவனானேன்னா வுனக்கு நிறைய வாங்கிதர்றேன் . . ."
அந்தச் சின்ன அப்பாவின் வார்த்தைகளைக் கேட்கும் போது, ஆனந்தம் ஒரு பக்கத்தில், துககம் இன்னொரு பக்கத்தில் பிணைந்து வந்தாலும், "அப்பா! நீ எப்படிப் பெரியவனாகப் போறெ?" என்றான் புல்லயயா.
மல்லு சந்தோஷத்தோடு, அபிநயத்தோடு சொன்னான். "ஆவென ரெண்டு கையாலியும் சோத்தெ வாயநிறைய அள்ளி அள்ளிப் போட்டு முழுங்கிட்றேன்."
அப்பாவின் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் சிந்தின.

## 34

மறுநாள் காலையில் கூடையைத் தூக்கிக் கொண்டு, கடைத்தெருவுக்குப் போனான். தன் நிலை பழைய நிலைக்கு வந்துவிட்டது. அந்தக் குட்டிப் பையன்களின் பரிகாசம், கிழவிகளின் வசவுகள் தன்னைச் சாகடித்தன. திரும்பிப் போய்விடலாமென்று நினைத்தாலும் வேறு வழியில்லை. "இந்த ஒரு நாளுக்கப்புறம் வரமாட்டேன் ," எனறு அவர்களிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். மத்தியான நேரத்துக்குக் கிடைத்த நாலணாவுககு எப்படி நாலு வயிறு நிறையும்? ஏதோ ஒரு மொடககு வாயில் ஊற்றிக் கொண்டது போலிருந்தது.
மத்தியானம் சுமந்த சுமைக்கு இன்னொரு நாலணா வந்தது. தனக்கு இலலாவிட்டாலும், தான் நினைத்ததைச் செய்ய வேண்டும். சாயந்திரம் ரோட்டில் ஜன நெரிசல். நினைத்தது போலவே அந்த ஜோஸ்யன் இருந்தான். மடமடவென்று அருகில் சென்று, கும்பிட்டுவிட்டுப் பணிவோடு எதிரில் உட்கார்ந்தான். மகன் தந்தையைப் பின்பற்றினான. கறுப்பான அந்தக் கோய ஜோஸ்யன் ஒரு முறை உற்றுப் பார்த்துவிட்டு, "துணியிலெ ஒண்ணுமில்லேப்பா, மனசுலேதான் இருக்குது . . . பையன் சத்யத்தைக் காப்பாத்துவான் . . . அப்பாவின் பேரையும் புகழையும் நிலைக்க வெப்பான்," என்றான்.
இந்த வார்த்தைகள் புல்லய்யாவுக்கு எவ்வளவோ ஆனந்த்தைக் கொடுத்து, அவன் மேலெ முழு நம்பிக்கையைக் கொடுத்தது. சற்று நேரம் மௌனமாகப் புல்லய்யாவின் கையை உற்று உற்றுப் பார்த்துவிட்டு, "அப்பா! கிட்டெ வந்துட்டுது, தூரமாப் போயிடுது! தாமரெ இலெ மேலெ தண்ணி மாதிரி உன் மனசு இருக்குது! சொந்த இடத்துலெ சனி சஞ்சரிக்கிறான் -- நாலு பேரு பொழெய்க்கணுங்கறே," -- ரேகையை நன்றாகக் கவனித்துவிட்டு, "ஆயுஸ்ு எண்பதுக்குக் குறைவில்லே. நாலு காசு கூடிவருது --

முன்னாலே சுகம் இருக்குதே தவிர, கஷ்டமில்லலே! வயிறு நிறையப் போட்டாச் சும்மா இருக்கும் -- இல்லேன்னா மூக்கெக் கசக்கும் . . . எப்பவும் ஒரே பேச்சி . . . ஒரே புத்தி. . , ஆம்பளெ தும்மலுக்குச் சமம்! பொம்பளெ பூவுக்குச் சமானம். மோதல்ல அம்மனுக்கு உன் பேரெச் சொல்லி அர்ச்சனை பண்றேன. . . . கெட்டதெயெல்லாம் துடெச்சிடும . . . நல்ல காலத்தெக் கொண்டு வரும். . . .இந்தக் குங்குமத்தெ வெச்சிக்கோப்பா" என்று சொல்லிக்கொண்டே , இரண்டு பேருக்கும் பொட்டு வைத்தான். புல்லய்யா, உற்சாகமாக மகனைப் பற்றிப் பல கேள்விகள் கேட்டான்,. கோயன் சிரித்துவிட்டு, "முகமே கண்ணாடி போல இருக்குது! அப்பா, புலிகிட்டெ சண்டைக்குப் போவான், நாக்குக்கு எலும்பு இருக்கறா மாதிரி நியாயமே பேசுவான் . . . சும்மா சொல்லக் கூடாது, கோடியிலெ ஒர்த்தன் இந்த மாதிரி பொறப்பான்!. . .

புல்லய்யாவின் உடல் புல்லரித்தது! அதற்கு மேல ஒன்றும் கேட்கவில்லை. இரண்டானா அவன் கையில் வைத்துவிட்டுக் கும்பிடு போட்டுவிட்டுப் புறப்பட்டான். அப்போது தெருவிளக்கு எரியத் தொடங்கியது. மறுபடியும் அவனுக்குள் உற்சாகம் பெருக்கெடுத்தது. நடந்து கொண்டே மகனைத் திரும்பத் திரும்பப் பார்த்தான். எவ்வளவு பார்த்தாலும் ஆசை தீரவில்லை. அந்த மகன் பிறந்த நேரத்து நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன.

'எனக்கு ஆயுசு எண்பது வருஷமிருக்குது . . . சனி பகவான் எத்தென நாளுக்கு இருக்கப் போறான் -- என் மகனெப் படிக்க வைக்கறேன். எப்படியோப் பட்டணம் வந்துட்டேன் -- யார் கால்லயாவது விழுந்து படிக்க வச்சிட்றேன். என் மகன் பெரிய படிப்பு படிப்பான். நியாயம் சொல்லுவான்னா -- அந்த நாற்காலியிலெ உக்கார மாட்டானா? கோடியிலெ ஒர்த்தன்னா சும்மாவா? எங்கப்பா சாதாரணமாப் பொறந்தானா!' இப்படி எண்ணிக் கொண்டே பீர்ல ஆற்றங்கரை ரோடை அடைந்தான். இந்த யோசனைகள் பசியை மறக்கடித்து விட்டன. அந்தப் பிச்சைக்காரி, சரியாக நேற்று உட்கார்ந்திருந்த அதே இடத்திலேயே, அதே குரலில் கத்திக் கொண்டிருந்தாள். நேற்று நடந்ததெல்லாம் நினைத்தபோது, தன்மேல் தனக்கே வெறுப்பு உண்டாயிற்று. இரவு முழுவதும் தனக்குச் சரியாகத் தூக்கமில்லை. அணாவுக்கு அணா வட்டி போட்டு, அவள் கையில் போட்டான். அவள் தடவிப் பார்த்து, இரண்டனா என்று தெரிந்து கொண்டு, முகத்தைப் பிரகாசமாக்கிக் கொண்டு ஆசிர்வதித்தாள்! புல்லய்யாவுக்கு அந்த ஆசிர்வாதம் சாபம் போலப்பட்டது. செய்த வேலையைச் சொன்னால் பாவம் தொலையும் மென்றெண்ணினான். ஆனால் சொல்ல முடியாமல், "அந்த மாதி ஆசிர்வாதம் பண்ணாதேம்மா -- உன் கடனைத் தீத்துகிட்டேன்," என்றான்.

அவள் அப்பாவித்தனமாச் சிரித்துக்கொண்டே, "தெரிஞ்ச துரெங்க

அப்படித்தான் சொல்லுவீங்க. உன்கிட்டெ ஏன் மறைக்கணும்? .. உங்க சம்பாத்தியத்திலெ எங்க மாதிரி அநாதைகளுக்கு இவ்வளவு போட்டீங்கன்னா அது எங்களுக்கு எப்படிச் சொந்த மாயிடும் – உங்களுக்கெல்லாம் புண்யம் வராதா துரெ! என்றாள்.

புல்லய்யா சட்டென்று, "புண்யமா? பாவம்!" என்றான்.

"என்ன சொல் சொல்லிட்டேப்பா -- ஒரு காலத்துலெ நல்லாத்தான வாழ்ந்தேன், எந்த ஜன்மத்திலே யாருக்குப் போடலியோ, இன்னைக்கி எனக்கு இந்த கதி வந்தது. சோறு அதிகமாயிடடவங்களுக்கு ஆயுசு அதிகம்'பா! ஒரு நாளு வர்றவரெக்கும் வயிறு எதாவது பண்ணச் சொல்லுது. கொடுத்தவன் வாங்கனவனெவிட பெரிய மனுஷன் துரெ! அந்த மாதிரி ஆளுங்களுக்குப் புண்யமே வரும்," என்றாள்.

ஒரு வினாடி, புல்லய்யா அந்த அம்மாவைப் பார்த்தான். முந்திய நாள் அவளைப் பார்த்த போது வெறுப்பாக இருந்தது. இந்த மாதிரி மோசமான வாழ்க்கை வாழ்வதைக் காட்டிலும் செத்திருக்கலாமே என்று நினைத்தான். ஆனால் இன்று, இந்த மாதிரியான தாய்மார்கள காலாகாலத்துக்கும் வாழ்ந்திருந்தால் நல்லது என்று நினைத்தான் கோய ஜோஸ்யன் சொன்னது போல், 'துணியிலெ என்ன இருக்குது, மனசுலேதான் இருக்குது! தான் எந்தக் கஷ்டத்தில் இருந்தால் என்ன -- தன் நீலி அந்த நாற்றத்தெருவில், பன்றிக் கொட்டகை போன்ற குடிசையிலிருநதாலும், அவளுடைய பெருந்தன்மை எங்கே போய்விடும் என்று நினைத்தான். இந்த உலகத்தில் இதுவரையில் தான் பார்த்த எத்தனையோ மனிதர்கள் நினைவுக்கு வந்தார்கள். அவர்களில் பணமிருந்த ராஜு ஒரு நாளாவது சுகமாக வாழ்ந்தானா? பணமில்லாத படு ஏழையான பாட்டி எவ்வளவு மகிழ்ச்சியோடு சிரித்துக் கொண்டே இறந்து போனாள்? அந்த மாதிரியான ராஜுவே வரிந்து கட்டிக்கொண்டு காரியமெல்லாம் பார்த்தானே! இந்த உலகம் நல்லது கெட்டது என்ற இரண்டே இரண்டினால் நிரம்பி விட்டது. நல்லதுக்குச் சாவு கிடையாது; கெட்டது செத்து மறுபடியும் பிறக்குது! தினம் சாவுதான் தினம் பிறப்புதான் அதற்கு!! .

அந்தக் களங்கமில்லாத இதயத்தின் பக்கத்தில் உட்கார்ந்ததும் புல்லய்யாவுக்கு இத்தகைய தன்மையான சிந்தனைகள் பிறந்தன. வீட்டுக்குப் போய மிகவும் பெருமையாக, ஜோஸ்யன் சொன்னதை மனைவியிடம் சொன்னான். அவள், "அந்தக் காசிருந்தா இந்த வேளெக்குச் சாப்ட்டிருக்கலாமே!" என்று சொன்ன போது, புல்லய்யாவுக்குக் கோபம் வந்தது. "அவன் பெப்படிப் பொழக்கறது அவனுக்கும் தர்மம் பண்ணவேண்டாமா!" என்று சொன்னான்.

அதற்கடுத்த நாள் கடைத்தெருவுக்குப் போகவில்லை. இனிமேல் போவதில்லை என்று உறுதி செய்து கொண்டான். ஒரு நாளைக்கு வெளியில் கூலி வேலை கிடைக்கும். இன்னொரு நாள் கிடைக்காது. நீலி மிகவும் இளைத்து விட்டாள். எந்த நேரத்தில அவளுக்கு உடம்பு

முடியாமல் போய்விடுமோ என்ற கவலை புல்லய்யாப் பற்றிக் கொண்டது. அநத்த் தெருவில் கைமாற்றாகக் கடன் கொடுத்தவர்கள் அவசரப்படுத்தலானார்கள். வாடகை இன்னும் கொடுக்கவில்லையென்று வீட்டுக்காரி எரிந்து விழுந்தாள். வாடகை கொடுக்காவிட்டால் சாமான்களை வைத்து விட்டு ஆட்கள் வெளியே போக வேண்டுமென்று சொன்னாள். நீலி எந்த வீட்டிலாவது வேலைக்குப் போகவேண்டுமென்று முயற்சித்தாள். "பாத்திரம் துலக்கப்போறியா?" செத்தா இப்படியே செத்துப் போலாமே தவிர அந்த வெலெக்குப் போவாதே," என்று சொல்லிவிட்டான். ஆனால் அவள் நாளுக்கு நாள் பலவீனமடைந்து வந்தாள். எங்கே திரிந்தாலும் வயிறு நிறையும் படியாகக் கூலி கிடைத்தபாடில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் புல்லய்யா அல்லல் பட்டுப் போனான்.

ஒரு நாள் மாலை, பசியாக இருந்தாலும், மகனை உடன் அழைத்துக் கொண்டு, எந்தக் கடையிலாவது வேலை கிடைக்குமா என்று கேட்கக் கடைவீதிக்குப் போனான். ஒரு கடைக்காரர் சொன்னார் "நீ நல்லவான கெட்டவனாங்கறது எங்களுக்கு எப்படித்தெரியும்? முந்தா நாளு ஒர்த்தனெ வச்சோம். நேத்துக் கைக்கு கிடைச்சவரெக்கும் எடுத்துகிட்டு ஓடிட்டான் -- திருட்டுப்பய!" புல்லய்யா காலில் விழாத குறையாகக் கேட்டான். ஆனால் அவர் உடனே நம்பும் நிலையில் இல்லாததால் பயனில்லாமல் போய்விட்டது. அலைந்து அலைந்து, பசியில் பாதி செத்து, அப்பாவும் மகனும் பௌபாரா ரோடு வழியாக வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தனர். தலை குனிந்தபடி, அப்படி ஆமைநடை நடந்துவரும் போது, "அண்ணே!" என்று கூப்பிட்டது கேட்டது. அந்தக்குரல் முன்பே கேட்ட குரல் தலையைத் தூக்கிப் பார்த்தான். புல்லய்யாவுக்கு வெட்கமாக இருந்தது. பழைய சிநேகிதனைப் பார்ப்பதற்கு. ஒட்டு விவகாரத்தில் அவனைத் தள்ளிவிட்டுப் பங்காரய்யாவின் பணத்துக்கு ஆசைப்பட்டுப் போனனால்லவா!

வழக்கம் போல அந்தச் சிநேகிதன், தோள் மேல் கையைப் போட்டு, "அண்ணே! ரொம்ப நாளுக்கப்புறம் தென்பட்டே பங்காரய்யா ஏதாவது வேலையிலெ வச்சானா?" என்று கேட்டான்.

"இல்லே'ண்ணே! அவன் வேலெ முடிஞ்சதுமே கழுத்தெப் புடிச்சித் தள்ளிட்டான். அவனைச் சொல்லி என்ன பிரயோசனம்! என் தலையெழுத்து இப்படி இருக்குது -- சனி பகவான் பிடிச்சிருக்கறான் -- நல்லதுக்குப் போனாலும் கெட்டதுதான் வருது -- உன் பேச்செக் கேக்காமெ போயிட்டேன் . . ."

"கஷ்டப்பட்றவன் -- உன் கஷ்டம் எனக்குத் தெரியாதா'ண்ணே! கூலிக்குப் போனே . . . அதுலெ தப்பென்ன இருக்குது? வா ஒரு டீ குடிக்கலாம்."

புல்லய்யாவால் வேண்டாம் என்று சொல்ல முடியவில்லை. அந்த ரோட்டுப் பக்கத்திலேயே ஒரு முஸ்லீம் ஹோட்டல இருந்தது.

பெஞ்சிலிருந்து, அங்கு வேலை செய்தவர்கள், ஓட்டல் சுவர்கள் எல்லாம் கறுப்புதான்! ஒரு மூலையில் ஒரு டேபிள் மேல எவர்சில்வர் தாம்பாளத்தில் விதவிதமான திண்பண்டங்கள் இருந்தன. இன்னொரு மூலையில் டீ தயார் செய்யும் டேபிள் இருந்தது. ஹோட்டல் முதலாளி தடியாக முரட்டு பனியன், லுங்கியுமா வாயிலருகில் உட்கார்ந்திருந்தான். அவன் எதிரில் டேபிள் மேல் சிறிய கிராமபோன் இருந்தது. ஹிந்தி ரிக்கார்டுகள் போட்டுக் கொண்டிருந்தான்.

போண்டா, பரோட்டாக்களை வரவழைதது வயிறு நிறையும் படியாகத் திணித்துவிட்டான் சிநேகிதன். டீத்தண்ணீரை கட்டாயப் படுத்திக் குடிக்க வைத்தான். இன்னும் நாலு போண்டாக்களைப் பொட்டலமாகக் கட்டச்சொல்லி, "அம்மாகிட்டே குடு" என்று சொல்லி மல்லுவின் கையில் கொடுத்தான். புல்லய்யாவுக்குச் சாப்பிட்ட பிறகு, இரண்டு மூன்று முறையாகச் சிநேகிதனுக்கே செலவு வைத்து விட்டோமே என்று வெட்கமாக இருந்தது. வயிறு நிறையவே தெம்பு வந்தது.

மூவரும் மறுபடியும் ரோட்டில் இறங்கி நடக்கத் தொடங்கினர். புல்லய்யா, "எங்கெயாவது வேலெ கிடெச்சிதா'ண்ணே?" என்று கேட்டான்.

"வேலெக்கா பஞ்சம்? அண்ணே! தங்கச்சிக்கு நோய் வந்துட்டுது. எல்லாரும் கைகாட்டிப் பேசற நிலமய்க்கு ஆய்ப்போச்சி. உலகம் இவ்வளவு நல்ல இருக்கறப்பொ இந்த வயத்தெக் கிழிச்சிப் போடணு'ங்கறியா?"

"அந்தத் துரெக்கி வேலெ செஞ்சிருந்தா, எனக்கு ஏதாவது ஆதரவு கிடெச்சிருக்கும்."

"அந்தத் துரெயும் ஜெயில்லே -- அவராலே ஒண்ணும் பண்ணமுடியாது".

"அப்பொ எப்படி உனக்கு வேலெ கிடெச்சிது?"

"எல்லாம் சொல்றேன் . . . வா உக்காரு . . ." என்று ரோட்டுப் பக்கத்திலிருந்த கால்வாய்க் கரைமேல் உட்கார்ந்தான். பக்கத்தில் உட்கார்ந்த புல்லய்யாவிடம், "நாளெக்கிக் காலையிலெ வா, பெரிய மனுஷங்களோட ஆசைங்க, ஏழைங்களோட கஷ்ட்ங்க என்னன்னு பாப்பே ஆவட்டும். இதெல்லாம் பாத்தா, நமக்கு இந்த உலகத்திலெ நியாமாவது கீயமாவதுன்னு தோணுது."

"நியாயம் போயிட்டுதுன்னா எல்லாம் ஒழிஞ்சிடும் அண்ணே!"

"அண்ணே! நீ பசியோட செத்துப் போனா, உனக்கு நியாயம் என்ன பண்ணப் போவுது? நீ புழைச்சிருந்தாத்தான் இந்த நியாயம் கீயமெல்லாம் காப்பாத்தும் . . . . அதிகாரத்தாலியும் பணத்தாலியும் குருடாயிட்டாவன் ஆட்சி பண்ணா என்னா ஆகும்? ஒர்த்தர் மேலெ குண்டு போடச் சொல்லறான். 'அய்யோ, அந்தக் குண்டு விழற இடத்துலெ, என் பொண்டாட்டி பசங்களெ மாதிரியான ஆளுங்க

இருப்பாங்களே!' னனு நினைக்க மாட்டானே! எந்த வேலெ செஞ்சாலும் ஜனங்கெல்லாரும் தன் குழந்தைங்க மாதிரின்னு நினைக்கிறவன் தான் கவர்ன்மெண்ட்காரனா வரணும். அப்படிப் பட்டவன் தான் நமக்கு அப்பா, அம்மா எல்லாம்! அவன் தான் நம்மெ மாதிரி ஏழைங்களெயும் பணக்காரங்களெ கவனிக்கிறா மாதிரி கவனிக்கலேன்னா நாம நியாயமா எப்படிப் பொழய்க்க முடியும் அண்ணே!"

"நம்ம கவர்ன்மெண்ட்காரனெச் சொல்லாதே. அவன் சின்னவன். அவனாலெ எவ்வளவுதான் பாத்துக்க முடியும்?"

"நீ இன்னும் பட்ணம் சங்கதியே தெரிஞ்சிக்கலே'ண்ணே! நம்ம சின்ன வயசிலெ நம்ம அப்பா மாருக்குச் சாப்பாடு, துணி இதிருந்தா போதும்! இப்பம், காரு கீரு எல்லாம் வந்துட்டுதா! ஒவ்வொர்த்தனுக்கும் ஆசெங்க எல்லாயில்லாமெ போய்க் கிட்டிருக்ககுது. வயிறு நிறெஞ்சாப் போதாது. காரு வேணும் — ஆசெங்க அதிகமாக அதிகமாக மனுஷன்கிட்டெ இருக்கற நலல குணம் செத்துப் போவுது. இருக்கப்பட்டவன் இல்லாதவனெ நல்லா மொட்டையடிக்கிறான்! அவனுக்குக் காரு — இவனுக்குப் பசி!"

"இவனுக்கும் காரு குடுக்கணும்னு சொல்றியா?"

"நீ எனக்கு அப்பா அம்மா மாதிரி — அவனுக்குக் காரு இருக்கறதனாலெ இவனுக்குப் பசியில்லாம பண்ணு. இவன் குறெஞ்ச ஆசெயிருக்கறவன். இவன் கிட்டெ நல்ல குணம் நிறைய இருக்குது. இவன் நல்லது எதுக்கானாலும் வரிஞ்சி கட்டிகிட்டு நிப்பான். அந்த மாதிரி நிக்கறவங்க இருக்கற உலகமே உலகம்."

'அப்பஊன்னா, கவர்ன்மெண்ட்காரன் ஏன் செய்ய மாட்டங்கறான்? . . "

"அதுதா'ண்ணே! அவன் குருடனாப் போயிட்டதனாலெதான் நம்ம மாதிரி ஆளுங்களுக்குக் கஷ்டம்! அந்தக் காலத்துலெ ராமர் என்ன பண்ணாரு? மகாராஜா, வண்ணான் சொலறதெ லட்சியம் பண்ணனுமா? அவனுக்குக் கூடப் பயந்து சீதம்மாவெக் காட்டுக்கு அனுப்புனாரே — அண்ணே! அந்த மாதிரி ஆட்சி வந்தாக்கா, இந்தக் கஞ்சித் தண்ணியெக் குடிச்சாக் கூட நம்ம மாதிரி ஆளுங்களுக்கு அம்ருதம் குடிச்சா மாதிரி இருக்கும்!"

"நிஜம்தா'ண்ணே! — அந்த மாதிரியான மகாராஜா மறுபடியும் பொறப்பாரா?"

"அந்த ராஜா லங்கையிலே'ர்ந்து வந்து என்ன பண்ணாரு? இப்பொ மாதிரி எத்தனையோ பேர் நல்லாப் பணம் சம்பாதிச்சிகிட்டா, அந்த மகாராஜா அடிக்கலே, திட்டலே. அனுமாரெ விட்டுப் பூசணிக்காய் அளவு பணம்னு சொல்லி குதிரளவு பணத்தெ எடுத்து இல்லாத ஜனங்க எல்லாரெயும் சுகப்பட வெச்சாரு. அந்த மாதிரியே கவர்ன்மெண்ட்காரன், பிளாக்குலெ திருட்டுக் கணக்கு எழுதிச்

சம்பாதிச்சிகிட்டிருக்கறவங்களுக்கெல்லாம் பண்ணாக்கா நம்ம மாதிரி ஆளுங்களுக்கெல்லாம் வேலெ கிடெக்காதா?"

"எங்க ஊர்லெ என்னாச்சி? ஏக்கர் ஏக்கராப் பயிர் செஞ்ச ராஜாவுக்குப் பொக்யூர்மெண்ட் குறெச்சல். எனக்கு அதிகம்! மேலெ இருக்கறவன நல்லவன்தான்'ணே -- மத்தியிலெ இருக்கறவங்க தான் எல்லாம் பண்றாங்க. இவங்ககிட்டெ நியாயமிருந்தா நமக்கு இந்த கதி ஏன் வருது?"

புல்லய்யா சொன்னதை அந்தச் சிநேகிதன் மறுத்துப் பேச முடியவில்லை.

"அண்ணே! உலகம் இந்த மாதிரி இருக்குது. நாம உலகத்துக்குத் தகுந்தா மாதிரி நடந்துகிட்டாத் தவிர பொழய்க்க மாட்டோம் -- மறுபடியும் ஜனங்ககிட்டெ, 'நான் மனுஷன்'ங்கற நினெப்பெக் கொண்டு வந்து, நியாயத்தெ நிலெ நாட்ற மகாராஜா பொறக்கணும் -- அந்தக் காலம் வரைக்கும பொழெச்சிருக்காமெ செத்துப் போயிடணுமா? என் பேச்செக் கேளு. பசியாலெ நீயும் குழந்தைகளும் செத்துப்போவாதீங்க -- ராத்ரிங்கள்ளெ வந்தீன்னா. . ."

"எதுக்கு?" -- புல்லய்யா சந்தேகத்தோடு பார்த்தான். நேர்மையை நூற்றுக்கு நூறு பங்கு கௌரவித்து வந்த புல்லய்யாவைப் பார்த்து, அந்தச் சிநேகிதன் சிரித்துக் கொண்டே, "திருடறதுக்கில்லே ஆவட்டும் -- ராத்ரிங்கள்ளெ துறையிலெ படகிலே'ருந்து கோதுமெ மூட்டெங்களெ இறக்கணும் -- இப்பொ உங்க ஊருக்குப் போக முடியாது சம்பாதிச்சிக்கோ -- சாப்பிடு -- பொழச்சிரு -- பணதத சேத்துகிட்டு மறுபடியும் ஊருக்குப் போயிடு!"

புல்லய்யா ஆச்சர்யத்தோடு, "அவ்வளவு கிடெக்குமா?" என்று கேட்டான்.

"அங்கெ மேலெ'ருக்கறவன் கருணெ வெச்சான்னா நூத்துக் கணக்கிலெ கிடெக்கும்! தலையெழுத்து நலலா'ருந்தா, ஆயிரம் கூட வரும். நாளக்கி ராத்ரிக்கு இந்த நேரத்துக்கு இங்கேயே இருக்கறேன். வருவே'ல்லே -- தனியாத்தான் வரணும்!"

"இவன் விடமாட்டானே!"

"பொழக்கணும்னா உதறிவிட்டு வரணும்--"

புல்லய்யா விடைபெற்றுக்கொண்டு, சந்தோஷத்தோடு போனான். மனைவியிடம், ' இன்னையோட நம்ம கஷ்டஙக தீந்து போவும்," என்று சொல்லித் தொடர்ந்து, " நாளெக்கி ராத்ரிலே'ருந்து படகுலெ வேலெ -- நாம சாப்ட்டு, இன்னொராத்தருக்கும் குடுத்து, அதுக்கு மேலெயும் மிஞ்சுமாம். மறுபடியும் நம்ம உருக்குத் திரும்பிப போகக்கூட முடியும்!" என்று கூறி, சந்தோஷததோடு குதித்துக் கொண்டிருந்தான். நீலி, "ஆகாசத்துலெ கோட்டெ கட்டாதே -- சம்பாதிககறதுலெ வயிறு நிறெஞ்சாப் பத்தாதா?" என்று கேட்டாள்.

இந்த ஊர் வந்த பிறகு முதல் முறையாகச் சுகமாகத் தூக்கம் பிடித்தது.

## 35

நினைத்தது போலவே, மல்லு அடுத்த நாள் இரவு உடன் புறப்பட்டான். எவ்வளவு எடுத்துச் சொன்னாலும் பயனில்லை. நீலி வேண்டிக்கொண்டாள். எவ்வளவோ நல்லதனமாகச் சொன்னாலும் அவன் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. கடைசியில், அவள் அலுப்போடு, மகனைப் பிடித்துக்கொண்டு, கணவனைப் போகச் சொல்லிச் சைகை செய்தாள். புல்லய்யா போகும்போது, மல்லு ஆர்ப்பாட்டம் செய்து, அழுது கொண்டு, திமிறிக்கொண்டு, அம்மாவின் கையிலிருந்து நழுவிப் போவதற்கு முயற்சி செய்தான். முடிவில் நீலி கிழிந்த துணியால் காலையும் கையையும் கட்டி ஒரு மூலையில் உட்கார வைத்தாள். அவற்றைப் பிடுங்கிவிட்டு, ஓடப்போகும் போது, அவள் அவனைப் பிடித்து, இந்த முறை தடிக்கயிற்றால் அழுத்திக் கட்டிப் போட்டாள். அப்படியே அழுது அழுது, தேம்பித்தேம்பி, கடைசியில் நீண்ட நேரம் கழித்து நித்திரா தேவியின் மடியில் தலை வைத்தான்.

புல்லய்யா போன உடனே, அந்தச் சிநேகிதன் தன் வீட்டிற்கு அழைத்துப் போனான். அது தான் முதன்முறை சிநேகிதனின் வீட்டைப் பார்ப்பது. அந்தச் சுற்றுப் பக்கத்திலிருந்த வீடுகளை நிலா வெளிச்சத்தில் பார்த்தான். அந்தச் சுற்றுப்புறம் குப்பைக் கூளங்களோடு மிகவும் அசிங்கமாக இருந்தது. ஒரு சின்னக் குடிசையில் சிநேகிதனின் தங்கையும், மூன்று பிள்ளைகளும் இருந்தார்கள். ஒரே அறை -- அதை அறை என்று சொல்வதற்குப் பதிலாக ஒரு வராந்தா மூலை என்று சொன்னால் பொருத்தமாக இருக்கும். ஒரு சிறிய சிம்னி விளக்கு, அந்த அறையில் எரிந்து கொண்டிருந்தது. அந்த அறையில், தரை மேல் சிறிய துணியை விரித்து, அந்தத் தங்கை படுத்திருந்தாள். அவ்வப்போது, அவளுடைய முனகல் சத்தம் கேட்டது. சிநேகிதனின் மகன் மல்லுவை விட மூன்று வருடம் பெரியவானக இருப்பான். அங்கே புத்தகம் வைத்துக்கொண்டு உரக்கப் படித்துக் கொண்டிருந்தான். பெரிய பெண் சிறிய பெண்ணை தொட்டிலில் போட்டுத் தாலாட்டிக் கொண்டிருந்தாள்.

புல்லய்யாவுக்கு, அந்தச் சிறுவன் படிப்பதைக் கேட்டதும், தன் மகன் விஷயம் நினைவுக்கு வந்தது. "நல்லாப் படிக்கிறானே" என்றான்.

அந்தச் சிநேகிதன் மகனைப் பற்றிப் பெருமையாகச் சொல்லிக் கொண்டான். அவன் மேலுள்ள ஆசையினால் தான் உயிர் வாழ்ந்து வருவதாகச் சொன்னான். அதையெல்லாம் கேட்கக் கேட்க, தன்னைப் போலவே மகன்களைப் பார்த்து ஆனந்தமும் கர்வமும் கொள்பவர்கள் இருப்பதைத் தெரிந்து கொண்டான். அந்தத் தங்கையையும், அழுது கொண்டிருந்த அந்தத் தாயில்லாத குழந்தையையும் பார்த்த போது,

புல்லய்யாவுக்கு இரக்கம் பிறந்தது. "பாவம் தாயில்லாத குழந்தெ -- தாயிலலாத குழந்தெங்க பட்ற கஷ்டம் நஞ்ச மில்லே -- எப்படிச் சமாளிக்கிறே'ண்ணே?" என்று கேட்டான்.

சிநேகிதன் அப்படி வாயிற்படியில் உட்கார்ந்து, தன் கதையைச் சொல்லத தொடங்கினான். "அண்ணே! பொழைக்கறதுக்குக் கூலி வேலெ கீலி வேலெ கிடெக்காமெ, கைமாத்தாக் கடன் வாங்கி கடலெ வியாபாரம் பண்ணி . . . இந்த வியாபாரம் அந்த வியாபாரம் எது பண்ணாலும் ஒண்ணும் சரியா நடக்கலே. அவ செத்துப் போன அண்ணைக்கி — கையிலெ செப்புக்காசு இல்லே. அவளுக்குச சரியாக் கஞ்சி ஊத்தமுடியாமெ நோயாளியாக்கி, நானே கொண்ணுட்டேன் -- சாகறவரைக்கும் என்கிட்டே இது இல்லெ, அது இல்லேன்னு சொல்லவே இல்ல. இல்லாதண்ணைக்கிக் கூட இருக்கறா மாதிரியே நடந்துகிட்டா. அவ செத்தண்ணைக்கே நானும் செத்துப் போயிட்டேன்"

புல்லய்யா வேலை விஷயத்தை மறந்து விட்டு, அந்தச் சோகக் கதையைக் கேட்டுக் கொண்டிருந்தான். சிநேகிதன் மறுபடியும் தொடர்ந்தான். 'நம்ம கையிலெ என்ன இருக்குத்'ண்ணே -- இருக்கறதெல்லாம் மனத் தைர்யம்தான் -- அதெ வரவழெச்சிகிட்டேன் -- இந்தப் பசங்களெப் பாத்துகிட்டு இப்படிப் போய்க் கிட்டிருக்குது"

அதற்கிடையில் இன்னொரு மனிதன் வந்தான். குட்டையாக, கறுப்பாக, பயங்கரமாக இருந்தான். முரடன் மாதிரி இருந்தா அந்த ஆள் வந்த உடனே சிநேகிதன் எழுந்தான். மூன்று பேரும் மௌனமாகக் கொஞ்ச தூரம் நடந்தார்கள். ரோட்டுப் பக்கத்தில், கால்வாய்க் கரையில் உட்கார்ந்த பிறகு, அந்தச் சிநேகிதன் , "இவனும் நம்ம ஆள்தா'ண்ணே . . . பாக்கறதுக்கு அப்படி இருக்கறான் -- ஆனா ஏழெங்கன்னா, இவன் உடம்பை அறுத்துக் குடுக்கச் சொன்னாலும் குடுத்துடுவான். எபபடிச் சம்பாதிக்கறானோ அப்படியே வீசுவான் பணத்தெ . . . " என்றான்.

சற்றுத் தூரத்திலிருந்த ஹாபரில் விளக்குத் தோரணம் தென்பட்டுக் கொண்டிருந்தது. அதைப் பார்க்கப் பார்க்கப் புல்லய்யாவின் மனதில் அவசர உணர்ச்சி அதிகமாயிற்று.

"வேலெக்குப் போவேண்ணாமா?" என்று கேட்டான்.

"அதுக்குள்ளேயா . . . அதுவும் இன்னெக்கி ராத்ரி நாம் அவ்வளவா ஒண்ணும் பண்ண முடியாது!"

"ஏன்?"

"அதோ பாருஇ ஆகாசத்துலெ யார் இருக்காறன்னு . . . அவன் மறெஞ்சி போவணும் . . . "

புல்லய்யா அவனைச் சந்தேகத்தோடு பார்த்தான். சந்தேகத்துடன், " கப்பல்லே'ருந்து சாமான் இறக்கணுமில்லியா?" என்ற கேட்டான்.

"ஆமா'ண்ணே . . . நம்பளெ மாதிரி ஆளுங்களுக்கு வந்தா கப்பல் போனா திப்பல்!"

"எனகுச் சரியாச் சொல்ல'ண்ணே."

". உனக்குக் கஷ்டமா இருக்குதா? நாம வேலெ கெடக்கின்னிக்கு செஞ்சுக்கறோம்; இல்லாதண்ணக்கி இதுலெ தப்பின்னா இருக்குது? நாம இந்தச் சின்ன வேலெ பண்ணி யாரு குடியும் கொடுக்கலியே . . ."

"திருட்டு வேலெயா?" என்று கேட்டான் புல்லய்யா ஆச்சர்யத்தோடு. "அடே, சுந்தரய்யா! இந்த அண்ணன் ஒண்ணும் கையாலாகாதவன் மாதிரி பசியோட செத்துப் போறே'ங்கறானே தவர, எப்படியாவது வயத்தெ நிரப்பிகிட்டுப் பொழக்கலாம்னு நினெக்க மாட்டான்!" என்று சொல்லிவிட்டுப் புல்லய்யாவின் பக்கம் திரும்பி, "அண்ணே! நீ வேலெ சம்பாதிச்சிகிட்டுப் பொழைக்க முடியுமா?"

புல்லய்யா தலையை ஆட்டினான்.

"சொல்லு, சம்பாதிக்க முடியுமா?"

"இல்லே!"

"அப்படீன்னா பொழைக்கறதுக்குத் திருட்டு வேலெ செய்ய முடியுமா?"

"செய்ய முடியாது!"

"போவட்டும், ஏதாவது பணம் பொம்பளெயாலே வந்தாக்கா--"

"பாவம் . . . பாவம்!"

"அப்படீன்னா. நீ இந்த உலகத்துலெ எதுக்கும் உபயோகப் படமாட்டே நீ பொழக்க மாட்டே -- ஒர்த்தர் குடுத்தா வாங்க முடியாது உன்னாலே -- அப்பொ எதுக்கு உபயோகப் படுவே?"

"நேர்மென்னு சொல்லிகிட்டுச்செத்துப் போறதுக்கு! "சுந்தரய்யா சொன்னான். "பார'ண்ணே! நேர்மெ நியாயம் எனக்கொண்ணும் புரியலே. வயிறு காஞ்சி செத்து கிட்டிரக்கறப்பொ நேரமென்னு சொல்லிகிட்டு உக்காந்திருப்பியா? அந்தத் தர்மராஜா என்ன பண்ணாரு? பொய் சொல்லலியா? அவரெவிட நீ பெரிய ஆளா? நீ சரியான அப்பாவி -- என் பேச்செக் கேக்கலேன்னா நாலு நாள்ளே உன் கதி அதோ கதிதான்."

புல்லய்யா தலை குனிந்து விட்டான். அநதச் சிநேகிதன் தொடர்ந்து சொன்னான் · "நாம ஒர்த்தரெக் கொலெ பண்ணலெ. ஒர்த்தன் ரெத்ததெத் குடிக்கலெ. கூட இருக்கற ஜனங்களே மோசம் பண்ணி கிட்டிரக்கிறவங்ககிட்டே நியாயமாக் கேட்டாக் குடுக்கலே'ங்கறதனாலெ இன்னொரு வழியிலே வாங்கிக்ககிறோம் -- ஆகாசத்துலெ இருக்கற இந்த மேகங்க எல்லார்க்கும் சொந்தம் -- இந்தப் பூமியிலெ இருக்கற தானியம் பழங்க இதெல்லாம எல்லார்க்கும் சொந்தம் தான் -- அப்படின்னா பெரியவங்களுக்குக் கொஞ்சம் அதிகமாகவும் பசங்களுக்குக் கொஞ்சம் குறைச்சலாகவும் இதுங்களெப் பங்கிட்டுக் குடுத்திட்டா ஒரு கஷ்டமும் இருக்காது. நம்பளெ மாதிரி சின்ன பசங்களுக்குக் குடுக்காம அவங்களே சாப்பட்டுட்டா, கருணெயில்லாத

இந்தப் பெரியவங்க மேலெ விழாமெ வேறெ யார் மேலெ விழச்சொல்றே?"

புல்லய்யா இன்னும் மௌனமாகவே கேட்டுக் கொண்டிருந்தான். சிநேகிதன் இன்னும் தன் வாதத்தை நிறுத்தவிலலை.

"நீ நினெச்சி கிட்டிருக்கறே, இந்த மாதிரி ராத்ரிலே திருடுறதுக்குப் போறவங்கதான் திருடங்கன்னு . . . வுனக்குத் தெரியாது -- இந்தப் பணக்காரப் பசங்க நூத்துக்கு நூறு லாப மடிச்சி கிட்டிருக்காங்க. அவங்க திருடங்களா? நம்பளெ மாதிரி பொழக்கறதுக்குப் போறவங்க திருடங்களா? நீ வராமபோன எங்களாலெ முடியாதுன்னில்லே --அதென்னவோ உன்னெப் பாத்த நேரம் அந்த மாதிரி. 'அய்யோ! என்னெ மாதிரி ஆளு நீ -- பிள்ளெ குட்டியோட தவிச்சி செத்துகிட்டிருக்கிறியே'ன்னு நினெச்சி, இவ்வளவு உன்கிட்டெ சொல்றேன். நீ ஒரு பைத்தியக்காரன்'ணனே. ஏதோ ஒரு வழியிலெ திருடு, அநியாயம் பண்ணாமெ இந்த உலகத்துலெ யாரு சொத்து கித்து சேத்துருக்கறான்? பேவாட்டும், நீ திருட வேணாம் -- வெளியவே இரு -- உன் பங்கெ நீ வாங்கிக்கோ . . ."

அப்படியே சந்திரன் மறையும் வரையில் உட்கார்ந்திருந்தார்கள். புல்லய்யாவுக்கு அந்தச் சமயத்தில் திரும்பிப் போவதற்கு மனம் வரவில்லை. 'கடனெத் தீக்கணும் -- வாடகெ குடுக்கலேன்னா அப்படியே கழுத்தெப் புடிச்சி வெளியே தள்ளிடுவாளோ என்னவோ! பொண்டாட்டி முன்னாலெ அவ்வளவு பெருமையாச் சொல்லிட்டு வந்தேன் -- மறுபடியும் இல்லேன்னு எப்படிச் சொல்றது? மகனெப் படிக்க வெக்கணும். அவனுக்குச் சிலேட்டு புஸ்தகம் -- துணியெலலாம் வேணும் -- இவங்க கூடச் சேரலேன்னா நாளெலேந்து என்ன பண்றது?. . . ஊருக்குப் போயிட்டா? அந்த அழகான வயலுங்க, ஜல ஜல ன்னு பாயற நதி -- பங்களா மாதிரி வீடு --? மாடுங்க -- விவசாயம் -- அந்த அழகான தோட்டங்க . . எங்கம்மா லச்சுமி தேவியோட கலகலச் சத்தம் -- நீலம்மனோட பண்டிகெ. . . சிலம்பாட்டம். . . எங்கெ திரும்பினாலும் சந்தோஷம் தான். . . எங்கெயும் உற்சாகம் தான். . . " சற்று நேரம் இந்த இனிய நினைவுகள் அவன் மனதில் விஸ்வரூபம் எடுத்தன. அடுத்த நிமிடமே மனதுக்குள் ஒரு குரல் ஒலித்தது 'புல்லய்யா! ஊரெவிட்டு ஏன் வந்தே, மறந்து போயிட்டியா? மனுஷங்க மாறிப் போயிட்டாங்க -- அவங்களோட நாங்களும் மாறிப் போயிட்டோம் . . . அங்கங்கயே உயிரில்லாம ஒடுங்கிப் போயிட்டோம். . . நீ இந்தக் கிராமத்துக்கு வந்து என்ன பண்ணப் போறே? . . . பொழச்சிக்குவாயா? எப்படிப் பொழப்பே. . . ? ஒரு செண்டு பூமி இருக்குதா? இருக்கறதுக்கு வீடு இருக்குதா? எல்லாரும் உன்னெப் பாத்து ஹாஹ்ஹான்னு சிரிச்சி பரிகாசம் பண்ணுவாங்க விழுந்துட்டானில்லியான்னு யாரும் கருணெ காட்டமாட்டாங்க. . . என்னாத்தெச் சாப்பிட்டுப் பொழச்சிருப்பே?

-- எந்த முகத்தெ வெச்சிகிட்டுப் போவே?' இப்படி நெஞ்சில் துடிப்புகள் அதிகமாயின. . . மனதில் ஆலங்கட்டிகள் . . . கண்ணில் மழை போல் நீர் பெருகிற்று . . . அந்தச் சோகத்தோடு மனதிற்குள், 'அம்மா, நீலம்மா தாயே! . . . கருணெ காட்டு தாயே .. . இந்த வேலெயெ என்னாலெ செய்ய முடியலே . . . எனக்கு ஏதோ நியாயமாப் பொழெக்கற வழியெக் காட்டு!" என்று வேண்டிக் கொண்டான்.

"அழறாண்டா!" என்றான் சுந்தரய்யா. "அந்த மாதிரிதான் முதல் நாளு நமக்குக்கூட இருந்ததில்லியா! அந்தச் சேத்துலெ இறங்கறதுக்கு முன்னாடி மனுஷங்களா இருக்கறோம் . . . சேத்துலெ குதிக்கலேன்னா நமக்கு நடக்காது. ஒரு தடவெ சேத்துலெ குதிச்சிப்பறம் என்னானோம்? பண்ணிங்களாயிட்டோ மில்லியா!"

சற்று நேரம் மௌனம் மூவரையும் ஆட்கொண்டது. பிறகு, சிநேகிதன் எழுந்து நின்று, "எழுந்திரு'ண்ணே! நீ திருட வேணாம்! நாங்க ரெண்டு பேரே செய்யறோம். நீ தூரத்திலெ இரு. வுனக்கு வேலெ கிடைக்கற வரையிலெ செத்துப் போகாமெ பிழெச்சிருக்கறதுக்கு எங்ககிட்டெ ஏதோ கொஞ்சம் வாங்கிக்கோ -- ஆனா இதோ . . ." என்று சொல்லிக்கொண்டே சிநேகிதன், சுந்தரய்யாவின் உள்ளங்கையைத் தன் கை மேல் வைத்துக்கொண்டு, புல்லய்யாவின் கையை அதன் மேல் வைத்து, "சொல்லுங்க -- கடவுள் ஆணையா, எங்கள்ளெ யார் ஒர்த்தர், நேரம் சரியில்லாம மாட்டிகிட்டாலும், மத்த ரெண்டு பேரு சங்கதியெ என்னானாலும் சொல்லமாட்டோம்," என்று சொல்ல வைத்தான். மறுபடியும் இரண்டு முறை இந்த உறுதி மொழியை எடுக்க வைத்தான். புல்லய்யா, முதன் முறை பயந்து, நடுங்கிக் கொண்டு சொன்னான். இரண்டாம் முறை பயம் குறைந்து, மூன்றாவது முறை தெளிவாகச் சொன்னான்.

இந்தச் சடங்கு முடிந்த பிறகு மூன்று பேரும் சேர்ந்து புறப்பட்டார்கள். சுந்தரய்யா முன்னாலேயே, அந்த இரவு எங்கே கன்னம் வைக்க வேண்டுமோ என்பதை முடிவு செய்திருந்தான். அந்த சந்திற்குள் சென்ற, இருந்த ஒரே ஒரு முனிசிபல் எலக்ட்ரிக் பல்பைக்கல்லால் நொறுக்கி விட்டான். இருட்டு. சிநேகிதன் புல்லய்யாவைச் சந்து முனையில், ஒரு குப்பைத் தொட்டியின் மறைவில் உட்கார வைத்து, ரோந்து போலீஸாவது, வேறு யாராவது வந்தால், ஆபத்து வாராதிருக்கத்தான் என்ன மாதிரி சைகை செய்ய வேண்டுமோ, எப்படி ஓட வேண்டுமோ -- இதெல்லாம் சொன்னான்.

அவர்களில் சுந்தரய்யா கைதேர்ந்த ஆள். புல்லய்யா, அந்த மூலையில் உட்கார்ந்திருந்தானே தவிர, கால்கள் வெடவெடவென்று நடுங்கிக் கொண்டிருந்தன. அந்த நடுக்கம் உடம்பெல்லாம் பரவியது. தன்னில் என்றுமில்லாத ஆவேசமும் பயமும் நிறைந்து விட்டன. திருடர்கள் தன் ஊரில் வந்து விழுந்தால் இப்படிச் சும்மா இருப்பானா எப்படி ரோந்து சுற்றி அவர்களைப் பிடிப்பான்? அப்படிப்

பட்டவன், தன் கண்ணால் பார்த்தும் சும்மா இருப்பதா? சத்தமாகத் 'திருடன், திருடன்!' என்று கத்த வேண்டுமென்று நினைத்தான். நாக்கு நுனி வரையில் வந்தது. ஆனால் தான் செய்த சத்தியம், சிநேகிதனின் நல்ல குணம், தன் கஷ்டங்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து வாயை அடைத்து விட்டன.

அவர்கள் இருவரும் திரும்பி வருவதற்கு நீண்ட நேரம் பிடிக்கவில்லை. மூன்று பேரும் மெல்லப் பதுங்கிப் பதுங்கி மறுபடியும், புறப்பட்ட கால்வாய்க் கரைக்கு வந்தார்கள் சுந்தரய்யாவுக்கு இன்றைய வேலை அவ்வளவு திருப்தியாக இல்லை. பனியன் உள் பையில் ஏதோ தங்க நகை. இன்னும் கூட ஏதோ கனமாக இருந்தது பையில். அதையும் வெளியே எடுத்தான்.. கத்தி .. . புல்லய்யாவுக்குப் பயம் எடுத்தது. திருடர்களிடம் அகப்பட்டுக் கொண்டதாகத் தோன்றியது.

பொழுது விடிவதற்கு இன்னும் இரண்டு மணி நேரம் இருந்தது. சிநேகிதன், "நாளைக்குக் காலெயிலே சந்திக்கலாம்," என்று சொல்லிவிட்டான். புல்லய்யா வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

வழியில் ஏதேதோ நினைத்தான். 'நாளெக்கி இந்தப் பணத்தெ வாங்கிட்டுப் போயி அவ கையிலெ எப்படிக் குடுப்பேன்? அது எப்படி வந்ததுன்னு கேக்க மாட்டாளா?" கல்யாண நாள் நினைவு வந்தது. தான் சம்பாதித்ததில பாதி மனைவிக்குக் கொடுத்தாக வேண்டும் -- அதைச் செய்யத தவறினால், கல்யாண நாள் பிரமாணத்தை முறித்து விட்டதாக அர்த்தம்! ஆகவே, அடுத்த நாள் இந்தப் பாழாய்ப்போன பணத்துக்காக வருவதில்லை என்று முடிவு செய்தான்.

## 36

காலையில் அப்பாவைப் பார்த்த மல்லு கோபத்தோடு இருந்தான். அப்பா கூப்பிட்டும் பேசவில்லை. நீலி, எவ்வளவு கூலி கொடுத்தார்கள் என்று கேட்டாள். உடனே பதில் சொல்லாமற் போனால் தொல்லையென்று, "மூணு ரூபாய்," என்றான். அவள் சந்தோஷத்தோடு, "தினம் இருக்குமா வேலெ? என்று கேட்டாள்." என்னவோ தெரியலே -- கெடச்சண்ணைக்குப் பண்றேன் -- கெடைக்காதன்னைக்கு இல்லெ," என்றான்.

இந்தப் பொய்களை மிகவும் கஷ்டப்பட்டுச் சொன்னான். சொன்னபிறகு பயமாக இருந்தது. உடனே பணம் கொடுக்காததால் நீலி, "கூலி குடுக்கலியா?" என்று கேட்டாள்.

"குடுப்பாங்க!"

"எப்பொ?"

"இன்னெக்கி -- "

கொஞ்ச நேரம் தூங்க வேண்டும் போலிருந்தது. வீட்டிற்குள் படுத்து, மல்லுவைக் கூப்பிட்டான். மகன் வரவில்லை. மகள் அருகில் விளையாடிக் கொண்டிருந்தாள்.

"இன்னைக்கிக் கூட்டிகிட்டுப் போறேன் ஆவட்டும் . . . வா," என்றான்.

மகன் அருகில் வநதானே யொழிய சிரிக்க வில்லை. சற்று நேரம் சிரிக்க வைப்பதற்கு முயற்சித்தான். அதற்குள், பக்கத்து வீட்டம்மா, புழக்கடையிலிருந்து நீலியைச் சத்தம் போட்டுக் கூப்பிட்டு, பணத்திற்காகக் கன்னா பின்னாவென்று கத்தலானாள். மூன்று ரூபாய் அன்றைக்கே கொடுக்க வேண்டுமென்று ஆர்ப்பாட்டம் பண்ணினாள். அந்தக் கூச்சலைக் கேட்ட புல்லய்யா ஆத்திரம் வந்து சட்டென்று எழுந்து சென்று, "எங்கெயோ ஓடிப் பேறவங்ககிட்டே பேசறா மாதிரி ஏன் பேசறே?" என்று கேட்டான்.

"அவ்வளவு ரோஷம் இருந்தா வீசிப போட்றதுதானே?"

"வீசிப் போடாமெ வெச்சிக்கவாப் போறோம்?"

"எப்பொ குடுக்கறது? எத்தனையோ பேரு வீட்டுக்குன்னு வந்துட்டுப போறாங்க -- ரோஷம் உள்ளவனாயிருந்தா, மாசம் ஆன உடனே வாடகெ வீசிப் போடக் கூடாதா?

நீலி இடையில சென்று, கணவனைச் சற்றுக் கண்டித்து, உள்ளே அனுப்பினாள். அந்த அம்மாவின் தொண்டை மட்டும் ஓயவில்லை. புல்லய்யாவுக்கு எப்போது மில்லாத வேகம வந்து, விடுவிடுவென்று சிநேகிதன் வீட்டுக்கு ஓடிப்போய், "மூணு ரூபாய் வேணும்ண்னே," என்று சொன்னான். எல்லாவற்றையும் கேட்டுவிட்டு, சுந்தரய்யாவின் வீட்டுக்குப் போய் வாங்கி வந்து கொடுத்துவிட்டு, சற்று இரகசியமாக, "ராத்ரி சாமான் இன்னும் விக்கலே. திருட்டுப் பொருள பாதிக்குப் பாதிதான் போவும் -- அந்தத் தட்டானுக்கு ஆசெ -- அவன் பயம் அவனுக்கு -- உன் பங்கு பத்து ரூபா வரும்னு சுந்தரய்யா சொன்னான்," என்று சொன்னான்.

"இது கைமாத்து -- அந்தப் பணத்தப் பத்திப் பேச்செதுக்கு?" என்றான் புல்லய்யா.

வீட்டுக்கு வந்து நீலியிடம் கொடுத்து, "அவ முகத்துலெ விடடெறிஞ்சிடு," என்றான். அந்த அம்மா அதைக் கேட்டுவிட்டு, வாய்க்கு வந்தபடிக் கத்தினாள். நீலி மிகவும் பணிவாகச் சொன்னாள்: "ஏம்மா இப்படிப் பேசறீங்க? -- யாரு எத்தனெ நாளு இருக்கப் போறோம் -- இந்த சின்ன விஷயத்துக்கெல்லாம் வாயெக் கொடுத்துக்கறோம். அக்கம் பக்கத்திலெ இருக்கறவங்க நல்லதுக்கும் கெட்டதுக்கும் ஒத்தாசெ பண்ணிக்கலேன்னா வேறெ யாரு பண்ணப் போறாங்க!" சற்று நேரத்தில் அந்த அம்மாவின் வாயை அடைக்க முடிந்தது.

அன்று மாலை சிநேகிதனிடம் மல்லுவை அழைத்துப் போனான்.

சிநேகிதன், கட்டாயப் படுத்தி, சினிமாவுக்கு அழைத்துச் சென்றான். அந்த படங்களைப பார்த்த மலலுவின் கொண்டாட்டம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது ஒரு முறை அவன் கத்திக் கொண்டு குதித்த போது, பக்கத்திலிருந்தவர்கள் புல்லய்யாவிடம் சணடைக்கு வந்தார்கள். புல்லய்யாக்குச் சினிமா பார்ததுக் கொண்டிருக்கும் வரையில் அது பற்றிய சிந்தனைகளே இருந்தன. அந்த பங்களாக்கள், மாடிவீடுகள், அந்தப்பணம், துணிமணிகள் எலலாம் இருந்தால் சுகமாக வாழமாட்டோமா என்று நினைத்தான். ஒரு முறை பார்த்த பிறகு அந்த சினிமாவை மறுபடியும் மறுபடியும் பார்க்க வேண்டும் போலிருந்தது. பாட்டுகள் எவ்வளவு இனிமையாக இருந்தன ! அந்த மூன்று மணிநேரம் இந்தக் கஷ்டங்களை யெல்லாம் மறந்து விட்டு, சந்தோஷமாக இருக்க முடிந்ததே என்று நினைத்தான்.

வீட்டுக்கு வந்த பிறகு நீலி, "இன்னை ராத்ரி வேலெக்குப் போகலியா?" என்று கேட்டாள். "இன்னைக்கி இல்லியாம்," என்றான். மல்லு சினிமா சங்கதிகளை உற்சாகமாகச் சொல்லிக் கொண்டிருந்தான். அடுத்த நாள் வழியில் சுந்தரய்யா தென்பட்டான். ஓரிடத்துக்கு அழைத்துச் சென்றான். சந்து பொந்து களெல்லாம் சுற்றி அங்கே போனால், பத்துப் பேர் அந்தக் குடிசையில் உட்கார்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தனர். "உக்காந்து பாரு," என்று சொல்லிவிடடு, சுந்தரய்யாவும் பணம் கட்டி ஆடத் தொடங்கினான். புல்லய்யாவுக்கு அதெல்லாம் ஆச்சரியமாக இருந்தது. மல்லுவுக்கு உற்சாகமாக இருந்தது. மத்தியானம் ஆன பிறகும் சுந்தரயயா நகரவில்லை. புல்லய்யா போவதாக சொல்லி எழுந்தான். சுந்தரய்யா அவனுடன் வெளியே வந்து, " இன்னைக்கி ராத்ரி வரணும் -- இப்பவே போயி அண்ணனைப் பாத்துச் சொல்லிடு. "என்றான்.

புல்லய்யா தலையாட்டினானே தவிர, வீட்டை நோக்கியே நடந்தான். வீட்டுக்குப் போகும் போது, வீட்டில் ஒன்றுமில்லை. "எவ்வளவுதான் வட்டிக்குக் கடன் வாஙக்றது -- அவங்க வீட்டுக்கு வந்து தொல்லெ பண்றாங்க -- " என்று நீலி சொன்னாள். அப்படியே வாசலில் உட்கார்ந்து விட்டான். மகள் சோற்றுக்கு அழுது கொண்டிருந்தாள். நீலி ஒன்றும் பேசாமல் புழக்கடையில் உட்கார்ந்திருந்தாள்.

அப்படி, அந்தக் கஷ்டத்துக் கிடையில் புல்லய்யா ஏதேதோ யோசித்தான். 'எனக்கு எங்கே வேலெ கிடெக்கப் போவுது? எப்படியோ ஒரு தடவெ சேத்துலெ இறங்கிட்டேன் — நல்லாவே இறங்கிட்றேன். நான் முழுகிப் போறதுக்கு முன்னாடி இவங்களுக்கு ஏதோ ஒரு வழி காட்டிட்றேன்," என்று எண்ணினான். 'இந்த உலகத்துலெ வயத்துக்கு முன்னாடி நேர்மெ நியாயத்துக்கு என்ன அர்த்தம் இருக்குது? ஆனானப்பட்ட விஸ்வாமித்ரனே பறச் சேரியிலே நாய் மாம்சத்தெத்த திருடனார்னு சொல்றாங்களே. நீ எந்த மூலெ? இதெல்லாம் ஏன் வந்துதோ, வந்துட்டது -- இத்தோட என்

கஷ்டமெல்லாம் போகணும் -- இந்த ஒரு தப்புக்காக அந்த யமதர்மராஜா இரும்புக் கம்பிங்களெ வெச்சி சூடு வெக்கட்டும் -- பட்டுக்கறேன் -- நான் செத்தப்புறம் எந்தக் கம்பி வந்து குத்தனா யாரு பாக்கப் போறாங்க --'

இந்த யோசனையோடு எழுந்து சிநேகதனிடம் போனான். சிநேகிதன் ஏழு ரூபாய் கொடுத்துவிட்டுச் சொன்னான்.

"எப்படி வந்துதோ அப்படியே போயிடுத்'ண்ணே! இது இருக்கும்னு நினெக்காதே. இருக்கறப்பவே நல்லா சாப்பிடு. உடம்பெத் தேத்திக்கோ. அப்புறம் எப்பவோ லஞ்சம் குடுத்தாக்கா வேலெ கெடச்சிடு தாவட்டும்." புல்லய்யாவுக்கு இந்த வார்த்தைகள் பிடித்திருந்தன.

"சுந்தரய்யா இந்த ராத்தரி வரச் சொன்னான்," என்று முணுமுணுத்தான்.

"அவன் இல்லேன்னா நம்ம கையாலெ என்னாவும்? அதனாலெதான் அவன் என்ன குடுத்தாலும் பேசாம வாங்கிக்கிறோம். அந்த முண்டத்துக்கு ரெண்டு பொண்டாட்டிங்க -- சீட்டாட்டமா, சூதாட்டம் இதெல்லாம ஆடாமெ இருக்க முடியாது. அத்தோட குடிப்பான் -- அவனோட சேந்தீன்ன மூணு நாள்ளெ உன்னெ மாத்திடுவான்! வேலையிலெ மட்டும்தான் அவனோட சம்மந்தம் வெச்சிக்கணும், " என்று சொன்னான் சிநேகிதன்.

புல்லய்யா மகனைச் சுட்டிக் காட்டி மெதுவான குரலில், "இவன தனியா ஒரு இடத்துக்கு நகர விட மாட்டான் -- சுந்தரய்யா மாத்திரெ குடுத்தான், தூங்கறதுக்கு -- குடுத்துட்டு வர்றேன்," என்று சொன்னான். "முன்னாடி என் மகனுக்கும் அதெக் குடுத்தேன். தூக்கம் நல்லா வரும்," என்று கூறினான் சிநேகிதன்.

வழியில், இந்தப் பணம் முழுவதையும் கொடுத்தால் நீலி சந்தேகப்படுவாளென்று, அவளிடம் 'கடன் வாங்கி வந்தேன்,' என்று இரண்டு ரூபாய் கொடுக்கலாமென்று முடிவு செய்து கொண்டான்.

## 37

புல்லய்யாவுக்கு, வீட்டில், 'கப்பல்லே சாமான் இறக்கணும்,' என்று சொல்லிவிட்டு, ஊரில் திருடப் போவது பழக்கமாகிவிட்டது. ஓர் இரவாவது வீட்டில் படுப்பதற்கு மனம் வரவில்லை. நாளாக நாளாகத் தானும் இந்த வேலெயில் தேர்ந்து முதிர்ச்சி பெற்று வந்தான். வீட்டில் மல்லுவின் தொல்லை இல்லை. தேவை ஏற்படும் போது மாத்திரை கொடுத்ததும் அவனுக்குத் தூக்கம் வந்து விடும். வரவர அவனுக்கு இரவில் தனியாகப் படுத்துக் கொள்வது பழக்கமாகி வந்தது. விழித்திருக்கும் வரையில் அப்பாவை விடுவதில்லை.

இப்போது புல்லய்யாவின் நிலை பரவாயில்லை. வயிறு நிறையத்

தனக்கு மட்டுமல்ல, குடும்பத்துக்கும் சாப்பாடு கிடைத்தது. மகனுக்கு ஆடைகள் தைத்தான். அவனைப் பள்ளிக் கூடத்தில் சேர்த்தான். -- அப்படியாவது அவன் தன்னைவிட்டுச் சற்று விலகிப் போவான் என்று. அந்த மகன் படிப்பில் மிகவும் ஆசை கொண்டான்.

அத்தோடு நிற்கவில்லை. தான் வாரத்துக்கு மூன்று முறையாவது, மற்றவர்களைப் போல் சினிமா பார்க்கலானான். சுந்தரய்யா இப்போது உயிர் நண்பன் ஆகிவிட்டான். சிநேகிதனுடன் தொடர்பு சற்றுத் தூரமாகி விட்டது. சூதாட்டைத்தைக் கற்றுக் கொண்டான். ஒவ்வொரு நாள் ஐந்து, ஆறு ரூபாய் வரைச் சூதாட்டத்தில கட்டத் தொடங்கினான். பணம் போகப் போக ஆத்திரம் அதிகமாயிற்று -- பேராசை பிடுங்கித் தின்னலாயிற்று -- 'ஆயிரம் வரும் -- வந்தா மறுபடியும் ஊருக்குப் போய் . . . கௌரவமாப் பொழப்பேன்,' என்ற ஆசை தன்னைப் பிடித்துக்கொண்டது. வரவர, இது வரையில் போன பணம் வந்தாலாவது, ஒரு ஏக்கர் நிலம் வாங்கலாமே என்ற எண்ணம் வலுத்துக்கொண்டு வந்தது. இப்போதெல்லாம் திருட்டைத் தவிர, பாவம் என்ற நினைப்பே வருவதில்லை,. இதற்கிடையில் ஒரு முறை அகப்பட்டுக் கொள்ளவேண்டியது. ஆனால் அதிர்ஷ்ட வசமாகத் தப்பிக் கொண்டார்கள். ஒரு வாரம் வரை மூவரும் ஜாக்கிரதையாக இருந்தார்கள்.

இவ்வளவுக்கும் இந்த ஆறு மாதங்களில் நடத்தியதெல்லாம் சிறிய திருட்டுகள் தாம். எதுவும் தன் தாகத்தைத் தீர்க்கக் கூடியதல்ல. வீட்டுக்குத் தினமும் இரண்டு, மூன்று ரூபாய் கொடுத்து வந்தான் -- நன்றாக பிராக்கெட் சூதாட்டம் ஆடிய நாள் ஒன்றும் கிடையாது. நீலியிடம் பொய் சொல்வது சகஜமாகிவிட்டது. அப்படிச் சொல்வது தப்பு என்ற நினைப்பே போய்விட்டது. இவ்வளவு பணம் வந்த போதும் நீலிக்குத் துணியே வாங்கவில்லை. அவள் துணிகள் அசிங்கமாக இருந்தனவென்று ஒரு நாள் ஒரு சேலை வாங்கி வந்தான்.

"ஏது -- ராத்ரி கூலி கிடைக்லேன்னு சொன்னே?" என்று கேட்டாள்.

"கப்பலுக்குப் போனேன். துரெ -- ரொம் நல்லவரு. சிலம்பாட்டம் ஆடிக் காட்டச் சொன்னாரு -- காட்னேன் -- ஆட்டத்தெ மெச்சி, அஞ்சி ரூபா குடுத்து உன் பொண்டாட்டிக்குப் புடவெ வாஙகிக் குடுன்னு குடுத்தாரு," என்று சொன்னான்.

நீலி சேலையைக் கட்டினாளே தவிர -- என்னவோ போலிருந்தது. உடம்பெல்லாம் நடுங்குவது போலிருந்தது. சொல்லப் போனால், அவள் உடல், மனம் எதுவும் சரியில்லை. கணவன் பணம் கொண்டு வந்து கொடுத்தாலும், அவள் எவ்வளவு முயற்சித்தும் சந்தோஷமாக இருக்க முடியவில்லை. புல்லய்யாவின் முகத்தில் முன்பிருந்த களை, தெளிவு, இப்போதெல்லம் அவளுக்குத் தென்படுவதில்லை. முன்பிருந்தத அப்பாவித்தனமாக பார்வை அந்தக் கண்ணில் இல்லை. ஆள் புஷ்டியாக இருந்தாலும் பருமனாகத் தெரிந்தது.

கட்டிய அந்தச் சேலையை அவிழ்ந்த பிறகும் அவளுடைய மனம் அமைதியடைவில்லை. துப்புக் கண்டுபிடித்தால் நன்றாக இருக்குமென்று நினைத்தாள்.

ஒரு நாள், ஊருக்கு வந்த முதல் நாள் தங்கிய சத்திரத்திலேயே திருடுவதற்குப் போனார்கள். அன்று நடந்ததெல்லாம் நினைவுக்கு வந்தது. அன்றைய புல்லய்யாவுக்கும் இன்றைய புல்லய்யாவுக்கும் எவ்வளவு வித்தியாசம் என்ற எண்ணம் வந்தது. 'அந்தப புல்லய்யா செத்துப் போயிட்டான். செத்துப் போனவனெப் பத்தி ஏன் நினெக்கணும்,' எனறு இந்தப் புல்லய்யா சமாளிததுக் கொண்டான்.

ஒரு நாள், சிநேகிதன் புல்லய்யாவை வற்புறுத்தி வீட்டுக்கு அழைத்துச் சென்றான். சிநேகிதன் ஏதாவது சொல்வானென்று புல்லய்யாவுக்கு உதறலா இருந்தது. கொஞ்ச காலமாகச் சுந்தரய்யாவும் புல்லய்யாவும் ஒன்று சோந்து சிநேகிதனின் பேச்கைச் சரியாகக் கேட்பதில்லை.

சிநேகிதன் குடும்ப நலம் விசாரித்துக்கொண்டே உடன் வரலானாள். அநதப் பழைய கால்வாய்க் கரையில் உட்கார்ந்தார்கள். சாயந்திர மாகியும் தரை இன்னும் குளிர்ச்சியடைய வில்லை. வானத்தைப் பார்த்துக்கொண்டே சிநேகிதன் கேட்டான்: "வேலெ விஷயத்தெப் பத்தி என்ன யோசிச்சே?"

"நமக்கு எங்கே கிடைக்குது?" என்றான் புல்லய்யா. "ஏன் கிடைக்காம? இனிமேல் வுனக்கு எவ்வளவு கிடைச்சாலும் , வீட்டு செலவு போக மிஞ்சியத என்கிட்டே குடுத்துடு! சேத்துவெச்சி யாருக்காவுது வாய்க்கரிசி போட்டாக்கா, கிடைக்காதா?"

"எங்கே மீறுது? வேலெ கிடெச்சாலும் நமக்கு நல்ல வேலெ குடுப்பாங்களா?"

"ஏன் குடுக்க மாட்டாங்க?"

"என்னவோ போ -- இந்த வேலெ நல்லா இல்லியா?' எப்பவாவுது புதையல் கிடைக்கிறதா மாதிரி கிடைக்காதா? அதுக்கப்புறம் இந்த ஊர்லெ இருப்பெனா? மறுபடி எங்க ஊருக்குப் போயி அந்த ராஜுப் பய கூடப் போட்டிக்கு நிக்க மாட்டேனா? மறுபடியும் ஊருக்குப் பெரிய மனுஷன் ஆவ மாட்டேனா?"

சிநேகிதன், ஆவேசத்தோடு பேசிக் கொண்டிருந்த புல்லய்யாவைப் பார்த்துச் சத்தமாகச் சொன்னான்: "அடேய்யண்ணே! சுவத்துலெ பூசின சுண்ணாம்பு கைக்கு வராது. சூதாட்டத்துலெ போட்ட பணம் திருமபி வராது -- என்னெக்கிப் புதையல் கிடெக்கப் போவுதுன்னு பாக்கறே? - அது கிடைக்காது -- நீயும் உருப்பட மாட்டே -- பொழச்சிக்க மாட்டே!'

"காலம் எப்பவும் ஒரே மாதிரி இருக்குமா?"

"சுந்தரய்யா வேலெயே திருடறதுதான். நீயும் நானும் வயித்துக்காகத் திருடங்களானோம். வேலெ கிடெச்சதுக்கப்புறம் திருட்றதுக்குப்

போனா பக்காத் திருடங்களாயிடுவோம்! அப்படியாயிட்டபுறம் எந்தக் கவர்ன்மென்ட் காரனெயும் ஒண்ணும் நாம பேச முடியாது. பக்காத் திருடங்களுக்கு நாளாக ஆக, கெட்ட காலம் தான் வருமே தவிர நல்லகாலம் வராது. என் பேச்செ கேட்டு, அந்தக் சூதாட்டத்தெ விட்டுவிட்டு, அந்த நாலு காசெ ஒரு பக்கம் சேத்து வெச்சீன்னா எதோ ஒரு வேலெ பாக்கலாம். கஷ்டப்பட்டு வயித்தெ ரொப்பிக்கறதுக்கும் கஷ்டப் படாமெ ரொப்பிக்கறதுக்கும் வித்தியாசமில்லியா?"

"இப்பொ எனக் கொண்ணும் சொல்லாதே. என் பணம் நிறெயப் போயிருக்குது. அது திரும்பி வரணும். நான் இந்த ஊரெ விட்டுப் போவணும் -- நீ எவ்வளவு தான் சொல்லு -- என் தலையிலெ ஏறாது," என்று புல்லய்யா திட்வட்டமாகச் சொல்லி விட்டான்.

சிநேகிதன் எழுந்து போய்க் கொண்டே, "நான் அன்னைக்கிச் சொன்னா மாதிரியே ஆயிட்டுது. அந்தச் சேத்திலே இறங்கிட்டே. பன்னியாயிட்டே!" என்று சொன்னான்.

புல்லய்யா ஒன்றும் பேசாமல் போய்விட்டான்.

## 38

கோடைக்காலம் ஒரு நாள் காலை, புல்லய்யாவும் சுந்தரய்யாவும் சேர்ந்து போகும் போது பூச்சாண்டி மனிதன் தன் வழக்கமான இடத்தில், நாயைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தான். புல்லய்யா சட்டென்று," அவனெப் பாத்தியா? அவன் கதெ வுனக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

"அவன் கடவுளுக்குச் சமானம்," என்றான் சுந்தரய்யா. தொடர்ந்து, "நீ என்ன குடுத்தாலும் வாங்கிக்க மாட்டான். வாங்கிக் கிட்டான்னா நமக்கு ரொம்ப லாபம் வரும்னு அர்த்தம்!" என்று சொன்னான்.

புல்லய்யா நடந்து கொண்டே, "தங்கத்தெத் தென்னெ மரத்துக்குக் கீழே பொதெச்சி வச்சேன்னு சொன்னான். ரகசியத்தெயெல்லாம் வரவழச்சேன்! இருந்தாலும் அவன் வீடு எங்கே இருக்குதோ என்னமோ!"

"அவன் வீடு, அதோ அந்த மூணு மாடி வீடுதான். அவன் ரொம்பப் பெரிய மனுஷன். பெரிய படிப்பு படிச்சவனாம். சொன்னான்னா, தென்னெ மரத்துக் கீழேன்னு!"

"ஆமாம் எங்கே, அந்த வீட்டுக்குப் பின்னாடி தென்னெ மரமில்லியே!"

"ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி நான் பாத்திருக்கறேன் . அதோ பொழக்கடெப் பக்கத்து அறெங்க இடிஞ்சிருக்குது பாரு -- அங்கெதான். எவ்வளவு தங்கம்?"

"அது மட்டும் கிடெச்சிதின்னா அப்பறம் நாம இந்த வியாபாரத்தெ

விட்டுடலாம்!"

சந்திரய்யா சந்தோஷத்தோடு சிரித்தான், "அதெல்லாம் என்கிட்டெ வுட்டுடு! நான் அந்த ரகசியத்தெயெல்லாம் கண்டு பிடிக்கறேன். எப்படியாவது அந்தத் தங்கத்தெ எடுககணும். அத்தோட நம்ம தரித்திரம் போயிடும்."

மூன்று நாட்கள் கழிந்த பிறகு, சிநேகிதன், சுந்தரய்யா, புல்லய்யா மூவரும் சந்தித்தார்கள். மூன்று பேரும் கால்வாய்க் கரையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். சுந்தரய்யா சொன்னான். "அந்த வீட்டு ரகசிய மெல்லாம் கண்டு புடிச்சிட்டேன். அந்த வீட்டுக்காரனிருக்கறானே அவன் ரொம்பக் கெட்டிக்காரன். அந்த மூணாவது மாடியிலெ ஒரு அறெ இருக்குது. அதுலெதான் இருக்குது இரும்புப் பெட்டி. சாவி அவன் தலெகாணிக்குக் கீழெயெதான் இருக்குமாம். வீட்லெ யாரெயும் நம்ப மாட்டானாம். ராத்ரியிலெ ஒர்த்தரெயும் கிட்டெ சேக்க மாட்டானாம்!"

"அதிருக்கட்டும், தங்கம் விஷயமின்னாச்சி?"

"இரு சொல்றேன் . . . வீடு கட்றதுக்குன்னு தென்னெ மரத்தெ வெட்டிக்கிட்டு, அஸ்திவாரம் போட்றதுக்குத் தோண்டனப்பொ, தங்கம் பெட்டியோட கிடெச்சிதாம். அன்னெயிலெ'ருந்து இன்னும் நம்பறதில்லியாம். மனுஷன் தங்கத்தெ எங்கெ ஒளிச்சி வெப்பான் -- இரும்புப் பெட்டியிலெ தான். "

"இன்னும் இதுக்கு மேலெ நமக்குத் துபபு கிடெககாது. அவன பணம் இல்லெயில்லேயா? பூச்சிககாரனுதுதானே. நாம அந்தத் தங்கத்தெ எடுத்து கிட்டாலும் பாவமில்லே,'" என்றான் புல்லய்யா.

"இன்னும் கேளு, நாம் அவசரபபட்டாக்கா லாபமில்லே. சமயம் பாத்து பண்ணணும். இவ்வளவு பெரிய வேலெ நாம இதுவரைக்கும் பண்ணதில்லே -- போனதுமில்லே -- அதனாலே எல்லாத்தெயும் ஜாக்ரதெயாப் பாத்து முடிக்கனும். ஒரு சின்ன தபபு நடந்தாலும் எல்லாம் நாசமாப் போயிடும்! அதுக்குத்தான் அந்த வீட்டு வேலெக்காரனெச் சரிக்கட்டி வெச்சிருக்கறேன்!"

"செத்தோம்!" என்றான் சிநேகிதன்.

"ஏன்?" என்று புல்லய்யா கேட்டான்.

"நாளெக்கித் திருட்டு போனதுக்கப்புறம் அவனே அந்தப்பக்கம் திரும்பிகிட்டுப் போலீஸ்"க்கு உன்னெக் காட்டிக் குடுக்க மாட்டானா?"

சுந்தரய்யா பகபகவென்று சிரித்தான். "நீ வயத்துகில்லாமெ திருடனானெ. நானொ பெரிய மனுஷனாகனும்னு திருடனானேன். நான் எத்தனெ போலீஸ்காரன் கண்ணுலெ மொளகாப் பொடி தூவியிருக்கறேன். சுந்தரய்யாவாப் போவெனா? சாமியார் வேஷம் போட்டுகிட்டுப் போவேன். அவன் சங்கதிகளெச் சொன்னதுமே காலு மேலெ விழுந்து கும்பிட்டான். அவன் தாத்தா வரணும் என்ன அடயாளம் தெரிஞ்சிக்கறதுக்கு! அந்த வீட்டுக்காரன்

வெச்சிகிட்டவளையே நம்ப மாட்டானாம்। ரொம்ப தொந்தரவு குடுக்கறானாம். 'எப்பொ புருஷனுக்குத் துரோகம் பண்ணியொ எனக்குப் பண்ணமாட்டேன்னு என்ன நிச்சயம்?'னு சொல்லி அவளெ வாட்டி வதைக்கிறானாம்। அந்தம்மாவுக்குப் பககவாதமாம். இந்தக் கஷ்டங்கள்ளே சொந்தப் புருஷனெ நினெச்சிகிட்டு அழுறாளாம்। 'சாவு வட வரல்லியே'ன்னு ரொம்பக் கஷ்ட்ப் படறாளாம. அவன் சங்கதி என்னான்னா, ராத்ரியிலே சரியாத் தூங்கறதில்லியாம் -- தூங்கனாலும் எதாவது பெனாத்துவானாம்। ஒவ்வொரு நாளு என்னத்துக்கோ ஒரேடியாப் பயந்து சாவானாம் -- நல்லாக் குடிச்சிட்டுத் தூங்குவானாம் -- அந்தச் சமயம் பாத்து நாம போடணும கன்னம்!" என்று சொன்னான்.

"அவ்வளவு பெரிய மாடி வீட்லெ எத்தனெ பேரு இருக்கறாங்களோ -- முடியுமா?" என்று கேட்டான் புல்லய்யா.

சந்தரய்யா சிரித்துவிட்டு, "அந்தபபயம இருந்தா நாம பொழெக்கவே முடியாது. துணிஞ்சவனுக்குத் தூக்குமேடை பஞ்சுமெத்தை। அப்படீன்னு சொல்றவன்தான் இந்த உலகத்துலெ எதாவது செயயமுடியும். அந்த மாடியெ எப்பொவாவது பாத்தியா?" என்று கேட்டான்

"ஓ எத்தனையோ தடவெ."

"சொல்லு, எப்பிடி ஏறுவே?"

"அந்தப் பக்கம் சந்துலெ இல்லேன்னாலும, இநதப் பக்கத்துச் சந்துலெ விளக்கு இருக்குதே -- தகராறாச்சே!" எனறான்.

"நானு அப்பவே ப்ளான் போட்டுட்டேன். முன் பக்கத்து விளக்கு, சந்து விளக்கெ ஒடெச்சிடணும்। மேற்குப் பக்கத்துலெ மூணாவது மாடி'லேருந்து தணணி போறதுக்கு ரெண்டு சிமெண்ட் குழாயிங்க கீழவரெக்கும் இருக்குதில்லியா -- ராத்ரிலே அந்த ரோடு பக்கம் ஒம்பதாச்சின்னா யாரும் நடமாட மாட்டாங்க -- நடு ராத்ரிககு மேலெ ஏறிப் போகணும -- செய்ய வேண்டிய வேலெயெ முடிச்சிகிட்டு -- இன்னொரு பககத்துலெ அதே மாதிரியே மூணு குழாயிருக்குது. நாலு படி இறங்கனாக்கா அந்தெக் குழாயெப் புடிச்சிக்கலாம. புடிச்சிகிட்டு இறங்கறது சுலபம் -- "'

' "இந்தப் பக்கத்துலெ இறங்க முடியாதா?"

"வேணாம் இந்தப் பக்கம் பெரிய சந்து. . . போலீஸ் வந்தாலும் வருவாங்க . . . சட்டுன்னு ஒளிஞ்சிக்கறதுக்கு வாசப்படிஙகதானிருக்குது -- வசதிப்படாது. அந்தப் பக்கத்துச் சந்துலெ புழக்கடை வாசப்படிங்க இருககுது. எதாவது ஒரு புழக்கடெ இடுக்கலெ ஒளிஞ்சிககலாம் --"

"கதவுங்களத் தாப்பாப் போட்டுட மாட்டாங்களா?" என்று கேட்டான் புல்லய்யா.

"நான் திறந்துடுவேனில்லே. அந்த பககமாப் போனா அந்தச்

சந்துலெ'ருந்து ரெண்டு மூணு சந்து போவுது. எந்தச் சந்துலெ போனாலும் கடல்கரெதான். வெய்யில் காலம் --- நம்மெ மாதிரி ஆளுங்க எத்தனையோ பேரு விழுந்து கிடப்பாங்க . . . மணல் மேலெ தூங்கிகிட்டிருக்கறா மாதிரி பாசாங்கு பண்ண வேண்டியதுதான் . .

எல்லாத்தெயும் நல்ல ஞாபகம் வெச்சுக்கோங்க . . . அதுக்குச் சரியான ராத்ரி பாத்துகிட்டு நானே உங்க வீட்டுக்கு வர்றேன் -- "

மற்ற இருவரும் சுந்தரய்யா சொன்னதை ஆமோதித்தார்கள்.

இருண்ட இரவுகள் வந்தன. ப்ளான் போட்டுப் பதினைந்து நாட்களாயின. ஆனால் சுந்தரய்யா போகலாம் என்று இன்னும் சொல்லவில்லை. புல்லய்யாவுக்கு ஆத்திரமாக இருந்தது. எவ்வளவு சீக்கிரமாக இந்த வேலை முடியுமோ, முடிந்த உடனே நவிரி போய்விடலாம் என்று கனவு கண்டு கொண்டிருந்தான். மூன்று நாட்களாக வேலை இல்லையென்று சொல்லி வீட்டிலேயே இருந்தான். இரவுகளில் மகனும் தானும் வாயிலில் படுத்து வந்தார்கள். நீலி அறையில் படுப்பாள்.

அன்று சனிக்கிழமை. காலையிலிருந்து புல்லய்யாவுக்கு ஏதோ குழப்பமாகவே இருந்தது. ஏன் தாமதம் என்று அலுப்பாக இருந்தது. இந்த வேலை முடிந்து விட்டால் தன் ஊர் போய் விடலாமென்றும், நீலிக்கும் தனக்கும் தகராறு வந்தாலும் எப்படியாவது சமாதானப் படுத்தி விடலாமென்றும் எண்ணினான். தன் ஊர் எவ்வளவு மாறிவிட்டதோ? தான் ஏதாவது நிலம் கிலம் வாங்கிக் கொண்டு, மண்ணை நம்பி வியர்வை சிந்திப் பிழைக்கும் விவசாயி ஆகலாமென்றும், மறுபடியும் எதிர்பார்த்த வாழ்வு, தனக்கு வருமென்றும் பலவிதமாக எண்ணினான். இந்த ஆசையின் அடிப்படையில் பிறந்த யோசனைகள் இந்தத் தர்மத்ததைப் பொறுக்க முடியாமல் செய்தன. தான் தனியாக வாயிற்படியில் படுத்து இப்படியும் அப்படியும் புரண்டு கொண்டிருந்தான். எதிரில் மரக்கிளைகள் காற்றில் அசைந்து கொண்டிருந்தன, கால்வாய் நாற்றம் பயங்கரமாக இருந்தது. ஏதோ ஒரு பறவை சத்தம் போட்டது. -- கேட்பதற்கு இனிமையாக இல்லை. தூரத்தில் ரயில் சத்தம் கேட்டது.

நீலி பக்கத்திலிருந்த வீட்டுக்கார அம்மாவின் வீட்டு வாயிலில் உட்கார்ந்து, அந்த அம்மா சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். மல்லு, அம்மாவின் பக்கத்தில் உட்கார்ந்து, பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தான். அவர்கள் பேசிய பொதுவான விஷயங்கள் ரசிக்கவில்லையோ என்னவோ, மல்லு அப்பாவின் பக்கத்துக்கு வந்து விட்டான். அப்பா மகன் இருவருக்கும் தூக்கம் பிடிக்கவில்லை. அப்பா எதிர்காலம் பற்றிய சிந்தனைகளில் மூழ்கி இருந்தார். மகன் பகல் நேரத்தில் நன்றாகத் தூங்கிவிட்டான். அதனால் தூக்கம் வரவில்லை.

கணவன் வீட்டில் இல்லை போலும். பூனைக்காக அழுத அந்த

அம்மா மெல்ல மெல்ல, சொந்த விஷயங்களில் இறங்கினாள். சொல்லப்போனால், அந்த அம்மா வாழ்க்கையில் யாரிடமும் சொல்ல முடியாத சொந்த விஷயங்களை நீலியிடம் இரகசியமாகக் கிசுகிசுக்கத் தொடங்கினாள் -- "நீலம்மா! அன்னெக்கிப் பூனெ செத்துப் போச்சில்லே -- நாலு பேரு பேசுவாங்கன்னுட்டு, நானே பூனையெக் கொண்ணுட்டு, அதெச் சாக்கு வெச்சி நான் அழுது தீத்துக்கிட்டேன . . . நீங்க வந்து இன்னும் ஒரு வருஷம் ஆகலேன்னாலும் என் புருஷன் சங்கதியெப் பாத்துகிட்டுதானே இருக்கீங்க । பொம்பளெயேவிட மோசம் -- நான் வாயெத் திறந்தா பூனெ மாதிரி ஆயிடுவான். நீ இருக்கற வீட்லெ வாடகைக்கு இருந்தான் ஒர்த்தன் . . . அவனுக்குச் சொந்தக்காரங்கன்னு யாரும் கிடெயாது -- நல்லா வாட்டசாட்டமா இருப்பான் -- நல்லா சம்பாதிப்பான் -- நல்லாச் செலவும் பண்ணுவான். சூதாட்டம், குடி -- ஒண்ணு பாக்கி கிடெயாது. தெரு முழுசும் நான்னா பயப்பட்றாங்களா? அதென்னமோ அவன் கிட்டெ பணிஞ்சி போயிட்டேன். என்னெ உதெபபான். அவன் உதெச்சானுன்னா சுகமா யிருக்கும் -- அப்புறம் எவ்வளவோ சுகமா வெச்சிருப்பான் -- அந்த மாதிரி ஆளு செத்துப் போயிட்டா -- நானும் செத்துப் போவணும்னு நினெச்சேன். பாழப்போன உசிரு மேலெ -- ஆசெ -- பூனெயெக் கொண்ணுட்டு, அந்தத் துக்கத்தெ அழுது தீத்துக்கிட்டேன். என் கண்ணுலெ எப்பவும் தண்ணியே வந்ததில்லே நீலம்மா -- அபபொ மட்டும் என்னவோ பைத்தியம் புடிச்சா மாதிரி ஆயிட்டேன். . ."

நீலி இந்தக் கதையெல்லாம் கேட்டாள். அப்போது இரவு நீண்டநேரம் ஆகிவிட்டது. "படுத்துக்கோ நீலம்மா -- நீ புள்ளெத்தாச்சி ஆச்சே!" என்று சொல்லி விட்டு அந்த அம்மா எழுந்து சென்றாள். நீலி அறைக்குள் போய்ப் படுத்துக் கொண்டு, மல்லு அப்பாவிடம் விட்டு விட்டுக் கேட்ட கேள்விகளைக் கேட்டுக் கொண்டே தூங்கிவிட்டாள்.

நேரம் கடந்து கொண்டிருந்தது. ஆனால் புல்லய்யாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. அந்த மரத்தைப் பார்க்கப் பார்க்க, பூச்சிக்காரன் தங்கம்தான் தென்பட்டது. ஆசையால் எழுந்த யோசனைகள் அலைக்கழித்தன. மகன் மேலெ படுத்துக் கொண்டு மெல்ல மெல்லப் பாடல் வரிகளை முணுமுணுத்துக் கொண்டிருந்தான். அப்படி முணுமுணுக்கும் போதே அவன் கண்கள் கனத்து மூடத் தொடங்கின.

அப்போது புல்லய்யாவின் வீட்டெதிரில் இரண்டு பேர் நிற்பது தெரிந்தது. புல்லய்யா அவர்களைப் பார்த்த உடன், அந்த உருவங்களை வைத்தே அடையாளம் தெரிந்து கொண்டான். சந்தோஷத்துடன் எழுந்து மகனைப் பக்கத்தில் படுக்க வைத்தான். அவன் விழித்துக் கொண்டான். அவனை மெதுவாகச் சற்று நேரம் தட்டிவிட்டு எழுந்தால் அவனும் எழுந்து பின்னாலேயே புறப்பட்டான்.

புல்லய்யாவுக்கு அடக்கமுடியாத அளவு கோபம் வந்தது. அவர்களைச் சைகை செய்து அனுப்பிவிட்டு, எங்கே நீலி எழுந்து விடுவாளோ என்று மெள்ளத் திரும்பி வந்து, அவனை நெஞ்சின் மேல் போட்டுக்கொண்டு, சற்று நேரம் தாலாட்டுவது போல் முதுகைத் தடவினான்.

அந்தச் சின்ன மனதில் அப்போதே சந்தேகம் தோன்றி விட்டது -- இன்று எப்படியும் தன்னை அப்பா உடன் வர விடமாட்டார் என்று நிச்சயித்துக் கொண்டான். அனறிரவு அப்பாவின் பின்னாலேயே மெல்ல, மெல்ல, அவருக்குத் தெரியாமல் போக வேண்டுமென்று முடிவு செய்து கொண்டான் போலும் -- தூங்குவது போல நடித்தான். புல்லய்யா சற்று நேரத்திற்குப் பிறகு மல்லுவை மெதுவாகப் பக்கத்தில் படுக்க வைத்தான். மகன் தூங்குகிறான் என்று உறுதி செய்து கொண்ட பிறகு, மெள்ள எழுந்து நடக்கத் தொடங்கும் போது, மகன் கண்ணைத் திறந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

'அதோடு . . . அந்த ரோடு முனையிலெ, அப்பா அந்த ரெண்டு பேரு கிட்டெ போயிட்டாரு.' எழுந்தால் தெரிந்து கொள்வாரென்று இன்னும் அப்படிப் பார்த்துக் கொண்டே இருந்தான். மூவரும் நகர்ந்து ஒரு மூலையில் சேர்ந்தார்கள். அங்குப் போய் நின்ற பிறகு, சுந்தரய்யா முணுமுணுத்தான்: "கதவெத்தெறந்து வெச்சிட்டு அவன் தனியா மாடியிலெ கிடக்கறான். வீட்லெ எல்லாரும் கல்யாணத்துக்குப் போயிருக்கறாங்க. சரியான சமயம். அவன்கிட்டெ பிஸ்தல் இருக்குதாம். கண்ணெ நல்லாத் தெறந்துகிட்டு ஜாக்ரதெயா வேலெ செய்யனும். இப்பொ போறப்பொ, யாராவது போலீஸ்காரன் கேட்டாக்க,' ரெண்டாவது ஆட்டம் சினிமா பாத்துட்டு வந்துகிட்டிருக்கறோம், கடல் கரெயிலெ படுக்கறதுக்குப் போறோம்'னு சொல்லணும்." பிறகு, மூன்று பேர் கைகளை ஒன்றன் மீது ஒன்று வைத்து அழுத்தி, "நம்ம நேரம் சரியில்லாம நம்பள்ளே யார் ஒர்த்தர் அகப்பட்டுகிட்டாலும் அந்தக்கடவுள் சத்யமா மத்த ரெண்டு பேர் ரகசியத்தெக் கழுத்தெ அறுத்தாலும் சொல்லமாட்டோம்," என்று மூவரும் சத்யப் பிரமாணம் எடுத்துக்கொண்டார்கள். சுந்தரய்யா இன்னொரு விஷயங்கூடச் சொன்னான்" "தப்பிச்சவங்க உடனேயே பிடிபட்டவன் வீட்டுக்குப் போய், போலீஸ்காரங்க அடிச்சாலும் மெரட்டினாலும், வீட்லெ இருக்கறவங்க தங்களுக்கு ஒண்ணும் தெரியாதுன்னு சொல்றபடியாச் செய்யணும். பிடிபட்டவனும் தான் திருடலேன்னு சொல்லணும்."

பிறகு மூவரும் நகர்ந்து போனதை அந்தக் கண்கள் பார்த்தன. அப்பாவுடன் இருக்கும் சிநேகிதனையும் சுந்தரய்யாவையும் மல்லு அடையாளம் தெரிந்து கொண்டான். அவர்கள் ரோடு வளைவில் திரும்பினார்கள். கண்ணுக்கும் தென்படவில்லை. விறுவிறென்று எழுந்து சென்றான் -- ரோடு முனை வரையில் போய் எட்டிப் பார்த்தான் -- மூவரும் தென்பட்டனர். அங்கே ஒரு குப்பைத்தொட்டி

-- குனிந்து நாலு கால் நடையில் மெல்லப்போய், அதன் மறைவில் உட்கார்ந்து, பார்த்தான். அப்பா அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தான். ஆனால், மகன் இப்படி வருவானென்றும், அந்த இடத்தில் ஒளிந்திருப்பான் என்பதும் அவனுக்கு எப்படித்தெரியும்? -- மறுபடியும் இன்னொரு சந்து . . .இந்தச் சந்து தனக்கு நன்றாகத் தெரியும் -- எத்தனையோ முறை இந்தச் சந்தில் திரிந்திருக்கிறான் . . .'அங்கேதான், அதோ அந்த இடத்துலெ, இந்தச்சந்துலெதான். . . தெருவில் இருட்டாக இருந்தது -- அவர்கள் போவதை அவன் கால்வாய ஓரமாக மறைந்து நின்று பார்த்தான் -- இருட்டாக இருந்தாலும் மூவரும் நிற்பது அவனுக்குத் தென்பட்டது. அப்படியே கால்வாய் ஓரமாக, முதுகை வளைத்துக் கொண்டு நடந்தான் — அங்கே ஒரு குப்பைத் தொட்டியின் மறைவில் உட்கார்ந்து கொண்டு எட்டிப் பார்த்த போது, அந்த நட்சத்திரங்களின் வெளிச்சத்தில்அந்த மாடி வீட்டின் வெள்ளைச் சுவரில் ஏறிப்போகும் ஆட்கள் அவனுக்கு நன்றாகத் தென்பட்டார்கள். ஆச்சரியத்தோடு, இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அடக்க முடியாத ஆசை தன் மனதில் கிளர்ந்தெழுந்தது. அப்பாவைப் போல் தானும் அந்த மாடிக்கு ஏறிப்போக வேண்டும் -- ஆனால் அப்பாவுக்குத்தான் அங்கே வந்தது தெரிந்து விட்டால் . . . அம்மாவிடம் அந்த முறை சொன்ன போது அடித்தாரல்லவா -- அதனால் இந்த முறை ஒன்றுமே பேசக்கூடாது என்று அப்படியே வாயைப் பொத்திக் கொண்டு பார்த்துக கொண்டிருந்தான்.

அப்போது தனக்கு நாய் குரைக்கும் சத்தம் கேட்டது. அந்தச் சத்தம் கேட்பதற்குள் கடைசி ஆள் பாதி தூரம் ஏறிவிட்டான். சற்று நின்றுவிட்டு மறுபடியும் மேலெ ஏறிக் கொண்டிருந்தான்.

அந்த மாடி வீட்டின் தெருப் பக்கத்திலிருந்து, விட்டுவிட்டு உரக்கக் குரைத்துக் கொண்டிருந்த நாயைப் பூச்சிக்காரன் , "படுத்துக்கோடாப்பா" என்று சொல்லிக் கொண்டிருந்தாலும் அது குரைப்பதை நிறுத்தவில்லை. அரைத் தூக்கதிலிருந்து விழித்த பூச்சிக்காரன, இந்தப் பக்கமும் அந்தப்பக்கமும் உற்றுப் பார்த்தான் . . . இருட்டாக இருந்தது. நாய் தன்னிடமிருந்து ஒரு துள்ளு தள்ளி இடைவிடாமல் குரைக்கவே, பூச்சிக்காரன் எழுந்து அதனருகில் வந்தான். மாடி வீட்டுப் பக்கம் பார்த்த போது, கடைசி ஆள் மாடி ஏறிப் போவது தெரிந்தது. உடனே, நாய்க்குரைப்போடு சேர்ந்து, "டேய் சீனி! திருடனுங்க நுழைஞ்சிட்டாங்கடா . . .திருடனுங்கடா . . .திருடன் -- திருடன்," என்று உரக்கக் கத்தலானான். அந்தக் கத்தலும் நாய்க்குரைப்பும் ஸ்ரீனிவாச ராவை எழுப்பி விடடன. அதற்குள் 'டன்! டன்!' என்ற வெடிச் சத்தம் கேட்டது.

சில நிமிஷங்கள் எல்லாம் அல்லோ கல்லோலமாக இருந்தது. மல்லு கூடப் பயப்பட்டு, அந்தக்குப்பைத் தொட்டிக்குள் இறங்கி, காலை

முடக்கிக் கொண்டு, ஒரு பக்கமாக உட்கார்ந்து விட்டான். அப்பா மறுபடியும் அந்தக் குழாயெப் பிடித்துக்கொண்டு இறங்குகிறாரா என்று கண் கொட்டாமல் பார்த்தான். அந்தக் குப்பைத் தொட்டிப் பக்கமாகவே, மனிதர்கள் ஓடும் சத்தம் கேட்கத் தொடங்கியது. பலபேர் கத்தும் சத்தம் கேட்டது. அதற்குள் லாரிகள் வரும் ஓசை -- இதையெல்லாம் கேட்கக் கேட்க அந்தச் சின்ன உயிர், அந்தத் தொட்டிக்குள் யாருக்கு தென்படாத வகையில் குப்பையோடு குப்பையாகி, அழுக்கோடு அழுக்காகி -- இரண்டு நட்சத்திரம் போன்ற கண்களால் பூமியிலிருந்து வானத்தை நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்த வேலை நடக்கவில்லை. 'அப்பா இறங்கலே. எங்கப்பா வரலே . . . அப்பா எப்பொ வருவாரு? எங்கப்பா எப்பொ வருவாரு? எங்கப்பா வராம நான் நகரமாட்டேன்! அந்தச் சின்ன உயிர் பீதியடைந்து பிடிவாதம் கொண்டது.

நீண்ட நேரத்திற்குப் பிறகு ஆரவாரம் குறைந்தது. மனிதர்கள் திரும்பிப் போகலானார்கள். பூச்சிக்காரன் மற்றும் அவன் நாய் பற்றிப் பேசிக் கொண்டே போனார்கள். திருடர்களைக் குறித்து ஏதோ சொல்லிக் கொண்டார்கள். ஆனால் மல்லுவின் காதுகளில் சரியாக விழவில்லை. காதில் விழுந்த அரைகுறை வார்த்தைகளும் அர்த்தமாகவில்லை. 'எங்கப்பாவெ அன்னைக்கி டேஷன் கிட்டெ அப்படி அடிச்சிட்டாங்க. இங்கேயும் அந்த மாதிரி பண்றாங்களா? நான் எதுக்கிருக்கறேன்? எங்கப்பாவெ அடிக்கறவங்களெக் கடிச்சிடுவேன். போறேன். . . இப்பொ போனா -- அந்த மாடி ஏற்முடியுமா? ஏற்னா எங்கப்பா என்னெப்பாத்துட்டு ஏன் வந்தேன்னு அடிக்க மாட்டாரா? எங்கப்பாவெ யாராவது அடிச்சா அவங்க ரெண்டு பேரும் சும்மா இருப்பாங்களா?' -- இப்படிப்பல விதமாக் எண்ணிக்கொண்டு, அந்தச் சின்ன மனம், அந்தக் குப்பைத் தொட்டியிலேயே, ஒரு பக்கம் கண்ணிமைகள் கனமேறிக் கொண்டிருந்தாலும், நாற்றம் உடல் முழுவதும் பரவிக் கொண்டிருந்தாலும், ஒரு மூலையில் துடித்துக்கொண்டிருந்தது!

பார்த்துப் பார்த்துக் கண்கள் பூத்துவிட்டன. அந்த பக்கமெல்லாம் நிசப்தம் பரவியது. கறுத்த அகாயத்தில் மினுக்மினுக்கென்னும் நட்சத்திரங்கள் -- தன்னைச் சுற்றி விதவிதமான பொருள்களின் குவியலால் உண்டான குப்பை — இந்த இரண்டும் தான் துணையாயின. முடிவில் எரிச்சல் வந்த மனதில ஒரு யோசனை தட்டியது. 'அப்பா இன்னொரு வழியா வீட்டுக்குப் போயிட்டாரோ என்னமோ? அப்படியே கப்பல் சாமான் இறக்கறதுக்குப் போயிட்டாரோ என்னமோ! போயி காத்தாலே வரெக்கும் பாக்கறேன்," என்று எண்ணியபடி, மெல்ல எழுந்து சுற்றிலும் பார்த்தான். எல்லாம் இருட்டாக நிசப்தமாக இருந்தது. பயத்தோடு, வந்த வழியாகவே வீட்டுக்கு ஓட்டம் பிடித்தான். வாயிற்படியில் அப்பா இல்லை. அப்படியே அப்பாவுக்காக

எதிர்பார்த்திருந்த கண்கள் நீண்ட நேரம் வரையில் மூடவில்லை.

## 39

நீலி, விடியற்காலையிலேயே மகனை எழுப்பி, "அப்பா எங்கே?" என்று கேட்டாள். மல்லு, அரக்கப்பரக்க எழுந்து அங்கேயிருந்து புழக்கடைக்கு ஓடிவிட்டான். நீலி புழக்கடைக்குப் போய் அதட்டிக் கேட்டாள். அந்தச் சின்ன மனது, பொய் சொல்ல முடியாமல், எல்லாம் சொல்லிவிட்டால் அப்பாவுக்கு கோபம் வருமே என்று வாயை அடைத்திருந்தது.

அதட்டியும் பதில் கூறாமல் போனதால், எங்கேயோ போயிருக்கிறான் என்று நினைத்து நீலி பேசாமலிருந்தாள். மல்லு, தெருவில் இப்படியும் அப்படியும் திரிந்து அப்பாவுக்காகப் பார்க்கலானான். இளஞ்சூரியனின் கதிர்கள் காய்ந்து விழுந்து கொண்டிருந்தன. குழப்பமும் திகிலும் நிறைந்துவிட்ட அந்தச் சின்ன மனதிற்குக் காலம் நேரம் தெரிந்த பாடில்லை. 'அப்பா இன்னும் வரலே. அப்பாவுக்கு என்ன ஆச்சோ?' என்று எண்ணத் தொடங்கினான். அப்பாவைப் பற்றி யோசிக்க யோசிக்க, மற்றவர் மேல் கோபம் பற்றிக் கொண்டு வந்தது. மடமடவென்று வீட்டிற்குள் போனான். இங்கும் அங்கும் பார்த்தான். கட்டை ஒன்றும் தென்படவில்லை. புழக்கடைக்குப் போய், தடுக்கிலிருந்த மூங்கில் குச்சி ஒன்றைப் பிடுங்கிக் கொண்டான். இவ்வளவு பொழுதேறியும் கணவன் வரவில்லையே என்று நீலி, மல்லுவைப் பிடித்துப் பயமுறுத்திக் கேட்டாள். அவன் கையால் வாயை மூடிக் கொள்ளவே, அவளுக்குச் சொல்ல முடியாத அளவு கோபமும் எரிச்சலும் வந்தன. எங்கோ ஏதோ தவறு நடந்து விட்டதென்று மனச்சாந்தி இல்லாமல் என்னவோ போல ஆய்விட்டாள்.

தாயிடம் ஓர் அடி வாங்கியும் தகராறு செய்யாமல் மல்லு மடமடவென்று, கையில் மூங்கில் குச்சியுடன் தெருவிலிருந்து ஓடத் தொடங்கினான். சரியாக இரவு சென்ற வழியிலேயே ஆவேசத்தோடு ஓடினான். இரவு ஒளிந்திருந்த குப்பைத் தொட்டியைக் கடந்து முன்னால் போனான். 'இதோ இந்த மாடி வீட்லெதான் எங்கப்பா போனார். இவங்க எங்கப்பாவெ ஒளிச்சி வெச்சிருக்கறாங்க . . .' என்று எண்ணிக்கொண்டு, அந்த வீட்டிற்குள் கோபாவேசத்தோடு," எங்கப்பாவெ விட்றீங்களா, இல்லியா?" என்று கத்திக் கொண்டே ஓடினான்.

எதிரிலிருந்த வேலைக்காரன், அந்தப் பையனுடைய துடுக்குத் தனத்தைக் கண்டு ஸ்தம்பித்துப் போய், நின்ற இடத்திலிருந்தே ஆச்சரியமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். மல்லு குச்சியால் தரையில் வேகமாக நாலு முறை அடித்து, "எங்கப்பாவெ விடலேன்னா எல்லாரெயும் இந்தக் கட்டெயாலெ அடிச்சிடுவேன்," என்று கத்தினான்.

அதற்குள் உள்ளேயிருந்து காக்கி ஆடையணிந்த ஓராள் வருவதைப்

பார்த்து, இன்னும் சற்று உரக்கக் கத்தினான்:

"ஊம் எங்கப்பாவெ அனுப்புங்க!"

வேலைக்காரன் ஏதோ சொல்லப் போனால், அதற்கு வாய்ப்புக் கொடுக்கவில்லை மல்லு. அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் அருகில் வந்ததுமே, வேலைக்காரனிடம் சிரித்தபடியே, "இந்தப் பையனுக்குப் பிஸ்கட்டுன்னா ரொம்ப இஷ்டம் -- வாங்கிவா சீக்கிரம்!" என்றார். வேலைக்காரன் வெளியே போனான். அதற்குள் வீட்டுக்குள்ளிலிருந்து இன்னும் சில போலீஸ்காரர்களும் வந்து சேர்ந்தார்கள் அங்கே.

மல்லுவின் ஆவெசம் இன்னும் குறையவில்லை. அவனுடைய அதட்டலும் நிற்கவில்லை. இன்ஸ்பெக்டர் சிரித்துக்கொண்டே, "உங்கப்பா இங்கே வரல்லே!" என்றார்.

"வர்லியா? ராத்ரி இங்கே வர்லே?"

"கதவு மூடியிருந்தா எப்படி வருவார்?"

"எங்கப்பா, இன்னும் ரெண்டுபேர் அந்தப் பக்கம் சுவரேரி வர்லே?"

ஆத்திரத்தோடு கேட்டுவிட்டு, மல்லு பிறகு அதட்டும் தோரணையில், "எங்கப்பாவெ விட்டுடுங்க . . . அவரு ரொம்ப நல்லவரு!" என்று சொன்னான்.

பிஸ்கட் வந்தது. இன்ஸ்பெக்டர் சிரித்துக்கொண்டே, "உங்கப்பாவெ அனுப்பிச்சிட்றோம். இதெ முதல்ல சாப்புடு," என்று கையில் வைத்தால், அவற்றைத்தூரமாக வீசி எறிந்துவிட்டு, "எனக்கு வேணாம் எங்கப்பாதான் வேணும்!" என்று சொன்னான்.

"ஒண்ணாவது சாப்பிடு," என்று சொல்லிக் கொண்டே, வீசி எறிந்து பிஸ்கட்டை மறுபடியும் கையில் கொடுத்தால், வாங்கிக் கொள்ளாமல், "எங்கப்பாவெ அனுப்பறியா இல்லியா?" என்று கேட்டுக் கொண்டே குச்சியெ இன்ஸ்பெக்டர் பக்கம் நீட்டிக் குத்துவது போல் நெருங்கினான்.

இன்ஸ்பெக்டர் சிரித்த முகத்தோடு, "உங்கப்பா பேரு சொன்னாத்தானே அனுப்ப முடியும்?" என்றார்.

"அனுப்பறியா?"

"அனுப்பறேன்!"

"எங்கப்பா பேரு தெரியாதா -- புல்லய்யா!"

"அப்பொ உங்கப்பா கூட இருந்தாங்களே அந்த ரெண்டு பேர் பேரு?"

"எங்கப்பா பேரு சொன்னா அவரெ அனுப்பறேன்னு சொன்னியே!"

"அனுப்பறேன். நான் கேட்டதுக்கெல்லாம் பதில் சொன்னாத்தான் உங்கப்பாவெ அனுப்புவேன்."

"முதல்லே எங்கப்பாவெக் காட்டு!"

"நான் கேக்றதுக்குப் பதில் சொன்னாத்தான் வுனக்கு அப்பா, இல்லேன்னா போயிடு!"

"நான் போமாட்டேன் -- எங்கப்பாவெ என்கூட அனுப்பிடு,

போயிட்றேன்," என்ற உறுதியும் வேண்டுதலும் கலந்த குரலில் சொன்னான்.

வேலைக்காரனிடம், "இந்தப் பையனெ வெளியே அனுப்பு," என்று இன்ஸ்பெக்டர் சொன்னதுமே, அவன் மல்லுவின் கையைப் பிடித்துக் கொண்டான். அந்தக் குச்சியெ இன்னொரு கைக்கு மாற்றிக் கொண்டு, அந்த வேலைக்காரன் அடிக்கப் போகும் போது, இன்ஸ்பெக்டர் அந்தக் குச்சியெப் பிடுங்கிக் கொண்டார். மல்லு திமிறியபடி வேலைக்காரனைக் கடிக்கப் போனான். ஆனால் முடியவில்லை. வெளியே போனதும் ஒரே அழுகையும் கூச்சலும் -- "உங்களெயெல்லாம் என் பண்றேன் பாருங்க! எங்கப்பாகிட்டெ சொல்லி உங்களெயெல்லாம் அடிக்கவெக்கறேன். எங்கப்பா . . . அப்பா . . . அப்பா!" என்று முடிவில் ஓவென்று கத்தத் தொடங்கினான். தொண்டை அடைத்தது. பயங்காட்டினா பணியும் கட்டை இல்லை என்று தெரிந்து கொண்ட இன்ஸ்பெக்டர், சற்று நேரம் ஆன பிறகு வெளியில் வந்து சிரித்துக் கொண்டே "நான் கேக்கறதுக்குப் பதில் சொன்னீன்னா -- இப்பொ கூட உங்கப்பாவெ அனுப்பிட்றேன் -- வா -- உள்ளே வா -- உங்கப்பாவெப் பாப்பாயெக்கும்!" என்று சொன்ன உடனே, மல்லு ஒரே பாய்ச்சலாக உள்ளே ஓடினான். இன்ஸ்பெக்டர் உள்ளே சென்று, மல்லுவின் மேல் கை வைத்தபடி, அவன் பெயரைக் கேட்டுத் தெரிந்துகொண்டு, "மல்லு ரொம்ப நல்ல பையன் -- புல்லய்யா இன்னும் ரொம்ப நல்லவரில்லையா மல்லு?" என்று கேட்டார்.

இந்தப் புகழ்ச்சி அந்த இளம் மனதுக்கு இதுவரை இல்லாத நிறைவைக் கொடுத்தது. சிரித்த முகத்தோடு, "எங்கப்பா ரொம்ப ரொம்ப நல்லவர்!" என்று சொன்னான்.

அப்படியே மல்லுவை அலக்காகத் தூக்கி, கிறுகிறுவென்று சுத்திக் கொண்டே, "மல்லூ ! உங்கப்பா கூட ரெண்டு பேரு வந்தாங்கல்'லே ! அவங்க பேரு?" என்று கேட்டார்.

"அண்ணன் -- சுந்தரய்யா !"

"அவங்க எப்படி இருப்பாங்க?"

"ஒராளு அதோ அவனெ மாதிரி, இன்னொராளு உன்னெ மாதிரி," என்று குட்டையையும் நெட்டையையும் குறிப்பிட்டான். இப்படி, அந்தப் பையனைச் சிரிக்க வைத்து, மறக்க வைத்து, நல்லதனமாகக் கேட்டு, அந்தத் திருடர்கள் எப்படி மேலெ ஏறியது, தான் எங்கே இருந்து பார்த்து -- எல்லா விஷயத்தையும் வரவழைத்தார். அப்பா என்ன வேலை செய்பவர் என்று கேட்டதற்கு," கப்பல் சாமானை இறக்கற வேலெ -- ராத்ரி வேலெதான்," என்று சொன்னான். அதிக நேரம் கேள்வி கேட்க முடியவில்லை. சிறுவன் சற்று மறந்து விட்ட பிரச்சனை மறுபடியும் தலை தூக்கியது. மறுபடியும் அடம் பிடிக்கவே, இன்ஸ்பெக்டர், "இரு, நானே உங்கப்பாவெக் கூட்டிகிட்டு

வர்றேன்,'' என்று சொல்லி விட்டு உள்ளே போனார். சில வினாடிகளில், ஒரு புதிய மனிதரோடு வெளியே வந்து,'' பெரிய கப்பல் வந்துதாம்! சரக்கு இறக்கறதுக்கு உங்கப்பா அவசரமாப் போயிட்டாராம். 'எங்க மல்லு வந்தா ராத்ரிக்கு வர்றேன்னு,' சொல்லச் சொன்னாராம்! நீ வீட்டுக்குப் போயி விளையாடிகிட்டிரு. உங்கப்பா ராத்ரிக்கு வருவாரு!'' என்று சொன்னார்.

அவர் சொல்லிய விதம், அதற்கு ஏற்றாற்போல் அந்தப் புதிதாக வந்த மனிதரின் சாட்சியம் -- இவையெல்லாம அந்த இளம் மனதை நம்ப வைத்தன. திரும்பிச் சென்ற அந்தச் சிறுவனின் பின்னாலே இன்ஸ்பெக்டரும் போனார். மல்லு வீட்டிற்குள் போகும்போது பார்த்து அந்த வீட்டை அடையாளம் குறித்துக்கொண்டார்.

வீட்டிற்குள் சென்று, அம்மாவிடம், அப்பா கப்பல் சாமான் இறக்குவதற்காகப் போனாரென்று, அம்மா கேட்காமலேயே சொன்னான். சாயந்திரம் வரையில் எங்கேயும் நகராமல் எதிர்பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

இருட்டி விட்டது. அப்பா இன்னும் வரவில்லை. நேரம் ஆக ஆக அந்த இளம் மனதில் ஏமாற்றம் -- கண்ணில் நீர் கசிந்தது. நீலி கூட ஆவலோடு எதிர்பார்த்திருந்தாள். அக்கம் பக்கத்தவர்கள் சொன்னதிலிருந்து, அருகில் எங்கேயோ ஒரு பணக்காரன் வீட்டில், இரவு திருடர்கள் நுழைந்ததாகவும், அந்த ஆள் பிஸ்டலால் சுட்டும் திருடர்கள் தப்பித்து விட்டார்கள் என்றும் தெரிந்து கொண்டிருந்தாள்.

"அவங்களுக்கென்ன போறாத காலமோ! திருட்டுப் பொழெப்பு ஒரு பொழப்பா?" என்று நீலி இடையில் சொன்னாள்.

"திருடிகிட்டுப் போயிருந்தாகூடப் பரவாயில்லெயாம்! அந்தப் பெரிய மனுஷன் தலையெ உடெச்சிட்டாங்களாம் -- பொழக்கறதே ரொம்ப கஷ்டமாம் -- ஆஸ்பத்ரிலே இருக்கறாராம்!''

நீலிக்குத் தன் தலையே உடைந்து விட்டாற் போலிருந்தது. "யாரு என்ன பண்ண முடியும்! -- அந்தப் பெரிய மனுஷன் எழுந்தெ வேளெ அந்த மாதிரி!'' என்று சொன்னாள்.

பக்கத்து வீட்டாம்மா இடையில் சொன்னாள்: "அந்தப் பணம் அவனுடையதில்லையாம்! யார்தெயோ அடிச்சிகிட்டானாம். எப்படி வந்துதோ அப்படியே போவும்னு நினெச்சிருந்தா அந்த மனுஷன் உசிருக்காபத்து வந்திருக்காதாம்! பிஸ்தோலாலெ வானத்துல சுட்டாராம். -- நேராப் பாத்துச் சுட்டிருந்தா எல்லாரும் செத்திருப்பாங்களாம்!''

ஜேப்படித்திருடன் மனைவி இடையில் புகுந்து, ''ரொம்பக் கெட்டவுனாம்! அந்த மாதிரி ஆளுங்களுக்கு அந்த மாதிரி தான் வரணும்!'' என்று சொன்னாள்.

நீலி சட்டென்று, "அப்படியா தாயே தீர்ப்பு சொல்றது! எவ்வளவு நல்ல மனுஷனா இல்லேன்னா, பிஸ்தோலாலெ வானத்துல சுட்டாரு!

கெட்டவனாயிருந்தா திருடனுங்க மேலெயே சுட்டிருப்பானே! அந்த மாதிரி மனுஷனுகந்து அநியாயம் நடக்காது! அவரு பொழெச்சி வெளியே வரணும்! வருவாரு," என்ற சொன்னாள்.

இப்படி அவர்களுக்குள் நீண்ட நேரம் அதைப் பற்றிப் பேசிக் கொண்டார்கள். இரவு எட்டு மணி ஆகியும் இன்னும் புல்லய்யா வீட்டிற்கு வராமற் போகவே, மல்லு, 'அப்பா' என்று கத்திக் கொண்டு அழத் தொடங்கினான். அவனுக்கு அப்பாவரவில்லையென்ற துக்கத்தோடு, அவர் மேல் கோபமும் அதிகமாயிற்று. நீலிக்குக்கூட என்ன செய்வதென்று புரியவில்லை. அவளும் வாயிலில் உட்கார்ந்து வருவோர் போவோரைப் பார்த்துக் கொண்டிருந்தாள். சாப்பாடு, தண்ணீர் இல்லாமல் தாயும் மகனும் அப்படியே பார்த்துக் கொண்டிருந்தார்கள். இரவு பத்துமணி ஆயிற்று. ஆள் நடமாட்டம் இல்லை. எதிரிலிருந்த மரத்தின் கிளைகள் அவ்வப்போது காற்றில் ஆடிக்கொண்டிருந்தன. ஏமாற்றம் அந்த இருவரையும் ஈரட்டைப் போலவே விழுங்கிக் கொண்டிருந்தது.

சற்றுத் தொலைவில் யாரோ ஓர் ஆள் வருவது போலிருந்தது. சற்று அருகில் வந்த உடனே, மல்லு ஒரு குதி குதித்து, "அதோ அப்பா" என்று சொல்லிக் கொண்டே முன்னால் ஓடினான். அப்பாவை முன்னால் நகரவிடாமல் காலைப்பிடித்துக் கொண்டு அழுகையோடும் மனக் கஷ்டத் தோடும் ஏதேதோ சொல்லிக் கொண்டிருந்தான். அப்பா மகனைத் தூக்கிக் கொண்டான், செல்லமாக முத்தமிட்டான். ஆனால் கை முட்டியில் அடிபட்டு இரத்தம் வந்ததோ என்னவோ ஒரே வலியாக இருந்தது. முகம் எதிலோ இடிபட்டு காயம் பட்டதால் தலையில் கட்டு கட்டப் பட்டிருந்தது. மல்லு உற்சாகத்தோடு அப்பாவின் முகத்தோடு முகம் வைத்துத் தடவும் போது அந்தக் கட்டு தட்டுப்பட்டது. ஆத்திரத்தோடு, "அப்பா! அவங்க அடிச்சாங்களா?" என்று கேட்டான்.

புல்லய்யாவுக்கு இந்தக் கடைசிக் கேள்வி குழப்பமாக இருந்தது. சட்டென்று," யாரு?" என்று கேட்டான்.

"அந்தப் பெரிய மாடிவீட்லெ அடிச்சாங்களா? அவங்களெப் பட்பட்டுன்னு அடிச்சிட்லாம் இன்னக்கி ராத்ரி போயி!" என்று மிகவும் பரிவோடு சொன்னான்.

புல்லய்யாவுக்கு வாயடைத்துப் போய்விட்டது. சில வினாடிகள் வார்த்தைகள் வெளிவரவில்லை. மகன் தொடர்ந்து பேசிக் கொண்டே இருந்தான். அன்று காலை தான் கட்டை எடுத்துக்கொண்டு அங்குப் போனதைச் சொல்லிவிட்டு, 'கப்பல் சாமான் இறக்கறதுக்குப் போறதா, நான் வந்தா சொல்லச் சொல்லி அவங்ககிட்டெ சொல்லிட்டுப போனெ இல்லே!" என்று சொல்லிக்கொண்டிருந்த போது, என்ன நடந்திருக்குமென்பதை ஊகித்துக் கொண்ட புல்லய்யாவுக்கு, வீட்டிற்குள் போவதற்குப் பயமெடுத்தது. மல்லுவை அங்கேயே

இறக்கிவிட்டடு, எதிரில் நீலி தென்பட்டாலும், பின்னால் திரும்பி ஓட வேண்டுமென்று துடித்தான். அனால் அவள ஒரு கயிற்றால தன்னைக் கட்டி முன்னால் இழுப்பது போலிருந்தது. அதற்குள்ளாகவே மகன் மேல் அளவு கடந்த கோபமும் எரிச்சலும் வந்துவிட்டன. நீலி, அப்படித் தயங்கியபடி நின்ற கொண்டிருந்த கணவனை நோக்கி நாலடி நடந்து வந்தாள்.

"வீட்லெ சொலலாமெ எங்கே போனே? அவன் ஓயாம அழுதுகிட்டே இருந்தான். எனக்கும் பயமா இருந்துது!"

இந்த வார்த்தைகள் அவள் வாயிலேயே இருந்தன. இரண்டு பக்கங்களிலிருந்தும் யாரோ வரும் காலடி ஓசை. நீலி அந்தப் பக்கம் இன்னும் திரும்பிப் பார்க்கவேயில்லை. புல்லய்யா கண்முன் தெரியாமல் கால்வாய்ப் பக்கமாக ஓடத் தொடங்கினான். அவர்களும் பின்னாலேயே ஓடினார்கள். இதற்குள் அங்கே பேட்டரி விளக்குகள் எரியத் தொடங்கின. இந்தப் பக்கமும் அந்தப பக்கமும் சிவப்புத் தொப்பிகளுடன் போலீஸ்காரர்கள். நீலிக்கு இதெல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது. எல்லாம் ஒரு பயங்கரமாக கனவு போலிருந்தது. அவள் கால்கள் வெடவெடவென்று நடுங்கத் தொடங்கினான். இதற்குள் "புடி திருடனெ!" என்ற கூக்குரல்கள் கேட்டன.

'யார் அந்தத் திருடன்?"

'தன் கணவனா? தன் கணவனா திருடன்? தான் ஒரு திருடனின் பெண்டாட்டியா --? இல்லே இல்லே --இதெல்லாம ஏதோ ஒரு மாயெ -- ஏதோ கனவு -- இது நிஜமில்லே . . .'

அகப்பட்டுக் கொண்ட திருடனின் கைகளில் கைவிலங்கைப் பூட்டுவதை அவள் தன் கண்ணால் பாாத்தாள் தெரு முழுவதும் விழித்துக் கொண்டது ஜனங்களெல்லாம வந்து சுற்றிக் கொண்டனர். இத்தனை பேர் நடுவில் தலை குனிந்து நிற்கிறான் திருடன் -- புல்லய்யா! ஆளுக்கொரு பேச்சு -- ஆளுக்கொரு கூச்சல்! தன் அக்கம் பக்கத்தவர்களே சொல்லத்தகாத வார்த்தைகளைச் சொல்லித் திட்டிக் கொண்டிருந்தனர். அந்த நல்ல மனுஷனின் தலையை உடைத்த திருடன் அவள் கணவன்!

நீலியால் இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை. இவற்றையெல்லாம் சகிக்க முடியவில்லை. அவள் இதயம் தடதடவென்று துடிக்க, அப்படியே தரையில் சாய்ந்துவிட்டாள். பின்னாலேயே ஓட முயன்ற மல்லு, பின்னால் தள்ளப்பட்டு, உச்ச ஸ்தாயில் ஓரே ஆர்ப்பாட்டம் பண்ணலானான். திருடனோடு போலிஸ்காரர்கள் முன்னால் நகர்ந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்க்க முடியாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த ஜனங்கள் கலைந்து போய்விட்டனர். காலையும், கையையும் அடித்துக்கொண்டு மகன் அழுது கொண்டிருந்தான்.

எங்கும் ஒரே இருட்டு -- அந்த இருட்டில் தன்னந் தனியாகத்தான்

-- அவளுக்கு என்றுமில்லாத துக்கம் அடைத்துக்கொண்டு வந்தது. மறுபடியும் எழுந்து அப்பாவைப் பின் தொடர்ந்து போகத்துடிக்கும் மகனைத் தடுத்து அவன் திமிறவைத் தாக்குப பிடிக்க முயன்றாள். நீண்ட நேரததிற்குப் பிறகு இருவரும் அலுத்துப போனார்கள். மகனைத் தூக்கிக் கொண்டு, மெல்ல மெல்ல நடந்து வீட்டிற்குள் சென்று தொப்பென்று விழுந்தாள்.

## 40

அனறிரவு, நல்லதனமாகவும் பயமுறுத்தியும், எப்படிக் கேட்டாலும், புல்லய்யா போலிஸ் ஸ்டேஷனில், "எனக் கொண்ணும் தெரியாது," என்றே சொன்னான். கடைசியில் லத்தியால் அடித்து உடம்பெல்லாம் காயப் படுத்தியபோதும், 'இப்படியே செத்தாலும் சாவேனே தவிர, நான் இரகசியத்தெ வெளியே விடமாட்டேன்,' என்று உறுதி செய்து கொண்டான். அலுத்துப்போன போலிஸ்காரர்கள் அவனை இழுத்துக்கொண்டு போய் லாக்கப்பில் தள்ளினார்கள். அடிபட்ட உடம்பில் வலி பயங்கரமாக இருந்ததால் புல்லய்யாவுக்கு கண்ணில் நீர் கூட வந்து விட்டது. அப்படியே அநத அறையில் இரும்புக கம்பிகள் பின்னால் உட்கார்ந்து விட்டான். அந்த வலியில் என்னென்னவோ நினைப்புகள் வந்தன. தனக்குத்தானே முணுமுணுத்துக் கொண்டான், தன்னைத தானே திட்டிக் கொண்டான், தலையில் தலையில் அடித்துக் கொண்டான். அப்படியே இருந்து, விடியற்காலையில்தான் அரைத்தூக்கத்தில் ஆழ்ந்தான. அந்தக் கொஞ்ச நேரத்திலும் ஏதேதோ கனவுகள். அவற்றில் போலிஸ்காராகள் காட்சியளித்தார்கள் விழிப்பு வந்த போது, உடலெல்லாம் பச்சைப் புண்ணாக இருநதது. நகர முடியாத அளவு ஆயாசமாக இருந்தது. 'மல்லு எவ்வளவு அழுறானோ? நீலி எப்படிப் பொழெப்பா? வழி என்ன?' இபபடி ஏதேதோ நினைத்தான் எழுந்து நிற்கப் போனால் நிற்க முடியவில்லை. பசியோ பயங்கரமாக இருந்தது. உடம்பெல்லாம் ஈட்டிகளால் குத்தியது போலவும், முட்டிகளெல்லாம் முறிந்து விட்டாற் போலவும், தசைகளெல்லாம் அங்கங்கே அறுந்து போனது போலவும் இருந்தன।

அன்று புல்லய்யாவைச் சென்ட்ரல் ஜெயிலுக்கு அனுப்பினார்கள் . . .

நீலிக்கு அந்த இரவு முழுவதும் எவ்வளவு முயற்சி செய்தும் தூக்கம் வரவில்லை. நடந்ததெல்லாம் நினைவுக்கு வந்தது. அழுது அழுது படுத்த மல்லு தூங்கி விட்டான். யோசிக்க யோசிக்க, கணவன் அப்போது சொன்ன பொய்களை உண்மையென எப்படி நம்ப முடிந்தது என்று ஆச்சரியப் பட்டாள். 'அவனுக்கு வேலெ கிடெக்கலேன்னா நான் எங்கெயாவது வீட்டு வேலெ செஞ்சாவது

காப்பாத்தியிருப்பேனோ. துடிதுடிக்கிற பறவைக்கு மிளகா தேச்சிட்டுப் போயிட்டான் அவன்! நம்ம தலையெழுத்து நல்லா இல்லாதப்பொ, எந்தக் கூலி வேலெ செஞ்சாலும் தப்பென்ன இருக்குது? இன்னைக்கி ஒர்த்தன் தலையெ உடெச்சாக்கா கஷ்டம் தீந்து போயிடுமா? இங்கெ அதுக்குக் கணக்குக் குடுக்கலேன்னாலும் அங்கெ குடுக்க வேணாமா? கவனிக்காம வுட்டுட்டெனே! இப்பொ இப்படிக் கம்பளிப்பூச்சி மாதிரி ஆகணுமா?

அவள் இப்படி யோசித்து யோசித்து இடிந்து போனாள். ஆனால், அவளுக்கு இந்தத் துக்கத்திலும் பாட்டி நினைவு வந்தாள். அவள் சாகும் போது சொன்ன வார்த்தைகள் நினைவு படுத்திக் கொண்டாள். 'ஆமாம், பாட்டி சொன்னது நிஜம் ! அவன் அப்படி ஆயிட்டான்னுட்டு நான் இந்த மாதிரி விசனப் பட்டுகிட்டெ இருந்தா, குழந்தைங்க கதி என்னறாது? எது போனாலும் பொழச்சிக்கலாம் -- தைர்யம் போயிட்டுதுன்னா அப்புறம் என்ன இருக்குது?' என்று பாட்டியை நினைத்துக்கொண்டு, மனதைக் கொஞ்சம் திடப்படுத்திக் கொண்டாள். நீலம்மனை வேண்டிக் கொண்டாள்.

காலையில் அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் அவளை ஒரு தீண்டத்தகாதவள் போல் பார்த்தார்கள். "திருடன் பொண்டாட்டியும் திருடிதான்," என்று விளக்கம் கொடுத்தாள் ஒரு அம்மா. "இவளுக்குத் தெரியாம அவன் எப்படிச் செய்திருப்பான்? இந்த மாதிரி ஆளுங்களுக்கு வாடகெக்கு ஆசெப்பட்டு வீடு குடுக்கறதனாலெ தெருக் கௌரவமே நாசமாவுது," என்று ஒரு கிழவன் குத்தலாகச் சொன்னான். "அவன் கதெ முடிஞ்சி போச்சி; இனிமே இவ கதையெப் பாருங்க -- மூஞ்சி முகரெ தெரியாதவங்களெத் தெருவுலே கொண்டாந்து வெச்சிக்கறது தப்பு," என்று ஒர் அம்மா அட்டகாசம் பண்ணினாள். "இவங்க ஒர்த்தராலெ தெருவுலெ இருக்கறவங்க எல்லரெயும் போலிஸ்காரங்க தொந்தரவு பண்ணுவாங்க," என்று ஜேப்படித் திருடன் நாலு பேரிடையில் தகராறு செய்தான்.

இவற்றையெல்லாம கேட்ட நீலி, மௌனமாக, அமைதியாக, "இதையெல்லாம் தாங்கிக்கிற சக்தி கொடு தாயே!' என்று நீலம்மனை வேண்டிக் கொண்டாள். யார் என்ன சொன்னாலும் அவள் வாய் திறக்க வில்லை, எதிர்த்துப் பேசவில்லை. மல்லு அப்பாவுக்காக அழுது அழுது அவளுடைய தைரியத்தை ஓரளவு சோதித்தான்.

போலிஸ்காரர்கள், அவனைப் பலவந்தமாக அழைத்துச் சென்று என்ன கேட்டாலும், அழுகை தவிர வேறு பதிலொன்றும் அவனிடமிருந்து வரவில்லை. எத்தனை வகைகளில் முயற்சித்தாலும் மல்லுவைப் பேச வைக்க முடியவில்லை. வீட்டுக்குத் திரும்பி வந்த பிறகு அப்பாவை மறக்க வைப்பதற்கு நீலி என்ன சொன்னாலும் உபயோகமில்லாமல் போய் விட்டது. அழுகை குறைந்த பிறகு அடுத்த நாள் அழைத்து வருவதாகப் போலிஸாரிடம் நீலி சொல்லி அவர்களை

அனுப்பி வைத்தாள்.

அப்படியே அழுது அழுது இரவு ஒன்பது மணிக்கு மல்லு தூங்கினான். மகள் நீண்ட நேரம் கழித்துச் சாப்பிட்ட பிறகு தூங்கிப் போனாள். நீலிக்குப் பசி எடுத்தாலும் சாப்பிட மனம் வரவில்லை. அப்படியே வாயிலில் உட்கார்ந்து சூன்யத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள் -- அப்போது ஒரு சாது, "சாமியாருக்கு ஒரு வா'சோறு போடு தாயே!" என்று சொல்லியபடி, அக்கம் பக்கத்திலிருந்த வீடுகளைப் பார்த்துக் கொண்டே அவள் அருகில் வந்தான். நீலி எழுந்து சென்று, இருந்ததில் பாதியைக் கொண்டுவந்து, அந்தப் பாத்திரத்தில் போட்டவுடனே அந்தச்சாது, "நிறைய கஷ்ட்த்திலிருக்கறே'ம்மா!" என்று சொன்னான்.

"ஆமாம் சாமி!"

"எனக்குத் தெரியும், உன் புருஷன் போலீஸ்கிட்டெ மாட்டிகிட்டிருக்கறான். உன் நெஞ்சி தாமரெ இலெ மேலெ தண்ணித்துளி மாதிரி தத்தளிச்சிகிட்டிருக்குது. நான் சொன்னதெக் கேட்டீன்னா நீங்கெல்லாரும் சுகப் படுவீங்க. இது கடவுளோட கட்டளெ," என்று சொன்னான்.

அவள் மிகவும் பணிவோடு நின்று, "சொல்லு சாமி!" என்றாள்.

சாது தரையில் உட்கார்ந்த பிறகு, அவள் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்ததுமே, உன் மகனை ஒண்ணும் பேசவிடாதே. அவங்க அடிக்கட்டும், திட்டட்டும், ஒண்ணும் சொல்லலேன்னா, உன் புருஷன் நாளெக்கி இந்த நேரத்துக்கு வீட்டுக்கு வரமாட்டானா? வருவான்--கண்டிப்பா வருவான்," என்றான்.

நீலி, அந்தச் சாதுவை ஒரு முறை தலையெடுத்துப் பார்த்துவிட்டு, மறுபடியும் தலை குனிந்த படி மிகவும் பணிவாக, "சாமி நீங்க பெரியவங்க. உலகத்தெப் பாத்திறீங்க. நான் எந்த உலகத்தையும பாக்லே. எங்க ஊரு, இந்த ஊரு -- இதுதான் என் கண்ணாலெ பாத்தது. நீங்க இப்படிச் சொல்லச் சொல்றீங்க இல்லியா -- போலீஸ்காரன் கண்ணெ, உலகத்துக் கண்ணெ மூடிட்டாலும் கடவுள் கண்ணெ மூட முடியுமா? நியாயம் நியாயம் தான், அநியாயம் அநியாயம்தான்! அநியாயத்தெ எப்படி நியாமாக்கறது சாமி - இன்னெக்கி என் புருஷனெப் பெரிய மனுஷனாக்கி அநியாயத்தெ நியாமாக்கச் சொல்றியா? என் புருஷன் மேலெ பிஸ்தோல்லெ சுட்டிருந்தா இதுக்குள்ளே எல்லாம் முடிஞ்சிருக்கும் ! அந்த மாதிரி ஒரு துரையெப் பத்திப் பொய் சொல்லச் சொல்றியா என்னெ?" என்று கேட்டாள்.

இதைக் கேட்டதும் அந்தச் சாது, "கஷ்டப்பட்டு போவெ. உனக்கு ஒத்தாசெ பண்றவங்க யாருமில்லே., ஓடு எடுக்கப் போறே -- பசியிலெ சாவப் போறே. கடைசியிலெ உன் புருஷன் பேச்செக் கேக்காமெ, அவன் கிட்டே'ருந்து பிரிஞ்சி போயிடுவே. உன் புருஷன்

தான் இதெல்லாம் சொல்லச் சொன்னான். என் வேலெயெ நான செஞ்சிட்டேன்," என்று சற்று எச்சரிக்கும் தோரணையில் சொன்னதால் நீலி ஒரு நிமிஷம் பதில் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அடுத்த நிமிஷம் அவள் மனதில் ஊறிக்கிடந்த அசைக்க முடியாத நம்பிக்கை வெற்றி பெற்றது. நிதானமான குரலில் சொன்னாள். "சாமி! என் புருஷன் இன்னைக்கிச சொலலச் சொன்னாருன்னு பொய் சொல்லிட்டா அது நிஜமாயிடுமா? நிஜம் என்னாங்கறது கொஞ்ச நாள் பொறுத்தாவது தெரியத்தான் போவுது! அப்படி இல்லேன்னா இந்த உலகம் இந்த மாதிரி இருக்குமா? மழை பெய்யுமா? வெய்யில் காயுமா? இருட்டும் வெளிச்சமும் வருமா? நான் சின்னவ — உங்களெ மாதிரி சாதுங்களுக்கு நான் என்னா சொல்ல முடியும்? நான் கண்ணுலெ நெருப்பெக் கொட்டிக்கலே; கூழுப் பானையிலே விழுந்த எலி மாதிரி அடிச்சிக்கவுமில்லே. எல்லாத்துக்கும் அந்தக் கடவுள் இருக்கறாரு. என் வேலெயெ நான் செஞ்சிட்டா நடக்க வேண்டியதெல்லாம் நடக்காம போவாது," என்று சொல்லிவிட்டு எழுந்து போனாள்.

சாது சுந்தரய்யா எழுந்து, தன் வழியில் தான் போவதற்கு முன்னால், "அவசரப் படாதே! நல்லா யோசிச்சுக்கோ. அப்புறம் உன் புருஷன் உனக்குக் கிடைக்க மாட்டான். நான் சொன்னா மாதிரி நீ செய்யலேன்னா அவன் தலை போயிடும். பிச்சை எடுத்துதான் சாப்பிடணும்!" என்று சொன்னான், அன்று இரவு முழுவதும் நீலிக்குத் தூக்கம் வரவில்லை.

எத்தனையோ யோசனைகள் அவளை ஆக்ரமித்தன. 'குருட்டு வெங்க்கன்னா திருடன்னு சொல்லிகிட்டு அவன் மேலெ பாய்ஞ்சிக்கிட்டு போனானே! எங்க வம்சம் கௌரவமான வம்சம் -- நான் கௌவரத்தோடேயே சாவேன் -- அப்படிச் சாவேனே தவிர திருட்டுத்தனம் மட்டும் செய்ய மாட்டேன்னு சொன்னானே! சத்தரத்துலே திருடனுங்களே ஒர்த்தனே தைர்யமாப் போயி அடிச்சானே! அன்னைக்கி ராத்ரி ஸ்டேஷன்கிட்டே ஏன் திருடப் போனேன்னு கேட்டதுக்கு பொழக்கறதுக்கு வழி பாக்கப் போனேன். இனிமே தலையே போனாலும் அந்த மாதிரி வேலெ செய்வேனான்னு சொன்னானே. தனதெல்லாத்தெயும் ஊராருக்கு விட்டுத் தொலச்சானே தவிர ஒர்த்தனுக்கு அநியாயம் பண்ணலியே. அப்படிப்பட்டவன் திருடப் போனானன்னா என்னாலெ நம்ப முடியலே. அவ்வளவு சின்ன மகன் மல்லு மேலே நம்பிக்கெ வெச்சி வேர்வ ஒழுவ கஷ்டப்பட்டு வேலெ செஞ்சான். திருடறதுக்குப் போனான்னு எப்படி நம்பறது? இல்லெ -- என் புருஷன் போகலே. என் புருஷனுக்கொண்ணும் தெரியாது. அவனெ மாதிரி நல்லவன் வேறெ எவன் இருக்கறான்? நான்தான் அவசரப் பட்டு அங்கெ திருடறதுக்கு இவன் தான் போனான்னு நினெச்சிக்கிட்டேன --'

. அப்போது யாரோ வரும் காலடி ஓசை கேட்டது. 'அதோ! என் புருஷன் திருடனா இருந்தாத்தானே? போலீஸ்காரங்க விட்டுட்டாங்க . . .' சற்று நேரம் எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தக் காலடி ஓசை தூரமாகப் போய்விட்டது. இன்னும் சில நிமிஷங்கள் கடந்த பிறகு, முந்திய நாள் இரவு நடந்ததெல்லாம் கண்ணெதிரில் வந்தது. 'எந்தத்தப்பும் பண்ணலேன்னா, போலீஸ்வராங்கன்னுட்டு இப்படியும் அப்படியும் ஏன் ஓடணும்? ஏன் அவங்களக் கண்டு பயப்படனும்? அப்புறம், உடம்புலெ அந்தக் காயங்க எப்படி வந்தது -- கெட்டவங்க யார் கூடவோ சேந்து பண்ணாம இருந்தா போலீஸ்காரங்க சும்மாவெ வந்து புடிச்சிக்கிட்டுப் போவாங்களா? நவிரிலே தப்பு பண்ணதனாலெதானே அழெச்சிக்கிட்டுப் போனாங்க. செய்ஞ்சிக்கிறான் — செய்யலேன்னா பொய் சொல்லச் சொல்லி அந்தச் சாதுகிட்டே சொல்லி, அனுப்பறான்? செஞ்சிருக்கறான். நான் உண்மெயச் சொன்னாக்கா என் புருஷனுக்கு என்ன ஆயிடுமோ? அவனெவிட இந்த உலகத்துலெ வேறெ யாரு இருக்கறாங்க எனக்கு? அவனுக்குன்னா எது வேணும்னாலும் பண்றேன். அவன் பொழெச்சிருக்கணும், அது தான் எனக்கு வேண்டியது. இப்படிச் சற்று நேரம் தனக்குள்ளேயே யோசித்துக் கொண்டாள். பிறகு அவள் நம்பிக்கைகள் முன்னால் இந்த பாச உணர்வுகள் சாகத் தொடங்கின. காலையில் நினைத்தாள் 'எந்தப்பொய் சொல்லியாவது என் புருஷனெக் கொண்டு வந்து விடறதா! . . . என் புருஷன் செஞ்சதுக்கு தண்டனெ அனுபவிக்காம பண்ணாக்கா நான் நல்லா இருக்க முடியுமா? உண்மெ உண்மெதான் -- பொய் பொய்தான்! நியாயம்தான் நிலையா நிக்குமே தவிர அநியாயம் நிக்காது. நான் ஏன் இப்படி ஆயிட்டேன்? . . , நான் நிஜம்தான் சொல்லுவேன், கடவுள் இல்லியா? . . . என் புருஷன் என்ன ஆனாலும் ஆவட்டும் -- என் பொழப்பு என்னானாலும் ஆவட்டும், என் குழந்தெங்க என்னானாலும் ஆவட்டும் . . . நான் நிஜமெ சொல்றேன். . . நான் பசியாலே அவஸ்தெப் பட்டாலும் எனக்கு அழுகெ வந்தா சந்தோஷத்துனாலெ வரும் --- துக்கத்துனாலெ வராது! நான் எல்லாம நிஜமே சொல்றேன், ' என்ற உறுதி செய்து கொண்டாள்.

அடுத்த நாள் போலீஸ்காரர் வந்து அவளையும் மல்லுவையும் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றனர். மல்லுவின் எதிரில் ஆறு பேரை நிற்க வைத்து அன்றிரவு புல்லய்யாவுடன் வந்தவர்கள் இருந்தால் அடையாளம் காட்டச் சொன்னார்கள். மல்லு, கோபமாக, "நான் சொல்ல மாட்டேன்," என்று சொன்னான். இந்தப் போலிஸ்காரரெல்லாரும் சேர்ந்து தன் அப்பாவை அழைத்துச் சென்றார்கள் என்பது அவன் வருத்தம். நீலி மகனை மிகவும் வேண்டிக் கொண்டாள். பலவகைகளில் முயற்சி செய்ததில் அவர்களில் ஒருவரும் இல்லை என்பது தெளிவாயிற்று. அந்த

இன்ஸ்பெக்டர் இப்போது தன் சாமர்த்தியத்தை உபயோகப் படுத்த வேண்டி வந்தது. ஒரு பலூனை ஊதி அவன் கையில் கொடுத்தார். "எதோ உன்னால் ஊத முடியுமா?" என்று கேட்டார். மல்லு அதைவிட நன்றாக ஊதினான். பிஸ்கட்டை என்ன மாதிரி வேகமா சாப்பிட முடியுமா?" என்று கேட்டார். "பிஸ்கட்களை அவன் வேகமாக நொறுக் நொறுக்கென்று மென்று தின்று விட்டான். பிறகு, "பாத்தியா உங்கப்பா என்ன வேலெ செஞ்சாரோ! உங்கப்பா திருடனில்லே. நாங்க விட்டுட்டோம் விட்டுட்டா என்ன பண்ணாரு தெரியுமா? 'அந்த ரெண்டு பேரு வீட்டுக்குப் போவணும்'னு சொல்லிவிட்டுப் போயிட்டாரு. அவங்க வீடு வுனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

"அண்ணன் வீடு தெரியும்," என்றான்.

"சந்தரய்யா வீடு?"

"ஊஹூம்!"

"உங்கப்பா கூட நீ எங்கெங்கெ போனன்னு சொல்றியா?" என்று கேட்டார்.

"ஓ!" என்று சொன்னதும் இன்ஸ்பெக்டர் சிறுவனைத் தன்னுடன் அழைத்துச் சென்றார் . . . அந்த ஹோட்டல் முதலாளி இந்தப் பையனுடன் இன்னும் இருவர் சேர்ந்து தன் ஹோட்டலுக்கு வருவதுண்டு என்றும், ஒரு முறை இன்னொரு குட்டை மனிதனும் வந்தானென்றும், அவர்கள் வீடு எங்கு இருக்கிறதோ தெரியாததென்றும் சொன்னான். இன்ஸ்பெக்டர் அந்த முதலாளியிடம், அவர்கள் வீட்டைக் காட்டவில்லையென்றால், அவனையே ஸ்டேஷனுக்குக் கொண்டு போவதாக மிரட்டினார். பிறகு, அந்தச் சிநேகிதன் வீட்டைத் தூரத்திலிருந்து காட்டிவிட்டுப் போனான். "உங்கப்பா சுந்தரய்யா வீட்லெ இருக்கறாரு போல இருக்குது! அந்த வீட்டெக் கண்டுபிடிச்சிட்டு உன்னெக் கூட்டிகிட்டுப் போறேன்," என்று மல்லு நம்பும்படியாகச் சொன்னார்.

திரும்பி ஸ்டேஷனுக்கு வந்த போது நீலி அங்கேயே உட்கார்ந்திருந்தாள். இன்ஸ்பெக்டர் அவளைப் பார்த்ததுமே அவள் மேல் பரிவு கொண்டார். தான் கேட்கும் கேள்விகளுக்கு, அவள் தடுமாற்ற மில்லாமல் உள்ளதை உள்ளபடியே பதில்களாகச் சொல்லிக் கொண்டிருந்தபோது, அவர் மனதில் அவள் மேல் ஒரு விதமான மரியாதை பிறந்தது. அவளுக்கு எந்த வகையிலாவது உதவி செய்தால் நன்றாக இருக்கும் என்று அவருக்குத் தோன்றினாலும், தன் உத்தியோக தர்மத்தை விட்டுக் கொடுக்கக் கூடாதென்று, அவள் சொன்னதையெல்லாம் அப்படியே எழுதிக் கொண்டார்.

அவள், புறப்பட்டு வெளியே போனவள், திரும்பி வந்து, "அந்தப் பெரிய மனுஷனுக்கு உடம்பு எப்படி இருக்குது துரெ?" என்று கேட்டாள். அதற்கு இன்ஸ்பெக்டர், "கண்டம் தப்பிச்சிட்டுது. பொழெச்சிக்குவான்" என்று சொன்னார். நீலி நகர்ந்து கொண்டே, "கடவுள் இல்லியா?

அந்த நல்ல மனுஷனெக் கவனிக்காமெ விட்டுடுவாரா!" என்று சொன்னாள். அப்போது இன்ஸ்பெக்டர், " அவன் நல்லவனா? அவன் பணத்தெ நெனச்சி சொல்றியா?" என்று கேட்டார்.

"நல்ல மனுஷனில்லேன்னா, பிஸ்தோலெத் திருடங்களெப் பாத்துச் சுட்டிருக்க மாட்டாரா?" என்ற சொல்லிவிட்டு, அவள் மெதுவாக, மகளை அழைத்துக் கொண்டு நகர்ந்து போய்விட்டாள். அப்படிப் போகும் போது நான்கைந்து தெருக்களில், வேலைக்காகச் சில வீடுகளில் சென்று கேட்டாள். தன் கஷ்டங்களைச் சொல்லிக் கொண்டாள்.

ஒரு வீட்டு அம்மாள் மிகவும் குறைந்த சம்பளத்துக்கு அவளை வேலைக்கு வைத்துக் கொண்டாள். எத்தனையோ சட்ட திட்டங்கள் கேட்டாள். அவள் குரலில் கம்பீரம் யாரையும் பதற வைப்பதாக இருந்தது. எல்லாவற்றுக்கும் நீலி தலையாட்டினாள். அன்றிலிருந்தே வேலை தொடங்கி விட்டது. சொன்ன வேலைகளைச் செய்து விட்டு, வீட்டுக்குப் போகும் போது, அவளைப் போன்ற ஓர் ஆள், " அவங்க வீட்டு வேலெக்குச் சேந்தியா?" என்று கேட்டார்.

"ஆமாம்மா!"

"அவங்க மனுஷங்களா? குடுக்கறது ரெண்டு பைசாதான்னாலும் ரத்ததெத்துப் பிழிஞ்சி எடுத்துடுவாங்க. அதனாலெதான் அவங்க வீட்லெ மாசத்துக்கு ஒரு வேலெக்காரி மாறிகிட்டிருப்பா. அவங்க விஷயம் தெரிஞ்சவங்க யாரும் அவங்க வீட்டு வேலெக்குப் போவமாட்டாங்க."

"கஷ்டகாலத்துலெ உதவறாங்க அந்தம்மா. நாலு வார்த்தெ சொன்னா கேட்டுக்கறேன். என்னைக்காவது ஒரு நாளக்கி அந்தம்மா மனசுலெ கருணெ பிறக்காதா? அவளும் மனுஷிதானே!" என்று சொல்லிக் கொண்டே, நீலி வீட்டை நோக்கிப் போனாள்.

## 41

மேஜிஸ்ட்ரேட் கோர்டடில் விசாரணை தொடங்கியது. குற்றம் சாட்டப் பட்ட மூவரையும் ஒரு பக்கம் நிற்க வைத்து, அவர்கள் மேல் குற்றப் பத்திரிகை வாசித்தார்கள். மூவரும் நிரபராதிகள் என்று சொன்னார்கள்.

அதற்கு மேல் அசிஸ்டென்ட் பப்ளிக் பராஸிக்யூட்டர் குற்றத்தை மெய்ப்பிக்க வேண்டிய அவசியம் வந்தது. முதல் சாட்சியாக நீலம்மாவை வரவழைத்தார்கள். நீலி மகளைக் கோர்ட்டுக்கு வெளியே மரத்தின் கீழ் இருக்குமாறு மகனிடம் ஒப்படைத்து விட்டுக் கோர்ட்டுக்குள் வந்தாள். இருந்த கந்தல் கிழிசல்ககளில் கொஞ்சம் நல்லதைக்கட்டிக் கொண்டு, உடம்பை ஒரு வழியாக மூடிக்கொண்டு இருந்தாள். ஆள் மிகவும் மெலிந்திருந்தாள். முகம் வெளுத்துப்

போய், கேடாலி முடிச்சி கூட அலங்கோலமாக இருந்தது.

தலை குனிந்தபடி கூண்டில் ஏறும் போது, அவள் கால்கள் வெடவெடவென்று நடுங்கத் தொடங்கின. ஏறி, கூண்டின் சுற்றுச் சட்டத்தைப் பிடித்துக் கொண்டு நின்று, தலையைத் தூக்கிய போது, குற்றம் சாட்டப்பட்ட மூவரும் தென்பட்டனர். தலை சற்றுக் குனிந்து, அங்கிருந்து கணவனைப் பார்த்தபோது, அவள் மனதில் ஏதோ ஒரு விதமான கவனம் தோன்றியது. ஏனோ அந்த முகத்தைப் பார்ப்பதற்கு வெட்கமாக இருந்தது. சக்தியிழந்து, கண்ணில் நீா கசிந்த போது, சட்டென்று தன் கடமை நினைவு வரவே, தைரியத்தை வரவழைத்துக் கொள்ள முயற்சித்தாள்.

மனைவி, மகன் இருவரும் கொடுக்கும் சாட்சியத்தை ஒட்டித்தான், தானும் தன் சகாக்களும் விடுதலை பெறும் வாய்ப்பிருக்கிறதென்று, அவர்களுக்காக அரசாங்கம் அமர்த்தியிருந்த வக்கீல் சொல்லியிருந்தார். சந்திரய்யா சென்று ஓரளவு சொல்லியிருந்தான் என்பது புல்லய்யாவுக்குத் தெரியும். எல்லாவற்றையும் யோசித்து, தான் வெளியே வருவதற்குச் சாதகமான சாட்சியத்தையே கட்டாயம் சொல்வாளென்ற அசைக்க முடியாத நம்பிக்கையோடு இருந்தான்.

அப்போது, தஸ்பேதார், "அம்மா இந்தச் சத்தியப் பிரமாணத்தைச் சொல்லு," என்று சொல்லிவிட்டு," கடவுள் முன்னால் . . ."

அவள் குறுக்கிட்டு, "அது எதுக்குத் துரெ? அவருதான் எப்புவும் இருக்கிறாரே . . ." என்றாள்.

"அந்த மாதிரி சத்தியம் பண்ணும்'ம்மா"

நீலி தஸ்பேதார் சொன்னது போல் சத்தியம் பண்ணினாள். அவள் மனதில், சில வினாடிகளுக்கு முன்னாலிருந்த நடுக்கம், வேதனை, சஞ்சலம் எல்லாம் சற்றுக் குறையத் தொடங்கின. அந்தக் குரலில் ஏதோ ஒரு தெய்வத் தன்மை குடியேறியது போலிருந்தது. வரவரப் பயம் விட்டு விலகியது.

அஸிஸ்டென்ட் பப்ளிக் ப்ராஸிக்யூட்டர் அவளிடம் கேள்விகள் கேட்கத்தொடங்கினார்.

"உன் பேர்?"

"நீலம்மா"

"உ்ன புருஷன் பேர்?"

"புல்லய்யா"

"இந்த மூணு பேர்லெ உன் புரு'னெ அடையாளம் காட்ட முடியுமா?"

"ஹாம், நடுவுலே இருக்கறார்."

பிறகு, கேட்ட பல வகையான கேள்விகளுக்கு அவள் கூச்சமில்லாமல் பதில் சொல்லிக் கொண்டிருந்தாள். புல்லய்யாவுக்குக் கண் எரியத்தொடங்கியது. அவனுக்குத் தாங்க முடியாத கோபம், எரிச்சல் பொங்கப் பொங்க, ஒன்றும் செய்ய முடியாமல் வேதனைப் பட்டான்.

ஒரு நாள் ரயில்வே ஸ்டேஷனில் திருடியது முதல் கப்பல் சாமான் இறக்குவதற்கு இரவுகளில் போய்க் கொண்டிருந்தது, ஒரு நாள் சேலை கொண்டு வந்தது -- அவர்கள் கிராமத்தில் ப்ரொக்யூர்மெண்ட் தகராறில் அபராதம் கட்டிய சங்கதி; இந்தக் குற்றம் நடந்த அன்று இரவு, பிறகு அடுத்த நாள் காலை மகனுக்கும் தனக்கும் நடந்த விஷயங்கள் -- எல்லாவற்றைப் பற்றியும் கேள்விகள் கேட்கக் கேட்க, நீலி பதில் சொன்னாள். மற்ற இருவரையும் தான் இதுவரைப் பார்த்ததில்லையென்றும், அவாகள் ஒரு முறையும் தன்வீட்டுப் பக்கம் வந்ததில்லையென்றும் சொன்னாள்.

இந்த உண்மைகளை யெல்லாம் நடுக்கமோ, தடுமாற்றமோ இல்லாமல் அவள் சொல்லி முடித்ததால், குற்றம் சாட்டப்பட்டவர்களின வக்கீலுக்கு அதிக வேலையில்லாமல் போய்விட்டது. இருந்தாலும் தன் கடமையில் அவர் தவறவில்லை, அவர் கேட்ட கேள்விகளில் சில:

"உன் புருஷன் மனசு எப்படிப் பட்டது?"

அவள் பதில் சொல்லவில்லை.

"போவட்டும், நாலு பேரு உன் புருஷனெப் பத்தி என்ன சொல்லுவாங்க?

"எங்க பாட்டி சாகற சமயத்திலெ செசான்னாங்க. 'கை சுட்டுதுன்னா சட்டியெக் கீழே போட்டுடுவார்'னு. . . இந்த ஊரு வந்தப்பறம் யாரு என்ன நினெச்சாங்களோ எனக்குத் தெரியது துரெ!"

"ஒரு மாதிரியானவன்னு, ஒனக்குப் புருஷன் மேலெ ரொம்பக் கோவமா இருக்குமில்லே?"

"கோவத்தெ வெச்சிகிட்டு யாரெத் திருத்தமுடியும் துரெ -- கோவம் வெச்சிக்கிறவங்களுக்குத்தான் நஷ்டமே தவிர . . "

"உன் புருஷன் உன்னெ அடிக்கடிக் கோவிச்சுக்குவா னில்லே? அதனாலெ வுனக்கு அவன் மேலெ கோவமிருந்தது -- என்ன, சரிதானா?'

"உங்க ரெண்டு பேருக்கும் ஒத்துப் போறதில்லேன்னு ஒத்துக்கறே இல்லியா?"

"அப்படியேன் ஒத்துக்கணும்? என் புருஷன் எப்பவும் என்னெத் திட்னதில்லே அடிச்சதில்லே -- நீங்க எது வேணும்னாலும் சொல்லுங்க -- இது மட்டும் உண்மெ யில்லே. அந்தக் காலத்துலெ எங்க ஊர்லெ குருட்டு வெங்கன்னா எப்பவோ திருடனானுட்டு அவன் மேலெ சண்டெக்குப் போவாரு. அந்த மாதிரி ஆளு இப்பிடி ஆவாருன்னு நினெச்சேனா? கொஞ்சம் கவனிக்காம வுட்டுட்டேன் நான் -- அவர் பேச்செயெல்லாம் நம்பினேன். நான் சொன்ன மாதிரி அந்த ஊர்லயே இருந்து வருஷக் கூலிக்கு யார்கிட்டெயாவது சேர்ந்திருந்தா பொழச்சிருப்போம் துரெ! கேக்கலே இங்கெ வந்து இந்தப் பாவமான வேலெயத் தொடங்கிட்டாரு."

புல்லய்யாவுக்கு அடக்கமுடியாத அளவு கோபம் வந்தது. 'இதெல்லாம் உனக்காகப் பண்ணேன் — நீதான் ஏமாத்திட்டே!' என்று கத்த வேண்டுமென்று நினைத்தான். தான் பேசினால் குற்றம் ஒப்புக் கொண்டது போல் ஆகுமென்று வலுக்கட்டாயமாக உதடுகளை அழுத்திக் கொண்டான்.

நீலியின் சாட்சியம் முடிந்து விட்டது. மல்லுவைக் கோர்ட்டுக்குள் அழைத்துவருவதற்கு முன் பப்ராசிக்யூட்டர் மேஜிஸ்ட்ரேட்டி டைம் விண்ணப்பித்துக் கொண்டார்: "பையனுக்கு அப்பாகிட்டெ அதிகமான பாசம். அதனாலெ அப்பா எதிர்லெ தென்பட்டா அழுகெ தவிர சாட்சியம் வராது; ஆகவே குற்றஞ் சாட்டப்பட்ட இந்த ஆளெக் கொஞ்சம் மறைவா வெக்கணும்". மாஜிஸ்ட்ரேட் விண்ணப்பத்தை ஏற்றுக் கொண்டார்.

மல்லு சொன்னபடிக் கேட்டு தைர்யமாகக் கூண்டிலேறி இப்படியும் அப்படியும் பார்த்தான், கூண்டில் முழுகிவிட்டது போலிருந்தான். கையிலிருந்த கட்டையை எறியச் சொல்லியும் எறியாமலே கூண்டில் ஏறினான். உள்ளே நின்று கொண்டே அந்தக்கட்டைக் கொண்டு ஒரு முறை கூண்டில் சுழற்றிக் கடகட வென்று சத்தம் எழுப்பினான்.

பிராசிக்யூட்டர் சிரித்த முகத்தோடு, "பையன் -- ரொமப் நல்லவன். உன் பேரு?" என்று கேட்டார்.

"மல்லு!"

"உங்கப்பா பேரு?"

மல்லு, "ஹஹ்ஹாஹா ' என்று சிரித்துக் கொண்டே, "எங்கப்பா பேரெ தெரியாதா? -- புல்லய்யா!" என்று சொன்னான்.

"நல்ல பேருதான்!"

"எங்கப்பா நல்லவரு -- எங்கப்பா பேரும் நல்ல பேரு தான்! உன் பேரு?"

"என் பேரு கோவிந்தராவு --"

அழகுகாட்டிக் கொண்டே, "இவ்வளவு பெரிய பேரா? நல்லால்லே!"

"என் பேரெச் சின்னதாக்கிக்கறேன் ஆவட்டும் . . . . எதோ சொல்லு -- அன்னைக்கி ராத்ரி உங்கப்பாவும் நீயும் உங்க வீட்டு வாசல்லே படுத்திருந்தீங்க இல்லியா?"

"எப்பவும் படுத்துக்கறோம் -- எனக்கு எங்கப்பா மார்பு மேலெ படுத்துகிட்டா இஷ்டம் -- எங்கப்பாக்கும் இஷ்டம் -- ஓ ஓ! . . . ." சிரிப்பு அடக்க முடியாமல் வந்தது.

"அப்படியா சரி! அன்னைக்கி என்ன நடந்ததோ சொல்லு!"

"என்னைக்கி?"

"உங்கப்பா மாடி வீடேற்னாரே -- அன்னைக்கி."

"அங்கெ சொன்னேன். இங்கே எதுக்கு?"

"இதோ, இவங்கல்லாம் கேக்கலியாம் — கேக்கணும்னு சொல்றாங்க. சொல்லிடு மல்லு -- நீ ரொம்ப நல்லவனில்லே!"

மல்லு கட்டையைக் காலுக்குக் கீழே வைத்துவிட்டு, இரண்டு கைகளாலும் கூண்டைப் பிடித்துக்கொண்டு, கோர்ட்டிலிருந்த ஜனங்களைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினான். சின்னக் கால்சட்டை, அதற்கு மேல் கைகள் கிழிந்த சட்டை -- முகத்தில் வந்து விழும் தலை முடி -- எலிப் பற்கள், அழுத்தந்திருத்தமான பேச்சு . . .

"அன்னைக்கி அம்மாக்கூட பக்கத்து வீட்டம்மா கிட்டெ உக்காந்திருந்தேன். அப்புறம் எழுந்து அப்பாகிட்டெ படுத்துக்கறதுக்குப் போயி . . . பாட்டுப் பாடனேன் . . . மதியானம் தூங்கிடடேன்'ல்லே -- எனக்குத் தூக்கம் வரலே . . . அப்பாவுக்கும் வரலே . . . இருட்டு . . ரொம்ப இருட்டு, அப்படீக் கொஞ்சம் தூங்கிட்டேன். திடீர்னு நான் முழிச்சிகிட்டேன் -- எங்கப்பா எழுந்திரிச்சி போய்க்கிட்டிருந்தார். நானும் எழுந்திரிச்சேன் . மறுபடியும் வந்து மேலெ போட்டுகிட்டு தட்டினார். இன்னெக்கி எங்கப்பா என்னெக் கூட்டிகிட்டுப் போவமாட்டார்.-- எங்கப்பா வேலெ செய்யற இடத்தெப் பாக்கணும் -- எவ்வளவு பெரிய கப்பலோ என்னவோ . . . தந்தரம் பண்ணேன் -- ஒளிஞ்சிகிட்டு அவங்க பின்னாடி போனேன்."

"உங்கப்பா கூட இருந்த ரெண்டு பேரு யாது?" என்று பிராசிக்யூட்டர் கேட்டார்.

"அண்ணன் -- சுந்தரய்யா!"

"அவங்க தானா?" என்று அந்த இரண்டு பேரையும் காட்டவே, மல்லு அடையாளம் தெரிந்து கொண்டு, "ஆமாம்!" என்று சொல்லிவிட்டு, சிநேகிதனைப் பார்த்து, "நீ, போண்டா, டீத்தண்ணி குடுப்பே'ல்லே!" என்றான்.

பிறகு பிராசிக்யூட்டர், "அப்பொ அவங்க பின்னாடியே போனே. அப்புறம் என்னாச்சி?"

"என்னாச்சா?" கொஞ்ச நேரம் யோசித்துவிட்டு, "பின்னாடியே போனேன், விளக்கு கிட்டெ நின்னேன் -- எங்கபபா பாத்தா அடிச்சிடுவாரு --குப்பெத் தொட்டி பின்னாடி மறெஞ்சிகிட்டேன் . . . அப்படியே பின்னாலெ போனா கப்பலில்லே, மாடி வீடு! நானும் மாடி ஏற்னா எவ்வளவு நல்ல'ருக்கும் --- அப்பா பாத்தா அடிப்பாரே! எங்கபாக்குக் கோவம் வராதா? மேலெ ஏற்னாங்க -- நாயி போ! போ! பயமா இருந்தது. ஓ -- ஓ . . . ஒரே சத்தம்! குப்பத் தொட்டிலெ ஒளிஞ்சிகிட்டேன். . . . எங்கப்பா அப்பறம் வரலே," என்று சொல்லி, தைரியமாகவே, அதற்கடுத்த நாள் நடந்த விஷயங்களை நிறுத்தி நிறுத்திச் சொன்னான். அப்பா, அன்று இரவு திரும்பி வரும் வரையில் எல்லாம் சரியாகவே போயிற்று. பிறகு தைரியமாக இருந்த அந்தத் தொண்டையில் துக்கம் அடைத்துக் கொண்டு வந்தது.

"அன்னைக்கிப் போலீஸ்காரங்க எங்கப்பாவெப் பிடிச்சிகிட்டுப் போனாங்க. எவ்வளவு அழுதாலும் எங்கப்பா வரலே -- தென்படலே

-- எங்கப்பாவெ என்னா பண்ணாங்களோ?- 'இங்கெ இருக்கறாரு, அங்கெ இருக்கறாரு 'ன்னு சொல்றாங்க! எங்கெ இருக்கறாரோ? . . எங்கப்பா இருந்தா இந்த மாதிரி பொய் சொன்னவங்களெப் பளார் பளார்னு அடிச்சிட மாட்டாரா? எங்கப்பா எவ்வளவு நல்லவரு அப்பா எங்கேன்னு அம்மாகிட்டெ கேட்டா, 'ஊருக்குப் போனார்'னு சொல்றாங்க. ஊருக்குக்குப் போனா என்கிட்டே சொல்லாம போவாரா? போனாலும் இத்தனெ நாளு என்னெ வுட்டுட்டு இருக்கமாட்டாரே. . . " அதற்குள் அந்தத் தொண்டையில் அதிகமான கடுமை தலையெடுத்தது. ஆவேசமும் கோபமும் கரைபுரண்டு வந்தன. விறுவிறென்று காலுக்குக் கீழே இருந்த கட்டையை எடுத்து பலமாக ஆட்டினான். கூண்டின் மேல் வேகமாக நாலு முறை அடித்துவிட்டு, போலீஸ்காரங்களா! நீங்கெல்லாம் சேந்து எங்கப்பாவெ என்னவோ பண்ணிட்டீங்க . எங்கப்பாவெக் கொண்டு வரலேன்னா, பாருங்க, உங்க எல்லாரெயும் இந்தக் கட்டெயால படார் படார்னு போட்டுறேன். உங்க எல்லாரெயும் நல்லாக் கடிச்சிட்றேன், அப்பா . . . அப்பா!" என்று உரக்கக் கத்தினான். அந்த நிமிஷமே பக்கத்தில் ஒளித்து வைக்கப் பட்டிருந்த அப்பாவுக்கு உடம்பெல்லாம் நடுக்கம் கண்டது. கண் நிலைக் குத்திவிட்டது. கோபம் தாபமெல்லாம் அந்த வினாடியே மறந்து போய்ச் சட்டென்று முன்னால் ஓடிவந்தான்.

"மல்லு -- எங்கப்பா!" என்று சொல்லிக் கொண்டே, கூண்டுக்குள் ஒரு குதிகுதித்து ஏற வெண்டுமேன்று நினைத்தான். அப்பாவெப் பார்த்துவிட்ட மல்லு அடக்க முடியாத சந்தோஷத்தோடு, 'அப்பா!" என்று ஒரு முறை கத்தி விட்டு, கூண்டை விட்டு இறங்கி வந்தான்.

அழுது கொண்டிருந்த மல்லுவை தஃபேதார் கோர்ட்டுக்கு வெளிப் பக்கத்தை நோக்கியும், முன்னால் வரத்துடித்த புல்லய்யாவைப் போலிஸ்காரர் பின்னோக்கியும் இழுத்துக்கொண்டு போனார்கள்.

## 42

கோர்ட்டிலிருந்து திரும்பி ஜெயிலுக்கு வருவதற்குள் சாயந்திரமாகிவிட்டது. வந்தவுடன் தன் அறையில், ஒரு மூலையில் விழுந்துவிட்டான். மனமெல்லாம் கோபத்தில் எரிந்து கொண்டிருந்தது. எதிரில் இரும்புக் கம்பிகள் குறுக்கே இருந்தன. இல்லையென்றால், அந்தத் தாங்க முடியாத கோபத்தில் ஓடிச் சென்று மனைவியின் கழுத்தை நெறித்திருப்பான்!

'அவதான் செஞ்சா . என் மல்லு, அப்பா சொல்ல வேண்டாம்னு சொன்னார்னு சொல்லிட்டா , அதுக்கப்புறம் பேசுவானா? என் மேலெ வஞ்சம் வெச்சி, எதிரிக்குப் பணறா மாதிரி பண்ணிட்டா. அவளாலேயே நான் பாழாப் போனேன். ஆதெம்மாக்கா பேச்செக் கேக்காம போயிட்டேன். நிலத்து எஜமான் மாதிரியே என்னெ

ஏமாத்திட்டா. தானம் பண்ணிப் பண்ணி வீட்டெத் துடெச்சி விட்டுட்டா. ராஜூப்பய எதிர்க்கெ தலெ குனியவெச்சி எல்லாத்தெயும் நாசமாக்கிட்டா. கோழெ மருந்தெக் குடுத்துக்குடுத்து, என் ஆண்மையெ எரிச்சிட்டா. அவ அந்தஸ்தெப் பாக்காம போயிட்டேன். பந்தயத்துக்குப் போராடி, அந்த மட்டமானவளெ, செலலாம கிடந்தவளெ நான் கட்டிகிட்டேன். போயும் போயும் எச்ச எலெ மேலெ போயி விழுந்தேன். தேடிவந்த அந்த ரம்பையெக் கட்டிகிட்டிருந்தா எனக்கிந்த கதி வந்திருக்குமா? தங்கமான ஊரெ விட்டு வந்திருப்பேனா? இந்தக் கல்லுத்தரெ மேலெ புரள வேண்டியிருக்குமா? இப்படி மகன் மல்லுவெ விட்டுப் பிரிஞ்சிருப்பேன்? இவளாலெதான் எல்லாம் வந்தது. இவளேத் திட்னாலும் அடிச்சாலும் கொண்ணாலும் பாவமில்லே"என்று ஆவேசத்தில் வெந்து போகலானான், அன்றைக்குச் சாப்பாடு இறங்க வில்லை. மனைவி மேல் கோபமே உடலெங்கும் நிறைந்திருந்தது. இந்த யோசனைகளுக்கிடையில் இருட்டிவிட்டது.

அவ்வப்போது, பைத்தியக்காரனைப் போல இப்படியும் அப்படியும் திரிந்தான். ஒவ்வொரு முறை யோசனைகளுக்கேற்ப் நடக்கலானான். இடைஇடையே வார்த்தைகள் வெளியே வந்து கெண்டிருந்தன். மூன்று முறை இரும்புக் கம்பிகளை வளைப்பதற்கு முயற்சித்தான். தன் பலத்தையெல்லாம் உபயோகப் படுத்தினாலும் கம்பி அசையவில்லை.

இந்தச் கைதிபடும் வேதனையைக் கண் கொட்டாமல் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த மற்றொரு கைதி, நீண்ட நேரம் ஆனபிறகு, ' என்னாச்சி தம்பி!" என்று கேட்டார்.

"எல்லாமெ ஆய்ப்போச்சி -- எல்லாம் அவ வேலெ -- இந்தக் கதவு திறந்ததுன்னா, போயி அவளெ ஒரே அடி போட்டுட மாட்டேனா–

"யாரெ . . .?"

'அவளெத்தான் -- அந்த மட்டமானவளெ -- அவ என் பொண்டாட்டியாம். . . ஊரெல்லாம் வேணாம்னு சொன்னா, அந்தக் கதியில்லாதவளெப் பண்ணிகிட்டேன். அவ எனக்கு எதிராச் சாட்சி சொன்னா . . . " புல்லய்யாவின் கோபம் ஒரேடியாகத் தாங்க முடியாத துக்கமாக மாறிவிட்டது. 'ஓ'வென்ற அழுதுகொண்டே, " என் மல்லுவெ -- என் கண்ணெ எத்தனை நாளக்கோ என்னெப் பாக்க விடமாட்டா. இந்த மாதிரி என் மகனெ நினெச்சி நினெச்சி . . . நான் என்ன ஆவேன்?"

அந்த ஆள் அருகில் சென்று விக்கி விக்கி அழலானான். அந்த அன்பான கை, மெதுவாகத் தன் அருகில் குனிந்திருந்த அவன் தலையை வருடியது. சற்று நேரம் ஆனபிறகு, மெல்ல அவன் இடத்திற்கு அழைத்துச் சென்று, படுக்க வைத்தார். புல்லய்யாவின் நரம்புகள் எல்லாம் ஆயாசத்தின் காரணமாக இழுக்கத் தொடங்கின. அப்படியே கீழே படுத்துக் கண்ணை மூடினான். கண்ணை மூடியதும் கோர்ட்டு, மனைவி, மகன், அந்தக் காட்சிகள் எல்லாம் தென்பட்டன.

தாங்க முடியாத வேதனை, அதற்குத் துணையாக ஆத்திரம் தன்னுள் பிணைந்து வந்தன. அரைக் கண் திறந்து பார்த்தான். மேலெ ஜெயில் போலிஸ்காரன் இப்படியும் அப்படியும் உலவிக் கொண்டிருந்தார்கள். வராண்டாவிலிருந்து வெளிச்சம் கொஞ்சமாக அந்த அறைக்குள் வந்தது. அந்த அரைகுறை வெளிச்சத்தில் தன்னைச் சாந்தப் படுத்திய மனிதரைப் பார்த்தான்.

சட்டென்று, ' பூச்சாண்டி இங்கெ எப்படி வந்தான்?' என்று சந்தேகம் வந்தது. பூச்சாண்டியா இல்லெ வேறெ யாராவதா? தாஸனைப் போல இருக்கறானே . . . தாசன் எப்பவோ போயிட்டானில்லியா -- எப்படி வருவான்? அப்படின்னா பூச்சாண்டியாத்தான் இருக்கணும். ஆனா, அப்படிப் பட்டவனெ ஜெயில்லெ ஏன் போட்றாங்க? அப்படீன்னா யாரு? இந்த மனுஷன் இன்னைக்கிக் காலெயிலெ இந்த அறைலெ இல்லியே! எப்படி வந்தாரு?

அவர் மெல்ல ஒரு கேள்வி கேட்டார்: "அப்பா! வேதனெ குறெஞ்சிதா? நினைவு இல்லாமலே முனகினான். மேலெ காலடி ஓசை கேட்கவில்லை. பெரும்பாலும் அந்தப் போலிஸ்காரன் அந்தக் கடைசியில் உட்கார்ந்திருப்பான். இரவு கடக்கக் கடக்க, புல்லய்யாவுக்குத் தூக்கம் தூரமாகிக் கொண்டிருந்தது. தன் சகாக் கைதி கூடத் தூங்க வில்லை. இன்னும் சற்று நேரம் கடந்த பின்னர், "தூக்கம் வரல்லியாப்பா?" என்று கேட்டார்.

அந்தக் குரலைக் கேட்கும்போதே புல்லய்யாவின் உடல் புல்லரித்தது. அந்தக் குரல் எங்கேயோ கேட்டது போல இருந்ததுடன், அந்தக் குரல் மூலம் வந்த வார்த்தைகள், குளிர்ந்த நீர் போல, கோபத் தீயை அணைத்தன.

சற்று நேரத்திற்குப் பிறகு எழுந்து உட்கார்ந்தான். அவரும் அருகில் வந்து," உனக்கு இந்தக்கதி ஏன் வந்ததப்பா?" என்று கேட்டார். அந்தக் கேள்வியோடு, தன் வாழ்ககையை விரித்துக் சொல்ல வேண்டுமென்று தோன்றியது. முன்பின் தெரியாத முகமாக இருந்தாலும், ஊரும்பேரும் தெரியாத நபராக இருந்தாலும், இந்த உலகத்தில் இவர் ஒருவர்தான் தன் வேதனையைப் பகிர்ந்து கொள்ளக் கூடிய மனிதர் என்று தோன்றியது. அப்படி உட்கார்ந்து, மெதுவாகத் தொடக்கத்திலிருந்து அன்று வரைத் தன் வாழ்க்கையில் நடந்ததெல்லாம் சொல்லி முடித்தான். எல்லாம் கேட்ட பிறகு அவர் ஒரு பெரு மூச்சு விட்டார் -- அவ்வளவுதான்! வேறொன்றும் பேசவில்லை. எழுந்து கொண்டே,

"ரொம்ப நேரம் ஆயிட்டுது, படுத்துக்கோப்பா. களைச்சிப் போயிருக்கே!" என்று சொல்லிவிட்டுத் தன் இடத்திற்குப் போய்விட்டார்.

அவர் போன பிறகும் புல்லய்யா அந்தப் பக்கமே பார்த்துக் கொண்டிருந்தான். அப்படிப் படுத்தாலும் பார்வை அவர் பக்கமாகவே போயிற்று. -- கற்று நேரத்தில் இலேசாகத் தூக்கம் வந்தது.

விடியற் காலையில் விழிப்பு வந்தது. தூக்கம் பிடிக்கவில்லை,. அவர் பத்மாஸனம் போட்டு உட்கார்நதிருந்த காட்சி தென்பட்டது. இந்தக் காட்சி நீலம்மன் கோவலில் ஆவேசப் பேச்சை உதிர்க்கும் தாசனை நினைவு படுத்தியது. . . அப்படிச் சிந்தனையிலாழ்ந்திருக்கும்போது, "அப்பா!" என்று கூப்பிட்டார். புல்லய்யா அருகில் சென்றான். அவர் முகம் தெளிவாகத் தெரியவில்லையென்றாலும் ஏதோ தேஜஸ் ஜொலிப்பது போலிருந்தது.

மேலெ கையை வைத்து வருடிக் கொண்டே பரிவோடு,"அப்பா! ஒர காலத்துலெ என் கூட இருந்தவங்களெப் பொறாமெயோட கேவலமாப் பாத்தேன். அப்பொ எனக்கன்னு சொத்து இருந்தது. ஆனா, மனுஷனா பொழைக்க முடியாமெ, இப்படி ஜெயில்வாசி யாயிட்டேன். இப்பவோ -- எனக்குன்னு ஒண்ணுமில்லே. ஆனா, நான் மறுபடியும் ஜனங்க மத்தியிலே சந்தோஷமா ஜீவிக்கறதுக்குப் போய்க் கிட்டிருக்கறேன். இந்தக் காத்து, தண்ணி முதலான் பஞ்ச பூதங்க தமது தர்மங்களெ நிறைவேத்தறப்பொ, அதுங்களோட சேர்க்கையாலெ தயாரான மனுஷன் தன் தர்மத்தெ நிறைவேத்தலென்னா எதுவும் உருப்படாது! உன்னெ யாரும் ஏமாத்தலே. பொய்யே பேசி , உன்னெ நீயோ ஏமாத்திக்கிட்டிருக்கிறே. இந்த உண்மையெ சிரிச்சிக்கிட்டே தையமா ஏத்துக்கோ!"

மறுபடியும் அவன் தலையை வருடிக் கொண்டு, கன்னத்தைப் பிடித்தபடி சொன்னார் : "உண்மையெ வெளிப்படையாச் சொன்ன அந்த மாதிரி பெண்டாட்டி இருக்கறது பெருமெயில்லியா? அந்த மாதிரி தைர்யமா திருடங்களெப் பிடிச்சிக் குடுக்கற மகனெப் பெத்தியே -- உன்னெவிட அதிர்ஷ்டம் செஞ்சவன் யாரிருக்கறான்? அப்பா . . . இந்த ஜன்மத்தோடேயே எல்லாம் முடிஞ்சிடாது. . . ஒரு குச்சியிலெ சக்கரம் தயாராயிடுமா? சக்கரம் தயாராயி உருண்டு ரோடு கடைசியிலெ சேர்றப்பொ எத்தனெ ஜன்மங்களோ! நீ ஜெயில்லே இருக்கறப்பொ அவங்க பொழப்பு எப்படி நடக்கும்? . . . அந்தத் தாயெ செய்த தர்மமே கொடையா இருந்து காப்பாத்தும் -- அவ பாவம் செஞ்சிருந்தாதானே பாம்பா வந்து கடிக்கறதுக்கு? . . . நல்லா யோசிச்சிப் பாரு."

இவ்வாறு சொல்லிக் கொண்டே அந்த மனிதர் எழுந்து சென்றார். ஆனால் புல்லய்யா அப்படியே உட்கார்ந்திருந்தான். விடிந்துவிட்டது -- அறையை விட்டு வெளியே போனான். திரும்பி வந்த போது, அவர் சொன்னது மனதில் சுழன்று கொண்டிருந்தது. அப்படியே உட்கார்ந்து அதைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்தான். இரவு சரியாகத் தூக்கமில்லாமற் போனதால் கண்கள் சிவந்திருந்தன. கண்ணை மூட முடியாதபடி, வேலை செய்வதற்காகப் போக வேண்டி இருந்தது. ஏதோ வேலை செய்து கொண்டிருந்தாலும், அவர் சொன்னவையே நினைவுக்கு வந்தது.

மத்தியானம் திரும்பி அறைக்கு வரும்போது அவரில்லை. 'இனிமே வருவாரோ என்னவோ, எப்படி இருக்கறாரோ நல்லாப் பாக்கலாம்,' என்ற நீண்ட நேரம் எதிர்பார்த்தான். ஆனால் அவர் வரவே இல்லை! கடைசியில் காவல் போலிஸ்காரரிடம் அவரைப் பற்றிக் கேட்டான். காலையிலேயே விடுதலெ பண்ணிட்டாங்க,' என்றான் அவன். புல்லய்யா மிகவும் மனக் கஷ்டம் அடைந்தான். காலையிலேயே நன்றாகப் பார்க்காமல் போனதற்கு வருந்தினான்.

பொழுது போகப் போக அவன் மனம் மனமாக இல்லை. எல்லையில்லாத யோசனைகள். மாலை ஆயிற்று. காற்று வீசிக் கொண்டிருந்தது. குப்பை கூளம் பறந்து கொண்டிருந்தது. வடக்குப் பக்கத்திலிருந்த மேகங்கள் சிதறத்தொடங்கின. போக போக நீல வானம் தென்பட்டது.

இருள் சூழ்ந்தது. புல்லயயா கடந்ததையெல்லம் மறுபடியும் அசை போட்டுக் கொண்டிருந்தான். கல்யாணம் -- கல்யாணத்துக்கு முன்பே தன் மகன் எப்படி இருப்பானென்று ஊகம்செய்தானே . . . 'அது லட்சணமா இருக்கற பையன் -- அவனுக்கும் தன்னெ மாதிரியே கிர்தா குடுமி வளப்பான். நாலு பேருக்கு மத்தியிலே நல்ல பேரு எடுத்து வருவான் -- எதுக்கும் பயப்பட மாட்டான். அவன் சிலம்பாட்டத்துலெ கெட்டிக்காரனாயி -- ஒரு சொல்லு சொன்னான்னா உயிர் போனாலும் விட்டுக் குடுக்க மாட்டான். திருடனுங்களெ புடிக்கிற துரெ . . . என் மகன் திருடனுங்களெப் புடிக்கறி துரெ ஆக மாட்டானா? -- ஆயிட்டான், ஆயிட்டான் . . . கையெப் பாத்துச் சொன்னானில்லியா ஜோஸ்யன், கோடியிலெ ஒர்த்தனுன்னு . என் மகன் கோடியிலெ ஒர்த்தனாயிட்டானில்லியா? நான் இஷ்டப்பட்ட மாதிரியே ஆயிட்டான். என் மகன் மல்லு -- நிஜத்தெ நிலெக்க வெச்ச மகனாயிட்டானில்லியா? அப்படீன்னா எனக்கேன் இந்த வேதனெ?'

இப்படி நினைத்துக் கொண்டிருக்கும் போது மகனோடு சேர்ந்து மனைவியும் காட்சியளித்துது போலிருந்தது. அந்த அப்பாவித் தனமான முகம் . . . கூண்டில் நின்று அஞ்சாமல் நடுங்காமல் சாட்சி சொன்ன அந்த முகத்தின் கம்பீரத் தோற்றம் . . . ஏதோ ஒரு தேஜஸைப்பார்த்தாற் போலிருந்தது. அந்தத் தேஜஸ் முன்னால் தன்னால் நிற்க முடியாமல் தலை தூக்குவதற்கு வெட்கப் படுவது போல் ஆய்விட்டான்!

அன்று இரவு சோற்று உருண்டை வாய்க்குள் போகவில்லை. பிசைந்து கொண்டிருந்தானேயொழிய மனைவி, குழந்தைகள் எப்படியிருக்கிறார்களோ என்று மனது பேதலிக்கத் தொடங்கியது. வலுக்கட்டாயமாக சோற்று உருண்டையை வாய்க்குள் அடைத்த போது, கண்ணிலிருந்து நீர் சொட்டு சொட்டாகக் கிணணத்தில் சிந்தத் தொடங்கியது. அப்படியே வைத்து விட்டு எழுந்து விட்டான். அந்த

இரவெல்லாம் அவளும் அவளுடைய பேச்சும் பற்றிய நினைவுகள் அவனைத் தூங்கவிடவில்லை. உள்ளுக்குள் ஏதோ ஒரு பூச்சி தன்னைத் துளைத்து வேதனைப் படுத்துவது போலிருந்தது. 'என் பொண்டாட்டியும் மகனும் உண்மையெச் சொன்னாங்க. அதனாலெ தான் அந்தப பெரிய மனுஷன் அவ்வளவு அடிபட்டும் சாகலே . . . நான் கெட்டவனாயிட்டேன். சூதாட்றதுக்குக் கத்துகிட்டேன்; கெட்டவனோட சேந்தேன். ஆளே மாறிப் போயிட்டேன். அப்படியிருந்தா என் பொண்டாட்டி பிள்ளெங்களுக்கு எப்படி உபயோகமா இருப்பேன்? எனக்கு ஜெயில்தான் சரியான இடம். என் மனெவியும் மகனும் என் நல்லதுக்குத்தான் பண்ணாங்க. நான் நாலு பேரு மாதிரி இங்கெ வேலெ கத்துக்கறேன். அப்புறம் வெளியே போனாப் பொழெச்சிக்க மாட்டேனா' என்று எண்ணினான். வானத்தைப் பாாத்தான் -- யாராரோ தென்படுவது போலிருந்தது. சற்று நேரமான பிறகு மகன்தான் நினைவுக்கு வந்தான். அவன் பிறப்பதற்கு முன் தன் மனதில் தோன்றிய காவம் -- நிமிஷங்கள் ஆக ஆக, அந்த மகனை அருகில் அணைத்துத் தன் மனதாரக் கொஞ்ச வேண்டுமென்ற ஆசை வளாநதது. கடைசியில், கற்பனையிலலேயே மகனுடன் கொஞ்சி விளையாடத் தொடங்கினான். அந்தக் கட்டாந்தரையையே கொஞசிக் கொண்டிருந்தால, கண்ணிலிருந்து நீா பெருக்கெடுத்தது. நீண்ட நேரத்திற்குப் பிறகு மேலிருந்த காவல் போலிஸ்காரன்.

"ஏன் அழறே -- படுத்துக்கோ! படுததுக்கோ!" என்று சொன்னான்.

விறுவிறென்று இரும்புக்கம்பிகள் அருகே ஓடிவந்து, "அதோ . . . அந்த ஆர்பருக்குப் போற வழியிலே என வீடிருக்குது -- என் மகனெக் கொண்டுவந்து காட்டமாட்டியா? வுனக்குக் கடவுள் கருணெ காட்டுவார்! என்று சொன்னான்.

"கலாட்டாப் பண்ணாதே! ஜெய்லர் வந்தாக்கா என்னாவும்? படுத்துக்கோ! என்று சொல்லிவிட்டு, மேற்கொண்டு ஒன்றும் காதில் வாங்காமல் போய்விட்டான்.

புல்லய்யா அந்தக் கம்பிகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, வேதனையோடு பெருமூச்சு விட்டான்.

## 43

நல்ல வெயில் நேரத்தில் வந்த நீலி, குழந்தைகளை வைத்துக்கொண்டு, செஷன்ஸ் கோர்ட் எதிரிலிருந்த மரத்தின்கீழ் உட்கார்ந்திருந்தாள். மத்தியானமாகியும் இன்னும் கூப்பிடவில்லை.

பசித்தொல்லை பொறுக்க முடியவில்லை. குழந்தை அழுது கொண்டிருந்தாள். 'இவங்களெ எதெ வெச்சி காப்பாத்துவேன் கடவுளே!' என்ற வேதனை அவளை வாட்டி வதைத்தது. இந்த மாதிரி சமயத்தில் வேலை சரியாகச் செய்யவில்லை என்று அனுப்பி விட்டாள்

அந்த வீட்டம்மா. பேறுகாலம் முடிந்த பிறகு வரச் சொன்னாள். அதுவரையில் குடும்பம் எப்படி நடக்கும்? மகனாவது உதவக் கூடிய அளவு பெரியவனாக இல்லையே என்று நொந்து கொண்டாள். முந்திய இரவிலிருந்து அவளுக்குச் சொல்ல முடியாத கவலை. இரவு கொஞ்சம் பச்சைத்தண்ணீர் குடித்துவிட்டுத் தூங்கிப் போனாள். எந்த வேலை செய்வதற்கும் சக்தியில்லை. வழியில் நின்று நின்று கஷ்டப்பட்டு எப்படியோ கோர்ட்டுக்கு வந்தாள். தலை சுற்றுவது போலிருந்தது.

அப்போதுதான் குற்றம் சாட்டப் பட்டவர்களைக் கோர்ட்டில் கொண்டுவந்து நிறுத்தினர். ஜட்ஜ் எந்தக் கேள்வியும் கேட்பதற்கு முன்னாலேயே புல்லய்யா இவ்வாறு சொன்னான்" "துரெ! நான் நிஜத்தெச் சொல்லிடறேன் கருணெயோட என் கோரிக்கையெக் கேட்டு நிறெவேத்துங்க.'' அப்டி ஒண்ணும் ரொம்பப் பெரிய கோரிக்கெ இல்லே. அதோ என் கண்மணி மல்லு? வெளியே மரத்துக் கீழெ இருக்கறான், அவனெ ஒரு தடவெ இந்தக் கையாலெ தூக்கி கொஞ்சறதுக்கு அனுமதி குடுங்க! உங்களெக் கடவுள் நல்லாக் காப்பாத்துவார்!"

ஜட்ஜ் அவன் கோரிக்கை ஏற்றுக் கொண்டு, அவன் சொல்ல விரும்பியதைச் சொல்லுமாறு கூறினார். புல்லய்யா, சாதாரணமாக இருந்திருந்தால், தான் பட்ட வேதனை, தனக்கு நிகழ்ந்த அநியாயங்கள், ஏமாற்றங்கள் எல்லாம் சொல்லியிருப்பான்! ஆனால் தன் மகனைத் தூக்கிக் கொஞ்ச வேண்டுமென்ற ஆசை, உண்மையை மிகச் சுருக்கமாக சொல்லும் படிச் செய்தது.

குழாயப் புடிச்சிகிட்டு கடைசியில் நான் தான் அந்தத் துரையோட மாடிலெ ஏறனேன். அந்த துரெ கையிலெ துப்பாக்கி இருந்தது. அவங்களெ பாத்து சுட்டுகிட்டிருந்தாரு. அந்த ரெண்டு பேரும் செத்துப் போயிடுவாங்க. அந்த ஆபத்தான நேரத்திலெ நான் எதையும் யோசிக்கலே. அங்கெயிருந்த ஸ்டுலே எடுத்து பின்னாலெ'ருந்து அவர் தலெ மேலெ போட்டுட்டேன். அதுக்குள்ளே தெருவுலெ ஒரே சத்தமாயிருந்துது -- அகப்படுவே'ங்கற பயத்துலெ ஒண்ணும் திருடாமெ ஓடிப் போயிட்டேன்.

"உன் கூட இருந்த ரெண்டு பேரு இவங்கதானா என்று ஜட்ஜ் கேட்டார்.

புல்லய்யா பதில் சொல்லவில்லை.

ஜட்ஜ் மறுபடியும் அதட்டிக் கேட்டார்.

"துரெ! மன்னிச்சிடுங்க. அதெ மட்டும் என்கிட்டெ கேக்காதீங்க!

"உண்மையெச் சொன்னால்லே உன் கோரிக்கையெ நிறெவேத்த முடியும்!"

புல்லய்யா தலை குனிந்து விட்டான். மனகம் சுருங்கிவிட்டது. இதற்குள் சிநேகிதனின் குரல் கேட்டது :

"இன்னும் எதுக்கு துரெ! உண்மெ என்னைக்கி இருந்தாலும் வெளியே வராம போவாது. நாங்க மூணுபேருந்தான் செஞ்சோம்."

புல்லய்யாவுக்குச் சிநேகிதன் மேல் எல்லையில்லாத நன்றியுணர்வு பிறந்து, தலை தூக்கிப் பார்த்தான். அந்த அப்பாவியான மனிதர் அதுவரையில் பட்ட கஷ்ட நஷ்டங்கள், சொல்லித் தந்த அறிவுரைகள் எல்லாம் ஒட்டு மொத்தமாக நினைவுக்கு வந்தன்.

போலிஸ் இன்ஸ்பெக்டர் மல்லுவைக் கோர்டடுக்குள் அழைத்து வந்த உடனே, அப்பாவைப் பார்த்து விட்டு, 'ஓ' என்று சத்தம் போட்டபடி முன்னோக்கி ஓடினான். கைகளை நீட்டிய அப்பாவின் மேல் குதித்து, இறுக அணைத்துக்கொண்டு, "அப்பா!, . . . ", என்று சொல்லி, ஒரே சந்தோஷமயமானான். அந்தச் சந்தோஷத்தினிடையிலேயே அழுகையும் மகிழச்சியும் வெளியாயின.

அப்பாவும் மகனும் மனதாரக் கொஞ்சிக் குலாவினர். அடக்க முடியாமல் அழுதனர்.

"அப்பா. . . மகனே! . . . பேரெக் காப்பாத்திட்டே! . . . .' என்று அழுகையினிடையில் வார்த்தைகள் சரியாக வெளிவரவில்லை. எத்தனையோ புத்திமதிகள் சொல்ல வேண்டுமென்று நினைத்தான். எத்தனை எத்தனையோ. . . எவ்வளவோ பேச வேண்டுமென்ற நினைத்தான். அனால் அழுகை தவிர ஒரு வார்த்தையும் சரியாக வெளி வரவில்லை. அந்தக் காட்சியைப பார்த்தவர்களின் மனங்களும் இளகி விட்டன.

இனி மல்லுவைப் பிரிய வேண்டும். சிறுவன் -- வலுக்கட்டாயமாகப் பிரிக்கும் போது, மல்லு 'ஓ' வென்று அழலானான். . . அந்தச் சத்தத்தைக் கேட்டுவிட்டு, நீலிவேகமாக அங்கே வந்தபோது, அழுது கொண்டிருந்த கணவனின் முகம் தென்பட்டது. அந்த முகத்தை ஒரு வினாடி பார்த்த உடனே, அவள் மனதில் சந்தோஷம் பொங்கியது. அந்த முகம் உண்மையில் . . . முதல் நாளைய அப்பாவித்தனமாக முகம் . . . இடையில் மறந்து போன களை மலர்ச்சி எல்லாம் திரும்பி விட்டன . . . அந்த முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்ததில் அவளுடைய பசி யெல்லாம் மறந்து விட்டது. தன்னை யறியாமல் அவள் கண்களிலிருந்தது நீர் வழிந்தது. அந்தக் கடந்து போன நாட்கள் ஒட்டு மொத்தமாகப் பிணைந்தபடி நினைவுக்கு வந்தன. . . . அந்த முதல் நாள் இரவுப் பந்தயம் . . . இந்தப் பைத்தியக்காரப் பெண் அன்று. அந்தக் கிருதாக் குடுமியில் கையை வைத்து . . . ஒவ்வொரு வார்த்தையாக உதிர்க்கும் போது அந்த முகம் எவ்வளவு அப்பாவித்தனமாக இருந்தது! . அன்று மகன் பிறந்த நாள் அந்த முகத்தில் தேஜஸ் -- மறுபடியும் எவ்வளவு காலம் பொறுத்து அத்தயை கணவனைப் பார்த்தாள்! . . .

மல்லுவை வெளியே அழைத்து வந்த இன்ஸ்பெக்டர், நீலியடம் ஒப்படைத்துக்கொண்டே, "நிஜத்தெச் சொல்லிவிட்டான். இனிமெ நீ

இந்த மாதிரி திரிய வேண்டிய அவசியம் இருக்காதாவட்டும்," என்றார்.

அந்தப் பெண்மணி தீனமான குரலில், "துரெ! . . . ஏதோ கேட்கத்தொடங்கி, மறந்து விட்டாற் போல் சும்மா இருந்தாள் . அதை உணர்ந்து கொண்டது போல், இன்ஸ்பெக்டர்," மூணு நாலு வருஷமாவது தண்டனெ தப்பாது!" என்று சொன்னார். ஒரு நிமிஷம் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டாள்.

அவள் அங்கிருந்து மெல்ல நகரத் தொடங்கினாள். மலலுவின் ஆர்ப்பாட்டம் இன்னும் குறையவில்லை. மெல்ல கோர்ட்டைக் கடந்து ரோடுக்கு வந்ததும், "அம்மா! அப்பாவெக் கூட்டிகிட்டுப் போறாங்களே. . ." என்று கத்தினான். ரோடில் நடந்து போகிறவர்கள் விநோதமாக இந்தச் சிறுவனைப் பார்த்தார்கள்.

நாலடி எடுத்து வைத்ததும், அவளுடைய சக்தியெல்லாம் எங்கோ போய்விட்டது போலிருந்தது. சற்று முன்பு சந்தோஷத்தால் நிறைந்த வயிறு மறுபடியும் இப்போது காலியாகிவிட்டது. பசியோ பயங்கரமாக இருந்தது. கால்கள் தடுமாறலாயின. கண்கள் எரிந்து நீரால் நிறைந்து கொண்டிருந்தன. மறுபடியும் கஷ்டப்பட்டு முன்னால் காலடி எடுத்து வைக்கப் போனாள். அவள் கீழே விழுந்து விட்டாள் — தன் வீடு இன்னும் எவ்வளவோ தூரம் . . . தன் வீடா அது? போன உடனே, வாடகை கொடுக்கவில்லையென்று அவள் என்னென்ன பேசுவாளோ? — வெளியே தள்ளி விடுவாளோ – . . . ஏற்கனவே பூட்டைப் போட்டு பூட்டிவிட்டிருப்பாள் — மறுபடியும் நுழைய விடமாட்டாளோ!

சாயந்திரம் ரோடில் மக்கள் கூட்டம், வண்டிகள், பஸ்கள், ரிக்ஷாக்கள் போய்க் கொண்டிருந்தன. ஆனால் அவளால் முன்னோக்கி நகர முடியவில்லை. 'பசி தனக்கு ம்ட்டுமல்ல . . . குழந்தைகளுக்கும் . . . வயிற்றிலிருந்த சிசுவுக்குக் கூட மலையளவு பசி!

எப்படியோ கஷ்டப் பட்டு இன்னும் கொஞ்ச தூரம் நடந்தாள். அங்கே சிவன் கோயில் தென்பட்டது. கோயில் முன்னால் இரண்டு பக்கமும் வரிசையாக் பிச்சைக்காரர் உட்கார்ந்திருந்தனர். கடைகள் காட்சி யளித்தன. வாழைப்பழக் குலைகள் — நாலு பழம் சாப்பிட்டால் வயிறு சாந்தியடையும். . . காசில்லாமல் எப்படி வரும்?. . . சிவன் கோயிலுக்கு எத்தனையோ பக்தர்கள் பட்டுப் புடவைகள் கட்டிக்கொண்டு, கார்களில் வந்து இறங்கிக் கொண்டிருந்தார்கள். ஒரே கூட்டமாக இருந்ததது. ரோடில் நடந்து போகும்போது தலை சுற்றுவது போலிருந்ததால் உட்கார்ந்து விட்டாள். பக்கத்திலிருந்த பிச்சைக்காரன் இன்னொருத்தி வந்து சேர்ந்தாள் என்று அலுத்துக் கொண்டான். எதிரிலிருந்த பிச்சைக்காரி முறைத்துப் பார்த்தாள்.

எழுந்திருக்க முடியாமல் நீலி, ஏக்கத்தோடு பிள்ளைகளைப் பார்த்தாள். மல்லுவுக்கும் இன்னும் துக்கம் தீரவில்லை. வயிற்றிலிருந்த சிசு, 'அம்மா பசி! . . . ' என்ற இரைச்சலிடுவது போல் சுழன்று கொண்டிருந்தது.

அந்தப் பெண்மணி பிறந்த வீட்டில் வயிற்றுக்குக் கஷ்டப் பட்டாள். ஆனால் கையை இறுக்கிப் பிடிக்கவில்லை. பருவகாலத்தில், வளைந்தும் நெளிந்தும், ஒயயாரமாகத் திரிநதும், பாடிக்கொண்டும் மகிழ்ந்திருந்தாள். கல்யாண நேரத்தில், ஒன்றுமறியாத அப்பாவி, வெட்கத்தில் முடங்கிப் போனாள். மனைவியாகிப் பந்தயம் பிடித்த கணவன் கண்ணைத் திறந்தாள். இல்லாளாகி வீட்டை நிலைக்க வைத்தாள். ஒரு நாளும் 'அவள் ஒருவரிடமும் கை நீட்டவில்லை. இல்லாத போது கூட மற்றவர்களுக்குக் கொடுத்தாள. இவள் கை ஒவ்வொரு நாளும் கொடுக்கும் பக்கம் தான் திரும்பியதே தவிர வாங்கும் பக்கம் திரும்பியதில்லை.' அத்தகைய புனிதமான கை. . . இன்று. . . இந்த நிமிஷத்தில். . . எவ்வளவு முயற்சித்தாலும் அந்தக் கை திரும்பத் திரும்பக் கீழே தான் போய்க் கொண்டிருந்தது. . . கடைசியில் மிகவும் முயன்று அந்தக் கையை மேலெ தூக்கிக் கேட்கும் பக்கம் திருப்பவே. . . அந்தக் கையின மேல். . அவளுடைய இரண்டு கண்களிலிருந்தும். . . இரணடே கண்ணீர்த் துளிகள் சிந்தின॥